# பெரியார்

# ஈ. வெ. ரா. சிந்தனைகள்

# THOUGHTS OF PERIYAR E. V. R.

## 2



பதிப்பாசிரியர் வே. ஆனைமுத்து

சிந்தனையாளர் கழகம்
திருச்சிராப்பள்ளி 2.






இன்று கோவையில் பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் அவர்களை அவரது இல்லத்தில் சந்தித்தேன். இவர் மின்வாரியத்தில் தலைமைப் பொறியாளராகப் பணியாற்றி பணிநிறைவு பெற்றவர். தந்தை பெரியாரோடு இணைந்து தமிழகம் முழுவதும் பகுத்தறிவுக் கருத்துகளைப் பரப்பியவர்.

திருச்சி சிந்தனையாளர் கழகத்தின் தலைவராக இருந்தவர். இவரது முயற்சியால் திரு.வே. ஆனைமுத்து அவர்கள் தொகுத்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டன. 2200 பக்கங்களுக்கு மேற்பட்ட இந்த மூன்று தொகுதிகளும் பெரியாரின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் அடங்கிய தொகுப்பு ஆகும். பெரியாரின் பன்முக ஆற்றலை வெளிப்படுத்துகிற அரிய நூலாக இன்றளவும் இந்த நூல் போற்றப்படுகிறது.

பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் எழுதிய கவிதை நூலை இணையத்தில் வலையேற்றுவதற்காக அவரைச் சந்தித்தபோது பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற நூலைப்பற்றி அவரிடம் பேசினேன். அந்த நூலை வெளியிட்ட நினைவலைகளை அவர் விளக்கினார். நூல் வெளியீட்டிற்காப் பட்டபாடுகள் என் கண்முன் நிழலாடியது. அவர் காட்டிய தந்தை பெரியாரின் உருவம் என் முன் நிழலாடியது. பகுத்தறிவு விதைப்பிற்காகத் தன்வாழ்நாளின் இறுதிவரை பேசியும் எழுதியும் வந்த அவரது உறுதி தெரிந்தது.

பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் தொகுப்பினை இணையத்தில் வலையேற்றினால் உலகமக்கள் வலைஇறக்கிப் படித்து மகிழ்வார்களே என்று சொன்ன பொழுது, நூலை வெளியிட்ட சிந்தனையாளர் கழகத்தின் தலைவர் திரு. கு.ம. சுப்பிரமணியம் அவர்கள் மகிழ்வோடு, தன் கைப்படியாக வைத்திருந்த அந்த முதன்மைப் படியை அன்போடு எடுத்து வந்து கொடுத்தார்.

இணையத்தில் வெளியிடுங்கள், அய்யாவின் கருத்துகள் உலகம் முழுவதும் பரவட்டும் என்று அவர் கொடுத்தபோது நான் பெருமகிழ்வு அடைந்தேன். நான் பத்தாம் வகுப்பு படித்தபோது, தாராபுரம் நூலகத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பக்கமாகப் படித்து நெஞ்சில் பதிந்து என்னை வழிநடத்திய அந்த நூலை நான் படவடிவக் கோப்பாக்கும் வாய்ப்பு கிடைத்தது கண்டு நெஞ்சு நெகிழ்ந்தேன்.

ஆனைமுத்து அய்யா அவர்கள் பெருமுயற்சியில் திரட்டிச் சேகரித்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற இந்த மூன்று தொகுதிகளும் உலகம் முழுவதும் உள்ள நம் தமிழ் மக்களுக்கும் இனிவரும் அடுத்த தலைமுறையினருக்கும் வழிகாட்டியாக நின்று பகுத்தறிவூட்டும் என்று நம்புகிறேன்.

bghs;shr;rp erd; (09-06-2011)
jkpHk; tiy (www.thamizham.net)

# பெரியார்
# ஈ. வெ. ரா. சிந்தனைகள்

(பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்களின்
சொற்பொழிவுகளும் கட்டுரைகளும்)

## இரண்டாம் தொகுதி

பதிப்பாசிரியர்
வே. ஆனைமுத்து

வெளியீடு:
சிந்தனையாளர் கழகம்
தெப்பக்குளம்
திருச்சிராப்பள்ளி-2

# THOUGHTS OF PERIYAR E. V. R.

(Speeches and Writings of Periyar E. V. Ramasami)

## VOLUME II

*Compiled and Edited by*
V. ANAIMUTHU

*Published by*
THINKERS' FORUM
Teppakulam
Tiruchirappalli-2



திருச்சியில், பெரியார் (1970)



தம் முதிர்ந்த வயதிலும், 'விடுதலை' முதலான ஏடுகளுக்கு ஆராய்ச்சிக் கட்டுரைகள், தலையங்கங்கள் தீட்டும் பெரியார் ஈ. வெ. ரா.



திருச்சியில் பெரியார் ஈ. வெ. ரா. வாழ்ந்து வந்த 'பெரியார் மாளிகை' 1951-ல்;
அவர் முதன் முதல் பயன்படுத்திய சொந்த கார்

# பதிப்பாசிரியர் முன்னுரை

திருச்சி சிந்தனையாளர் கழகம் தந்தை பெரியார் அவர்களின் சுயமரியாதைக் கொள்கைகளைப் பரப்புவதைத் தலையாய கடமையாகக் கொண்டு பணிபுரிவதாகும்.

அவ்வகையில் தந்தை பெரியார் அவர்களின் சொற்பொழிவுகளையும் எழுத்துக் களையும் தொகுத்து, 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' என்ற பெயரில் மிகப் பெரியதான இந் நூலினை மூன்று தொகுதிகளாக ஒரே சமயத்தில் இக் கழகம் வெளியிட்டுள்ளது.

தமிழகத்திலும், பிறவெளியிடங்களிலும் உள்ள சுயமரியாதைத் தோழர்கட்கும், பல்கலைக்கழக ஆராய்ச்சி மாணவர்கட்கும், பெரியாரை முழுமையாக அறிய விழையும் அன்பர்கட்கும் இத் தொகுதிகள் மிகவும் பயன்பட ஏற்றவை எனக் கருதுகிறோம்.

தமிழ்நாட்டின் கண் உள்ள பல்கலைக் கழகத்தினர், 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனையை'ப் பல்கலைக் கழகங்களில் ஒரு படிப்புத் துறையாக அமைக்க ஆவன செய்வார் களென நம்புகிறோம். அன்றியும் தமிழக அரசினர் நூலகந்தோறும் இத் தொகுதிகள் இடம் பெறச்செய்து, தமிழ் மக்கள் புத்துணர்வுபெறத் துணைபுரிவார்களெனப் பெரிதும் எதிர் பார்க்கிறோம்.

இந் நூலின் மூன்று தொகுதிகளுள், இது இரண்டாம் தொகுதியாகும்.

இவ் இரண்டாம் தொகுதியில் நாட்டுப் பிரிவினை, அரசியல், வகுப்புரிமை, மொழி, தலைவர்கள், தத்துவம், அறிவு வளர்ச்சி, கலைகள், ஆகிய—தமிழில் உள்ள எட்டுப் பகுதிகளும்; Dravidasthan Separation என்ற ஆங்கிலப் பகுதியும் ஆக ஒன்பது பகுதிகள் (Parts) அடங்கியுள்ளன.

'நாட்டுப்பிரிவினை' என்ற எண்ணத்துக்கு இந்திய மண்ணில் முதன் முதலாக 1930-ல் வித்தூன்றியவர் பெரியாரே ஆவார். இக் கோட்பாட்டினை 1938 முதல் விளக்கி அன்னார் ஆற்றிய உரைகளும், வெளிப்படுத்திய எழுத்துக்களும் இப் பகுதியில் பெரிதும் இடம் பெற்றுள்ளன.

'அரசியல்' என்பது, இந்தியத் துணைக் கண்டத்தில், சமுதாய இயலோடு பின்னிப் பிணைந்ததாகும் என்பதே பெரியாரின் கொள்கையாம். இவ் அடிப்படையில், 'இனநலம்' ஒன்றையே குறியாகக் கொண்டு அன்னார் அவ்வப்போது மேற்கொண்ட அரசியல் நிலை யையும் அதனால் விளைந்த பயன்களையும் 'அரசியல்' என்ற பகுதி நன்கு விளக்கும்.

இந்து மதமும், நெடுங்காலமாக நிலவிய இந்திய ஆட்சிகளும் சாதியைப் பாதுகாப் பதையே இலட்சியமாகக் கொண்டவையாம். ஆதலின், 'சாதி காக்கப்படும் வரையில், வகுப்புவாரியாக உரிமை வேண்டும்' எனக் கோரி 1919 முதல் அன்னார் இடையறாது போராடி வந்ததை 'வகுப்புரிமை' என்ற பகுதி விளக்குகிறது. இதனை 'வகுப்புவாதம்' எனக் குறிப்போர்க்கும் உண்மையை உணர்த்தும் விளக்கங்கள், இப் பகுதியில் இடம் பெற்றுள்ளன.

மொழி என்பது கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளப் பயன்படும் கருவியே யாகும் என்பதை அறிவுறுத்தியும், தாய்மொழிப் பைத்தியம் அறிவு வளர்ச்சிக்குத் தடையாக ஆகி விடும் என்பதை எடுத்துக் காட்டியும் சிறந்த மொழி ஆய்வுக் கருத்துகளை வெளியிட்டுள்ள பெரியார்தம் கட்டுரைகளும், பேச்சுக்களும் 'மொழி' என்ற பகுதியில் அடக்கப்

பெற்றுள்ளன. தமிழ்மொழியின் வரிவடிவத்தில் 1934-லேயே அன்னார் புகுத்திய 'எழுத்துச் சீர்திருத்தம்' அறிஞர்க்குச் சிறந்த விருந்தாகும்.

பெரியாரவர்களோடு சமகாலத்தவர்களான காந்தியார், ஜின்னா, வினோபா பாவே ஆகியோருடன் அவர் மேற்கொண்ட உரையாடல்களும்; டாக்டர் நாயர், காந்தியார், இராஜாஜி, அம்பேத்கார், திரு. வி. க., பாரதிதாசன் முதலானோர் பற்றிய கருத்துகளும்; சங்கராச்சாரியார், சர். ஏ. டி. பன்னீர்ச்செல்வம், டாக்டர் சி. என். அண்ணாதுரை, டாக்டர் மு. கருணாநிதி முதலானோர் பெரியாருக்கு விடுத்த மடல்களும் 'தலைவர்கள்' என்ற பகுதியில் அடங்கியுள்ளன.

கடவுள், மதம், ஆத்மா, மோட்சம், நரகம், தலைவிதி, தர்மம் முதலான மத மூட நம்பிக்கை எண்ணங்களைத் தகர்த்துப் பெரியார் அளித்த தத்துவக் கருத்துகளும்; பகுத்தறிவு அடிப்படையில் நாத்திகம், பகுத்தறிவு, மனித வாழ்வு பற்றிய உயர் எண்ணங்களும் 'தத்துவம்' என்ற பகுதியில் தொகுத்து வைக்கப்பட்டுள்ளன.

1929-ல் மலேயாவிலும் 1932-ல் ஆப்பிரிக்கா, ஐரோப்பா, ரஷ்யா, இலங்கை, முதலான நாடுகளிலும் பயணம் செய்தகாலை அவர் ஆற்றிய உரைகளும், எழுதிய அனுபவக் கட்டுரைகளும்; மற்றும் பல்வேறு சமயங்களில் பேட்டியளித்தல், அறிவுரை ஆற்றுதல் வழியாக வெளிப்படுத்திய கருத்துகளும் 'அறிவு வளர்ச்சி' என்ற பகுதியில் அமைக்கப்பட்டுள்ளன.

கலை, பாமரரையும் பிணித்துக் கவரவல்லது. அத்தகு கலை இங்கு இசை, நாடகம், ஓவியம், சிற்பம் என்ற பெயர்களால் மக்களை அறியாமைக் குழியில் தள்ளிவிட்டதை எடுத்துக் காட்டியும்; அறிவையும் மனிதாபிமான உணர்வையும் முன்னிறுத்தி இக் கலைகளும், இலக்கியமும் மிளிரவேண்டுமென அறிவுறுத்தியும்; வளரும் அச்சுக்கலைத் துறையைக் குறிப்பிட்டும் அன்னார் தந்த அறிவுக் கருத்துகள் 'கலைகள்' என்ற பகுதியில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இவ் இரண்டாம் தொகுதியின் இறுதியில் உள்ள, 'Dravidasthan Separation' என்ற ஆங்கிலப் பகுதி, கறுஞ்சட்டையினரைப் பற்றிப் பிறர் கொண்டுள்ள தவறான எண்ணத்தை அகற்றி, 'திராவிடநாடு' பிரிவினைக் கோரிக்கையையும், வகுப்புவாரிக் கொள்கையையும் ஆணித்தரமாக விளக்கி நிற்பதாகும்.

இந் நூலுக்கான விரிவான முன்னுரை முதல் தொகுதியின் தொடக்கத்தில் வைக்கப் பட்டுள்ளது. நூல் முழுமைக்கும் உரிய பெயர்க் குறிப்பு அகராதியும், பொருட் குறிப்பு அகராதியும், முறைப்படி, மூன்றாம் தொகுதியின் இறுதியில் தரப்பட்டுள்ளன.

இம் மூன்று தொகுதிகளையும் பெற்றுப் பெரும்பயன் கொள்வதன் வாயிலாக, எங்களுடைய இம் முயற்சியினை அறிஞர் உலகம் ஊக்குவிக்கும் என நம்புகிறோம்.

இப் பெருமுயற்சிக்கு உறுதுணை புரிந்த அனைத்துப் பெருமக்கட்கும் சிந்தனையாளர் கழகம் என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டதாகும்.

வளர்க பெரியாரிசம்!

திருச்சிராப்பள்ளி,
1—6—1974

வே. ஆனைமுத்து
பதிப்பாசிரியர்

## இரண்டாம் தொகுதி

# பொருளடக்கம்



## பகுதி I—நாட்டுப் பிரிவினை

### 1. நாட்டுப் பிரிவினை



### 2. திராவிடநாடு திராவிடருக்கே

பக்க எண்

# பகுதி II—அரசியல்

## 1. அரசியல்

பக்க எண்

## 2. ஜனநாயகம்



## 3. மதச் சார்பற்ற அரசு



## 4. உள்ளாட்சி



## 5. கிராமச் சீர்திருத்தம்



# பகுதி III—வகுப்புரிமை

## 1. வகுப்புரிமை



## 2. வகுப்பு வாதம், சமூக வாதம்



## 3. வகுப்புரிமையின் வரலாறு

பக்க எண்

## பகுதி IV—மொழி

### 1. எழுத்துச் சீர்திருத்தம்



### 2. தமிழ்



## பகுதி V—தலைவர்கள்

### 1. தலைவர்களுடன் சந்திப்பு



### 2. தலைவர்களைப் பற்றி



### 3. தலைவர்களின் கடிதங்கள்

பக்க எண்

## பகுதி VI—தத்துவம்

### 1. பிரகிருதி வாதம்



### 2. பகுத்தறிவு



### 3. மனித வாழ்க்கை



### 4. பொது நலம்

பக்க எண்

# பகுதி VII—அறிவு வளர்ச்சி

## 1. கல்வி



## 2. அயல்நாட்டு அனுபவங்கள்



## 3. பேட்டி



## 4. அறிவுரை



## 5. நமது ஆராய்ச்சி மனப்பான்மை

பக்க எண்

## பகுதி VIII—கலைகள்

### 1. கலைகள்



### 2. இசை



### 3. நாடகம்



### 4. வெளியீடுகள்



## PART IX

### DRAVIDASTHAN SEPARATION

# 1. நாட்டுப் பிரிவினை

## 1. இந்தியா ஒரு நேஷனா?

அக்கிராசனரவர்களே! சகோதரர்களே!

இந்தியா ஒரு நாடு என்று ஆனால்தானே, இந்தியா முழுமையும்பற்றிப் பேச நமக்கு உரிமை உண்டு. இப்போது இந்தியா ஒரு நாடாயிருக்கின்றதா?

இந்தியா—சாதிகள் காட்சி சாலையாக, மதக் கண்காட்சி சாலையாக, பாஷைகள் கண்காட்சி சாலையாக, சாமிகள் காட்சி சாலையாக இருக்கின்றதே ஒழிய வேறு என்னமா யிருக்கின்றது? இந்த நிலையிலுள்ள இந்தியா, விடுதலையோ முன்னேற்றமோ அடைவது என்பது சாத்தியமானதாகுமா? மற்ற நாட்டார்கள், தங்கள் நாட்டை ஒரு நாடாக்கி நம் நாட்டையும் அதோடு சேர்க்கப் பார்க்கின்றார்கள். யார், எந்த நாட்டோடு சேர்த்துக் கொள்ளுவதென்று போட்டி போட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

[சேலத்தில் சொற்பொழிவு—'குடி அரசு' 1-6-1930]

தலைவரவர்களே! தோழர்களே!

தோழர் ஜவஹர்லால் கூட சுயராஜ்யத்துக்கு ஒரு குறிப்பிட்ட அர்த்தம் சொல்லவே இல்லை. ஆனால், அவர் சுயராஜ்யம் என்றால் ஒரு சமயத்தில் ஏகாதிபத்திய எதிர்ப்பு என்பார்; மற்றொரு சமயம் பிரிட்டிஷ் ஆட்சியை ஒழிப்பது என்பார்; மற்றொரு சமயம் தொழிலாளர் ஆட்சி என்பார்; மற்றொரு சமயம் குடியானவர் ஆட்சி என்பார்; மற்றொரு சமயம் சமதர்மம் என்பார்; மற்றொரு சமயம் பூரண சுயேச்சை என்பார்; மற்றொரு சமயம் பட்டினியும் வேலையில்லாத் திண்டாட்டமும் ஒழிவதே என்பார்; மற்றொரு சமயம் உலகப் பொதுவுடைமை என்பார். இப்படி இன்னமும் எவ்வளவோ விதமாக வாயில் வந்தபடி, சமயத்துக்குத் தக்கபடிப் பேசுவார்.

தோழர் காந்தியாரோ சுயராஜ்யத்துக்கு அர்த்தம் ஒரு சமயத்தில் ராமராஜ்யம் என்பார்; மற்றொரு சமயம் வருணாசிரம முறையைச் சரிவர அமைப்பதே என்பார்; மற்றொரு சமயம் சுயராஜ்யத்தில் இராஜாக்களுக்கும் ஜமீன்தாரர்களுக்கும் இடம் உண்டு என்பார்; மற்றொரு சமயம் அவரவர் 'சுதர்மத் தொழிலை'ச் செய்யச் செய்வதே என்பார்; மற்றொரு சமயம் இராட்டினமே சுயராஜ்யம் என்பார்; மற்றொரு சமயம் எல்லோரும் கதர் கட்டுவதே சுயராஜ்யம் என்பார். கடைசியாகச் சென்ற மாதத்தில் 'பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் கடுகளவு மனக் கசப்பு ஏற்பட்டாலும் என் உயிரைக் கொடுத்தாவது அம் மனக் கசப்பை ஒழிப்பேன்' என்றார்.

இன்னமும் என்ன என்னமோ இந்த 20 வருட காலமாகப் பேசிவந்திருக்கிறார்.

மற்றபடியான—நமதருமை 'பாரத மாதாவின் புதல்வர்கள்'—தேச பக்தர்களும் தேசிய வீரர்களும் 'சுயராஜ்யத்துக்கு ஆக உடல், பொருள், ஆவியைத் தத்தம் செய்தவர்' களுமான குட்டித் தலைவர்களும் தொண்டர்களும் போன மாதத்தில்தான் இந்திய சக்கர வர்த்தியான பிரிட்டிஷ் அரசர்க்கும் அவரது சந்ததிக்கும், அவரது ஆக்கினைக்கும் ஆட்சிக்கும் சட்டதிட்டங்களுக்கும் பக்தியாயும் விசுவாசமாயும் இருந்து, கீழ்ப்படிந்து நடப்பதாக சத்தியம் செய்துகொடுத்து, சர்க்கஸ் வளையத்துக்குள் ஆட்டம் போடும் சிங்கங்களைப் போல் இருந்துகொண்டு, அன்னிய ஆட்சி ஏஜண்டுக்கு அடங்கி நடந்து வருகிறார்கள்.

ஆகவே, சுயராஜ்யம் என்றால் என்ன என்று தோழர் கே. பி. பிள்ளை இப்பொழு தாவது சொல்லட்டும் என்று கேட்கின்றேன். அன்றியும், அடுத்தபடியாக பிரிட்டிஷ்

ஆட்சியையே ஒழித்துவிடுவதாலேயே சுயராஜ்யம் ஏற்பட்டுவிடும் என்று சொல்லிவிட முடியுமா? பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவை ஒரு பாகம் ஆளுகிறார்கள்; போர்ச்சுகீசியர்கள் ஒரு பாகம் ஆளுகிறார்கள். இவர்களுக்குத் தனித்தனி தேசங்கள் இருக்கின்றன. இத்தனைபேரும் ஒன்றுசேர்ந்து ஒரு கை பார்க்காமல், இராட்டின ஆயுதத்தைக் கண்டு பயந்துகொண்டு இந்தியாவை விட்டுவிட்டு ஓடிவிடுவார்களா?

சுயராஜ்யத்துக்குப் பொதுமொழி ஒன்று வேண்டும் என்கின்ற அவசியம் என்ன?

ரஷ்யா பொதுஉடைமை தேசம். அங்கு இன்னும் பொதுமொழி இல்லை. நம் நாடு என்பது, அதாவது இந்தியாவானது அன்னிய ஆட்சிக்கு முன்—இராமர் ஆட்சி என்று சொன்ன காலத்திலும் 56 தேசத்துக்கும் ஒரே சக்கரவர்த்தியாகச் சொல்லப்பட்ட காலத்திலும் பொதுமொழி என்று ஒன்று இருந்ததாக ஆதாரமோ சரித்திரமோ ஒன்றும் காணவில்லை.

அதற்கடுத்தாற்போல், இந்தியா நம் தாய்நாடு என்று சொல்வதற்குத்தான் ஆதாரம் என்ன இருக்கிறது? இந்தியா என்கின்ற பெயர் இந்த நாட்டுக்கு எப்போது ஏற்பட்டது? இதற்கு எல்லை என்ன? பர்மா சென்ற வருடம் பிரிந்துவிட்டது. அதற்குமுன் இலங்கை பிரிந்துவிட்டது. அதற்குமுன் மலேயா பிரிந்துவிட்டது. அதற்குமுன் நேபாளம், பூடான் பிரிந்துவிட்டன. அதற்குமுன் காந்தாரம், காபூல் (ஆப்கானிஸ்தானம்) பிரிந்துவிட்டன. இப்படியே எவ்வளவோ பிரிந்து, எவ்வளவோ சேர்ந்து இருக்கிறது. இந்த நிலையில் தாய்நாடு எது? தகப்பன் நாடு எது? புராண காலத்தில் 56 நாடுகள் இருந்தனவே, அப்போது ஒரு நாட்டுக்காரன் இன்னொரு நாட்டைத் தாய்நாடு என்று கருதினானா?

மாகாண சுதந்திரம் கொடுத்து மாகாணத்துக்கு மாகாணம் சர்வ சுதந்திரமாய்த் தன்தன் காலிலேயே நிற்கும்படியான நிலைமை ஏற்பட்டு, அய்ரோப்பா தேசத்தைப் போல் மொழிவாரியாகத் தனித்தனி நாடாகப் பிரிந்துகொண்டபின்—இந்தியா எப்படி எல்லோருக்கும் தாய்நாடாகும்? நேபால் நம் ஒரு ஜில்லாபோல் உள்ள விஸ்தீரணம்—அவர்கள் இந்தியாவைத் தாய்நாடென்பார்களா? சயாமில் பெரிதும் இந்து மதம்தான்—அவர்கள் இந்தியாவைத் தாய் நாடென்பார்களா?

அய்ரோப்பாவில் நார்வே, ஸ்வீடன், டென்மார்க்கு, ஹாலண்டு, பெல்ஜியம், போர்ச்சுக்கல், கிரீஸ் ஆகிய நாடுகள் நமது நான்கு ஜில்லா, மூன்று ஜில்லா, இரண்டு ஜில்லா போன்ற விஸ்தீரணமுள்ளவை. இவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் நாட்டைத் தாய்நாடு என்பார்களே ஒழிய அய்ரோப்பாவைத் தாய்நாடென்பார்களா?

ஆகவே, தமிழ் நாட்டவர்கள்—திராவிட மக்கள் எந்தக் காரணம் கொண்டு இந்தியாவைத் தாய்நாடென்று கூறவேண்டுமென்பதும், எதற்காக இந்தியா பூராவும் எப்போதும் ஒரு குடையின்கீழ் இருக்கவேண்டும் என்று ஆசைப்பட வேண்டும் என்பதும் எனக்கு விளங்கவில்லை. முதலாவது, 'பாரத நாடு' என்பதையும், நாம் எல்லாம் 'பரதர்கள்' என்பதையும்கூட நான் ஒப்புக்கொள்ள முடியாது.

இந்தி மொழி தமிழ்நாட்டில் எப்போது இருந்தது? பம்பாயில் எப்போது இருந்தது? வங்காளத்தில் எப்போது இருந்தது? இந்தியா 56 தேசமாய் இருந்தபோது 56 மொழிகளின் பேரால்தானே தேசமாய் இருந்தது? அப்போதும் மொத்தத்தில் 56 மொழிகள் இருந்திருக்கும். நாளாக நாளாக ஒரு தேசத்தார் மற்றொரு தேசத்தின்மீது ஆதிக்கம் செலுத்தும்போதும், ஒரு வகுப்பார் மற்றொரு வகுப்பார்மீது ஆதிக்கம் செலுத்தும் போதும்தான் அன்னிய மொழி புகுத்தப்பட்டுவிடுகிறது. அந்த முறையிலே இன்று இந்தியைத் தமிழ்நாட்டில் புகுத்தப் பார்ப்பது, தமிழனல்லாத அன்னிய வகுப்பான் இன்று தமிழ்நாட்டில் ஆதிக்கம் பெற்றுவிட்டதினாலேயே ஒழிய வேறில்லை.

அப்படியானால், இந்தியா ஒரு நேஷனா? அதற்கு மொழி எது? மதம் எது? இந்தியாவில் எத்தனை மதம்? எத்தனை எத்தனை ஆச்சார அனுஷ்டானம்? முதலாவது, இந்து மதம் என்பதைத் தமிழர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்களா? தோழர் கே. பி. பிள்ளை தன்னை இந்து என்று சொல்லுவாரானால் இந்துமத ஆதாரமாகிய வேதத்தை மனுதர்ம சாஸ்திரத்தையும் கீதையையும் ஒப்புக்கொள்ளுகிறாரா? அதன்படி நடக்க இன்று சம்மதிக்கிறாரா? மற்றவன் நடக்கவாவது இவர் அனுமதிக்கிறாரா? இந்து மதத்தில் கே. பி. பிள்ளையின் இடம் எது? இந்து மதத்தால்தான் இந்தியா நேஷன் ஆயிற்று என்றால், அதாவது நேஷனுக்கு மதமே பிரதானம் என்றால் இஸ்லாமியருக்கும், கிறிஸ்தவருக்கும், பவுத்தருக்கும், பார்சிகளுக்கும் இந்தியா நேஷனாகுமா? எதைக் கொண்டு அவர்கள் இந்தியாவை நேஷன் என்பது?

மொழியைக் கொண்டு நேஷன் பிரிப்பது என்றால் மாகாணம் ஒன்றுக்கு நான்கு அய்ந்து நேஷன் ஆகிவிடாதா? பொது விஷயங்களில் வகுப்பு மத விஷயங்கள் புகுத்தக் கூடாது என்கிறார்; அன்றியும் அது மிகவும் அற்பமான விஷயம் என்கிறார். யாருக்கு அற்பம் என்று கேட்கிறேன். நாத்திகனுக்கு அல்லவா மதம் வகுப்பு அற்பமாகும்—அது கூடாததுமாகும்.

இந்தியத் தலைவர் தோழர் காந்தியார், 'இந்து மதத்துக்கு ஆக உயிர் வாழ்கிறேன்; எனது மூச்சே இந்து மதம்; நானே இந்து மதமாய் இருக்கிறேன்' என்றார். முஸ்லிம் தலைவர்கள் தோழர்கள் மகமதலி, ஷவ்கத் அலி, ஜின்னா ஆகியவர்கள், 'நாங்கள் முதலில் முஸ்லிம்; இரண்டாவது முஸ்லிம்; மூன்றாவது முஸ்லிம்; அப்புறம்தான் இந்தியன்' என்கிறார்கள். தோழர் ஜவஹர்லால் மதத்தையும் மத ஆதாரங்களையும் மதப் பழக்க வழக்கங்களையும் காப்பாற்றிக்கொடுப்பதாக உத்தரவாதம் செய்து, தலைவர் பதவி பெற்றிருக்கிறார். மிகவும் அநித்தியமான இந்த அற்ப இக (உலக) வாழ்வு என்பதற்கு ஆக, நித்தியமான பர (மேல் லோக) வாழ்க்கையைக் கெடுத்துக்கொண்டு வகுப்பும் மதமும் அற்பமானது என்று எந்த யோக்கியமான ஆஸ்திகன்தான் சொல்லமுடியும்? 'மதம்' 'வகுப்பு' அற்பம் என்று கருதி இருந்தால் ஜின்னாவுக்கும், ஜவஹர்லாலுக்கும், காந்திக்கும், ஷவ்கத் அலிக்கும், இராஜகோபாலாச்சாரிக்கும் நமக்கும் தகராறு ஏன்? இவர்கள் அயோக்கியர்களா? சுயநலக்காரர்களா? பொது வாழ்க்கையில் வயிறு வளர்ப்பவர்களா? வேறு வகையில் யோக்கியதை அற்றவர்களா? என்று யோசித்துப் பாருங்கள்!

பொது மொழி இந்திதான் இருக்கவேண்டும் என்றால்—அதுதான் அதிக மக்களால் பேசப்படுகிறது என்றால், ஒரு பொதுமொழி தெரிந்தெடுக்க மெஜாரிட்டி பலமே போதுமானதாகுமா? மொழி எதற்காக வேண்டும்? பேசுவதற்கு மாத்திரம்தானா? புதிதாக ஒரு மொழியைத் தெரிந்தெடுப்பதனால் அந்த மொழி பழையது என்றோ வெகுபேர் பேசுகிறார்கள் என்றோ காரணம் சொல்லித் தேர்ந்தெடுப்பது அறிவுடைமையாகாது. அந்த மொழியால் தேச மக்களுக்கு ஏற்படும் பயன் என்ன என்று பார்க்கவேண்டும். புது அறிவு உண்டாகுமா? ஆராய்ச்சிக்குப் பயன்படுமா? முற்போக்குக்கும் நாகரிகத்துக்கும் பயன்படுமா? சீர்திருத்தத்திற்கு ஏற்றதா என்றெல்லாம் பார்க்கவேண்டாமா? இவர்கள் சொல்லும் இந்தி எதற்காகப் பயன்படும்? தோழர் இராஜகோபாலாச்சாரியாரும்—அதாவது இந்தியைப் பொது மொழியாக ஆக்கவேண்டும் என்று சொல்லுகிறவரும், அவரது சகாக்களும் 'இந்தி மூலம் துளசிதாஸ் இராமாயணம் படிக்கலாம்; சமஸ்கிருதம் சுலபத்தில் தெரிந்து கொள்ளலாம்; இந்துமத சாஸ்திரம் உணரலாம்' என்றெல்லாம் சொல்லுகிறார்கள். ஆகவே, இந்தி மூலம் மோட்சத்துக்குப் போவதற்கு அனுகூலமாக—ஆத்மார்த்த விஷயங்கள் என்பதற்கு அனுகூலமாகக் காரணம் சொல்லுகிறார்களே ஒழிய, இந்த உலக வாழ்க்கைக்கு ஆன காரியம் எதுவும் இந்தியில் இருப்பதாகச் சொல்லவே இல்லை. இராமாயணத்திலும், பாரதத்திலும் ஆகாய விமானம் இருக்கிறது; ஆனால், அது மந்திர

சக்தியால் ஓடி இருக்கிறது. இங்கிலீஷில் ஆகாய விமானம் இருக்கிறது. அது இயந்திர சக்தியால் ஓடுகிறது. நமக்கு எது வேண்டும்? மந்திர சக்தியா? இயந்திர சக்தியா?

ஆங்கிலம் நம்மில் சராசரி 100-க்கு ஒருவர் இருவரே படித்திருக்கலாம் என்றாலும்—அது, 35 கோடி மக்களையும் நடத்துகிறது. இந்நாட்டு மனிதன் இன்று அடைந்துள்ள மேல்நிலைக்கு ஆங்கிலமே காரணம். தோழர் கே. பி. பிள்ளை அவர்கள் பேசிய நேஷன், தாய்நாடு, சுயராஜ்யம், பொதுமொழி என்கின்ற உணர்ச்சியை—எண்ணத்தை ஆங்கில மொழியே உணர்த்தியது. அரசனுக்குக் குடிகள் கட்டுப்பட்டு நடக்கவேண்டும் என்றும், அரசனே கடவுள் என்றும் கருதி இருந்த 'இந்தி இந்தியனை' –அரசன் குடிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும் என்றும், அரசன் குடிகளின் சேவகன் என்றும் 'இங்கிலீஸ் இந்தியா'தான் கற்றுக் கொடுத்தது. இன்று உலகப் பொதுமொழியாக ஆங்கிலம்தான் கருதப்படுகிறது. அது அதிக மக்களால் பேசப்படுகிறது.

இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்டாலும் உலக சம்பந்தம் இல்லாமல் இந்தியா வாழ்ந்துவிட முடியாது. வருங்கால உலகம் தேசத்துக்குத் தேசம், நாட்டுக்கு நாடு இப்போது உள்ள தூரத்தில் இருக்காது; கூப்பிடு தூரத்தில் இருக்கப்போகிறது. இந்திக்கு ஆகட்டும்—வேறு இந்திய மொழிக்கு ஆகட்டும் இனி அடுப்பங்கரையிலும், படுக்கை அறையிலும்கூட வேலை இருக்காது.

தொழிலாளிக்கும் தொழில் கருவியும் இயந்திரமும் ஆங்கில மொழியில்தான் இருக்கப் போகின்றன. விவசாயிகளுக்கும் அது போலவேதான். வியாபாரிகளுக்கும் அதுபோலவே தான். அரசியல்காரனுக்கும் அதுபோலவேதான். மோட்சம் போவதற்கு மாத்திரம்தான் இந்தி உதவக்கூடும். ஆனால், மோட்சம் வெகு சீக்கிரத்தில் மறைந்துவிடப் போகிறது.

இந்தியா, 'இராம ராஜ்யமாக' ஆகும் என்று தோழர் கே. பி. பிள்ளை கருதுகிற போது—இந்தியா ரஷ்யா ஆகும் என்று ஏன் நான் கருதக்கூடாது? ரஷ்யாவுக்கும் இந்தியாவுக்கும் அதிகத் தூரமில்லை—250 மைல்கள்தாம்! வகுப்பும் மதமும் வெகு அற்பமானவை என்று உண்மையிலேயே இந்தியர்கள் கருதக்கூடிய நாள் வந்தால், அன்றே இந்தியா ரஷ்யா ஆகிவிடும். அது கூடாது என்பதற்கு ஆகச் செய்யப்படும் சூழ்ச்சிகளில் ஒன்றுதான் இந்தி முயற்சி என்று உறுதியாய்ச் சொல்லுவேன்.

தமிழ்நாடு ஒரு தனி நேஷனாக இருந்தது; இன்றும் இருக்கிறது; அதுதான் திராவிடம். அதனுடைய நாகரிகம், ஆச்சார அனுஷ்டானம் வேறு. வங்காளம், பம்பாய் வேறு. ஆங்கில ஆட்சியால் ஆங்கில மொழியால்தான் ஒன்றுக்கொன்று நேசபாவமான அறிமுகமாவது ஆகி இருக்கிறது. ஆங்கில ஆட்சியும் மொழியும் ஒழிந்து, இந்தி ஆட்சியும் மொழியும் வந்தால் அன்றே தமிழ்நாடானது ஜெர்மனி, இத்தாலி, பிரான்சு முதலிய ஏதோ ஒரு நேஷனுடன் கலந்துவிடும்.

இனி பொதுவாக சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இந்தியா பல மதம், பல வகுப்பு, பல தனிப்பட்ட இலட்சியம் கொண்ட கோரிக்கைகள் உள்ள நாடு. இது உலகில் உள்ள மற்ற நாடுகளைப் போல் மதம், அரசியல், சமூக வாழ்க்கை முதலியவைகளில் ஒரே மாதிரி இலட்சியமுடையதல்ல. கண்டிப்பாய் இந்து–முஸ்லிம் இலட்சியமும் பார்ப்பனர்–பார்ப்பனரல்லாதார் இலட்சியமும் வேறு வேறாகவே இருந்துவருகின்றன. செல்வாக்கில்லாத இலட்சியமுடையவர்களை, செல்வாக்குள்ள இலட்சியமுடையவர்கள் இழித்தும் பழித்தும் கூறி கேவலப்படுத்துவதாலோ, கட்டுப்பாடாக உண்மையை மறைத்துப் பிரச்சாரம் செய்வதாலோ, கூலிகளை ஏவிவிட்டுக் காலித்தனம் நடக்கச் செய்வதாலோ எல்லோருடைய இலட்சியமும் ஒன்று என்று சொல்லிவிட முடியாது.

உதாரணமாக, இன்று பார்ப்பனர்கள் தங்கள் சமூகத்துக்கு என்று அனுபவித்து வரும் எந்த உரிமை இலட்சியத்தை விட்டுக்கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள்?

அதுபோலவே, முஸ்லிம்களும் தங்கள் சமூகத்துக்கு அல்லது மார்க்கத்துக்கு என்று அனுபவித்து வரும் எந்த உரிமை உணர்ச்சியை விட்டுக்கொடுக்கத் தயாராய் இருக்கிறார்கள்? அதுபோலவே, பார்ப்பனரல்லாதாரோ அல்லது கீழ்சாதியார் என்பவர்களோ அனுபவித்து வரும் இழிவுகளையும் கொடுமைகளையும் நீக்க எந்த அளவுக்குப் பார்ப்பனர்களும் மேல்சாதியாரும் சம்மதிக்கிறார்கள்?

மேல்நாட்டில் இம் மாதிரியான சமூக, வகுப்பு, மார்க்கத் தொல்லை கிடையாது. குறிப்பாக நம் தென்னாட்டில் பார்ப்பனர்—பார்ப்பனர் அல்லாதார் என்கின்ற தொல்லை பல ஆயிரக்கணக்கான வருடங்களாய் இருந்துவந்திருக்கிறது. இன்று சுமார் 50 வருட காலமாய்ப் பச்சையாய்—வெளிப்படையாய் அரசியலிலும், உத்தியோக இயலிலும், சமுதாய இயலிலும் தலைவிரித்து ஆடிவருகிறது. ஏன் இதைச் சொல்லுகிறேன் என்றால், இன்றைய தினம் நாம் இங்கு வாதம்செய்யும் இந்தி—அதில் பட்டதனாலேயாகும். இந்தி மொழியும் அதன் கலைகளும் தமிழ்நாட்டு மக்களுக்கு—குறிப்பாக பார்ப்பனரல்லாத ஏனைய மக்களுக்கு நேர் மாறானதாக இருக்கின்றன. இதை நான் இன்று மட்டும் சொல்லவில்லை.

சுயமரியாதையுடையவன் இந்தியை ஆதரிக்கமாட்டான். 1921-ம் வருடம் நான் பெரிய தேசபக்தனாய், தேசிய வீரனாய் இருந்து சிறைசென்று வந்த உடனே திருப்பூரில் கூட்டப்பட்ட தமிழ் மாகாண மாநாட்டில் நான் சொல்லியிருக்கிறேன். அதாவது, இன்று இந்தியைத் தமிழ் மக்களுக்குள் புகுத்தியாகவேண்டும் என்று பலாத்காரம் செய்யும் தோழர் இராஜகோபாலாச்சாரியார் என்ன காரணத்திற்காகத் தமிழ் மக்கள் இந்தி படிக்கவேண்டும் என்று சொன்னாரோ—அந்தக் காரணமாகிய இராமாயணத்தைப் படிப்பதையும், மனுதர்மத்தை உணர்வதையும் குற்றம் என்று சொன்னதோடு, அவைகளை நெருப்பில் போட்டு பொசுக்க வேண்டும் என்றும் நான் சொல்லியிருக்கிறேன். அன்று சொன்னதைப்பற்றிக் கவலை இல்லை, இன்று சொல்லுகிறேன்.

துளசிதாஸ் இராமாயணமானாலும் சரி, வால்மீகி இராமாயணமானாலும் சரி, கம்ப இராமாயணமானாலும் சரி, ஏதாவது ஒரு இராமாயணத்தைத் தோழர் கே. பி. பிள்ளை ஒப்புக்கொள்ளுகிறாரா? அதில் உள்ள தனது நிலையை ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கிறாரா? அல்லது இங்குள்ள யாராவது இராமாயணத்திலும், மனுதர்மத்திலும், மற்றும் இந்தி புராண சாஸ்திரங்களிலும் உங்களுக்கு உள்ள நிலையை ஏற்றுக்கொள்ளுகிறீர்களா என்று கேட்கின்றேன். நான் அந்தத் தனிப்பட்ட புஸ்தகங்களில் உள்ள விஷயங்களைப் பற்றிக் கூட இப்பொழுது கேட்கவில்லை. இந்து மதம் என்பதில் இங்குக் கூடியுள்ள உங்களுக்கு உள்ள நிலையை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா? அப்படி இருக்க, இராமாயணமும், புராணங்களும், இந்துமத சாஸ்திரங்களும் படிக்க இந்தி உதவும் என்றால் சுயமரியாதை உள்ள எவனாவது அதை ஒப்புக்கொள்ள முடியுமா?

மற்றும், வடநாடும் தென்னாடும் ஒரே இலட்சியமுடையதாகுமா? வடநாட்டாரால் இதுவரை தென்னாட்டாருக்கு ஏற்பட்ட நன்மை என்ன என்று யாராவது விரல்விட்டுச் சொல்லட்டும்! நம் மக்கள் ஏமாற்றப்பட, நமக்கு யோக்கியதை தெரியாத வடநாட்டாரைப் பிடித்துவந்து காட்டி வஞ்சித்ததல்லாமல், தென்னாட்டுச் சமூக, சமய, பொருளாதார, அரசியல் முதலிய விஷயங்களுக்கு வடநாடு எதில் பயன்பட்டது? நம்நாட்டுக்கு அழைத்து வரும்போது வடநாட்டவர்களை இந்திரன், சந்திரன், வீரன், சூரன், தியாகி, சத்தியவான், மகான் என்று விளம்பரம் செய்கிறார்கள். அவர்களைப்பற்றி அந்த உள்ளூர்க்காரர்களைக் கேட்டால், 'அவர்களுக்கு மிஞ்சிய மோசமானவர்கள் எந்நாட்டிலுமில்லை' என்கிறார்கள்.

ஆகவே, நாம் ஏமாறுவதற்குத்தான் வடநாடு உபயோகிக்கப்படுகிறது. இன்றைய அரசியலைப் பார்க்கின்றபோது, எக்காரணம் கொண்டாவது—எப்பாடுபட்டாவது நம்

நாட்டை வடநாட்டுச் சம்பந்தத்திலிருந்து தனியாகப் பிரித்துக்கொண்டால் ஒழிய நமக்கு விடுதலையோ மானமோ ஏற்படப்போவதில்லை. இன்று சிறிதாவது நமக்குச் சுயமரியாதை உணர்ச்சியும், சுதந்திர உணர்ச்சியும் இருக்கிறதென்றால் அது நமது தனிப்பட்ட தமிழ்நிலை உணர்ச்சியாலேயும், இந்தி படிக்காததாலேயும்தான் என்று வலிமையாய்க் கூறுவேன். நமது இரத்தத்தில் அடிமை உணர்ச்சியைப் பாய்ச்சவே இன்று பார்ப்பன ஆதிக்கம் நம்முன் பலாத்காரமாய் இந்தியைப் புகுத்துவதாகும். இந்தியில் அரசியல் சுதந்திர ஞானம் கிடையாது; இந்தியில் பொருளாதார ஞானம் கிடையாது; இந்தியில் சமுதாய சமத்துவ ஞானம் கிடையாது; ஏதாவது இருப்பதாகச் சொல்லப்படுமானால் அவை இவையேயாகும். அதாவது:—

'ஒரு நாட்டு மக்களை ஆளவேண்டுமானால், அவர்களுக்கு கல்வி வாசனையும் அறிவுச் சுதந்திரமும் இல்லாமல் மடையர்களாக வைத்திரு.'

'ஒரு நாட்டு மக்களை என்றும் அடக்கி ஆளவேண்டுமானால், அவர்களுக்குப் பொருளாதார உரிமை இல்லாமல் சாமி, பூதம், பிசாசு என்கின்றதான மூடநம்பிக்கையைப் புகுத்திப் பயப்படுத்தி அவர்களது பொருள்களைக் கொள்ளையடி.'

'ஒரு நாட்டு மக்களை அடக்கி மிருகங்களிலும் கேவலமாய் என்றென்றும் அடிமைப் படுத்தி ஆதிக்கம் செலுத்த வேண்டுமானால், அந்நாட்டு மக்களை ஆயிரம் சமூகமாக ஆக்கி, ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வு கற்பித்துச் சின்னாபின்னப்படுத்தி வை.'

என்பதல்லாமல் வேறு என்ன இருக்கிறது? நான் சாணக்கிய அரசியல் தந்திரம் முதல் இந்தியில் உள்ள பல அரசியல் நீதி சாஸ்திரங்களைப் பற்றியேதான் தெரிந்தவரை பேசுகிறேன். ஊரார் உழைப்பில் ஒரு சிறு சமூகம் உண்டு, வாழ்வதற்கு உரியதே இந்திக் கலைகளாகும். மற்றும் பாருங்கள்! நம் நாட்டில் மொத்தத்தில் இன்று 100-க்கு 9பேர்களே படித்தவர்கள். இவர்களில் பார்ப்பனர்கள் 100-க்கு 3பேராய் இருந்தாலும், அவர்கள் சமூகம் பூராவும் 100-க்கு 100பேர் படித்திருக்கிறார்கள். ஆங்கிலம் கற்றவர்கள் அவர்களில் 100-க்கு 50பேர் இருக்கலாம். நம்மில் தமிழ்ப் படித்தவர்களே 100-க்கு 5, 6 பேர்தாம் இருப்பார்கள். அதிலும் கிராம வாசிகளில் 100-க்கு 2, 3 பேர்கள் தாம் இருப்பார்கள். சில சமூகங்களில் ஒருவர் இருவரே இருப்பார்கள். பார்ப்பனர்களுக்கோ இந்தி வெகு சுலபமான மொழி. ஏனெனில், அவர்களுக்கு அது பாரம்பரிய மொழி. நமக்கு அது சுலபத்தில் வாயில் நுழையாத மொழி. பார்ப்பனர்கள் 100-க்கு 77பேர் இந்தியில் பாஸ் செய்தால் நம்மில் 100-க்கு 15பேர்கள் கூட பாஸ் செய்ய முடியாது. உத்தியோகத்துக்கு இந்தி ஒரு யோக்கியதையாய் வைத்துவிட்டால், நம்மவர்களுக்குப் பழைபபடி 'பங்கா' இழுப்பதும், 'பில்லை' போட்டுக் கொள்வதுமான சேவக வேலைதான் கிடைக்கும்.

உதாரணமாக, அரசியலில் பார்ப்பனரல்லாதார் இயக்கம் ஏற்படும் முன்பு சில படிப்புகளுக்கு—டாக்டர் முதலிய பரீட்சைக்கு சமஸ்கிருதம் படித்திருக்கவேண்டுமென்று பார்ப்பனர்களால் சூழ்ச்சி செய்யப்பட்டு இருந்தது. அதனாலேயே பார்ப்பனரும் மலையாளிகளுமே பெரும்பான்மையாய் டாக்டர்களானார்கள். ஜஸ்டிஸ் கட்சி வந்தபிறகு—பனகல் அரசர் காலத்தில் சமஸ்கிருதம் படித்திருக்கவேண்டும் என்கின்ற நிபந்தனை எடுக்கப்பட்டு விட்டது. அதற்கப்புறமே பார்ப்பனரல்லாத தமிழ்மக்கள் பலர் டாக்டர்களாக முடிந்தது. அதுபோல்தான், இந்திக்கு உத்தியோக யோக்கிதையும் வைத்துவிட்டால்—பழையபடி, நாம் கல்வியில் இன்னும் அதிகமான பிற்பட்ட வகுப்புக்காரர்களாக ஆகிவிடுவோம்.

மாகாணக் கல்லூரியில் சமஸ்கிருதப் போதகருக்கு மாதம் 350 முதல் 500 ரூபாய் சம்பளம். தமிழ்ப் போதகருக்கு அதில் பாதிகூட இல்லை. 'அதிகாரி வீட்டுக் கோழி முட்டை அம்மிக் கல்லை உடைக்கும்' என்று ஒருவர் சொன்னார். அதுபோல், ஆதிக்கத்தில் உள்ளவர்கள் மொழி ஆனதால்—இந்தியை, தமிழை ஒழிக்கக் கட்டாய பாடமாக்கப்

போகிறார்கள். ஒரு சமயம் '10 ரூபாய் கேட்டால் 5 ரூபாயாவது வராதா?' என்கிறது போல் எண்ணிக்கொண்டு, தோழர் ஆச்சாரியார் கட்டாய பாடமென்றால், 'இஷ்ட பாடமாகவாவது வைத்துத் தொலையுங்கள்' என்று தமிழ் மண்டுகள் சொல்லாதா என்றே இந்த குயுக்தி செய்திருந்தாலும் செய்திருக்கலாம். எந்தப் பாடமாகவும் இந்தி நமக்கு எதற்கு? அதற்காகச் செலவிடும் நேரம், பணம், ஊக்கம் எல்லாம் தேசிய நஷ்டமல்லவா என்று கேட்கின்றேன். இந்த நாட்டில் இந்தி பாடமாக வைக்கப்பட்டால் தமிழர்கள் ஒழிந்தார்கள்—சுயமரியாதைக்குக் குழி தோண்டப்பட்டது என்றுதான் அர்த்தம்.

ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்களுக்கு இதைப்பற்றி அதிகக் கவலையில்லை. அவர்களில் பலர் இராமாயணத்தைப் பூசிப்பவர்கள். அதைப்பற்றி நாம் இப்போது கவலைப்பட வேண்டாம். நம் தமிழ் மக்கள் இதை நன்றாய் உணரவேண்டும். அதாவது, இது ஒரு நெருக்கடியான சமயம்; இதில் ஏமாந்துவிட்டோமேயானால் தமிழன் தாசி மகனாகத் தானே ஆகிவிடுவான்? இப்பொழுதாவது அதற்கு என்று ஒரு சாதியும், ஒரு நாடும் மாத்திரமிருக்கிறது. இந்தி புகுந்துவிட்டால் தமிழர்கள் பூராவும்—பெண்கள் தாசிகளாகவும், ஆண்கள் தாசி மக்களாகவும், தாசர்களாகவும் ஆகிவிடவேண்டியதுதான். அந்த நிலை ஏற்பட்ட பிறகு நாம் இருப்பதைவிட இறப்பதே மேல். கட்சி உணர்ச்சியை இதில் விட்டுவிடுங்கள்.

[கொல்லம்பாளையத்தில், 19-9-1937-ல் சொற்பொழிவு—'பகுத்தறிவு' மலர் 3 : இதழ் 6]

## 2. சுதந்திரத் தமிழ்நாடு

தமிழ்நாடு என்பது திராவிடநாடு என்றும், திராவிடநாடு என்பதானது இன்னது என்றும் வெகுகாலமாகவே அய்ரோப்பிய அறிஞர் முதல் பல உலக ஆராய்ச்சிக்காரர்களாலும், இந்திய சரித்திர ஆராய்ச்சியாளராலும் எல்லை காட்டி வகுக்கப்பட்டிருக்கிறது என்றும் நான் இது விஷயமாய்ப் பேசுகிற இடங்களில் எல்லாம் இதைப்பற்றி விளக்கிப் பேசியே வந்திருக்கிறேன்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலாகிய மொழிகளைத் தாய்மொழியாகப் பேசிவந்த மக்களையே மிகுதியாகக் கொண்ட நாடுகள்—இன்று திராவிடம் என்று சொல்லப்படுவது யாவரும் அறிந்ததேயாகும். அந்தத் திராவிடம் என்பது பெரிதும் சென்னை மாகாணமாகவே இருக்கிறதுடன் மற்றும் சிறிது சென்னை மாகாணத்தைத் தொட்ட சுற்றுப்புற நாடாகவும் இருக்கிறது.

இந்த விஸ்தீரணத்திற்குட்பட்ட முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும், தாழ்த்தப்பட்ட மக்களும் தங்களை ஆரியர் என்று சொல்லிக்கொள்ளும் பார்ப்பனர் அல்லாத மற்ற இந்துக்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்களும் ஆகிய எல்லோரும் திராவிடர்கள் என்ற தலைப்பின்கீழ்தான் வருவார்கள். இவற்றை விளக்குவதோ மற்றும் இது சம்பந்தமாக இனியும் விளக்கிச் சொல்லுவதோ, கஷ்டமான காரியம் அல்ல என்பதோடு, இதுவரை சாதாரண நிலையில், ஆராய்ச்சியில், விவகாரத்தில் இவை வழங்காத விஷயங்கள் என்றும் சொல்லிவிட முடியாது என்று கருதுகிறேன்.

மேற்கண்ட விளக்கத்திற்கு உட்படாத, 'தமிழரல்லாதவர்கள் இருந்தால் அதைப் பற்றி என்ன?' என்று கேட்பீர்களானால் அவர்களுக்குள்ள உரிமைகள், அவர்களது முன்னேற்றத்துக்கு ஏதுவான அபிலாசைகள் நியாயப்படி காக்கப்படும்; யாரும் சந்தேகப்பட வேண்டியதில்லை.

திராவிட நாட்டில் பல மொழிகள் இருக்கின்றனவே என்றால், இப்போது காங்கிரஸ் தீர்மானித்து இருப்பதை அடிப்படையாகக் கொண்டே, திராவிடதேசம் என்பது—அவசியப்பட்டால் திராவிட மொழிவாரியான மாகாணங்களைக் கொண்டதாகவும் இருக்கும்.

உதாரணமாக, பிரிட்டனானது ஒரு தேசமாகவும், ஒரு ஆட்சியாகவும், ஒரு சமயம், ஒரே சமுதாயக் கொள்கை கொண்டதாகவும் இருந்தபோதிலும்—வேல்ஸ், இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய மாகாணங்கள் பெரிதும் மொழிவாரியாக இருப்பது போலும், மற்றும்பல மேல்நாடுகளில் இருக்கும் உள்மாகாணப்பிரிவுகள் போலும் திராவிடம் என்ற தலைதேசத்தில் மொழிவாரி மாகாணங்கள் இருக்கும்.

'இதை எப்படிக் காப்பாற்றிக்கொள்ள முடியும்'? என்று கேட்கிறீர்கள். பூரண சக்தி திராவிடத்திற்கு ஏற்பட்டு சர்வதேச சங்கத்தோடு (League of Nations) ஒரு தனி சுயேச்சை நாடாக (Independent Country) ஆகும் வரை, சிலோன், பர்மா போலும் அல்லது சில சுதேச சமஸ்தானங்களான தனி சுயநிர்ணய நாடுகள்போலும் பிரிட்டனுடைய பாதுகாப்பின் மூலம் காக்கப்படும்.

'இந்தியாவின் மற்ற பாகங்களுடன் திராவிடம் வைத்திருக்கும் சம்பந்தம் எப்படியிருக்கும்?' என்று கேட்கிறீர்கள். எப்படியென்றால், மேற்கண்ட பர்மா, சிலோன் ஆகிய நாடுகள் மற்ற நாடுகளுடன் வைத்திருக்கும் சம்பந்தம்போல இருந்து கொண்டு—திராவிடர் அல்லாத வெளிநாட்டார் திராவிடத்தில் அரசியல், சமுதாயம், பொருளாதாரம் முதலிய வற்றில் ஆதிக்கம் செலுத்தாமலும் திராவிட செல்வத்தைச் சுரண்டிக்கொண்டு போகாமலும் பார்த்துக்கொண்டு நேசதேசமாய் இருந்துவரும்.

'திராவிட தேசம் பிரிக்க முடியாதது' என்கிறீர்கள். அதற்குப் பல சரித்திர ஆதாரம், இன்றைய கலை சமுதாய பழக்கவழக்கம் முதலியனவும், பிரத்தியேக ஒற்றுமை எல்லை முதலியவைகளும் திராவிடம் என்பதை மிகச் சுலபமாகப் பிரித்துக் காட்டக்கூடியதாகவே யிருக்கிறது.

'இந்தியா பெரிய நாடாக—ஒரு தேசமாக இருப்பதால் நன்மை' என்கிறீர்கள். இன்று இந்தியா 40 கோடி ஜனத்தொகையும் பல ஆயிரக்கணக்கான மைல் சுற்றளவும்—பல சாதி சமயக் கூட்டுறவுடனும் பல மாகாண மக்களுடன் கலந்து ஒரு நாட்டினராயும் இருந்து வருவதின்மூலமே ஒரு சிறுபான்மையார் கட்டுப்பாடான ஒற்றுமையாயிருந்து கொண்டு தந்திரத்தில் ஒவ்வொரு மாகாணப் பெருங்குடி மக்களையும் அவர்களுக்குள் ஏற்பாடு செய்துவிட்ட பாகுபாடுகளால் சிறுபான்மையினராக ஆக்கி, அவர்கள்மீது சுலபத்தில் ஆதிக்கம் செலுத்தவும்; ஒரு மாகாணத்தானை மற்ற மாகாணத்தானுக்குக் காட்டிக் கொடுத்து, ஆதாயம் பெற்று அதன் பயனாய்ச் சிறுபான்மையினரே மற்ற பெரும் பான்மையானவர்களை அடக்கி ஆளவும் முடிந்து வந்ததுடன், இனியும் அப்படித்தான் முடிகிறதே தவிர தாங்கள் கூறுகிறபடி ஒன்றாயிருந்தால் ஒற்றுமையும் பலமும் நாட்டிற்கு ஒரு நன்மையும் செய்து விடவில்லை.

ஆதலால் பரந்தநாடும், அதன் கலை, சமுதாயம், மதம் முதலியவைகளும் பொருத்த மில்லாத மக்களும் ஒன்றாயிருப்பதால் சுலபத்தில் மற்றவர்களால் ஏமாற்றப்படமுடிகிறதே தவிர முற்போக்கு அடையவோ, உரிமை பெறவோ முடிவதில்லை.

இன்றும் சரித்திரம் பார்க்கலாம். தனித்திருந்த காலத்தில் திராவிடம் முதலிய நாடு களில் மக்களின் நிலைமையும் சமுதாயமும், பொருளியல், அரசியல், வீரம், சுயமரியாதை உணர்ச்சி ஆகியவை எப்படி இருந்தன? இன்று எப்படி இருக்கின்றன? என்று பார்த்தாலே தங்கள் காரியங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளும் நிலைமை நல்லதா, கெட்டதா என்று விளங்கும். 'அகல உழுவதைவிட ஆழ உழுவது மேலானது' என்பதுபோல், இம் மாதிரி நம்நாட்டைப் பிரித்துக்கொண்டு அதற்கேற்றபடி நடந்து முன்னேற்றமடைவதா லேயே மற்ற மாகாணக்காரர்கள் நம்மைப் பின்பற்றவேண்டியவர்களே யாவார்கள்.

ஏனெனில், இன்று நாட்டில் ஒற்றுமை கெட்டு நலம் குன்றி இழிநிலையில் இருப் பதற்குக் காரணம், இந்நாட்டு மக்களுக்குத் தாங்கள் ஒரே சகோதரர்கள் என்ற உணர்ச்சி

இல்லாததேயாகும். இதற்கு முக்கிய காரணம், தமிழர் அல்லது திராவிடர்கள் பிறவியில் உயர்வு–தாழ்வு கொள்கை இல்லாதவர்களாயிருப்பதும், திராவிடத்தில் புகுந்து குடியேறி ஆதிக்கம் கொண்ட ஆரியர் பிறவியில் உயர்வு–தாழ்வு என்பதையே அடிப்படையான கொள்கையாகக் கொண்ட சமய சமூகத்தவராயிருப்பதும் ஆகும்.

'தமிழ் நாடு தமிழருக்கே!' என்று இப்போது நடைபெற்றுவரும் பிரச்சாரத்தைப் பற்றித் தமிழ்நாட்டில் எங்கும் பேசப்பட்டு வருகிறது. நம் எதிரிகளும், தங்கள் சுயநலத்திற்காகவே நம் கூட்டத்தில் இருக்கும் சில வேஷதாரிகளும் இதைத் திரித்துக் கூறுவதும், இதைப்பற்றி விஷமப்பிரச்சாரம் செய்வதும், இதற்கு எதிரான ஒரு கிளர்ச்சியை உண்டாக்க சூழ்ச்சி செய்வதுமான காரியங்களைப்பற்றிக் கேள்விப்படுவதோடு, சில விஷயங்களை நேரிலும் பார்க்கிறோம். இது விஷயமாக நான் தூத்துக்குடியில் பேசிய பேச்சை வைத்து 'மெயில்' பத்திரிக்கை எழுதிய கண்டனத்திற்கு, சென்னை மெமோரியல் ஹாலில் சொன்ன சமாதானம் சமீபத்தில் நம் பத்திரிகையில் வரக்கூடும். ஆனாலும் 'மெயில்' பத்திரிகைக்கு எழுதி அனுப்பிய விளக்கம் 20–11–1939-ந் தேதி 'மெயிலி'ல் பிரசுரிக்கப்பட்டிருப்பதுடன் அதன் தமிழ்க் கருத்து இன்றுவேறு பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. என்றாலும், இனி, அப் பிரச்சாரம் தீவிரமாகச் செய்யப்பட விருக்கிறபடியால் அதைப் பற்றிய விளக்கத்தைத் தெரிவிக்கிறேன்.

'தமிழ் நாடு தமிழருக்கே!' என்ற அபிப்பிராயம் சென்ற வருடம் டிசம்பரில் சென்னையில் நடந்த தென்னிந்தியர் நல உரிமைச் சங்க (ஜஸ்டிஸ் கட்சி) மாநாட்டிலே வாசிக்கப்பட்ட எனது பிரசங்கத்திலே குறிப்புக் காட்டப்பட்டிருக்கிறது. மற்றும், அதற்கு முதல்நாள் வேலூரில் நடந்த தமிழ் மாநாட்டில் தலைமை வகித்த தோழர் சர் ஏ.டி. பன்னீர் செல்வம் அவர்களும் தலைமைப் பேருரையில் விளக்கி இருக்கிறார்கள். மற்றும், அது பற்றியே பெரிதும் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்னும் சொல் இன்று தமிழ் நாடெங்கும், தமிழ் மக்களது இலட்சியக் குறிச்சொல்லாகத் தமிழ்மக்களால் ஒலிக்கப்படுகிறது.

அன்றியும், 'தமிழ்நாடு தமிழருக்கு' என்பதில் யாருக்காவது அதிருப்தியோ, அபிப்பிராய பேதமோ இருப்பதாக இதுவரை நமக்கு எவ்வித தகவலோ, மறுப்போ வந்தது கிடையாது.

பார்ப்பனப் பத்திரிகைகள் சிலவற்றிலும், அவர்களது கூலிகளது வாய்கள் சிலவற்றிலும் ஏதோ பொருத்தமற்ற கூப்பாடுகள் இரண்டொன்றைக் காணவும், கேட்கவும் நேர்ந்தது என்றாலும் அதுவும் எங்கும் மறுமுறை கிளம்பினதாகத் தெரியவில்லை.

ஒரு பார்ப்பனப் பத்திரிகை மாத்திரம், 'தமிழ்நாடு தமிழருக்கே' என்றால், 'எலி வளை எலிகளுக்கே' என்று எழுதிற்று. மற்றொரு பார்ப்பனக் கூலியின் வாய், 'தமிழ்நாடு தமிழருக்கே' என்றால், 'கன்னடியனுக்குத் தமிழ்நாட்டில் என்ன வேலை?' என்று கூவிற்று. உள்ளேயிருந்தே உலை வைக்கக் கருதி இருக்கும் ஒரு தோழர் 'தமிழ்நாடு தமிழருக்கே என்றால், ஆந்திர, மலையாளி கதி என்னாவது?' என்று விஷமப் பிரச்சாரம் செய்தார். இவை தவிர வேறு விதமான எதிர்ப்புகளோ அதிருப்திகளோ வந்ததாக நமக்குத் தெரியவில்லை. எப்படி இருந்தாலும் சரி, அந்த இலட்சியமே இன்று தமிழ் மக்களின் குறிக்கோளாய் இருப்பதால் அதை விளக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

'தமிழ்நாடு தமிழருக்கே!' என்பதில் நாஸ்திகமோ, மதமொழிப்போ, வகுப்புத் துவேஷமோ தொக்கி இருக்கிறது என்று யாராவது சொல்லி வருவார்களேயானால், அவர்கள்–ஒன்று, விஷயம் அறியாதவர்கள்; அல்லது, வேண்டுமென்றே விஷமப் பிரச்சாரம் செய்யும் அயோக்கியர்களேயாவார்கள். ஏனென்றால் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்று சொல்லும் தோழர்கள் சர் பன்னீர்செல்வம், குமார ராஜா முதலாகிய தலைவர்கள் நாஸ்திகர்களோ, மதமொழிக்கும் உணர்ச்சி யுடையவர்களோ அல்லர்.

தமிழ்நாடு என்று இதுகாறும் பேசியும், எழுதியும் வருவதெல்லாம், தமிழ்நாடு என்பதற்குத் திராவிடநாடு என்ற பொருளோடு இல்லாமல், தமிழ்மொழி பிரிவினையைக் கொண்ட கருத்தில் அல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஏனெனில், 'தமிழ்நாடு' என்றால், 'திராவிட நாடு' என்றும் நாம் எடுத்துக் காட்டவேண்டிய அவசியம் சிறிதுமில்லாமல் எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. அன்றியும், 'திராவிடமே தமிழ்' என்று மாறிற்று என்றும் 'தமிழே திராவிடம் என்று மாறிற்று' என்றும் சரித்திர ஆசிரியர்கள் முடிவு கண்டதாகக் குறிக்கப்பட்ட ஆதாரங்கள் ஏராளமாக இருக்கின்றன. பழங்காலத்து அகராதிகளும் அப்படியே சொல்லுகின்றன.

['மெயில்' பத்திரிகையில் ('The Madras Mail') 20-11-1939-ல் வெளியிடப்பட்ட விளக்க அறிக்கை—'குடி அரசு' 26-11-1939]

## 3. தமிழ்நாடு தமிழருக்கே

தமிழ் மக்கள், இன்று தங்களை உண்மைத் தமிழரென்றும்—கலப்படமற்ற தனித் தமிழ்ச் சாதி, 'Race' என்றும் ஒருவன் சந்தேகமறக் கருதுவானாயின், அவன் உடனே தன்மீது சுமத்தப்பட்டிருக்கும்—தனக்கு எவ்வகையிலும் எப்போதும் சம்பந்தமிருந்திராத தான—தன்னை (தமிழ்மகனை) சூத்திரன் என்றும், சண்டாளன் என்றும் கூறும்படியான சமயத்தை உதறித் தள்ளிவிடவேண்டியது முதற் காரியமாகும்.

அடுத்தாற்போல், அத் தமிழ் மகன் தமிழ்நாட்டின் விடுதலையும், சுதந்திரமும், செல்வப் பெருக்கும், தொழில் மேம்பாடும்தான் தன்னுடையது என்றும்; இவற்றிற்காக உழைப்பதுதான் தனக்காக—தமிழ் மக்களுக்காக—தமிழ் நாட்டுக்காகச் செய்யும் தொண்டு, கடமை என்றும் கருதவேண்டும்.

இப்படிக் கருதாததாலேயேதான் தமிழன் இன்று முற்கூறப்பட்ட பல இழிவுகளுக்கு ஆளாகி, நிரந்தர இழிமகனாய் இருக்கவேண்டியவனாய் இருக்கின்றான்.

சுருங்கக் கூறின், தமிழன் ஈனநிலைக்குக் காரணம்—இந்துமதத்தைத் தனது மதம் என்று கருதியதும், இந்தியா பூராவையும் தன்நாடு (தேசம்) என்று கருதியதும், இவ்விரண்டுக்கும் உழைக்கும் தொண்டே மக்கள் தொண்டு, தேசத் தொண்டு (தேசாபிமானம்) என்று கருதி வருவதுமேயாகும்.

'இந்திய தேச அபிமானம்'—என்பது, தமிழன் பல நாட்டாரின் நலனுக்கு உழைத்துப் பல நாட்டாருக்கு அடிமையாய் இருப்பது என்பதாகும்.

இந்த நிலை அடியோடு அழியாமல் தமிழனுக்கு விடுதலை, சுதந்திரம், தன்மானம் என்பவை ஏற்படப் போவதில்லை.

தமிழ்நாட்டுத் தொழில்முறைகளை எடுத்துக்கொண்டோமேயானால், அதுவும் தமிழனுக்குப் பயன்படுவதில்லை என்பது விளங்கும்.

இரும்புத் தொழிலில் பம்பாய்க்காரர், பாரசீகக்காரர் உரிமைபெற்றுப் பயனடைகிறார்கள்.

உலோகத் தொழிலையும் பம்பாய்க்காரர், ஷோலாப்பூர்க்காரர் உரிமையாக்கிப் பயனடைகிறார்கள்.

துணித் தொழிலை பம்பாய், ஆமதாபாத்காரர்கள் கைப்பற்றிப் பயனடைகிறார்கள். இந்தத் தொழில்கள் இயந்திர உதவியினால் செய்யப்படுவதையே இங்குக் குறிப்பிடுகின்றோம். அதனால் தமிழ்த் தொழிலாளிகளுக்கு வேலையில்லை; தமிழ் முதலாளிக்கு இலாபம் இல்லை.

மற்றும், லேவாதேவித் தொழிலை எடுத்துக்கொண்டால், அவை பெரிதும் மார்வாரி நாட்டானும், குஜராத்தி, மூல்தான் நாட்டானுமே ஏகபோக உரிமையாக்கி அவர்கள் கொண்டுபோகும் செல்வம் கொஞ்சமா? அவை எப்படிப் போகின்றன என்பதைப் பார்த்தால் தமிழ்க் கூலிகள், தொழிலாளர்கள், ஏழைகள் ஆகியவர்களின் செல்வத்தைக் கையைத்திருகிப் பிடுங்கிக்கொண்டு போவதுபோல் மார்வாரிகள் கொண்டுபோகிறார்கள்.

மற்றும், தமிழ் வியாபாரிகள், ஏழைக் கிராமக் குடியானவனையும் தொழிலாளிகளையும் ஏமாற்றி வஞ்சித்துத் தேடும் செல்வம் அத்தனையும் பகற்கொள்ளை—வட்டிக் கொள்ளை என்று சொல்லப்படுவதுபோல் கோடி கோடியாய் சிந்து மாகாணத்திற்கு வட்டியின் பேரால் கடத்திச்செல்லப்படுகிறது. அதன் பயனாகத் தமிழ்நாட்டில் உள்ள பெரும் பெரும் வர்த்தகர்கள் மிக மோச நிலைக்கு வந்துவிட்டார்கள். மணல் வீடு கட்டிச் சரிந்து மட்டமாவதுபோல், தமிழ் வியாபாரிகள் தினம் தினம் கடன்காரராகி—பாப்பராகி—'இன்சால்வென்டாகி'த் தற்கொலை செய்து கொள்ளுவதும், நாட்டைவிட்டு ஓடுவதுமான நிலையில் இருந்து வருகிறார்கள்.

வியாபார நிலையக் காரியஸ்தர்கள் என்பவர்களுக்கோ, மாதம் ரூ. 100 சம்பளம் வாங்கின குமாஸ்தாவுக்கோ, இன்று மாதம் 25 ரூபாய் கொடுப்பதற்கு வியாபாரிக்குச் சக்தியில்லை. மாதம் 7 ரூபாய்க்கும், 8 ரூபாய்க்கும் கணக்குப் பிள்ளைகள் தவிக்கிறார்கள்; மூல்தானி, மார்வாரி வீட்டுச் சமையல்காரன் மாதம் 90 ரூபாய் சம்பாதிக்கிறான்.

கம்பளத் தொழிலும் பஞ்சாப் மாகாணக்காரன் கொள்ளைக்கு உதவுகின்றது. இதுபோலவே, மற்றும் அனேகமாக சரீரக் கூலித்தொழில் போக—மற்ற இலாபம் தரும் இயந்திரத் தொழில்கள், மூளைத் தொழில்கள் என்பவைகள் எல்லாம், பெரிதும் தமிழ் நாட்டார் அல்லாதவர்களால்—தமிழரல்லாதவர்களால் கைப்பற்றப்பட்டு, செல்வம் தேடப் பட்டு, திரட்டிய செல்வமனைத்தும் தமிழ் நாட்டைவிட்டு வெளிநாட்டிற்குக் கடத்தப்படு கிறதுடன், தமிழனுக்கு விரோதமாகவும் அவை உபயோகப்படுத்தப்படுகின்றன. இந்தப்படி பாழாவதும் கடத்தப்படுவதுமானது மேல்நாட்டுக்குப் போனால் என்ன? வடநாட்டுக்குப் போனால் என்ன? அல்லது கீழ்நாட்டுக்குப் போனால் என்ன?

அரசியல் துறையிலும் நாம் (தமிழன்) வேறு நாட்டானுக்கே அடிமையாய் இருக்க வேண்டுமானால்—அது மேல்நாட்டானுக்கு அடிமையானால் என்ன? வடநாட்டானுக்கு அடிமையானால் என்ன?

தமிழனின் செல்வம்தானாகட்டும், தமிழ்நாட்டை விட்டுக் கடத்தித்தான் ஆகவேண்டு மானால்—அது மேல்நாட்டுக்குப் போனால் என்ன? வடநாட்டுக்குப் போனால் என்ன?

எனவே தோழர்களே! இக் கட்டுரையில் இக் கருத்து சம்பந்தமான சில விஷயங்களை மட்டுமே வெகு சுருக்கமாகக் குறிப்பிட முடிந்தது. இன்னும் இதைப்பற்றி ஏராளமாகத் தக்க ஆதாரங்களோடு எழுதலாம்; எடுத்துக் காட்டலாம்.

ஒவ்வொரு தமிழ்மகனும் இவைகளை நன்றாய்ச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பார்த்தபின் ஆரியப் புரட்டு—வடநாட்டுப் புரட்டு ஆகியவைகளிலிருந்து மனிதன் விடுதலையாக முயற்சிக்க வேண்டும். பாழும் தேசியத்தால், தமிழர்களாகிய நாம் 50 ஆண்டுகளைப் பாழாக்கிவிட்டோம். நாட்டையும், மக்கள் சமூகத்தையும் உண்மையாய் மேன்மையடையச் செய்ய முயற்சித்த ஒப்பற்ற பெரியார்களை—'நாத்திகன்', 'தேசத் துரோகி' 'சுயநலக்காரன்' என்றெல்லாம் வைது அவர்கள் பாடு பயன்படாதமுறையில் செய்து விட்டோம்.

உதைக்கும் காலுக்கு முத்தமிட்டுப் பூசை செய்கிறோம்; மலத்தை மனமார முகரு கிறோம்; மானமிழந்தோம்; பஞ்சேந்திரியங்களின் உணர்ச்சியை இழந்தோம்; மாற்

றானுக்கு அடிமையாகி வணங்குகிறோம். இதற்குத்தானா தமிழன் உயிர் வாழவேண்டும்? எழுங்கள்! நம்மை ஏய்த்து அழுத்தி, நம் தலைமேல் கால்வைத்து ஏறி மேலே போக—வடநாட்டானுக்கும், தமிழரல்லாதவனுக்கும் நாம் படிக்கல் ஆகிவிட்டோம்.

இனியாவது, 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்று ஆரவாரம் செய்யுங்கள்!

உங்கள் கைகளில், 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்று பச்சை குத்திக்கொள்ளுங்கள்!

உங்கள் வீடுகள்தோறும் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற வாசகத்தை எழுதிப் பதியுங்கள்!

நம் வீட்டுக்குள் அன்னியன் புகுந்துகொண்டதோடல்லாது, அவன் நம் எஜமான் என்றால்—நமக்கு இதைவிட மானமற்ற தன்மை, இழிதன்மை வேறு என்ன எனச் சிந்தியுங்கள்!

புறப்படுங்கள்! தமிழ்நாட்டுக்குப் பூட்டப்பட்ட விலங்கை உடைத்துச் சின்னா பின்னமாக்குங்கள்!

தமிழ்நாடு தமிழருக்கே!

[கட்டுரை—'குடிஅரசு' 23-10-1938; 'விடுதலை' 3-12-1957]

## 4. இந்து-முஸ்லிம் பிரச்சினை

'முஸ்லிம் இந்தியா' என்றும், 'இந்து இந்தியா' என்றும் பிரிக்க வேண்டுமென ஜனாப் ஜின்னா கூறியுள்ள திட்டம் எனக்கொரு ஆச்சரியத்தையும் தரவில்லை. ஏனெனில், நான், இந்தியாவிலிருந்து 'திராவிடநாடு' தனியே பிரிக்கப்படவேண்டுமென்று கடந்த இரண்டு ஆண்டுகளாகவே வற்புறுத்தி வருகிறேன்.

ஆரிய ஆதிக்கம் மிகுந்த காங்கிரஸ் ஆட்சியின் இரண்டாண்டு அனுபவம், ஆரியரல்லாதார் உள்ளத்திலே திகைப்பை உண்டாக்காமல் இருந்திருக்க முடியாது. இதனாலேயே பிரிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணம் உண்டாகிவிட்டது. முஸ்லிம்கள் தனி நாட்டைப் பிரித்துக்கொண்டு தனியாட்சி நடத்த விரும்புவது இயற்கையாக எழும்பும் எண்ணமேயாகும். ஜனாப் ஜின்னா இந்தப் பிரிவினைக்குக் கூறும் காரணங்கள் மறுக்க முடியாதன; அவரது கோரிக்கையும் நியாயமானதே. காந்தியார் சதாகாலமும், பச்சையாகவே, தாம் விரும்பும் சுயராஜ்யம் இராமராஜ்யம்தானென்றும்—தமது வாழ்க்கையின் இலட்சியமே இந்து மதத்தைப் புனருத்தாரணம் செய்வதுதானென்றும் கூறிக்கொண்டிருக்க, தோழர் சவர்க்கார் போன்ற இந்து மகா சபைத் தலைவர்கள், 'இந்துஸ்தானம் இந்துக்களுக்கே' என்ற பேரர் முழக்கம் செய்து கொண்டுமிருக்கக் கண்ட பிறகும்—முஸ்லிம்கள் கைகட்டி, வாய்பொத்தி இருப்பார்கள் என்று யார்தான் எதிர்பார்க்கமுடியும்?

இந்து-முஸ்லிம் பிரச்சினை தீர்க்கப்பட முடியாததோ என்று திகைக்குமளவில் இருக்கிறது. இதனைத் தீர்த்துக்கொள்ள ஜனாப் ஜின்னாவின் திட்டமே அறிவு ததும்புவது. நான் ஜனாப் ஜின்னாவின் கோரிக்கையை ஆதரிப்பதோடு, மற்றொரு முக்கியமான அம்சத்தையும் வற்புறுத்த விரும்புகிறேன். முஸ்லிம்கள் 'முஸ்லிம் நாடு' என இந்தியாவில் தனி நாடு பிரித்துக்கொள்ள முடியும்; ஆனால், இந்துக்களால் முடியாது. ஏனெனில், இந்துக்கள் என்று கூறப்படும் தொகுப்பில் பலப் பல வர்க்கத்தார் உள்ளனர்.

நாலு கோடிக்கு மேலுள்ள திராவிடர்களுக்கும்—இந்துக் கொள்கை, கோட்பாடு என்று கூறப்படும் பார்ப்பனீயத்திற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. மொழி, கலை, சரிதம், மார்க்கம், பழக்க வழக்கம் ஆகியவைகளில்—ஆரியத்திற்கும், திராவிடத்திற்கும் தீர்மானமான வேறுபாடுகள் உள்ளன. கடவுள்கள் கூட வேறு, வேறு!

எனவே, 'முஸ்லிம் இந்தியா' என ஜனாப் ஜின்னா கேட்பதுபோலவே—தமிழ், ஆந்திரம், கன்னடம், மலையாளம் ஆகிய மொழி வட்டாரங்களைக்கொண்ட 'திராவிட நாடு' பிரிக்கப்படவேண்டுமென நாம் கேட்க உரிமையிருக்கிறது. 'இந்து இந்தியா' எனப் பொதுவாகக் கூறுவது முடியாத காரியம். அதை ஒட்டவைத்துக் காட்டினால் அது வெறும் பார்ப்பனீய ஏகாதிபத்தியமாகவே இருக்கும். அதனைத் திராவிடர் கடுமையாக முடிவுவரை எதிர்ப்பர். எனவே, இந்தியாவிலிருந்து திராவிட நாட்டைத் தனியே பிரித்துவிடுவது மிக அவசியமாகவும் அவசரமாகவும் செய்யவேண்டியதாகும். நான் இதனை 1938 டிசம்பர் 28-ல் சென்னையில் நடந்த தென்னிந்திய நல உரிமைச் சங்க மாநாட்டுத் தலைமையுரையில் கூறியுமுள்ளேன்.

['குடிஅரசு'—அறிக்கை—31-3-1940]

## சர். ஆர். கே. எஸ்.

சர். R. K. சண்முகம் செட்டியார் அவர்கள் புதுக்கட்சியை ஏற்படுத்த முயற்சிப்பதும், அதற்கு ஜஸ்டிஸ் கட்சி என்று பெயர் கொடுக்கப் பார்ப்பதும், அவரைப் பல தோழர்கள் ஆதரிப்பதும், மற்றும் பலவிதமான காரியங்கள் நடந்துவருவதும் ஏன் என்பதும், எதற்காக என்பதும் இப்போது அதாவது, சர். R. K. சண்முகம் செட்டியார் அவர்கள் சென்னையில் சமீபத்தில் சர்வ கலாசாலையில் பேசிய பேச்சிலிருந்து மக்களுக்கு விளங்கியிருக்கலாம்.

என்னவென்றால், சர். ஆர். கே. எஸ். அவர்கள், இந்தியா ஒரு நேஷன் (ஒரு தேசம்) என்றும், இந்தியா துண்டாக்கப்படக்கூடாது (அதாவது பாகிஸ்தான், திராவிடநாடு ஆகிய தனிப்பிரிவினை கூடாது) என்றும், இனத்தின் பேரால், மொழியின் பேரால், மதத்தின் பேரால் மனித சமுதாயம் பிரிக்கப்பட்டு, அதற்கு ஏற்றபடி நாடு பிரிக்கப்படுவது கூடாது என்றும் சொல்லிவிட்டார்.

சரித்திர காலமாக இந்தியா ஒரே நாடாக இருந்துவருகிறது என்றும், இது இயற்கை அமைப்பு என்றும் காட்டுகிறார்.

இது எவ்வளவு அதிசயப்படத்தக்க சேதி என்பதை நாம் எடுத்துக்காட்ட வேண்டியதில்லை. இந்தியா ஒரு நாடு அல்ல. திராவிடநாடு, பாகிஸ்தான் தனி நாடுகளாகப் பிரிக்கப்படவேண்டும். ஆரிய திராவிட இனங்கள் வெவ்வேறு இனங்களாகும் என்கின்றவையான இந்தப் பிரச்சினைகள் இன்றைக்கு 5, 6 வருஷங்களுக்கு முன்பிருந்தே ஆகாயம் முட்ட சலாடிக் கொண்டிருந்துவந்து, இந்தியா முழுவதிலும் பிரஸ்தாபிக்கப்பட்டிருந்து, எல்லா அரசியல் வாதிகளுடையவும், பொதுவாழ்வில் ஈடுபட்டிருந்த மக்களுடையவும் கவனத்தை இழுத்து நிற்கின்றதான ஒரு முக்கியமான பிரச்சினையாகும்.

அதோடுகூடவே, இந்தப் பிரச்சினைகளில் கலந்து தொண்டாற்றி வந்த மக்களோடு கூடிக் குலாவிக்கொண்டே இருந்து வந்திருக்கின்றவராவார் சர். சண்முகம் செட்டியார் அவர்கள்.

அப்படி இருக்க, இவைகளுக்கு விரோதமாக இன்று திடீரென்று வெளிவந்து ஒரு பெரிய வெடி குண்டைப்போட்டு, இந்தப் பிரச்சினைக் கிளர்ச்சிகளையும், உணர்ச்சிகளையும் அழிக்கமுன் வந்து இருக்கிறார் என்றால் இதற்கு என்ன கருத்துக்கொள்வது?

இதுவரை சர். செட்டியார் அவர்கள் எந்தச் சந்தர்ப்பத்திலும், எந்த இடத்திலும் இந்தப் பிரச்சினைகளுக்கு விரோதமாக ஒரு வார்த்தைகூடப் பேசியதாக நமக்குத் தெரியவில்லை. ஆதலால், இந்த அபிப்பிராயங்கள் இவருக்கு முன்பிருந்தே இருந்து வந்தவைகளா, அல்லது இப்போதுதான் கொள்ளப்பட்டவைகளா என்பது யோசிக்கத்தக்க மற்றொரு விஷயமாகும்.

எப்படி இருந்தபோதிலும், சர். சண்முகம் செட்டியார் அவர்கள் திராவிடர் கழகம் என்னும் ஜஸ்டிஸ் கட்சியில் இருக்க முடியாமல் போய், புதிய கட்சியை ஏற்படுத்தவேண்டிய அவசியம் என்ன என்பதற்குக் காரணம், இந்த இந்தியாவைத் துண்டு போடக்கூடாது என்கின்ற இந்திய தேசீயமும், இனத்தின் பேரால் அரசியல் இருக்கக்கூடாது என்கின்ற உலக அரசியல் தத்துவமும்தான் என்பது யாவருக்கும் விளங்கி இருக்கலாம்.

இதற்கு நாம் சமாதானம் சொல்லவேண்டியது அவ்வளவு அவசியமா என்றே இப்போது கருதுகிறோம்.

எதிர்க்கட்சிக்காரராகிய காங்கிரஸ்காரர்களும், காந்தியாரும், டாக்டர் இராஜ கோபாலாச்சாரியார் அவர்களும்கூட இவ்வளவு இந்திய தேசீயம் காட்டவில்லை.

பிரிட்டிஷாரும்கூட பிரிந்துகொள்ளலாம் என்றும், இந்தியா ஒரு தேசமல்ல—அது ஓர் உபகண்டம் என்றும் ஒப்புக்கொண்டு விட்டார்கள்.

இப்படிப்பட்ட நிலையில் திராவிடநாட்டைப்பற்றியும், திராவிட இனத்தைப் பற்றியும் இது தனித்த ஆட்சி உடையதாயிருக்க வேண்டுமென்பது பற்றியும், நாமும் மற்றும் பல அறிஞர்களும் பொதுநல சேவையில் ஈடுபட்டவர்களும் சொல்லிவந்த ஆதாரங் களுக்கு இதுவரை வேறு யாரும் மறுப்போ, சமாதானமோகூட சொல்லாமல் இருக்கும் இந்த நிலையில், நம்மில் ஒருவராய், அதுவும் பிரதானப்பட்டவருள் ஒருவராய்க் கருதிவந்த ஒருவரால் இன்று திடீரென்று சொல்லப்பட்ட கருத்துக்கள் நமக்கு எவ்வளவு பலவீனத்தைக் கொடுக்கக்கூடியதாக இருக்கும் என்பதுதான் முக்கியமாய்க் கருதப்படவேண்டியதாகும். ஆனாலும், திராவிடநாட்டுப் பிரிவினைக் கிளர்ச்சி துவக்கக் காலத்தில் யார் யார் இதற்கு அனுகூலமாய் இருப்பார்கள்; யார் யார் இதற்கு எதிர்ப்பாய் இருப்பார்கள் என்பதைப் பற்றிய சிந்தனை ஒன்றும் இல்லாமல், அந்தப் பிரச்சினை தோன்றுவதற்கு அவசியமா யிருந்த பலமான காரணங்களைக் கொண்டும் அக் காரணங்களை ஒழிக்கவேண்டும் என்பதின்மீதுள்ள கவலையின் பலத்தைக் கொண்டுமே பலாபலனை இயற்கைக்கு விட்டுத் துணிந்துகொண்ட ஓர் அபிப்பிராயமேயாகும்.

ஆதலால், மற்றவர்கள் எதிர்ப்பும் ஆதரிப்புமே திராவிடநாடு, பாகிஸ்தான் பெறாமல் போவதற்கும் அல்லது, பெறுவதற்கும் முக்கிய துணையாய் இருந்துவிடாது என்கின்ற எண்ணம் நமக்கு உண்டு.

சர். சண்முகம் செட்டியார் அவர்கள் கருத்து நமக்கு எப்படி இருந்தாலும் அதை வெளியாக்கிவிட்டதற்குத் தமிழ்மக்கள் அவருக்கு நன்றிகாட்ட கடமைப்பட்டவர்களா வார்கள்.

நிற்க, அவரது அன்றையப் பேச்சில் நாம் அதிசயப்படக்கூடிய மற்றொரு சங்கதி என்னவென்றால்,

'இந்தியப் பிரச்சினை முடிவுபெற அமெரிக்க, சீன, ரஷ்யத் தலைவர்களைப் பஞ்சாயத்தாராய் நியமித்து அவர்கள் தீர்ப்புக் கூறவேண்டும்' என்பதாகும்.

இது சர். சண்முகம் செட்டியார் போன்றவர்களிடமிருந்து எதிர்பார்க்கக்கூடிய அபிப்பிராயம் என்றால், இதைவிட அதிசயமான சங்கதி வேறு ஒன்று இருக்கமுடியா தென்றே கூறுவோம்.

இந்தியாவைப் பற்றி (இந்தியாவில் உள்ள தன்மைகளைப் பற்றி, இந்தியப் பிரச்சினைப் பற்றி) இவர்களுக்கு என்ன தெரியும்? இவர்களை நாம் எப்படி நம்பமுடியும்? இவர்கள் பிரிட்டிஷார்களின் தயவு தாட்சண்யத்திற்குக் கட்டுப்படாமல், நடுநிலையில் இருந்து தீர்ப்புக்கூறி, தீர்ப்பை நடத்திக்கொடுக்கத்தக்க நிலையை உடையவர்களா?

நமக்காவது இவர்களுடைய யோக்கியதை நன்றாகத் தெரியுமா? இந்தியர்கள் என்று சொல்லிக்கொள்ளும் நம் எல்லோருடைய தேவையும் இலட்சியமும் ஒன்றுபோன்றதா?

இந்தியாவுக்காக இந்தப் பஞ்சாயத்தாரிடம் ஒரு பிராது கொடுப்பதாயிருந்தால், அந்தப் பிராதில் யார் யார் கையெழுத்துப் போடுவார்கள்? திராவிட மக்கள் சம்மதிப்பார்களா? திராவிடர்களை இலட்சியப்படுத்த வேண்டியதில்லை என்றால், ஆதித்திராவிட மக்கள் கையெழுத்துப் போடுவார்களா? அவர்களையும் இலட்சியப்படுத்த வேண்டியதில்லை என்றால் முஸ்லிம்கள் கையெழுத்துப் போடுவார்களா? முஸ்லிம்களையும் இலட்சியம் செய்யவேண்டியதில்லை என்றால், இந்து மகாசபையார் கையெழுத்துப் போடுவார்களா? இவர்களையும் இலட்சியம் செய்யவேண்டியதில்லை என்றால் மற்றும் வேறுயார் இருக்கிறார்கள் பிராது கொடுப்பதற்கு?

காந்தியாரும், சர். சண்முகமும் கையெழுத்துப் போட்டுவிட்டால் அது 45 கோடி மக்களின் பிரதிநிதியாகப் போட்ட பிராதாக அந்த மூன்று ஜட்ஜுகள் ஒப்புக்கொள்வார்களா? என்றெல்லாம் பார்த்தால் என்ன பதில் கிடைக்கும்?

பொதுவில் இதுபோன்ற ஒரு பேச்சு சர். சண்முகம் செட்டியார் அவர்களிடமிருந்து இதுவரை யாருமே கேட்டிருக்கமாட்டார்கள் என்றுதான் சொல்லவேண்டும். இயற்கையின் கோலம் இன்னும் என்னென்ன செய்யுமோ?

['குடிஅரசு'-தலையங்கம்—3-3-1945]

## 6. மாநில சுயாட்சி

தென்னாட்டு விடுதலைக் கோரிக்கையை இதர பகுதிகளில் வாழ்வோருக்கும் திராவிட நாட்டின் மூலை முடுக்குகளில் உறைவோருக்கும் தெரியப்படுத்தவும், தான்தோன்றித் தனமிக்க அரசியலமைப்பு சபையொன்று நமது எதிர்காலத்தை நிர்ணயிக்க முன்வந்து, தென்னாட்டவருக்கு அடிமை மனப்பான்மையூட்டி, புதிய வருணாசிரம முறையாட்சி ஒன்று நிறுவும் எண்ணத்தில் வகுத்துவரும் அரசியலைப் பரிசீலனை செய்யவும்—இம் மாதம் 9-ந்தேதி முதல் 12-ந்தேதி வரையில் கூட்டங்கள் போட்டு அதிதீவிரப் பிரச்சாரம் செய்யுமாறு எல்லாக் கருத்துச் சார்புடைய திராவிடரையும் வேண்டியிருந்தேன். நம் இனத்துக்கும், நம் நாட்டுக்கும் இப்பொழுது கவலைக்கிடமான நெருக்கடி நிலை கிட்டியுள்ளது. திராவிடர்களில் பெரும்பாலோர் கண்விழிப்புற்றுத் தங்களது உள்ளக்கிடக்கையினையும், கோரிக்கைகளையும் தற்போதைய இந்துஸ்தான் அரசியலமைப்புச் சபையிடம் முழு பலத்துடன் வலியுறுத்திக் கூற முனைந்து நிற்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

இந்துஸ்தான் அரசியலமைப்பு சபையின் நடைமுறைகளைப் பரிசீலனை செய்வதற்கு முன்னர், அந்த ஸ்தாபனத்தின் முன்னிலையில் முன்னர் சமர்ப்பிக்கப்பட்டதும் பத்திரிகைகளில் வெளியானதுமான அறிக்கைகளை விளக்குவதற்கு முன்னர், இப்பொழுது எய்தப்பெற்றிருக்கும் சுதந்திரத்தின் யோக்கியதை குறித்துச் சிறிது கூற ஆசைப்படுகிறேன்.

ஆகஸ்ட் 15-ல் நடைபெற இருக்கும் கொண்டாட்ட விழாக்களில் திராவிடர்கள் கலந்துகொள்ள வேண்டாமெனக் கேட்டுக்கொண்டிருந்தேன். ஏனெனில், தென்னாட்டவராகிய நமக்கு இதனால் இலாபம் என்ன? நம் முன்னிற்கும் வேலை என்ன? பிரிவினை ஏற்றுக்கொள்ளப்பட்டது; இந்தியா இரண்டாகப் பிரிக்கப்பட்டது என்பதற்கு மட்டும் நாம் மகிழ்ச்சியும் நன்றியும் தெரிவித்துக்கொள்ளலாமே தவிர, தென்னாட்டவர் தனிச் சுதந்திரம் பெற்று இன்புறும் வகையில் பிரிவினையேற்படாத வரையில், இந்துஸ்தான் 'டொமினிய'னுக்கு வழங்கப்பட்டுள்ள சுதந்திரம் அல்லது டொமினியன் அந்தஸ்து என்பது வெறும்

கேலிக்கூத்தே என்பதை நாம் உணரவேண்டும். மேற்படிக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளாதிருப்பதின்மூலம் நாம் நமது கண்டனத்தைத் தீவிரமாகக் காட்டிக்கொள்ளலாம்.

கடந்த ஆண்டில் வந்துபோன மந்திரி சபை தூது கோஷ்டி, பாதுகாப்பு, அயல் நாட்டு விவகாரம், போக்குவரத்து ஆகிய மூன்று முக்கியமான விஷயங்களும் மத்திய சர்க்கார் பொறுப்பிலிருக்க வேண்டுமெனக் கூறி, திட்டமொன்றை வகுத்தது. மாகாணங் களுக்கு அதிகபட்ச சுதந்திரத்தை வழங்குவதே அத் திட்டத்தின் அடிப்படை நோக்கமாக இருந்தது. மேற்கண்ட மூன்று விஷயங்களை நிர்வகிப்பதற்குப் பிடிக்கும் செலவுத் தொகையினையே 'ரெவினியு'வாக மத்திய சர்க்காருக்கு மாகாணங்கள் அளிக்கும் வகை யில் நிபந்தனை காணப்பட்டது. இவைகளைத் தவிர்த்த இதர விஷயங்களும் மத்திய நிர்வாகப் பொறுப்புக்கு விடப்படுமேல் அது அந்தந்த மாகாணத்தின் விருப்பத்தைப் பொறுத்ததாகும்.

பிரிட்டிஷ் தூதுவர் திட்டத்துக்குக் கண்டனங்கூற முன்வந்த திராவிடர்கள் பலரும் இரண்டு உதாரணங்கள் காட்டினர். தங்களின் ஆட்சேபத்துக்கு முதலாவதாக மத்திய நிர்வாகத்தின் பொறுப்பு இவைஇவை என்று தெளிவாக விளக்கப்படவில்லை என்றும், இரண்டாவதாக, 'ஏ' பிரிவில் இதர பகுதியினரோடு தாங்களும் பிணைக்கப்பட்டுவிட்டனர் என்றும் எடுத்துக் காட்டினர். புது டில்லியில் சர்க்கார் இயந்திரத்தின் பொறுப்பையேற் றுள்ள சுயநல ஆதிக்கக் கும்பல் செய்யும் அட்டகாசத்தில் 'ஏ' பிரிவிலுள்ள திராவிடரின் கோரிக்கையும், சுயாட்சியும் மறைந்துபடும். பொதுமக்களை அடிமைப் படுகுழியில் ஆழ்த்திவைத்து, தென்னாட்டவர் சுயேச்சையுறுவதை என்றென்றும் தடைசெய்து வர, தென்னாட்டுப் பிற்போக்குச் சக்தி சிலவற்றுக்கும், வடநாட்டாருக்குமிடையே ஒப்பந்த மேற்பட்டு வருவதாகவும் திராவிடர் உணரலானார்கள். திராவிடஸ்தான் அல்லது தென் னிந்தியாவை இதர மாகாணங்களோடு இணைத்து 'ஏ' பிரிவில் போட்டு அடைத்து விட்டதால் இவ்வொப்பந்தம் மேலும் வலுப்பெற்றது.

இதெல்லாம் நடந்துபோன சரிதை எனினும், அண்மையில்தான் நடந்ததாகையால் அலட்சியப்படுத்த முடியாது. இன்று முற்றிலும் மாறுபட்ட நிலைமை நேரிட்டு நிற்கிறது. ஜூன் 3-ந்தேதிய திட்டம் பழைய மந்திரிசபை தூதுகோஷ்டி திட்டம் முழுமையும் திருத்தி யமையப்பெற்ற தொன்றாகும். இந்தியா இரு துண்டாக்கப்படுவதை காங்கிரசும், முஸ்லிம் லீகும் ஏற்றுக்கொண்டு விட்டன. இப்பிரிவினை ஏற்றுக்கொண்ட நாள் முதற்கொண்டே அரசியலமைப்பு சபை உறுப்பினர்கள் சிலரிடமிருந்து ஆதிபத்திய அரசியலமைப்பு சபை செய்யக்கூடியது என்னவென்பது குறித்து விளக்கங்கள் வந்த வண்ணமுள்ளன.

அதிகாரங்களனைத்தையும் தன்மாட்டே நிரம்பப் பெற்றுக்கொள்ளும் பலமிக்க மத்திய நிர்வாகமொன்று அமைப்பதே இந்துஸ்தான் (இந்தியா) அரசியலின் முக்கிய குறிக் கோளென அறிவிக்கப்பட்டுள்ளது. அய்க்கியம் வளருவதற்கு, மாகாணங்களை எப்பொழு தும் மத்திய நிர்வாக ஆதிக்கத்தின் கீழேயே அடக்கிவைத்திருந்து, அதன் ஆணைக்கு உட் பட்டு நடந்துவர ஆவன செய்யவேண்டும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

அதிகாரங்களைப் பிரித்து வழங்கிய மந்திரிசபை தூதுகோஷ்டித் திட்டத்தைத் தற்போதைய அரசியலமைப்புச் சபை கைவிட்டதேன் என்பது எனக்குப் புரியவில்லை. முஸ்லிம் லீகினர் பாகிஸ்தான் பெற்றுவிட்டனர் என்பதற்காக, இவர்களிடையே முதலாளித்துவ எதேச்சாதிகார மனோபாவம் ஏற்பட்டுவிடுதல் கூடாது. பாகிஸ்தான் உருவாகி வெற்றிபெற்றதற்கே காரணம், இந்த எதேச்சாதிகார எண்ணமேதானென்பதை அவர்கள் நினைவு கூரவேண்டும். அரசியலமைப்புச் சபை உறுப்பினர்களுக்கு அறிவு புகட்டுவது எனது வேலையல்ல; மிகமிக மோசமான முறையில் நம்பிக்கைத் துரோகம் இழைக்கப்பட்டிருப்பதைத்தான் திராவிடர்க்கு எடுத்துக் காட்ட ஆசைப்படுகிறேன்.

இத்தகைய நம்பிக்கைத் துரோகச் செயலைத்தான் திராவிடர்கள் நடக்கவிருக்கும் பொதுக் கூட்டங்களில் இடித்துக் கூறிப் பிரச்சாரம் செய்தல் வேண்டும்.

அரசியல் முறைகள் வகுக்கப்பெற்று நகலாகியதும், அவை மாகாண சட்டசபைகளுக்கு அனுப்பப்பெற்றுக் குற்றங்குறைகளையும், திருத்தங்களையும், யோசனைகளையும் கூறுமாறு கோரப்படுமென முதற்கண் அறிவிக்கப்பட்டது. விரைவில் காரியம் முடிய வேண்டியிருப்பதை அனுசரித்து, மாகாண சட்டசபையின் விவாதத்துக்கு நகலை அனுப்புவதற்கில்லையென அரசியலமைப்பு சபையார் அறிவிக்கின்றனர். இத்தகைய நம்பிக்கைத் துரோகச் செயலைத் திராவிடர்களாகிய நாம் மட்டுமல்ல—பொதுநன்மையில் அக்கறையுடைய சட்டசபைக் கட்சியினரும் கண்டித்தே தீரவேண்டும். நமக்கும் அவர்களுக்கும் உள்ள கருத்துவேறுபாடுகள் ஒருபுறமிருக்க, அரசியல்முறை விஷயத்திலாயினும் அவர்கள் கட்சிக் கொள்கையைக் கடந்து நாம் வதியும்பகுதிகளின் நன்மையை உத்தேசித்து வேலை செய்வரென நம்புகிறேன்.

அரசியலமைப்பு சபை ஒன்று ஆதிபத்திய அதிகாரம் பெற்றுத் திகழ்கின்றதென்பதற்காக, அதற்கு மரியாதை செலுத்தவேண்டியதில்லை. செலுத்தவேண்டுமானால், முன்னால் ஏகாதிபத்திய சர்க்காருக்கும் விடுதலை வீரர்கள் கீழ்ப்படிந்து நடந்து மரியாதை செலுத்தி இருக்கவேண்டும். தோழர் வல்லபாய்படேல் தலைமையில் தயாரிக்கப் பெற்றதான அரசியலமைப்பு சபையின் முடிவும், யூனியன் அரசியல்முறையும் அடிப்படை உரிமைகளும், கொடிமுறை தேர்ந்தெடுப்பும் இவைபோன்ற இதர விஷயங்களும் தென்னிந்திய வட்டாரங்கள் பலவற்றிலும் வெகுவாகக் கண்டிக்கப்பட்டன.

மாகாணங்களுக்கு அளிக்கப்படும் புதிய அரசியலின் அம்சங்களென்ன? மத்திய நிர்வாகம் சர்வ வல்லமையும் சர்வ சக்தியும் கொண்டதென்ற அடிப்படையை வைத்து நாம் ஆராயத் தொடங்க வேண்டும். இப்படி வைத்துத் துவங்குவதால் எழும் விளைவுகள் பல. அன்பு, மரியாதை, மதிப்பு, கீழ்ப்படிதல் என்ற அடிப்படையில் அசைக்க முடியாத யூனியனொன்றை நிறுவுவதென்ற ஆரம்பக் கொள்கைக்குப் பதிலாக, மனமொவ்வாத கூட்டாளிகள் வலுக்கட்டாயமாகப் பிணைத்து இழுத்துக்கொண்டு வரப்படுவதைக் காண்கிறோம். இந்த அரசியல் முறையின் முக்கிய அம்சங்கள் மிகவும் எளிமையானவையே. பலதிறப்பட்ட பத்திரிக்கைகளிலும் பிரசுரிக்கப்பட்டுள்ள 'பெடரல்' விஷயங்களின் ஜாபிதா மிகப் பரந்ததொன்றாகும். அதில் 82 பிரிவுகள் அடங்கியுள்ளன. இப்பிரிவுகள் பெரும்பாலும் முக்கிய விஷயங்களை—மாகாணங்களைப் பொறுத்த முக்கிய விஷயங்களையே கவனித்துவரும் வகையில் அமைந்துள்ளன.

உதாரணமாக, பெடரேஷனுடையவும், அதன் ஒவ்வொரு அங்கத்தினுடையவும் பாதுகாப்பும், பாதுகாப்புக்கான தயாரிப்புகளனைத்தும் இன்ன பிறவும் மத்திய நிர்வாகத்தின் கீழ்வருதல் வேண்டுமெனக் கூறப்படுகிறது. மத்திய நிர்வாகத்துடன் ஒத்துப்போகத் தென்னாடு விரும்புகிறதென்றே வைத்துக்கொள்வோமானால், அதனுடைய அதிகாரத்தையும் மத்திய நிர்வாகத்திடந்தான் ஒப்படைத்தாக வேண்டும். இப்படி ஒத்துப்போக ஏற்றுக்கொள்வதால் மத்திய நிர்வாகமென்பது எல்லா வேலைகளையும் தானே கவனிக்க முற்பட்டுவிடுதல் கூடாது. ஆனால், இந்துஸ்தான் டொமினியன் செய்வது இதுவேதான். எப்படியெனில், மத்திய நிர்வாகத்தின் வேலை முறைகள் இவை இவையென விரித்துக் கூறப்படுகையில், மாகாணங்களின் பொறுப்புகளாக எவையும் விடப்படவில்லை. எல்லாவற்றையும் மத்திய நிர்வாகமே ஏற்றுக்கொண்டுள்ளது.

பாதுகாப்பு வேலைகளை நன்முறையில் கவனிக்க, பாதுகாப்புக் கைத்தொழில்களும் மத்திய நிர்வாகத்தின் ஆதிக்கத்தின் கீழிருக்க வேண்டுமெனக் கூறப்படுகிறது. இன்னும் 'ரோட்டு'ப் பாதைகளும், நீர்ப் பாதைகளும் பெடரல் அதிகாரத்தின் கீழ்தான் இருக்குமென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், உள்நாட்டு நீர்ப் பாதைகளில் கப்பல் போக்கு

வரத்தும், சாமான்கள், பிரயாணிகள் போக்குவரத்தும் பெடரல் பொறுப்பின் கீழேதான் இருக்கவேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. இறுதியாக, பெடரேஷன் காரியங்களுக்கான சொத்துக்களனைத்தும் கைப்பற்றப்படுமென்றும், இவை பெடரல் சர்க்காரின் ஆட்சியின்கீழ் இருக்குமென்றும், தான் விரும்பிய எந்த முறையிலும் இது சொத்துக்களைக் கைப்பற்றலாமென்றும் கூறப்படுகிறது.

இந் நிபந்தனைகளைப் பரிசீலனை செய்வோருக்கு நன்கு தெரியவரும்—இந்துஸ்தான் அரசியலமைப்புச் சபை தோற்றுவிக்க முயலும் பெடரேஷனின் மாயத்தன்மை.

உதாரணமாக, பாதுகாப்புக் கைத்தொழில்கள் என்பவை யாவை? அவைகளைப் பற்றித் தெளிவாக, விளங்கக்கூறக் கவலையெடுக்கப்படாவிடில் பாதுகாப்புக் கைத்தொழில்கள் பிரிவின்கீழ் ஒவ்வொரு கைத்தொழிலையும் கொண்டுவந்து விடலாம்—'டெக்ஸ்டைல் மில்'கள் போன்ற இன்றியமையாக் கைத்தொழில்களை ஏற்படுத்திக்கொள்ளவும் மாகாணங்களுக்குச் சுதந்திரம் கிடைக்கப்போவதில்லை! நவீன கைத்தொழில்கள், அவை பாதுகாப்புக் காரியங்களுக்குப் பயன்படுத்தப்பட்டாலும் சரி, படாவிட்டாலும் சரி—அவை 'சிவில்' மக்கள் நல்வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகும். உண்மையில், நாடுகள் பலவும் படைக் கலைவுப் பிரச்சினைகளால் சமாளிக்கவேண்டியிருக்கும் பெருந்தொல்லைகளனைத்தும், போர்க்காலக் கைத்தொழில்களைச் சமாதானகாலக் கைத்தொழில்களாக மாற்றுவதிலிருக்கும் தொல்லைகளிலிருந்தே எழுகின்றன.

பெடரல் மத்திய நிர்வாகமென்பது பாதுகாப்புக் கைத்தொழில்கள் இன்னவை என்பதை விளக்காதிருப்பது என்ன நியாயம்? (பெடரல் மத்திய நிர்வாகம் ஒன்றுக்கு அவசியமிருப்பதாகவே வைத்துக்கொள்வோம்)—அவசர காலங்களில் பெடரல் மத்திய நிர்வாகமென்று பலதிறப்பட்ட கைத்தொழில்களையும் ஆதிக்கப்படுத்திக்கொண்டு, அவைகளைப் பாதுகாப்பு நடவடிக்கைகளின் அங்கமாக வைத்துக்கொள்வதிலாவது அர்த்தமிருக்கிறது. ஆனால், இவை அவசரகால அதிகாரங்களாகும்; மிகமிக அவசரமான காலங்களில் மட்டுமே இவைகளைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். இந்துஸ்தான் டொமினியன் ஆரம்பத்திலிருந்தே போர்ப் பாதைக்கு ஆயத்தமாயிருக்கவேண்டும் என்ற எண்ணத்தில் இத்தகைய மாபெரும் அதிகாரங்கள் மத்திய நிர்வாகத்தின்கீழ் கொண்டுவரப்படுகின்றனவென்று வாதிக்கப்படமாட்டாதென நம்புகிறேன். இந்துஸ்தான் டொமினியன் போர்ப் பாதைக்கு ஆயத்தமாயிருக்கவேண்டியது அவசியந்தானென்று கூறுமேல், அது தன் எதிரிகளாக யாரைக் கருதுகிறதென்பதையறிய ஆசைப்படுகிறேன். உடனடியாக இப்படி அது போர்ப் பாதைக்கு ஆயத்தமாயிருப்பானேன்?

பெடரல் மத்திய நிர்வாகத்தின்கீழ் ஒப்படைக்கப்பட்டுள்ள அதிகாரங்களைக் கூர்ந்து பரிசீலனை செய்து பார்ப்போருக்கு, அவற்றின் பிற்போக்கு அம்சங்கள் தெரியவரும். அரசியலமைப்பான எவரும் இதுகண்டு வெட்கித் தலைகுனியவே வேண்டும்.

மாகாணமொன்றுக்கு உரிய சொத்தை, பெடரல் சொத்தாக்கிக்கொள்ள, பெடரல் நிர்வாகத்துக்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது; மாகாண சட்டசபையைக் கலைக்காமலேயே இதனைச் செய்து கொள்ளலாம். அவைகள் சம்பந்தமாக மாகாண சட்டசபைகளுடன் கலந்து பேச வேண்டியது தகுதியும் முறையுமாக இருக்க, இவ்விதம் செய்யப்பட்டிருப்பது என்ன நியாயம்? பெடரல் சர்க்கார் நிர்ணயித்து வரையறை செய்யும் நிபந்தனைகள்போல்தான், பெடரல் சர்க்கார் காரியங்களுக்கான சொத்துக்களை பெடரல் சர்க்கார் கைப்பற்ற முடியும். பெடரல் முறையில் நிர்வகிக்கப்படும் விஷயங்கள் பெடரல் சட்டத்துக்கே உட்பட்டிருக்கும் பெடரல் சர்வீஸ்களாலேயே நிர்வகிக்கப்படுமென முன்கூட்டியே அறிவிக்கப்பட்டுள்ளது.

இவ்விதமாக, தங்கள் பகுதிகளைச் சார்ந்த சர்வீஸ்களின் நிர்வாகத்தையேற்று நடத்தும் அதிகாரமும் மாகாணங்களிடமிருந்து பறித்துக் கொள்ளப்படுகின்றது. மாகாணங்

களின் அதிகாரங்களை இப்படிக் களவாடிக்கொள்வதற்குக் கூறப்படும் சமாதானம் என்னவென்றால், நிர்வாக சபையின் அதிகாரம் சட்டசபையின் அதிகாரத்தைப் போலவே சம விஸ்தாரமுடையதாயிருக்க வேண்டுமென்ற விதி எடுத்துக் காட்டப்படுகின்றது.

பதவிகளில் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ளவும், இந்நாட்டு மக்கள் சுயமரியாதையுடன் தலைநிமிர்ந்து நிற்காவண்ணம் தடைசெய்யவுமே இம்முயற்சி கையாளப்படுகிறதென்பதை மட்டும் குறிப்பிட ஆசைப்படுகிறேன். பெடரல் மத்திய நிர்வாகமொன்றின்மீது நம்பிக்கை வைத்துள்ளோர்கூட புதிய முறையில் புனராலோசனை செய்து பெடரல் மத்திய நிர்வாகத்தின்கீழ் ஒப்படைக்கப்பட்டுள்ள வேலைகள், தென்னாப்பிரிக்க யூனியனில் நிறுவப்பெற்றிருக்கும் ஒற்றையாட்சி சர்க்காரின்கீழ் ஒப்படைக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களைக்காட்டிலும் மிகப் பரந்தவை என்பதை உணரவேண்டும்.

இதுகிடக்க, எதிர்கால மாகாண சர்க்கார் அமைப்பு முறை பற்றிச் சிறிது பரிசீலனை செய்வோம். மாகாண அதிகாரங்கள் கமிட்டித் தலைவர் தோழர் வல்லபாய் படேல் சமர்ப்பித்திருக்கும் அறிக்கையொன்றில் மாகாண அரசியல் முறைக் கொள்கைகள் இவையிவை எனத் தெளிவு படுத்தப்பட்டுள்ளன. அவ்வறிக்கையின்படி, ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒரு கவர்னர் உண்டு; இவருக்கு எதேச்சை யதிகாரம் முற்றிலுமுண்டு; இவரது எதேச்சையதிகாரத்தை அவ்வப்போது குறைக்கவோ தடைசெய்யவோ இராஷ்டிரபதிக்கும், பெடரல் நிர்வாகத்துக்கும் மட்டுந்தான் உரிமையுண்டு. வயதுவந்தோரனைவருக்கும் ஓட்டுரிமை என்ற அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படும் இக் கவர்னருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் எந்த நாகரீக நாட்டு அரசியலிலும் காணப்படமாட்டா.

கவர்னர் என்பவர் சர்வஜன ஓட்டுரிமையால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஆகையால், அவர் அதிகாரங்களைத் தப்பு வழியில் பயன்படுத்த மாட்டாரெனக் கூற முனைவது அர்த்தமற்றதென்பதோடு, குறும்புத்தனமானதுமாகும். இது உண்மையானால் ஹிட்லர் ஒரு எதேச்சையதிகாரியாக இருந்திருக்க முடியாது.

பொறுப்பாட்சி வேலைகளை அனுசரிக்கவேண்டி, ஜனநாயக அரசியலொன்று தனிப்பட்ட ஒரு நபரை, எல்லா அதிகாரத்தையும் தன்மாட்டே வைத்துக்கொண்டுள்ள ஒரு நபரைத் தலைவராக வைத்துக் கொள்வது சரியானதுமல்ல. கவர்னரே தனது சொந்த அபிப்பிராயத்தையொட்டிக் காரியம் செய்யவேண்டும். அரசியல் முறையில் நிர்ணயிக்கப்பட்டுவிட்ட சந்தர்ப்பங்கள் போக இதர சந்தர்ப்பங்களில் கவர்னர் தனது சொந்த அபிப்பிராயத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாமென நிர்ணயிக்கப்பட்டுள்ளது:—

(1) மாகாணத்தினுடையவோ, அதன் எந்தப் பகுதியினுடையவோ சமாதானம், அமைதி குலைந்திடாதவாறு ஆக்கிரமிப்புகளைத் தடுத்து வருவது.

(2) மாகாண சட்டசபையைக் கூட்டல், கலைத்தல்.

(3) தேர்தல்களைக் கண்காணித்து, கவனித்து, தனது பொறுப்பின்கீழ் வைத்துக் கொள்வது.

(4) மாகாண பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தலைவரையும் உறுப்பினர்களையும் நியமிப்பது.

10-வது நிபந்தனையில்தான் விஷயம் உச்சநிலை அடைகிறது. யாதொரு விஷயம், கவர்னர் அபிப்பிராயத்தையொட்டி, தீர்மானிக்கப்பட வேண்டியதா இல்லையா யென்பது குறித்து பிரச்சினையெழுமேல், கவர்னர் செய்யும் முடிவே முடிவானதாகுமென அந் நிபந்தனையில் கூறப்பட்டுள்ளது.

இவ்வரசியல் முறையின் நிபந்தனைகளை நான் நுணுக்கமாகப் பரிசீலனை செய்தேன். மத்திய சர்க்காருக்கு உதவிபுரிந்து ஆய்வுரை அளித்துவர ஆலோசகர்களை

நியமிப்பதே மேற்படி அரசியல்முறை வகுப்போரின் எண்ணமாகுமென்பதைப் பாரபட்ச மற்ற எண்ணமுடையோரெவரும் தெள்ளிதின் உணருவரென்பது எனது எண்ணம்.

'கவர்னருக்கு உதவிபுரிந்து, ஆய்வுரையளித்து வருவது' என்ற சொற்றொடர் உபயோகிக்கப்பட்டிருக்கிறதென்பதில் ஐய்யமில்லை. அதற்கு அரசியல் முக்கியத்துவம் இல்லாமலுமில்லை. ஆனால், கவர்னர் பிரயோகித்துக் கொள்ளக்கூடிய சொந்த அபிப்பிராயத்தை யொட்டிய அதிகாரங்களோடு, அவருக்கென நிர்ணயிக்கப்பட்டிருக்கும் வேலைகளையும் சேர்த்துப் படிக்கவேண்டுமென்பதைக் குறிப்பிட வேண்டும்.

தனது சொந்த அபிப்பிராயத்தின்கீழ் வரவேண்டியவை எவையெவை என்பன வற்றை நிர்ணயித்துக்கொள்ளும் நீதிபதியாக இருப்பதோடு, பிரதமர் என்பவர் நிர்வகிக்கக் கூடிய உரிமைகள்கூட இவருக்கு அளிக்கப்பட்டன. அரசியல்முறை மாடலின் 18-வது பிரிவு கூறுவதாவது :—'மாகாண சர்க்கார் தங்கள் வேலைகளை எளிதாகச் செய்து முடிக்கவும், மந்திரிகளிடையே வேலைகளைப் பிரித்து வழங்கவும் கவர்னர் விதிகள் செய்வார்' என்பதாகும். இந்நிபந்தனையின் விளைவுகள் குறிப்பிடத்தக்கவையாகும்.

அதாவது, கவர்னரென்பவர் நிர்வாகத்தின் வெறுந் தலைவர் மட்டுமல்லர்; தனது மந்திரிகளிடையே இலாக்காக்களைப் பிரித்து வழங்கவும், ஒரு இலாக்காவிலிருந்து இன்னொரு இலாக்காவுக்கு மந்திரிகளை மாற்றவும் அவருக்கு உரிமை உண்டு. 'மாகாண சர்க்காரின் வேலைகள் எளிதாக நடந்தேற' ஆவன செய்ய அவருக்கு உரிமையுண்டு! அவரது யதேச்சையதிகாரத்துக்கு ஒரே தடை, குற்றச்சாட்டு ஒன்று உண்டெனப் பயமுறுத் தப்பட்டுள்ளது. அவரைத் தடைசெய்ய வேண்டுமானால் மாகாண சட்டசபையைச் சேர்ந்த மூன்றிலிரு பகுதியினர் அவர்மீது எழும் குற்றச்சாட்டுக்கு வோட் அளிக்க வேண்டும்.

மாகாணங்களில் கொண்டுவர முயற்சிக்கப்பெறும் பொறுப்பாட்சி சர்க்காரின் ஏமாற்றுத்தன்மை குறித்துச் சந்தேகமெதுவுமெழுமேல், பெடரல் நிர்வாகம்பற்றி யூனியன் அரசியல் முறையில் கண்டுள்ள நிபந்தனைகளைக் காணுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

கவர்னருக்கு மாறாக, இராஷ்டிரபதிக்கு மிகமிகச் சுருங்கிய அதிகாரங்களே கொடுக்கப்பட்டுள்ளன. அவர் மத்திய நிர்வாகத்தின் முடிவுக்குக் கட்டுப்பட்டவராவார். இவ்வரசியல் முறையில் பிரதம மந்திரி என்ற சொல் காணப்படுவதும் விசித்திரமாகத் தானிருக்கிறது. பிரதம மந்திரியொருவர் இருப்பதால் சர்க்கார் வேலைமுறை சம்பந்தமாக உத்தரவுகள் பிறப்பிப்பதும் மந்திரிகளிடையே வேலைகளைப் பிரித்து வழங்குவதும் இவரால்தான் செய்யப்படுமென்று நாம் நினைக்க வேண்டியவர்களாயுள்ளோம். தலைவ ரென்பவர் தனது கவுன்சிலின் ஆய்வுரையின்பேரில் பணியாற்றிவந்து அரசியல் தலைவராக இருந்து வருவார்.

மாகாணங்களின் அதிகாரங்களை (வேலைகளை) பறித்துக்கொண்டு, அவற்றை அடக்குமுறைக்கு (கீழான நிலைக்கு) ஆளாக்கி வைத்து, பெடரல் மத்திய நிர்வாகத்துக்கு வரையறையற்ற அதிகாரங்களை வழங்கிவிட்ட பிறகும், மாகாணங்களுக்குச் சிறப்பான மந்திரிசபை கவுன்சில்கள் அமையப்பெறாதது கண்டு ஆச்சரியப்பட வேண்டியதில்லை.

பழைய அட்வைசர் ஆட்சியையொத்த ஓர் ஆட்சிதான் ஏற்படப்போகிறது. இதனால் அதிகாரம் பெரிதும் பெடரல் நிர்வாகத்தையும் கவர்னரையுந்தான் சென்றடையும்.

இந்துஸ்தான் அரசியல் நிர்ணய சபை ஏற்றுக்கொண்டிருக்கும் கொடியைப்பற்றி நான் மாறுபாடான கருத்தைக் கொண்டிருக்கிறேன் என்பதையும் கூற வேண்டியிருக்கிறது. பரந்த இந்த கண்டத்திலுள்ள பல்வேறு இனங்களும் பிரிவுகளும் ஒன்றுசேரக்கூடிய சின்ன மாக விளங்கவேண்டியது இந்தக் கொடி. ஆனால், இந்தக் கொடியின் அமைப்பைப்பற்றிக்

கூறும்போது பண்டிட் ஜவஹர்லால் நேரு அதிகாரபூர்வமாக என்ன கூறியுள்ளார் என்பதைக் கவனியுங்கள்: 'இந்தக் கொடி ஒரு கட்சிக் கொடியாகத்தான் இருக்கவேண்டும் என்று கருதப்பட்டது. ஆனால், பிறகு தேசியக்கொடியில் கைராட்டினம் இருப்பது பொருத்தமாயிருக்காது என்று கருதியே, அது விலக்கப்பட்டிருக்கிறது' என்று தெளிவாகவே கூறியிருக்கிறார்.

'சர்க்காவும் (இராட்டினம்) சக்கரமும் ஒன்றுதான்' என்கிறார் பண்டிட் நேரு. இந்தக் கொடியைப் பற்றிய தத்துவார்த்தங்களில் ஆளுக்கொருவிதமாகக் கூறினாலும், இந்துஸ்தான் அரசியல் நிர்ணய சபையின் முதன் மந்திரியாகிய நேருவின் அதிகார பூர்வமான வியாக்கியானத்தை அலட்சியப்படுத்த முடியாது. இந்துஸ்தான் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு டொமினியனாக (குடியேற்ற நாடாக) இருக்கும்போது, சுதந்திர ஆதிபத்தியக் குடிஅரசு என்ற ஒரு ஆட்சிக்கு வேண்டிய ஒரு கொடியை அமைப்பதில் அரசியல் நிர்ணயசபை, இவ்வளவு அவசரப்படவேண்டிய அவசியமென்ன என்பதுதான் எனக்கு விளங்கவில்லை.

சர்வாதிகாரமுடைய ஓர் ஆட்சிக்கும் இதர ஆட்சிகளுக்குமுள்ள வேற்றுமையைக் குறிப்பதற்காகத் தனிக்கொடி ஒன்று இருக்கவேண்டுமென்பது உண்மைதான். ஆனாலும், சர்வாதிகாரமுடைய நாடுகள் தனிக்கொடி இல்லாமலும் இருக்கின்றனவே! கனடாவை இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இந்நாடுகளிலுள்ள இலட்சக்கணக்கான மக்கள் எல்லோருமே அன்புடன் ஏற்று வணங்கும்படியானதும், நாளடைவில் ஆட்சியின் நிர்வாகத்தில் இரண்டறக் கலந்து உள் உணர்வோடு ஒன்றுபட்டு ஏற்றுக்கொள்ளக்கூடியதுமான ஒரு கொடியை இந்நாட்டு ஆட்சியாளரால் இதுவரை கண்டுபிடிக்க இயலவில்லை. எல்லாக் கட்சியாளர்களும் ஒன்று சேர்வதற்குத்தான் தேசியக் கொடி அவசியம் என்ற கொள்கை அரசியல் நிர்ணய சபையால் புறக்கணிக்கப்பட்டுவிட்டது.

'கடந்த போராட்டங்களை நினைவூட்டவும், வருங்கால வெற்றிகளை முன்கூட்டிக் காட்டவும் உண்மைக்கு மாறானவைகளையும், அற்பத்தனமானவைகளையும், தோல்வி மனப்பான்மையை உண்டாக்கக் கூடியவைகளையும் வருங்காலத்தில் நாம் வெல்வதற்கும், இந்தக் கொடியிலுள்ள சின்னங்கள் தேவையாயிருக்கின்றன' என்று பண்டிட் நேருவும், மற்ற காங்கிரஸ் தலைவர்களும் கூறியிருக்கின்றனர். இவர்கள் கருதியிருப்பது சுத்தத் தவறு என்பதைக் கூற விரும்புகிறேன்.

மேலே கூறிய உணர்ச்சிகளை இந்தக் கொடி பொதுமக்களிடையே உண்டாக்குமென்று யார்தான் கூறமுடியும்? இந்தக் கொடியின் மூலமாக முன்னர் பெற்ற வெற்றிகள் நினைவுக்கு வருகின்றனவா, அல்லது படுதோல்விகள் நினைவுக்கு வருகின்றனவா என்ற விஷயத்தை எனதருமைக் காங்கிரஸ் தோழர்களே, சாவதானமாக நினைத்துப் பார்க்கட்டும்!

காங்கிரஸ் போராடியது வெள்ளையார் வெளியேறுவதற்காகவே; காங்கிரஸ் விரும்புவதோ அய்க்கிய இந்தியா. ஆனால், இப்போது கிடைத்திருப்பது என்ன? பிளவுபட்ட இந்தியா; முழு சுதந்தரமில்லாத இந்தியா!

இதுதான் நான் கொடியைப்பற்றிக் கூறவேண்டியது.

இனி, மைனாரிட்டிகளைப் பற்றியும், இந்துஸ்தான் டொமினியன் அரசியல் அமைப்பில் அவர்களது நிலைமையைப் பற்றியும் கவனிப்போம். அரசியல் நிர்ணய சபையில் நிகழ்ந்துள்ள விவாதங்களைக் கவனிக்கும்போது, மைனாரிட்டிகளுக்கு நியாயம் கிடைக்கும் என்று நம்பக்கூடியதாக இல்லை. பிற்பட்ட வகுப்பினர் என்ற காரணத்தினால் இது

வரை தனிச் சலுகைகள் பெற்றுவந்த மைனாரிட்டிகளுக்கு உத்தியோகத்தில் இனிமேல் விசேஷ பிரதிநிதித்துவம் இருக்காது.

இது மட்டுமா? நம் வாழ்க்கையின் ஓர் இன்றியமையாத அம்சமாக விளங்கி வருவதும், தென் இந்தியத் திராவிட இனத்தின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் காரணமாயிருந்து வருவதுமான பிரதிநிதித்துவமுறை ரத்து செய்யப்பட்டு விடுமாம்.

விஸ்வநாதம் என்ற ஆந்திரத் தோழர் தன் எஜமானர்களின் கண்ஜாடையை உணர்ந்து கொண்டு, இதுபற்றிய மசோதா ஒன்றைக் கொண்டுவரப்போகிறாராம். இதன் மூலம் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ முறையை ஒழித்துக் கட்டிவிட்டு, 'தகுதி'யையும் 'திறமை'யையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு முறையைத் திராவிட நாட்டில் திணிக்கப் பார்க்கிறார்கள்.

தகுதியையும், திறமையையும் சாக்காகக் காட்டித்தான், அகில இந்திய சர்வீஸ்கள் ஒரே பார்ப்பன மயமாக்கப்பட்டிருக்கின்றன. இனிமேல் அதே காரணங்களைக்கூறி, மாகாண ஆட்சியிலும் பார்ப்பனர் உத்தியோகங்களை ஏகபோக உரிமையாக்கிக்கொள்வதற்குத் திட்டம் போட்டுவிட்டனர். முக்கால் பகுதிக்கு மேற்பட்ட வரிகளைக்கொடுப்பது மட்டும் திராவிடர்களாகிய நாம்; ஆனால், இந்துஸ்தானில் இணைக்கப்பட்டிருக்கும் திராவிடநாட்டின் அரசியல், சமுதாய நிர்வாகத் துறைகளில் மட்டும் நமக்குப் பங்கே கிடையாது என்றால், இந்த அக்கிரமத்தை எப்படிச் சகித்துக்கொண்டிருப்பது என்று கேட்கிறேன்.

தோழர் விஸ்வநாதம் வெளிப்படையாகவே தம் எண்ணத்தைக் காட்ட முன்வந்தது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். ஆனால், இத்தகைய ஒரு சுயநலக் கும்பலை நம்பி, தங்களுக்கு நன்மைதேடும் பொறுப்பைத் தோழர் விஸ்வநாதம் போன்றவர்களிடம் ஒப்படைத்திருக்கும் தெலுங்கு நாட்டுத் திராவிட மக்கள், இதன்மூலம் இனியாவது கண் திறப்பார்கள் என்பது நிச்சயம்.

தங்கள் சாதி அல்லது சொந்த இனத்திற்கு (ஆரியர்) வேண்டிய வசதிகளை மேலும் மேலும் தேடிக்கொள்ளும் பொருட்டும்—தேசியத்தின் பெயராலும், 'அகில இந்தியா' என்பதின் பெயராலும் பித்தலாட்டஞ்செய்து சுரண்டிக்கொண்டிருந்த ஆரியக் கும்பலின் உயர்வுக்காகவும்—சிறைபுகுந்தும், இன்னும் பல தியாகங்களைச் செய்தும் தொண்டாற்றிய ஆந்திரத் திராவிடத் தோழர்கள் இனியாவது உண்மையை உணர்வார்கள் என்று எதிர் பார்க்கிறேன்.

திராவிடர்களாய்ப் பிறந்துள்ள எல்லா மக்களும் சுறுசுறுப்புடன் வீறுகொண்டு எழுங்கள்! எல்லா இடங்களிலும் பொதுக்கூட்டங்கள் போடுங்கள்! பொதுஜனக் கருத்தை ஒன்று திரட்டுங்கள்! நான் மேலே கூறியவற்றை நாடெங்கும் பரப்பி, திராவிடச் சக்தியை உருவாக்குங்கள் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நமக்கு வரப்போகும் ஆபத்தை அலட்சியமாகக் கருதிவிட வேண்டாம். நமது ஆண், பெண், சிறுவர் ஆகிய எல்லோரும் நமக்கு முன் நிற்கும் பயங்கரமான நிலையை உணரவேண்டியது இன்றியமையாததாகும். எந்த ஓர் அரசியல் அமைப்பிலும் இருக்க வேண்டிய சாதாரண ஆரம்ப உரிமைகளைக்கூட நமக்குத்தர மறுத்திருக்கும் இந்தப் புதியவிதமான வருணாசிரம முறையின் அக்கிரமத்தை, நம்மவர்களில் ஒவ்வொரு ஜீவனும் உணரவேண்டியது அவசியமாகும்.

இப்போதுள்ள அரசியல் நிர்ணய சபையானது ஒரே கருத்துக்கொண்ட கட்டுப்பாடான ஒரு கும்பல் என்றும், பொதுஜனக் கருத்தைப்பற்றி அது சட்டைசெய்யப்போவதே இல்லை என்றும் ஒருசிலர் கூறலாம். அரசியல் விவகாரங்களில் இவ்வாறு மனமுடைவது

அவ்வளவு சரியல்லவென்றே கருதுகிறேன். பொதுஜனக் கருத்தைப் பிரமாண்ட அளவுக்கு ஒன்று திரட்டினால், அரசியல் நிர்ணய சபையின் முடிவுகளைக்கூட அது ஓரளவுக்கு மாற்றி விடமுடியும். இப்போது செய்யப்பட்டுள்ள முடிவுகள் தற்காலிகமானவை என்பதை நாம் மறுத்தல் கூடாது.

நம்முடைய இலட்சியங்களுக்குச் செவிசாய்க்கும்படியாகச் செய்வதற்கும் இன்னும் போதுமான காலமிருக்கிறது. அரசியல் நிர்ணய சபை எவ்வளவுதான் கல்நெஞ்சுடையதாக இருந்தாலும், ஒரு மாபெரிய இனத்தின் ஒன்று திரண்ட சக்தியின் முன்பு—தன் உரிமைகளைப் பெறுவது என்ற உறுதியுடனுள்ள ஓர் இனத்தின் உத்வேகத்தின் முன்பு அது வளைந்து கொடுத்தே தீரவேண்டும்.

'பிரதேசவாரியாக சுதந்திரம் தேவை' என்ற அவசியத்தைப் புதுடில்லியிலுள்ளவர்கள் உணரும் வகையில்—சமாதான முறைகள் யாவற்றையும் பயன்படுத்தவேண்டியது குடிமக்கள் என்ற முறையில் நமது நீங்காகக் கடமையாகின்றது. இவ்வாறு செய்யவேண்டுமானால், சுதந்திரம் பெறுவதற்கு விழையும் ஓர் இனமானது தனக்குத் தெரிந்த சமாதான முறைகள் யாவற்றையும் ஒன்றுவிடாமல் கையாண்டு பார்த்தே தீரவேண்டும். அவ்வாறு, நாம் செய்யவில்லையென்று சுய அறிவுள்ள எவரும் நம்மீது குற்றம் சுமத்த முடியாது என்பதை நான் உறுதியாகக் கூறமுடியும்.

ஆகஸ்ட் 9-ந்தேதி முதல் 12-ந்தேதி வரையில் தென்இந்தியாவிலுள்ள திராவிடர்கள் அனைவரும் பெரும்கூட்டங்களைக் கூட்டவேண்டும். பொதுமக்கள் யாவரும் திராவிடநாடு பிரிவினையின் அவசியத்தை உணருமாறு செய்யவேண்டும். இருண்டுகிடக்கும் திராவிட சமுதாயத்திற்கு வெளிச்சத்தைத் தரவேண்டும்; சர்வாதிகாரம் பெற்ற அரசியல் நிர்ணய சபைகூட சில ஜீவாதார உரிமைகளைக் கவனிக்கவேண்டியது அவசியம் என்பதை அதற்கு எடுத்துக் காட்டவேண்டும். 'முழு சுதந்திரம் பெற்ற திராவிடத் தனிஅரசே நமது உடனடியான இலட்சியம்' என்பதையும், அதன் இன்றியமையாத அவசியத்தையும் அரசியல் நிர்ணய சபைக்கு விளங்க வைக்கவேண்டும் எனக் கோருகிறேன்.

[அறிக்கை—'விடுதலை' 6-8-1947; 15, 17, 18-8-1972]

## 7. பேத உணர்ச்சிகள் மறைய வழி

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

திராவிடர் கழகம் இன்று நாடெங்கணும் பொதுக்கூட்டங்கள் பல நடத்தித் தீவிரமாகப் பிரச்சாரம் செய்து வருகிறதென்றால் அது உங்களை ஏமாற்றி ஓட்டுப் பெறவோ, அல்லது அரசாங்கத்தின் எதிர்ப்பாளர்களாகக் காட்டிக் கொண்டு ஏதாவது சில சலுகைகள் இரகசியமாகப் பெற்று வாழவோ அல்ல.

திராவிடர் கழகத்தின் கொள்கைகள் பூராவும் மக்களால் ஒப்புக்கொள்ளப்படும் வரையில் அது தேர்தலுக்குப் போட்டியிடுவதற்கில்லை. ஏனெனில், போட்டியில் ஜெயித்து சட்டசபைக்குச் சென்றாலும் மக்களுக்கு எவை நன்மையானவையோ, எவை அறிவுக்கு ஏற்றவையென்று அது கருதுகிறதோ அவற்றை அவர்கள் நிறைவேற்றி, வைக்கச் சட்டம் செய்வார்களானால், அதை மக்கள் ஏற்றுக்கொள்வது கஷ்டம். ஆகவே, திராவிடர் கழகம் இன்று அரசியலைக் கைப்பற்றும் வேலையில் முயற்சி செய்யாமல், தனது கொள்கைகளுக்கு ஆதரவு தேடுமுகத்தான் மக்களுக்கு அரசியல் ஞானத்தை ஏற்படுத்தி அவர்களைப் பகுத்தறிவுள்ள மக்களாக ஆக்கப் பாடுபட்டு வருகிறது. மக்களின் அறிவு சரியாகப் பயன்படுத்தப்படாத வரையில் யார் அரசியல் அதிகாரத்தை ஏற்றுக் கொண்டாலும், அவர்கள், மக்கள் எதை விரும்புகிறார்களோ அதைச் செய்து அவர்களை

ஓர் அளவுக்குத் திருப்தி செய்துவிட்டு, மற்றபடி தம் சுயநலத்திற்கான சகலத்தையும் செய்துகொள்ள முடியுமே தவிர, மக்களுக்குப் பயனளிக்கக்கூடிய காரியங்களைச் செய்ய முடியாது. சுயநலத்தில் விருப்பமுள்ள கோஷ்டிதான் இன்று அதிகாரத்தில் இருக்க முடியுமே தவிர, பொதுநலத்தில் விருப்பமுள்ள எவரும் அரசியல் அதிகாரத்தில் இருக்க முடியாது.

ஏனெனில், எது தங்களுக்கு நலமானது என்று தெரிந்து கொள்ளும் அளவுக்குக்கூட இன்றைய மக்களுக்குப் பகுத்தறிவு கிடையாது.

இப்படி இவர்கள் பகுத்தறிவற்றிருக்கக் காரணமே இவர்கள் நெடுநாட்களாக ஒரு சுயநலக் கொள்ளைக் கூட்டத்தவரால்—ஆரிய லம்பாடிக் கூட்டத்தவரால் மதம், கடவுள், சாஸ்திரம், மோட்சம், நரகம் என்ற பேரால் ஏமாற்றப்பட்டு, அறிவை உபயோகப்படுத்த முடியாதபடி செய்யப்பட்டு வந்ததுதான். இன்றுள்ள குறைபாடுகளுக்கெல்லாம்—இன்று நமக்குள்ள முன்னேற்றத் தடைகளுக்கெல்லாம் மூலகாரணம் இப் பொல்லாத மதப் புரட்டுகள்தாம். ஆகவே, எந்தப் பொதுநல விரும்பியின் முதற்கடமையும் இம் மதங்களையும், மதக் கடவுளர்களையும், இவற்றிற்கு ஆதாரமாயிருந்துவரும் சாஸ்திர புராணங்களையும் ஒழிப்பதாகத்தான் இருக்கவேண்டும். மக்களுக்கு இவற்றின்மீதுள்ள நம்பிக்கையைக் குறைத்து, இவர்கள் ஏதொன்றையும் தமது பகுத்தறிவுகொண்டு ஆராய்ந்து பார்த்து முடிவுக்கு வரும்படி செய்யப்பட்டால்தான், நாம் உலக மக்களோடு சரிநிகர் சமானமாக—மனிதர்களாக வாழ்க்கை நடத்தமுடியும். ஆதலால்தான், திராவிடர் கழகம் அரசியல் அதிகாரத்தைப்பற்றிக் கவலைப்படாமல் இன்று இம்முதலாவது பணியில் ஈடுபட்டிருக்கிறது. மக்களுக்கு அரசியல் அறிவு ஏற்பட்டுவிட்டாலுங்கூட, திராவிடர் கழகம் மற்றவர்களை அதிகாரம் செய்யும்படி விட்டுவிட்டு, அவர்கள்மூலம் தம் கொள்கைகளை நிறைவேற்றி வைக்கப் பாடுபடுவார்களே ஒழிய தாமே அதிகாரத்தைப் பெறுவதில் ஆசை கொள்ள மாட்டார்கள். ஏனெனில், அதிகாரத்திற்கு வரும் எந்தக் கட்சியும் அதிலிருந்து நல்ல பெயரோடு மீள்வதில்லை, மீளவும்முடியாது என்பதை இவர்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள். ஆதலால், இன்று ஒரு பக்கத்தில் சுயராஜ்யக் கூப்பாடும்—மற்றோர் பக்கத்தில் சுயராஜ்யம் பெற்றுவிட்டதாகக் கூப்பாடும்—வேறோர் புறம் பெற்ற சுயராஜ்யத்தைக் காப்பாற்றுங் கூப்பாடும் கேட்கப்படுகின்றன. ஆனால், இந்த நாட்டைப் பொறுத்த வரையில் இவற்றிற்கும் மேலாக நமக்குச் சுயமரியாதை உணர்ச்சியும், கொள்கையில் கட்டுப்பாடும், ஒருவருக்கொருவரிடையே அன்பு மனப்பான்மையும், ஒவ்வொருவருக்கும் தம் பகுத்தறிவில் நம்பிக்கையும் ஏற்படவேண்டும்.

நமக்குப் பகுத்தறிவுதான் பிரதானமே ஒழிய, சுயராஜ்யம் பிரதானமல்ல. நம் திராவிட நாட்டைப் பொறுத்தவரையில் சுயராஜ்யப் பேச்சு ஒரு ஏமாற்றுப் பேச்சு, ஒரு பித்தலாட்டப் பேச்சு, வெறுத்து ஒதுக்கப்பட வேண்டிய பேச்சு என்றுதான் நான் கூறுவேன். நம் நாட்டுக்கு நல்ல ஒரு ஆட்சி வேண்டுமென்று கேட்பதுதான் பொருத்தமான கோரிக்கையாகும். அதைவிட்டு, சுயராஜ்யம் கேட்பது ஒரு கடைந்தெடுத்த முட்டாள்தனம் என்றுதான் நான் கூறுகிறேன். இந்நாட்டில் சுயராஜ்யம் என்பதற்கே அர்த்தம் இல்லை. இந்நாட்டில் கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள், பார்ப்பனர்கள், பறையர்கள், ஏழைகள், பணக்காரர்கள், முதலாளிகள், தொழிலாளிகள், ஜமீன்தார்கள், குடியானவர்கள் என்று பலப்பல பிரிவினைகள் இருக்கும்போது—இவர்களில் யார் ஆண்டால் சுயராஜ்யம் என்று நாம் கூற முடியும்? அல்லது, இவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து எப்படி ஆட்சி நடத்தமுடியும்? ஒரு நாட்டில் அனைவரும் முஸ்லிம்களாகவோ அல்லது அனைவரும் கிறிஸ்தவர்களாகவோ அல்லது அனைவரும் இந்துக்களாகவோ இருப்பார்களானால், அவரவர்கள் தனி ஆட்சி செய்து கொண்டு—இது முஸ்லிம்களின் சுயராஜ்யம், இது கிறிஸ்தவர்களின் சுயராஜ்யம்—இது இந்துக்களின் சுயராஜ்யம் என்று கூறிக்கொள்ளலாம். திராவிடநாட்டு மக்கள் ஒரே

மதத்தவர் இல்லையாகையால், இவர்கள் எத்தகைய ஆட்சி தங்களுக்கு வேண்டுமென்று கூறிக்கொள்ளலாமே தவிர சுயராஜ்யம் வேண்டுமென்று கூறிக்கொள்ள முடியாது. இன்றுள்ள ஆட்சியும் சுயராஜ்ய ஆட்சி என்றுதான் கூறப்படுகிறது. இதன் யோக்கியதையைப் பாருங்கள்.

'திராவிடர் கழகமா? அது நமது பித்தலாட்டங்களையெல்லாம் வெளியிட்டு வருகிறது; ஆகவே அதைத் தலையெடுக்கவொட்டாமல் தடுங்கள்!'. 'முஸ்லிம் லீக்கா? அவர்களுக்கு உத்தியோகமா? அவர்களெல்லாம் பாகிஸ்தானுக்கு உதவியவர்கள்; அவர்களைக் கண்காணித்து வாருங்கள்; அவசியமானால் ஜெயிலில் அடையுங்கள்' என்று உத்தரவு போடுகிறது-இதற்கா சுயராஜ்ய சர்க்கார் என்று பெயர்?

நான் சொன்னால் நீங்கள் சந்தேகப்படுவீர்கள். சுயராஜ்யம் என்ற வார்த்தை நம் திராவிட நாட்டைப் பொறுத்தவரையில் ஒரு பித்தலாட்ட வார்த்தைதான். அது உங்களுக்குச் சற்றுக் கடினமாகப்பட்டால் சுயராஜ்ய ஆட்சி என்பது நம் நாட்டில் சாத்தியப்படாத ஒன்று என்று கொள்ளுங்கள். நமக்கு வேண்டியது நல்ல ஆட்சிதான்; சுய ஆட்சி அல்ல. நம் திராவிட நாட்டில் பார்ப்பனர்கள் 100-க்கு 3 பேர் இருக்கிறார்கள்; முஸ்லிம்கள் 7 பேர்; கிறிஸ்தவர்கள் 2 பேர்; ஆதித் திராவிடர்களும் மற்ற சாதியினரும் 88 பேர்.

மொத்தம் 33 மந்திரிகள் இருந்தால்தான் பார்ப்பனருக்கு ஒரு மந்திரி பதவி கிட்டும்; 15 மந்திரிகள் இருந்தால்தான் முஸ்லிம்களுக்கு ஒரு மந்திரி பதவியாவது கிட்டும். 13 பேர் கொண்ட மந்திரி சபையில் ஒரு பார்ப்பானுக்குக்கூட இடமில்லை; வேண்டுமானால் ஒரு முஸ்லிம் இருக்கலாம். ஆனால், இப்படியா இருக்கிறது இன்றைய மந்திரி சபை? பறையனுக்குப் பார்ப்பான் ஆள்வதா சுயராஜ்யம்? எலிக்குப் பூனை ஆள்வது சுயராஜ்யமாகுமா? உழவனுக்கு-மிராசுதாரனும்; தொழிலாளிக்கு-முதலாளியும் ஆள்வது சுயராஜ்யமாகுமா? தேவதாசி என்று மதிப்பாகக் குச்சிக்காரி கூறிக்கொள்வது போலல்லவா இருக்கிறது இந்த சுயராஜ்ய ஆட்சியின் தன்மை! படித்தவர், பணக்காரர், பார்ப்பனர் என்ற ஒரு சுயநலக் கும்பலால் தேர்ந்தெடுக்கப்பட்ட இவர்கள் தன்மை சுயராஜ்யக்காரர்கள் என்று கூறிக்கொள்வது அயோக்கியத்தனமல்லவா? எல்லா அதிகாரத்தையும் வடநாட்டானிடம் ஒப்படைத்துவிட்டு அடிமை ஆட்சி செய்யும் இவர்கள், சுய ஆட்சி செய்வதாகக் கூறுவது அக்கிரமமல்லவா?

ஜனநாயகம் (Democracy) ஜனநாயகம் என்று கூப்பாடு போடுகிறீர்களே—அதன் அர்த்தம் தெரியுமா? 100-க்கு 88 பேருக்கு ஓட்டுரிமை இல்லாத நாடு எங்காவது ஜனநாயக நாடாகுமா? ஏமாந்த சோணகிரிகள் சிலரை உங்கள் கையாளாகக்கொண்டு, நீங்கள் உங்கள் ஆட்சியைப் பொதுஜன (சர்க்கார்) ஆட்சி என்று பிரச்சாரம் செய்வீர்களானால், அதைப் பகுத்தறிவில்லாத மக்கள் சிலரோ பலரோ நம்பி வருவார்களானால்—எத்தனை நாளைக்கு இந்தப் பொய்யை உங்களால் மூடிவைக்க முடியும்? 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்குள் வெளியாகும்' என்ற பழமொழி உங்களுக்குத் தெரியாதா? இந்த விஞ்ஞான காலத்தில்—அதுவும் 1948-ல் நீ அதிகார மமதையால் தேள், தேள் என்று பூச்சி காட்டுகிறாயே! அந்தப் பூச்சாண்டிக் காலம் இனிப் பலிக்காது, தம்பி! சுயராஜ்யம் என்பது வெட்டிப் பேச்சு: சுயஆட்சி என்பது முட்டாள்தனம். ஜனநாயகம் என்பது இந்நாட்டு மக்களுக்குப் புரியாத சங்கதி. சுயராஜ்யம் என்பது எப்படியிருக்கும் என்பதை மக்கள் அறியவில்லை. அதனால்தான், பித்தலாட்ட சுயநலக் கும்பலின் சுரண்டல் ஆட்சியை சுயராஜ்யம் என்று கருதிவருகின்றனர்.

நான் சூத்திரன்—அதாவது தேவடியாள் மகன்—ஆரிய அகராதிப்படி. என் நண்பன் ஒருவன் தீண்டாதவன்; அவன் பஞ்சமன், சண்டாளன். மற்றொரு முஸ்லிம் தோழன் ஒரு மிலேச்சன். இன்னொருவன் பிராமணன். இத்தனை பேரையும் நாட்டில் வைத்துக் கொண்டு ஜனநாயகத்தைப் பற்றிப் பேசுகிறாய், சற்றேனும் மானமின்றி; அறிவின்றி.

உனக்கு அறிவிருந்தால் முதலில் இந்நாட்டில் அனைவரும் சமம்; சாதி வேறுபாட்டிற்கு இங்கு இடமில்லை என்று கூறி விட்டல்லவா—அனைவருக்கும் ஓட்டுரிமை அளித்து விட்டல்லவா நீ ஜனநாயகம் பற்றிப் பேசுவாய்?

இன்றைய ஆட்சியாளரைத்தான் கேட்கிறேன்—உங்கள் ஆட்சியை எங்களது சுய ராஜ்ய ஆட்சி என்று சொல்ல—நீங்கள் எங்களுக்காகச் சாதித்தது என்ன? உங்களாட்சியில் இன்னும் சூத்திரன் இருக்கிறானே! இப்பிரிவையாவது ஒழித்தாயா? எங்களை மதம் என்ற பேரால், கடவுள் என்ற பேரால் பார்ப்பான் ஏய்த்து வருவதை நிறுத்திவிட்டாயா? எங்களைத் தேசியம் என்ற பேரால் வடநாட்டுப் பனியாக் கூட்டம் சுரண்டி வருவதை நீ தடுத்துவிட்டாயா?

எங்கள் மானத்தைப் பற்றித்தான் உனக்குக் கவலை இல்லை. எங்கள் பசியைப் பற்றித்தான் கவலைப்பட உனக்கு நேரமில்லை. எங்களுக்குப் படிக்கப் பள்ளி வைத்துக் கொடுக்கத்தான் உன்னிடத்தில் மனமில்லை. சரி, அத்தனையும் தொலைந்து போகட்டும்! உன்னுடைய ஆட்சியில் சமாதானமோ சாந்தியோ ஏற்பட்டுவிட்டதா? என்றைக்கு, சுய ராஜ்யம் திரை மறைவில்—நடுராத்திரியில், திருட்டுத்தனமாக, நல்ல நாள் பார்த்து வந்ததோ அன்று உருவிய கத்தி இன்றும் தன் உறையில் நுழையவில்லையே! அன்று துவங்கிய கொள்ளையும் கொலையும் கற்பழிப்பும் நிற்க வழிகாணோமே! அன்றாடம் துவேஷங்கள் வளர்ந்து வருகின்றனவே ஒழிய, குறைக்கக்கூடிய ஸ்தாபனம் ஒன்றுகூட நாட்டில் இருப்பதாகத் தோன்றவில்லையே!

எதற்காக இந்து-முஸ்லிம் இருக்கவேண்டும்? எதற்காக முதலாளி-தொழிலாளி இருக்கவேண்டும்? எதற்காக பார்ப்பான்-பறையன் என்ற உயர்வு தாழ்வு இருக்கவேண்டும் என்று யாராவது கேட்டார்களா? இவர்களுக்குள் பேத உணர்ச்சியில்லையானால் சண்டை சச்சரவு இருக்குமா? மனித சமுதாயம் எந்த மாதிரி இருக்கத் தக்கது என்பதையாவது மக்களுக்கு உணர்த்தி வருகிறீர்களா—சுயராஜ்ய வீரர்களான நீங்கள்? காலத்திற்கேற்ப, உள்ள சூழ்நிலைக்கேற்ப, மக்களின் இயற்கை ஆசா பாச உணர்ச்சிகளுக்கேற்ப உங்கள் திட்டத்தை மாற்றிக்கொண்டீர்களா நீங்கள்?

இப் பேத உணர்ச்சிகள் மக்களிடையே இருந்துவரும் வரையில் மனித சமுதாயம் குமுறிக்கொண்டுதான் இருக்கும் என்பதை உணர்ந்து நடவுங்கள். நிரந்தரமான சாந்தி வேண்டுமென்றால் பேதங்களை அகற்ற முற்படுங்கள்; அதற்கு ஆவன செய்யுங்கள்.

'நாங்கள் சுயஆட்சி செய்கிறோம்; ஆகவே, மரியாதையாக நடவுங்கள்' என்று எங்களை மிரட்டுகிறாயே! நாங்கள் ஏன் உங்களுக்கு மரியாதை காட்டவேண்டும்? எங்களது சூத்திரப்பட்டத்திற்கு ஆணி அடிக்கப் பாடுபடுவதற்காக உங்களை வணங்க வேண்டுமா? எங்களை வடநாட்டான் சுரண்ட வழிசெய்துவிட்டு, அவனுக்குக் கையாளாயிருந்து வருவதற்காக உங்களுக்கு மரியாதை செய்யவேண்டுமா? எங்களுக்கு உண்ண உணவும் உடுக்க உடையும் உருக்கத்தோடு அளித்து வருகிறீர்களே என்று நாங்கள் மகிழ்ந்து வணக்கம் செலுத்தவேண்டுமா? எங்கள் மனைவி மக்கள் பட்டினிகிடக்க வடநாட்டு அகதிகளுக்குப் பாலுஞ்சோறும், படுக்க அறையும், குளிருக்குப் போர்வையும் கொடுப்பதற்காக நாங்கள் உங்களுக்கு வணக்கம் செலுத்த வேண்டுமா? அல்லது, எங்களை நாஸ்திகர்களென்றும், தேசத் துரோகிகள் என்றும் சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் தூற்றி வருவதற்காக நாங்கள் உங்களுக்கு வணக்கம் செலுத்தவேண்டுமா? இந் நாட்டின் ஆண்ட இனத்தை, இந் நாட்டிற்குச் சட்டத்தின்படியும் சரித்திரத்தின்படியும் உரிமையுடைய இனத்தைப் பார்ப்பானின் அடிமைகளாக வைத்திருக்க அவர்களின் அடிவருடிகளாகயிருந்து எங்களைக் காட்டிக் கொடுப்பதற்காகவா, உங்களை நாங்கள் மதித்து நடக்க வேண்டும்? எங்களைச் சூத்திரராக வைத்திருக்கும் மதத்தைக் கேலிசெய்யகூடாது என்று உத்தரவு போட்டதற்காக நாங்கள் உங்களை மரியாதை செய்ய வேண்டுமா? எதற்காக என்று கூறவேண்டாமா?

'சுதந்திர இந்தியாவின் கொடியை அவமதிக்காதீர்கள். அவமதித்தால் சும்மா விடேன்' என்று கூக்குரலிடுகிறாயே! உனக்குத்தான் பதவி கிடைத்தது; பணம் கிடைக்கிறது; கொள்ளையடிக்க வசதியும் கிடைக்கிறது. கூப்பிட்ட நேரத்திற்குக் குரல் கொடுக்க டவாலி பியூன் உனக்குக் கிடைக்கிறான். அதனால் இந்தக் கொடிக்குத் தலை வணங்குகிறாய்; அதற்கு அர்த்தமும் இருக்கிறது. அந்த வசதிகள் எனக்குத் தேவையில்லை; தேவையிருந்தாலும் அக் கொடிக்கு வணக்கம் செலுத்தாமலே என்னால் அவற்றை அடைய முடிகிறது. அப்படியிருக்க, நான் ஏன் 'ஹிந்துஸ்தான்' கொடியை வணங்கவேண்டும்? என்னுடைய சூத்திரப் பட்டத்தைப் போக்குமா அந்தக் கொடி? என்னை ஒரு மார்வாரி சுரண்டாமல் பார்த்துக்கொள்ளுமா அந்தக் கொடி? எங்களுக்கு உங்கள் 'ஹிந்துஸ்தானில்' இருக்கப் பிரியமில்லை. உங்கள் ஆட்சியில் எங்கள் மக்கள் பாதுகாக்கப்படமாட்டார்கள். ஆகவே, எங்களைப் பிரித்துவிட்டு விடுங்கள் என்று கூறுகிறோம். எங்களுடைய பாதுகாப்பைப்பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? பேசாமல் பிரித்துவிட்டுவிடுங்கள்.

எங்களை ஆள எங்கள் நாட்டில் அறிவாளிகள் உண்டு. எங்கள் நாட்டில் எங்களைப் பாதுகாக்கும் வல்லமை படைத்த போர் வீரர்கள் உண்டு. நாங்கள் ஆண்ட இனத்தைச் சேர்ந்தவர்கள். ஆதலால், எங்களுக்குத் தனித்திருக்கச் சகல வசதிகளும் உண்டு.

ஆகவே, 'ஆடு நனைகிறதே என்று ஓநாய் கூப்பாடு போடுகிறதாம்' என்பது போல, நீங்கள் எங்களுக்காகப் பரிதாபப்படாமல் பிரித்துக்கொடுத்துப் பாருங்கள்! ஆண்டு பார்க்கிறோம். ஆள முடியவில்லையானால், பாதுகாத்துக்கொள்ள முடியவில்லையானால் உங்களிடமே வந்து சரணாகதி அடைகிறோமே! ஏனப்பா, நீலிக்கண்ணீர் வடிக்கிறாய்?

'பிரிவினையை இனி அனுமதிக்க முடியாது. பாகிஸ்தான் பிரிவினையால் பட்டது போதும்' என்று எங்களை ஏய்க்கப் பார்க்கிறாயே—இது அறிவுடைமையா? பாகிஸ்தான் பிரிந்து போனதால் அன்னிய நாடு ஒன்றும் அதைக் கிள்ளிக்கொண்டு போய்விடவில்லையே! நீதானே அதைத் துன்புறுத்துகிறாய்; நீதானே அதன்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளப் பார்க்கிறாய்! இல்லையென்றாலும், உங்களுக்குள்ளேதானே அந்த வகுப்புப் போராட்டம் நடைபெறுகிறது! எங்கள் நாட்டில் ஒன்றும் அப்படிப்பட்ட வகுப்புப் போராட்டம் இல்லையே!

இவ்வளவு அக்கிரமம் செய்கிறான் பார்ப்பான்—அவனை, இன்றும் எங்களில் பலர் 'சாமி' என்றுதானே அழைத்து வருகிறார்கள்! பார்ப்பானை என்ன நாங்கள் இந்நாட்டில் இருக்க வேண்டாமென்றா கூறுகிறோம்? தாராளமாக இருக்கட்டும். ஆனால், அவர்கள் மனிதர்களாக இருக்கட்டும்; தேவர்களாக இருக்கவேண்டாம் என்றுதானே நாங்கள் கூறுகிறோம். எங்களுக்கும் மற்ற மதத்தவர்களுக்கும் இடையூறில்லாத எந்த உரிமையும் பார்ப்பனர்க்கும் வழங்க, நாங்கள் தயாராகத்தானே இருந்து வருகிறோம்!

எங்களை வடநாட்டான் சுரண்டிக்கொண்டு போவதால் உங்களுக்கு என்னப்பா இலாபம்? இதைப் புத்தியுள்ள பார்ப்பனத் தோழர்கள் சிந்திக்கவேண்டாமா? இங்குள்ள முஸ்லிம் தோழர்களை என்ன—நாங்கள் உங்கள்மீதா ஏவி விடுகிறோம்? அல்லது, இங்குள்ள கிறிஸ்தவர்களைத்தான் உங்கள்மீது ஏவி விடுகிறோமா? பின் ஏன் எங்கள்மீது சந்தேகப்பட்டு, வடநாட்டானுக்குக் கையாளாய் இருந்துவருகிறீர்கள்? எத்தனை நாள்தான் திராவிடன் தூங்கிக்கொண்டிருப்பான் என்று நீங்கள் கனவு காண்கிறீர்கள்?

திராவிடம் விழித்தெழுந்துவிட்டது. இனி உரிமைப் போராட்டம் விரைவில் துவக்கப்படுவது நிச்சயம். ஆகவே, விரைவில் பார்ப்பனத் தோழர்கள்—ஒன்று, திராவிடர்களோடு சேர்ந்துவிடவேண்டும்; அல்லது, அவர்கள் குடியேற வடநாட்டில் வசதிகள் செய்துகொள்ளவேண்டும். நாங்கள் குடியேறும்படி கூறவில்லை; அவர்களும் எங்களோடு என்றென்றும் ஒற்றுமைப்பட்டு வாழவேண்டும்—ஆனால், மனிதர்களாக வாழவேண்டும்

என்பதுதான் எங்களுடைய உள்ளக் கிடக்கை. இதில் எந்தப் பார்ப்பனத் தோழரும் சந்தேகப்படவேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், திராவிடன் என்றுமே விருந்தோம்பல் செய்யத் தவறியதில்லை என்பதை இவர்களுடைய ஏடே இவர்களுக்கு எடுத்துக் காட்டும்.

ஆகவே, பார்ப்பனத் தோழர்கள் சற்றேனும் நன்றியறிதலோடு எங்களோடு ஒத்துழைக்கவேண்டும்; அந்த ஒத்துழைப்பால் தங்களுக்கும் ஏராளமான நன்மை உண்டாகும்; இன்றுள்ள வெறுப்புணர்ச்சிக்கும் ஆளாகவேண்டியிருக்காது என்பதை இவர்கள் அறிந்துகொள்ள வேண்டுகிறேன்.

திராவிடர் கழகத்திற்கும் முஸ்லிம்களுக்கும் உள்ள சம்பந்தா சம்பந்தங்களைப் பற்றி விளக்கிக் கூறுமாறு ஒரு தோழர் கேட்டுக்கொண்டார். திராவிடர் கழகம் ஜஸ்டிஸ் கட்சியாய் இருந்த காலம் முதற்கொண்டே, அது முஸ்லிம்களையும் சேர்த்துக்கொண்டு தான் இயங்கி வந்தது. சுயமரியாதைக் கழகத்திலும்கூட சில முஸ்லிம்கள் இருந்து கொண்டுதான் இருந்தார்கள். என்றுமே திராவிடத் தோழர்களுக்கும் முஸ்லிம் தோழர்களுக்கும் சண்டையோ சச்சரவோ ஏற்பட்டது கிடையாது. திராவிடநாட்டுப் பிரிவினைத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு வந்ததை முஸ்லிம்கள் இதற்குள் மறந்திருக்க மாட்டார்கள் என்றே நினைக்கிறேன். பாகிஸ்தான் கிடைக்கும்வரை திராவிடர் கழகம் அதை ஆதரித்துத்தான் வந்திருக்கிறது; அதற்காக ஆட்சியாளரிடம் சில தொல்லைகளையும் அனுபவித்துத்தான் வந்திருக்கிறது. இன்னும் பாமர முஸ்லிம்கள் எங்களை ஆதரித்துத் தான் வருகிறார்கள். அவர்களைச் சரியானபடி முன்னோக்கி அழைத்துச் செல்லக்கூடிய தலைவர்கள் இன்றில்லை.

அவர்களுடைய இன்றையத் தலைவர்களுக்கு எங்கள் மீது ஏதாவது குறைகூறத் தெரிகிறதே ஒழிய—இவர்களுடைய சமுதாய நலனுக்கு எது உகந்தது என்றுகூட அறிந்து கொள்ள முடியவில்லை.

திராவிடர் கழகம், 'இனி மனுதர்ம ஆட்சிதான் நடக்கும்; ஆகவே சுதந்திர விழா கொண்டாடாதீர்கள்' என்று கூறியபோது—இந்தத் தலைவர்கள் என்ன நேர்ந்துவிடுமோ என்று பயந்து நமக்கு விரோதமாக, ஆகஸ்ட் 15-ந்தேதியன்று வருணாசிரமக் கொடிக்கு வணக்கம் செலுத்திவிட்டார்கள். இவர்களது அடிமைப் புத்தியை அறிந்துகொண்ட அரசாங்கமும் இன்று ஆணவத்தோடு இவர்களைச் சவாலிட்டு அழைக்கிறது. அன்று இவர்கள் ஹிந்துஸ்தான் கொடியை வணங்க மறுத்திருப்பார்களானால் ஆட்சியாளர்கள் இவ்வளவு அக்கிரமமாக நடந்து கொள்ளத் துணிவு கொண்டிருக்கமாட்டார்கள் என்றுதான் நான் கருதுகிறேன். இன்றைய முஸ்லிம் தலைவர்களும் அரசாங்கத்திற்கு நல்ல பிள்ளைகளாக நடந்துகொள்ளவேண்டி, எங்கள் கழகத்தை சர்வஜாக்கிரதையாக ஒதுக்கிக்கொண்டே வருகிறார்கள். ஏதும் அறியாத பாமர முஸ்லிம் தோழர்கள் என்ன செய்வதென்று புரியாமல் திண்டாடுகிறார்கள். அப்படிப்பட்ட தோழர்களிடமிருந்து எனக்கு ஏறக்குறைய 20, 30 கடிதங்கள் வந்திருக்கின்றன.

திராவிடர் கழகத்தை ஆதரிக்கும்படி, தோழர் ஜின்னா அவர்கள் கூறியிருந்தும்—சுயநலத்தில் விருப்பம் கொண்டுள்ள இத் தலைவர்கள் தங்கள் வாழ்வையே பெரிதென்று கருதி, திராவிடர் கழகத்தை ஒதுக்கிவரப் பார்க்கின்றனர். டெல்லி ஆட்சியாளரின் ஏகாதிபத்தியக் கொட்டத்தைத் தடுக்க திராவிட நாட்டுப் பிரிவினை ஒன்றுதான் தக்க மருந்தென்பதைத் தோழர் ஜின்னா அவர்கள் உணர்ந்துதான் இவர்களுக்குப் புத்தி கூறினார். இவர்கள், எங்கே திராவிடர் கழகத்தோடு சேர்ந்தால் அரசாங்கம் தொல்லை கொடுக்குமோ என்று பயந்து வாளாவிருக்கிறார்கள். தொல்லை ஏறுகிறதா, குறைகிறதா என்று இருந்து பார்க்கட்டும்.

இங்குள்ள முஸ்லிம்களுக்கும் நமக்கும் எவ்வித பெரிய வேறுபாடும் இல்லை என்பது யாவரும் அறிந்ததேயாகும். திராவிடர் கழகத் தலைவர்களும், முஸ்லிம் கழகத்தோழர்களும் ஒன்றுகூடிப்பேசித் தம் வேலைத் திட்டத்தை வகுத்துக் கொள்வது நலம் என்று ஒரு பொறுப்புள்ள தோழர் குறிப்பிடுகிறார். ஆம், உண்மைதான். முஸ்லிம் தலைவர்கள் திராவிடர் கழகத்தோடு ஒத்துழைக்கத் தயாராயிருந்தால், கூட்டு வேலைத் திட்டம் என்றும் தனித்த வேலைத் திட்டம் என்றும் இரண்டு திட்டங்கள் வகுத்துக்கொண்டு அதன்படி நமது கூட்டுநலன் முன்னேறப் பாடுபடலாம்.

சில முஸ்லிம் தலைவர்கள் மதத்தைப் பற்றியே அதிகக் கவலையுடையவர்களாக இருக்கிறார்கள். மதம் மக்களின் தனிப்பட்ட உரிமையாக இருக்கவேண்டுமே தவிர மதத்திற்காக மக்கள் வாழவேண்டுமென்று நினைப்பது அறிவீனம்.

இம் மாகாண முஸ்லிம் லீக் தலைவர்கள் சிலர் தமது சொந்த இலட்சியங்கள் ஈடேற வேண்டும் என்பதற்காகவும், சர்க்காரை விரோதித்துக் கொண்டு எப்படி வாழ முடியும் என்பதற்காகவும் தம் இனத்தைக் காட்டிக்கொடுத்து வாழும் இழிசெயலில் ஈடுபட்டிருக்கிறார்கள். என்றாலும், இவர்கள் தம் தவற்றை விரைவில் உணர்வார்கள் என்றே நான் கருதுகிறேன். இந்துக்களும், முஸ்லிம்களும் என்றுமே ஒன்றாக வாழமுடியாதாகையால்—இன்றில்லையானாலும் நாளை இவர்கள் நமது பக்கத்திற்கு வந்துதான் தீரவேண்டும்; அவர்கள் வரும்வரை நாம் பொறுத்துப் பார்ப்போம்.

வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் மனப்பான்மை இருக்கும் வரைக்கும் நாட்டின் கொந்தளிப்பு இருந்து கொண்டுதான் இருக்கும். இந்து—முஸ்லிம் போராட்டம் இன்று அய்க்கிய நாடுகள் சபைவரை சென்றுவிட்டது. தோழர் கிரிப்ஸ் அவர்களும் கூறிவிட்டார்கள், 'ஒரு நாட்டின் வகுப்புவாதப் பிரச்சினை இன்று அகில உலகப் பிரச்சினையாக மாறியது இதுதான் முதல் தடவை' என்று. உலக மக்களின் ஆதரவு முஸ்லிம் பக்கம் இருக்கும் என்பது தான் எனது அபிப்பிராயம். ஆகவே, இங்குள்ள முஸ்லிம்கள் தமது பயங்கொள்ளித்தனத்தைக் கைவிட்டுவிட்டு, தோழர் ஜின்னா அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றித் திராவிடநாட்டுப் பிரிவினைக்காக எங்களோடு ஒத்துழைக்கவேண்டுமென்று நான் முஸ்லிம்களைக் கேட்டுக்கொள்கிறேன். முஸ்லிம் தோழர்களும் இதைத் தமது தலைவர்களுக்கு எடுத்துக்கூறி, தமது நலனைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்பதுதான் எனது ஆசை. எது எப்படியானாலும் முழு ஆதரவும் முஸ்லிம்கள் பக்கம் இருக்குமென்பதை மட்டும் நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

[ஆழியூரில், 10-1-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 19-1-1948]

## 8. பிரிவினை எண்ணம் ஏன்?

பெரியோர்களே! தோழர்களே!

நம் நாட்டில் வெளிநாட்டான் எவ்வளவு சுரண்டுகிறானோ அதேபோல் இங்கே ஒவ்வொரு ஆளும் ஆயிரம் வேலி, அய்யாயிரம் வேலி வைத்துக்கொண்டு இருக்கிறார்கள். ஒவ்வொரு வியாபாரிக்கும், மில்காரருக்கும் 10 இலட்சம், 20 இலட்சம், 25 இலட்சம் சொந்தமாக இருக்கும். இவையெல்லாம் திருடுவது அல்லாமல் எப்படி வரும்?

இவைகள் எல்லாம் மாறவேண்டுமானால், முதலாவதாக வெளி நாடுகளுக்குப் போவதைத் தடுக்கவேண்டும். தடுக்கக்கூடாதென உத்தரவு சர்க்கார் போட்டால் கூட தடுத்துத்தான் ஆகவேண்டும். அதில் என்ன நேர்ந்தபோதிலும் பரவாயில்லை என்ற உணர்ச்சி மக்களுக்கும் ஏற்பட்டுவிட்டது. என்னைப் பொறுத்தவரையில், இந்தக் கொடுமை ஒழியாவிட்டால் எவ்வளவோ கொலைகள் எல்லாம் ஏற்படுமே—அவைகளில்

எல்லாம் நம்மவர்கள் தாமே இறக்க நேரிடும் என்ற பயம் இருக்கிறது. ஆனால், நம் காலத்திற்கு அப்புறம் கட்டாயம் எப்படியும் இது நடந்துதான் ஆகும். இந்த மாதிரி ஒரு கிளர்ச்சி நடந்தபிறகுதான் எல்லாக் காரியமும் சரியாகும்.

நம் நாட்டுக்குச் சுதந்திரம் கிடைத்தது என்றால் அந்த நாட்டின் பொருளாதாரம் தானே மிகவும் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது. ஆனால், இப்பொழுது நமது நாட்டிலே நடக்கிற காரியங்களைப் பார்க்கும்போது, நம் நாட்டில் உள்ள செல்வங்கள், பொருள்கள் எல்லாம் அன்னிய நாடுகளுக்குப் போகின்றன. மலேயாவில் உள்ள பொருள்கள் அன்னிய நாடுகளுக்குப் போகா. சிலோன், துருக்கி முதலிய நாடுகளில் உள்ள பொருள்கள் வெளியே போகா. ஆனால், நமது நாட்டில் இருந்தோ ஏராளமான பொருள்களை வடநாட்டான் சுரண்டிக்கொண்டு போகிறான். இங்கிருந்து சுரண்டிக்கொண்டு போய் பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களில் மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் கட்டிவிடுகிறார்கள். சுதந்திரம் கிடைத்த நாட்டிலா இவைகள் நடப்பது? இவைகளுக்கு அரசாங்கமும் உதவி அளிக்கிறது. ஆகையால்தான், நாம் பிரிந்தாக வேண்டும் என்று சொல்கிறோம்.

நாம் பிரிந்தால் வடநாட்டானுக்கு இங்கே பிழைப்பதற்கு வழி இல்லை. பார்ப்பானுக்கும் இந்த சோம்பேறி ஆதிக்கப் பிழைப்புக்கும் வழி இல்லை. இதுபோன்ற நிலைமை ஏற்படும் காரணத்தால்தான் வெள்ளைக்காரர்களுக்குப் பணிந்து பேசி 'உங்கள் முதல் இங்கேயே இருக்கட்டும்; இங்கே சுரண்டிக்கொண்டு போக வேண்டியதைச் சுரண்டிக் கொண்டு போங்கள்' என்று பேசி வைத்து இருக்கிறார்கள். ஆகையால்தான், வெள்ளைக்காரர்களுடைய முதல் இந் நாட்டிலே 300 கோடிக்கு மேல் இருக்கிறது. இந்தப் பணத்தின் இலாபத்தை இன்றைக்கும் அவர்கள் அனுபவித்தக்கொண்டுதான் இருக்கிறார்கள். இவைகள் எல்லாம் மாறியாக வேண்டுமென்றே சொல்லுகிறோம்.

பாகிஸ்தான் வேண்டும் என்று கேட்டதற்கு 'பாகிஸ்தானைப் பிரித்துக்கொடுத்தால், பாகிஸ்தானால் தனித்து வாழ முடியாது; பாகிஸ்தான் சிறிய நாடு' என்று சொன்னார்கள். ஆனால் ஜின்னா, 'நீயாகப் பிரித்துக் கொடுக்காவிட்டால் நாங்கள் ரஷ்யாவிடம் போய் பெற்றுக்கொள்ளுவோம்' என்று பயமுறுத்தவே, ஜின்னாவுக்கு பாகிஸ்தான் கிடைத்தது. தனித்து வாழமுடியாது என்று கூறப்பட்ட அந்த பாகிஸ்தான் இன்று நமக்கு உணவு அனுப்புகின்றது; நம்மை மிரட்டுகின்றது. அதேபோல், நாமும் ஏன் தனித்து வாழ முடியாது? நமது நாட்டில் எதற்குக் குறைவு? வற்றாத நீர் ஓடைகளும், வளம் நிறைந்த வயல்களும் இல்லையா?

அடுத்தாற்போல், நாம் தடுக்கவேண்டியது பார்ப்பானுடைய சுரண்டல். நூற்றுக்கு 3 பேர்கூட இல்லாத கூட்டத்தார் நம்மைக் கீழாக்கி வைத்திருக்கிறார்கள். மதத்தின்பேரால் நாம் கீழ்நிலையில் இருக்கிறோம். இந்துமத சாஸ்திரத்தால் நாம் கீழ்நிலைமையில் இருக்கின்றோம். கடவுளின் பேரால் நாம் கீழ்நிலையில் இருக்கிறோம். இந்த மதம், கடவுள், சாஸ்திரம் என்பவைகளால் பார்ப்பான் நம்மைச் சுரண்டிக்கொண்டே வருகிறான். இந்த சுரண்டல்களை நாம் ஒழித்தாகவேண்டும். இம் மாதிரியான காரியங்களை நாம் செய்வதனால்தான் நம் நாடு பார்ப்பானுடைய ஆதிக்கத்திலிருந்து மீள முடியும்.

வடநாட்டானுடைய சரித்திரத்தை நாம் பார்ப்போமேயானால், நம்மை எல்லாம் காட்டிக்கொடுத்தவர்கள் பார்ப்பனர்கள்தாம் என்று தெரியும். காரணம்? பார்ப்பானுக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் யார் செய்துகொடுத்தார்களோ அவர்களுக்கு இவர்கள் தொண்டு செய்கிறவர்கள்தாம்.

இதேமாதிரியாக, இந்த நாட்டிலே இரண்டாயிர, மூவாயிர வருடங்களின் சரித்திரத்திலே பார்ப்பான் நம் நாட்டைக் காட்டிக்கொடுத்து வந்து இருக்கிறான் என்பதை இந்திய

சரித்திரத்திலே காணலாம். வெள்ளையனுக்கு நம்மைக் காட்டிக்கொடுத்தவர்களும் பார்ப்பனர்கள்தாம். இதேபோல்தான், இன்றும் நமது நாட்டை வடநாட்டானுக்குக் காட்டிக் கொடுத்து வருகிறார்கள்.

இங்கே பிழைக்க வழியில்லாமற்போன பார்ப்பனர்கள் அங்கே-வடநாட்டுக்குப் போய்க் கொள்ளை இலாபம் அடித்துக்கொண்டு இருக்கின்றார்கள்.

[சேலம் விக்டோரியா மைதானத்தில், 22-7-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 27-7-1951]

## 9. சகிக்க முடியாத அக்கிரமம்

பொதுவாக, ஆந்திரா பிரிந்ததிலிருந்தே நாட்டுப் பிரிவினையில் எனக்குக் கவலையில்லாமல் போய்விட்டது. பிறகு கன்னடமும், மலையாளமும் (கர்நாடகமும், கேரளாவும்) சீக்கிரத்தில் பிரிந்தால் நல்லது என்கின்ற எண்ணம் தோன்றிவிட்டது.

கன்னடியருக்கும், மலையாளிக்கும் இனப்பற்றோ, சுயமரியாதையோ இல்லை; மத்திய ஆட்சிக்கு அடிமையாக இருப்பதுபற்றி அவர்களுக்குச் சிறிதும் கவலையில்லை. மேலும், சென்னை மாகாணத்தில் 7-ல் ஒரு பாகத்தினராக இருந்துகொண்டு, தமிழ்நாட்டில் அரசியல், பொருளாதாரம், உத்தியோகம் முதலியவைகளில் 3-ல் 2 பாகத்தை அடைந்துகொண்டு, இவை கலந்திருப்பதால்—நம் நாட்டைத் தமிழ்நாடு என்றுகூட சொல்வதற்கிடமில்லாமல் தடுத்து ஆண்டுகொண்டிருக்கிறார்கள். ஆதலால், இவர்கள் சீக்கிரம் பிரியட்டுமென்றே கருதிவந்தேன்; அந்தப்படியே பிரிய நேர்ந்துவிட்டார்கள். ஆதலால், நான் இந்தப் பிரிவினையை வரவேற்கிறேன்.

இந்தப் பிரிவினை நடப்பதில் சேர்க்கை சம்பந்தமாக ஏதாவது சிறு குறைபாடு இருந்தாலும், மேற்கண்ட பெரும் நலத்தை முன்னிட்டுக் கூடுமானவரை ஒத்துப் போகலாம் என்றே எனக்குத் தோன்றிவிட்டது. மற்றும், இந்தப் பிரிவினை முடிந்து தமிழ்நாடு தனியாக ஆகிவிட்டால், நமது சமய, சமுதாய, தேசிய, சுதந்திர முயற்சிக்கும் அவை சம்பந்தமான கிளர்ச்சிக்கும், புரட்சிக்கும் நமது நாட்டில் எதிர்ப்பு இருக்காதென்றும், இருந்தாலும் அதற்குப் பலமும் ஆதரவும் இருக்காது என்றும் கருதுகிறேன்.

ஆனால், நாட்டினுடையவும், மொழியினுடையவும், இனத்தினுடையவும் பெயர் அடியோடு மறைக்கப்பட்டுப் போய்விடுகிறதே என்கின்ற குறைபாடு எனக்கு இருக்கிறது.

ஆந்திரர், கர்நாடகர், மலையாளிகள் பிரிந்து போனபின்பு கூட, மீதியுள்ள யாருடைய மறுப்புக்கும் இடமில்லாத தமிழகத்திற்குத் 'தமிழ்நாடு' என்ற பெயர்கூட இருக்கக்கூடாது என்று, அந்தப் பெயரையே மறைத்து, ஒழித்துப் பிரிவினையில் 'சென்னை நாடு' என்று பெயர் கொடுத்திருக்கிறதாகத் தெரிய வருகிறது. இது சகிக்க முடியாத மாபெரும் அக்கிரமமாகும்; எந்தத் தமிழனும் இதைச் சகிக்க முடியாது.

இதைத் திருத்தத் தமிழ் நாட்டு அமைச்சர்களையும், சென்னை, டில்லி சட்டசபை—கீழ் மேல் சபை உறுப்பினர்களையும் மற்றும் தமிழ்நாட்டிலுள்ள புலவர்கள், பிரபுக்கள், அரசியல், சமுதாய இயல் கட்சிக்காரர்களையும் வேண்டிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தமிழ், தமிழ்நாடு என்கின்ற பெயர்கூட இந்நாட்டிற்கு, சமுதாயத்திற்கு இருக்க இடமில்லாத நிலைமை ஏற்பட்டு விடுமானால், பிறகு என்னுடையவோ, எனது கழகத்தினுடையவோ, என்னைப் பின்பற்றும் நண்பர்களுடையவோ வாழ்வு எதற்காக இருக்க வேண்டும்?

['தனி அரசு'-அறிக்கை—25-10-1955]

# 10. நாட்டுப் பிரிவினை

நாட்டுப் பிரிவினை என்னும் விஷயத்தை 1938-லேயே முதல்முதலாக நான் துவக்கினேன். பிறகு நான் ஜஸ்டிஸ் கட்சித் தலைவனானவுடன் அப் பிரச்சினை ஜஸ்டிஸ் கட்சிப் பிரச்சினையாக ஆகி பிரபலம்பெற்று, ஜின்னா சாயபு, டாக்டர் அம்பேத்கார் ஆகியவர்களுடைய ஆதரவும் பெற்று, யுத்தத்திற்குப் பிறகு பிரிட்டிஷ் அரசாங்கத்திடமும் அது சமர்ப்பிக்கப்பட்டது. இதை (பிரிவினையை)ப்பற்றிப் பல திட்டங்கள் பிரிட்டிஷாரிடமே கொடுக்கப்பட்டன. அத் திட்டங்களில் ஒன்றுதான் பாகிஸ்தான் பிரச்சினையாகவும் முளைத்தது. இத் தகராறுகளைப் பிரிட்டிஷார் தங்கள்மேல் போட்டுக்கொள்ள இஷ்டமில்லாததால் 'காங்கிரசினிடம் நாங்கள் இராஜ்யத்தை ஒப்படைத்துவிடுகிறோம். நீங்கள் பிறகு எப்படியோ போங்கள்' என்று சொல்லிவிட்டார்கள்.

ஜின்னா சாயபு பிடித்த பிடியில் பிடிவாதமாயிருந்து வெற்றிபெற்று பாகிஸ்தானைப் பிரித்துக்கொண்டார்.

இராஜாஜி பாகிஸ்தானுக்கு ஆதரவாக (காங்கிரசுக்கு எதிராக) சுற்றுப்பிரயாணம் செய்து பிரச்சாரம் செய்கையில், 'இராமசாமி நாயக்கர் கேட்கும் திராவிடஸ்தானையும், திராவிட மக்கள் கேட்டால் பிரித்துவிட வேண்டியதுதான்' என்று சொன்னதோடு, அவரது சுற்றுப் பிரயாணத்தில் ஈரோட்டில் என் வீட்டிற்கே வந்து, திராவிடநாடு பிரிவினைக்கு ஆதரவு தருவதாகவும் சொன்னார். அன்று ஈரோட்டில் இரயில்வே ஸ்டேஷன் மைதானத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் வெளிப்படையாக ஆதரவு தந்து அதன் அவசியத்தைப் பற்றியும் பேசினார்.

1940-ல் திருவாரூரில் நடந்த ஜஸ்டிஸ் கட்சியின் 'மாகாண மாநாட்டில் திராவிடஸ்தான் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டு, அதற்காக எனது தலைமையில் ஒரு கமிட்டியும் போடப்பட்டது.

யுத்தம் காரணமாய் அதை அமல்படுத்தாமல், யுத்த ஆதரவு காரியத்தில் இருந்ததால் அப் பிரச்சினை யுத்தம் முடிவுவரை பிரச்சாரம் இல்லாமல் இருந்து, யுத்தம் முடிந்தவுடன் கிளப்பியதும், மேல் சொன்னபடி 'அதை நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள்; எங்களுக்கு அவசரம்; நாங்கள் இந்த மாதத்திலேயே வெளியேறத் தீர்மானித்துவிட்டோம்' என்று பிரிட்டிஷார் சொல்லிவிட்டார்கள்.

ஜின்னா சாயபு, பாகிஸ்தானுக்கு நமது ஆதரவையும் தேடவேண்டி, நாமிருவரும் இரண்டு டிமாண்டை (demands)யும் (பாகிஸ்தான்—திராவிடஸ்தான் ஆகிய) இரண்டு ஸ்தான பிரச்சினையையும் ஒன்றாகவே வைப்போம் என்று சொன்னார். காந்தி 'உங்கள் காரியத்தை நீங்கள் பார்த்துக்கொள்ளுங்கள்; அதை (திராவிடஸ்தானை)ப்பற்றி நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம்' என்று சொன்னவுடன், எனக்கு ஜின்னா சாயபு 'நீங்கள் தனியாகக் கேளுங்கள். நான் என்னாலான உதவி செய்கிறேன்' என்று எழுதிவிட்டார்.

பிறகு பிரிட்டிஷார் போய்விட்டார்கள்; இராஜ்யம் காங்கிரஸ் கைக்கு கிடைத்து விட்டது.

காங்கிரஸ் அவசர அவசரமாய் 'இந்தியா ஒரே நாடு; பிரிக்கக்கூடாத நாடு' என்று சட்டம் செய்துகொண்டார்கள். அதன் பிறகு திராவிடர் கழகம் பிரிந்து திராவிட முன்னேற்றக் கழகம் என்று ஒன்று வேறாக ஏற்பட்டும் திராவிடநாடு பிரச்சினையை அதுவும் வலியுறுத்தியே வந்தது.

காங்கிரஸ் ஆட்சி பலத்தால் திராவிடநாடு பிரிவினை கேட்பவர்கள் தேர்தலுக்கு நிற்கமுடியாது என்று விதிசெய்து கொண்டவுடன், தி. மு. க. 'நாங்கள் திராவிடநாடு பிரச்சினையை விட்டுவிட்டோம்' என்று சொல்லி, தேர்தலுக்கு நின்று வெற்றிபெற்று இன்று ஆட்சிக்கும் வந்துவிட்டார்கள்.

தேர்தலுக்கு அது ஒரு தடைப் பிரச்சினையாக ஆகிவிட்டதால், அவர்கள் அதைப் பற்றிப் பேச்சு மூச்சுகூட விடக்கூடாத நிலையில் இருக்கிறார்கள்.

மத்திய அரசாங்கம் காங்கிரசார் கையில் இருப்பதால், அவர்களுக்குப் பயந்து கொண்டு அடிக்கடி தி. மு. க. வினர் காலாகாலம் பார்க்காமல் 'நாங்கள் திராவிடநாடு பிரச்சினையை கைவிட்டு விட்டோம்; விட்டுவிட்டோம்; விட்டேவிட்டோம்' என்று சொல்ல வேண்டிய அவசியத்திற்கு வந்துவிட்டார்கள்.

நாமோ தேர்தலுக்கு நிற்கிறவர்கள் அல்ல. ஆனாலும், நமது திராவிடர் கழகத்தில் அது (திராவிடநாடு பிரிவினையே) ஒரு கொள்கையாய் இருந்தாலும், காமராஜர் காங்கிரஸ் தலைவரானவுடன், சமதர்மம்—சோஷலிசம் காங்கிரசின் கொள்கையாக ஆக்கப்பட்டு விட்டதால், அது தக்கபடி அமுலுக்குவந்தால் திராவிடநாடு பிரச்சினை அவசியமாக இருக்காது அல்லது கூடாததாய் இருக்காது என்றுகருதி, அதிகமாய்ப் பிரஸ்தாபிக்காமல் இருந்தோம்.

என்றாலும், காங்கிரசின் பலக்குறைவையும், பார்ப்பனரின் கட்டுப்பாடு பலத்தையும் பார்க்கும்போது, சோஷலிச அமுலுக்குத் தொல்லை ஏற்படும் என்று பயப்படவேண்டி இருப்பதால், இப்போது திராவிடநாடு பிரச்சினையைப் பிரச்சாரம் செய்யவேண்டியதும் தென்னாடுகளில் அதுபற்றிப் பிரச்சாரம் செய்யவேண்டியதும் அவசியமென்றே தெரியவருகிறது.

இன்று மக்களுக்குள் சாதி உணர்ச்சி வலுப்பட்டு வருகிறது என்கின்றது மாத்திர மல்லாமல், பார்ப்பனர்—பார்ப்பனர் அல்லாதார் என்கின்ற பிரச்சினை நாளுக்குநாள் மிகமிக வலுப்பெற்றுக்கொண்டே போவதுடன், நாட்டு உணர்ச்சியும் தென்னாடு, வடநாடு என்கின்ற பேதத்தோடு பலப்பட்டுக்கொண்டே வருகிறது.

இன்றைய தினத்திலே பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் என்கின்ற உணர்ச்சியும், தென்னாடு—வடநாடு என்கின்ற உணர்ச்சியும் இரண்டும் சேர்ந்து காமராஜர் வலிவைக் குறைக்க இமாலயப் பிரயத்தனம் செய்துவரப்படுகிறது.

காங்கிரசில் பிளவு;

பார்ப்பனர்—அல்லாதார் என்கின்ற பிளவு;

பொது சாதி உணர்ச்சிப் பிளவு;

வடநாடு—தென்னாடு பிளவு;

பணமுதலைகளுடைய ஆதரவால் கூலிகளைச் சேர்த்துக்கொண்டு அவர்களது தொல்லையால் பிளவு;

காங்கிரஸ்காரர்களுக்குள் பதவி, ஆசையால் பிளவு;

மாகாணத்துக்கு மாகாணம் போட்டியால் பிளவு;

ஒவ்வொருமாகாணத்திலும் பதவித் தலைமைப்போட்டியால் பிளவு;

தனித்தனிக் கட்சிப் பிளவு;

இத்தனை பிரிவுகளிலும் பார்ப்பனர் புகுந்து பிளவை பெரிதாக்கும் தொல்லை.

இத்தனை நோய்களுக்கிடையில சோஷலிசம் என்ற குழந்தை பிழைக்குமா? என்று பயப்படவேண்டி இருக்கிறது.

இவற்றையெல்லாம்விட இந்தியாவில் சோஷலிசத்திற்கு அனுகூலமானவர்கள், முழு மூச்சுடன் பாடுபடுகிறவர்கள் எத்தனைபேர் என்றே கணக்கிட முடியவில்லையே!

மொழிபேதத்தால் ஒருவருக்கொருவர் கலந்து பேசிக்கொள்ள முடிவதில்லை.

கலாச்சார பேதத்தால் நாம் ஒருநாட்டு மக்கள், சகோதரப் பிரஜைகள் என்கின்ற உணர்ச்சியே ஏற்படுவதில்லை. கூட்டுப்பொறுப்பு என்பதே எதில் என்று தெரிந்துகொள்ள முடிவதில்லை.

நான் தமிழ்நாட்டில் கிராமம், பட்டிதொட்டி முதலிய எல்லா ஊருக்கும் எல்லா மக்களுக்கும் தெரிந்தவனாக இருந்தாலும்,

கேரளாவில் 40 ஆண்டுகளுக்குமுன் வைக்கம் கிளர்ச்சியில் தெரிந்துகொண்ட ஒரு சிலர் (1½ கோடி மக்களில் ஒருசிலர்), ஒரு 5000 மக்களுக்குத் தெரிந்திருக்கலாம். மற்றவர்களுக்கு என்னைத் தெரியாது.

கர்நாடகத்தில் 2 கோடி மக்களில் பெங்களூரில் சில ஆயிரக்கணக்கான மக்களுக்குத் தெரியலாம்.

ஆந்திராவில் ஓர் ஊரிலும், ஒருவரையும் தெரிய வாய்ப்பில்லை; ஒரு சிலர் இருக்கலாம். பிறகு மற்ற நாடுகளில் என்னைத் தெரிந்தவர்கள் எத்தனைபேர் இருப்பார்கள்? நானே 55 கோடி இந்திய மக்களில் சுமார் ஒரு 55 ஆயிரம் வெளிமாநில மக்கள் தவிர, மற்றவர்களுக்குத் தெரியாதவனாக இருக்கும்போது, இந்தியா எப்படி ஒரே நாடாக இருக்க முடியும்? இந்திய மக்கள் எப்படி ஒரே சமுதாய மக்களாக இருக்கமுடியும்?

இப்படி இருப்பதனால் தனிப்பட்டமாநில மக்களுக்கு இலாபம் என்ன?

நாட்டில் இலாப நட்டங்கள், அழிப்பு, செழிப்பு, கையில் வலுத்த நாட்டிற்கு இலாபமாய் முடியுமே தவிர, கஷ்டப்படும், நஷ்டப்படும் நாட்டுக்கு எப்படிப் பரிகாரம் வர முடிகிறது? 55 கோடி பேருக்கும் ஒரேநாடு, 1000-க்கணக்கான சாதியாருக்கும் ஒரேநாடு, 1000-க்கணக்கான மொழி பேசுகிறவர்களுக்கும் ஒரேநாடு, 100-க்கணக்கான கலாசாரம் கொண்ட மக்களுக்கும் ஒரேநாடு, 50-க்கணக்கான மதம் உடையவர்களுக்கும் ஒரேநாடு, அதாவது இவ்வளவு பேர்களுக்கும் ஆட்சிக்கு ஒரே ஒரு நாடு. இத்தனைபேரையும் அடக்கி ஆள ஒருகட்சி என்றால் இது என்ன நாடா? பாழா? நரகமா? ஜெயிலா? சர்க்கஸ்காரன் வளையத்திற்குள் இருக்கும் மிருகப்பிராணிகள் போல், இப்படி இருக்க என்ன அவசியம் உள்ளது? இதுதான் சுதந்திரமா? மானம், ரோஷம் கண்ணாடி போட்டுக்கொண்டு பாருங்கள்.

உலகில் எங்கே இப்படி ஒருநாடு இருக்கிறது? ஓர் ஆட்சி இருக்கிறது? என்று கேட்கிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—30-3-1967]

## 11. திராவிடர்—திராவிடநாடு

பெரியோர்களே! தோழர்களே!

தமிழும், தமிழ் நாடும், தமிழ் மக்களும் இப்படிப் பிரிந்து கிடக்கிற காரணத்தால் தான் ஒற்றுமைக்குப் பாடுபடும் நாங்கள் திராவிட நாடு என்றும், திராவிட மக்கள் என்றும், திராவிட கலாச்சாரம் என்றும் எடுத்துக்காட்டிப் புத்துணர்ச்சி ஏற்படுத்தப் பாடுபட்டு வருகிறோம். 'தமிழ்' என்பதும், 'தமிழர் கழகம்' என்பதும் மொழிப் போராட்டத்திற்குத்தான் பயன்படுமேயொழிய இனப் போராட்டத்திற்கோ, கலாச்சாரப் போராட்டத்திற்கோ சிறிதும் பயன்படாது.

சரி, ஆரியர்கள் முதலில் தம் கலாச்சாரத்தைப் புகுத்தித்தான் நம்மை வெற்றி கொண்டார்கள்; நம் கலாச்சாரத்தைத் தடுத்துத்தான் நம் மீது ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்தார்கள். நாமும் நம் கலாச்சாரத்தை மறந்து ஆரிய கலாச்சாரத்தை ஏற்றுக்கொண்டதால்தான் அவர்களுக்குக் கீழான மக்களாக—அவர்களுடைய வைப்பாட்டி மக்களாக, சூத்திரர்களாக, பஞ்சமர்களாக ஆக்கப்பட்டோம்.

எனவே, அக் கலாச்சாரத்திலிருந்து விடுபட வேண்டுமென்றால், மொழிப் போராட்டம் ஒன்றினால் மட்டுமே வெற்றி பெற்றுவிட முடியாது. கலாச்சாரத்தின் பேரால்—இனத்தின்பேரால் போராட்டம் நடத்தவேண்டும்; அதில் வெற்றிபெற வேண்டும். அப்போது தான் நாம் விடுதலை பெற்றவராவோம்.

மொழிப் போராட்டம், கலாச்சாரப் போராட்டத்தின் ஒரு பகுதிதானேயொழிய முழுப் போராட்டமாகவே ஆகிவிடாது. சட்டம், சாஸ்திரம், சமுதாயம், சம்பிரதாயப் பழக்க வழக்கங்கள், புராணங்கள், இதிகாசங்கள் இவை எல்லாவற்றிலுமே நம் இழிவு நிலை நிறுத்தப்பட்டிருக்கிறது. எனவே, இவை எல்லாவற்றிலிருந்துமே நம் இழிவு நீக்கமடைந்தாகவேண்டும். மொழியால் மேம்பாடும் வெற்றியும் பெற்றுவிடுவதாலேயே நமது இழிவும், இழிவுக்கு ஆதாரமான கலாச்சாரமும் ஒழிந்துவிடமாட்டா; மேலும், இந்த இழிவால் அவதிப்படுபவர்கள் தமிழ் மொழி பேசுகிறவர்கள்—தமிழர்கள் என்பவர்கள் மாத்திரமல்லாமல்—சென்னை மாகாணத்தில் மட்டுமல்லாமல் இந்தியாவின் மற்ற மாகாணங்களிலும், அதாவது, வேறு பல மொழிகள் பேசும் மக்கள் உள்ள வங்காளம், பீகார், பம்பாய், மகாராஷ்டிரம் முதலிய மாகாணங்களிலும் இருக்கிறார்கள்.

அங்குள்ள தாழ்த்தப்பட்ட தோழர்களும் தம்மைத் திராவிடர்கள் என்றுதான் கூறிக்கொள்கிறார்கள். உண்மையில் அவர்களும் திராவிடர்கள்தாம்.

இவர்கள் எல்லோருமே, இன்றில்லையானாலும் நாளை நிச்சயம் ஆரியத்தை எதிர்க்க—அதற்காகப் புரட்சிசெய்ய ஒன்றுபடப்போவது நிச்சயம். எனவேதான், நாம் பல எதிர்ப்புகளுக்கிடையேயும், திராவிடர் கழகம் என்கிற பேராலேயே தொடர்ந்து பாடுபட்டு வருகிறோம்.

இந்த ஆரியர்—திராவிடர் போராட்டம் புராண காலங்கள் தொட்டே நடைபெற்று வரும் போராட்டம். புராண காலத்தைப்பற்றி நமக்கு விளக்கமாகத் தெரியவில்லை என்றாலும், ஆரிய கலாச்சாரத்தை ஒழிக்க பவுத்தர்கள் வெகு பாடுபட்டிருக்கிறார்கள். இந்து கலாச்சாரத்திற்கு—அதாவது ஆரிய கலாச்சாரத்திற்கு நேர் எதிர்ப்பான இஸ்லாம் கலாச்சாரத்தைக் கொண்டவர்களான முகலாயர்களும் ஆரியத்தை அழிக்க எவ்வளவோ பாடுபட்டார்கள். ஆனால் அவர்கள் வெற்றி பெற்றார்களல்லர்.

எனவேதான், 'அவர்களே வெற்றி காண முடியாதபோது இந்தத் திராவிடர் கழகத்தார் எங்கே வெற்றி காணப் போகிறார்கள்!' என்று பார்ப்பனர்கள் நம்மைப் பரிகாசம் செய்துவருகிறார்கள். அவர்கள் பரிகசிக்கட்டும்; நமக்குக் கவலையில்லை!

என்னைப் பொறுத்தவரையில், நம் முயற்சி வெற்றிபெறும் என்பதில் எனக்குத் திடமான நம்பிக்கையுண்டு; திட்டமான உறுதியுண்டு. வெள்ளையனுடைய சுமார் 200 வருடகால ஆட்சியும், நமது 25 வருடகாலப் பகுத்தறிவுப் பிரச்சாரமும், ஆரிய கலாச்சாரத்தினை—ஆத்திகத்தைக் குறிப்பிடத்தக்க அளவுக்குக் குறைத்திருக்கின்றன.

[சென்னை ராபின்சன் பார்க்கில், 24-1-1950-ல் சொற்பொழிவு—'விடுதலை' 27-1-1950]

## 12. அன்னியன் யார்?

பெரியோர்களே! தோழர்களே!

மில் காவலாளி அன்னியன்; அவன் கூடாது என்கிறீர்களே! ஆனால், மற்ற விஷயத்தில் பாருங்கள். இந்த நாட்டுத் தலைவர்கள் அன்னியர்கள்; இந்த நாட்டு அதிகாரிகள் பெரிதும் அன்னியர்கள்; இந்த நாட்டுப் பிரதம மந்திரி அன்னியர். மற்றும் எவ்வளவோ ஜீவநாடியான முக்கியஸ்தர்கள் அன்னியர்கள். இந்தப்படி—அன்னியர் என்பவர்கள் யார் என்றால், நம் இனத்தவரல்லாதார், நம் மொழியினரல்லாதவர், நம்

வகுப்பினரல்லாதவர், நம்மைச் சமமாகக் கருதுபவரல்லாதவர், நம்மைச் சுரண்டாதவரல்லாதவர், நம்மை இழிமக்களாய்க் கருதாதவர்களல்லாதவர்களும்; நம்மை இந்நாட்டுக் கல்வி, ஆட்சி ஆகியவைகளுக்குத் தகுதியற்றவர்கள் என்பவர்களும்; நம்நாட்டுப் பழக்க வழக்கம் நாகரிகம் ஆகியவைகளில் வேறுபட்டவர்களும்; நம் திராவிட நாட்டு இன்றைய எல்லைக்கு வெளிப்பட்டவர்களும் அன்னியர்களேயாவார்கள் என்கிறேன். இந்த உணர்ச்சி நம் மக்களுக்கு வருவதற்காக, குறைந்த அளவு அன்னியன் காவல்காரனாகக்கூட இருக்கக்கூடாது என்கின்ற உணர்வு உங்களுக்கு வந்தது போற்றக்கூடியதேயாகும்.

நம் அரசியல் தலைவர்கள் அன்னியர்கள், நம் பண்டிதர்களும், மகாத்மாக்களும் மவுலானாக்களும், சர்தார்களும் ஏன் நம் நாட்டவராய் இருக்கக்கூடாது? காவல்காரர்கள் கூட நம்மவர்களாய் இருக்கவேண்டும் என்று கருதிய உங்களுக்கோ, உங்கள் ஸ்தாபனங்களுக்கோ, உங்கள் தலைவர்களுக்கோ இந்தக் கவலை எப்போதாவது தோன்றியதுண்டா? உங்கள் நாட்டவரில் ஒருவரை மகாத்மாவாகச் செய்துகொள்ள, சொல்லிக்கொள்ள உங்களுக்கு ஆள் இல்லையா? உங்கள் இனத்தவர் ஒருவரை, உங்கள் வகுப்பினர் ஒருவரை இராஷ்டிரபதியாக ஆக்கிக்கொள்ள உங்களுக்கு ஆள் இல்லையா? இருந்தும் உங்களுக்கு அது விஷயத்தில் கவலையும் மானமும் இல்லையே, ஏன்?

தோழர்களே! இந்த நாடும், இந்த இனமும், சுதந்திர உணர்ச்சியும், சுயமரியாதைத் தன்மையும் கொண்டதானால் இங்கு 'நேரு பார்க்', 'காந்தி சவுக்', 'திலகர் கட்டம்' இருக்கலாமா? இதற்குப் பெயர்தான் பூரண சுயேச்சை என்பதா? இவைகளைப் பார்த்து உங்கள் மனம் பதறவில்லையே! வயிறு எரியவில்லையே! 'தென்னாப்பிரிக்காவில் வெள்ளையன் அட்டூழியம்' என்கின்ற உங்களுக்குத் திராவிட நாட்டில் ஆரியன் அட்டகாசம்; திராவிட நாட்டில் திராவிடர்களை ஆரியன் சித்திரவதை செய்கிறான்; திராவிட நாட்டில் திராவிடனை ஆரியன் தீண்டப்படாதவன் என்கிறான்—தாசி மகன், வேசி மகன், அடிமை என்கிறான்—என்று எந்தத் திராவிடனுக்கு மான உணர்ச்சி ஏற்பட்டு உள்ளம் துடிக்கிறது? இரத்தம் துடிக்கிறது? திராவிடர்களுக்கு ஆரியனா குரு சந்நிதானம்? திராவிடனுக்கு ஆரியனா சுவாமி, எஜமான், அதிகாரி, ஜட்ஜ், கலெக்டர், மாஜிஸ்ட்ரேட், குலகுரு? நாம் சிறிதும் மான உணர்ச்சி அற்ற சமுதாயம், நம் நாடு ஒரு காட்டுமிராண்டி அடிமை நாடு என்பதற்கு இதைவிட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? தென் ஆப்பிரிக்காவிலே இருக்கிற வெள்ளையன்—திராவிடர்களை இந்திய ஆரியன் நடத்துவதில், கொடுமைப்படுத்துவதில், இழிவு செய்வதில் 100-ல் ஒரு பங்கு செய்கிறானா? தோழர்களே! தென்னாப்பிரிக்க வெள்ளையர்களைக் குறைகூறுபவர்கள், அவர்கள்மீது மக்களுக்குத் துவேஷத்தை உண்டுபண்ணுகிறவர்கள் இதே ஆரியர்கள். ஆனால், அதைவிடக் கொடுமையாகத் திராவிடர்களை நடத்துகிறவர்கள் இதே ஆரியர்கள்! இதை உணராமல் ஆரியனுக்கு வால்பிடித்து, அனுமாராய் அவன் பின் திரிபவர்கள் திராவிடர்கள். இதுதானே இன்றைய நம் நிலைமை? இன்று இந்தத் தமிழ் நாட்டில் ஆரிய அட்டூழியம் எவ்வளவு என்பது உங்களுக்குத் தெரியுமா?

[திருவல்லிக்கேணி கடற்கரையில், 30-6-1946-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 6-7-1946]

## 13. ஆரியத் தரகர்கள்

ஆகஸ்ட் 15-ந் தேதி சுயராஜ்யத்தைப்பற்றி ஏதேதோ கூறப்படுகிறது. பூரண சுயராஜ்யம் என்றும், அதற்காகக் கொண்டாட்டமென்றும் திட்டம் வகுக்கப்படுகிறது. இதைக் கண்டு யாரும் ஆச்சரியப்படுவதற்கில்லை; வேண்டுமானால், தன்மானமுள்ள காங்கிரஸ் திராவிடர்கள் அன்று வெட்கித் தலை குனிய வேண்டும்; ஏன்? 1929-ம் ஆண்டிலே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் எந்த அர்த்தத்தில் தீர்மானிக்கப்பட்டதோ அந்த சுயராஜ்யந்தானே நாளை வரப்போவது? வெள்ளையர் உறவு சிறிதுகூட இல்லாத

பூரண இந்தியா முழுவதையும் கொண்ட சுயராஜ்யம்—அதாவது, பூரண சுயேச்சை கேட்கப் பட்டது. அதற்காக அன்றுமுதல் இன்றுவரை நமது மக்கள் எவ்வளவு தியாகங்கள் செய்தனர்? குறிப்பாகக் கூறவேண்டுமானால், காங்கிரஸ் திராவிடர் எவ்விதக் கஷ்டநஷ்டங் களுக்கு ஆளானோம்? என்னையும் சேர்த்து நம் இனத்துக்குள்ளாகவே எவ்வளவு போராட்டம்; எவ்வளவு பொருளை வாரிக்கொட்டி இருப்போம்! சுயராஜ்யத்தின்பேரால் அவ்விதமெல்லாம் செய்தும் கடைசியாகக் குடியேற்ற நாட்டு அந்தஸ்துதான் கிடைத்தது.

இந்தக் குடியேற்ற நாட்டு அந்தஸ்தை அன்று மிதவாதிகள் என்று கூறப்பட்டவர் களால் கேட்கப்பட்டபோது—அவர்களைப் பிற்போக்காளர், வெள்ளையர் தாசர்கள் என்று கூறி ஒத்துழையாமை செய்து, நாட்டில் பெரிய கலவரங்களிலிருந்து பல எதிர்ப்புகளை உண்டாக்கி, கடைசியாக அதே குடியேற்ற நாட்டு அந்தஸ்தை—அதுவும் முழு இந்தியா வுக்குமின்றி இந்திய உபகண்டத்தின் மூன்றிலொரு பாகமான இந்துஸ்தான் என்ற பகுதிக்கு மட்டும் பெற்று, அதை சுயராஜ்யம் என்று கொண்டாடுவது என்றால் இதைவிட வெட்கக் கேடான முறைவேறு இருக்க முடியுமா?

இந்துஸ்தான் சுயராஜ்யம் என்று நாளை கொண்டாடப்போகும் வடநாட்டு ஏகாதி பத்திய ஆட்சி, பிரிட்டிஷாருக்கு ஏஜெண்டாக—கையாளாகயிருந்து வெள்ளையருடன் வடநாட்டு பிர்லா, பஜாஜ் கோஷ்டியினர் செய்துள்ள ஒப்பந்த ஆட்சியே யன்றி, சுய ஆட்சி என்று எந்தக் காங்கிரஸ் அரசியல் நிபுணராகிலும் கூறமுடியுமா?

வேண்டுமானால், வடநாட்டுக்காரர்களுக்கு இன்னும் அதிகமாக நம் மாகாணத்தின் பொருளாதாரத்தைச் சுரண்ட அதிகாரம் இந்த சுயராஜ்யத்தின்மூலம் ஏற்பட்டிருக்கிறதற்கு அவர்களுக்குக் கொண்டாட்டம் ஏற்படலாமே தவிர, மானமுள்ள திராவிடன் இனி திண்டாட வேண்டித்தானே இருக்கப்போகிறது? ஆகஸ்ட் சுயராஜ்யம் அநீதிக்கு அடிப்படையானதே தவிர, நம் நாட்டு மக்களின் நேர்மையான உண்மைச் சுதந்திர வாழ்வுக்கு ஏற்றதல்ல.

இந்த இந்திய உபகண்டத்தின் மற்ற மாகாணங்களைவிட நம் மாகாணமே எல்லா வளப்பத்திலும், அறிவிலும் முதன்மையானதென்பது உலகறிந்த சரித்திரச் சான்றாக யிருந்தும், நமக்குள் இன ஒற்றுமையில்லாததாலேயே மற்ற மாகாணத்தவர்களுக்கு, குறிப்பாக வடநாட்டுக்காரர்களுக்கு நாம் தாசானுதாசனாய் இருந்துவருகிறோம்.

இந்துஸ்தான் சுயராஜ்ய மாகாணங்களில் இனி கவர்னராக இருப்பவர்கள் சாதாரண கலெக்டர்களுக்குள்ள அதிகாரங்கூட இன்றி, வடநாட்டுத் தாக்கீதுக்கு அடிபணிந்து இருக்கவேண்டுவதோடல்லாமல், வேறு ஏதாவது உண்டா என்று கேட்கிறேன். கவர்னர் களின் கதியே இவ்வாறென்றால் மந்திரிகளைப்பற்றிக் கூற வேண்டுவதில்லை. 'அட் வைசரி' சர்க்காரிலாவது மந்திரிகளுக்குச் சிறிது அதிகாரம் இருந்தது. ஆகஸ்டு சுயராஜ் யத்தில்—பஞ்சாயத்து போர்டு மெம்பர்களுக்கிருக்கும் அந்தஸ்தைவிடக் குறைவான தென்றே கூறலாம்—மாகாண மந்திரிகளுக்குக் கொடுத்துள்ள அந்தஸ்து.

இந்த இலட்சணத்தில் கொண்டாட்டமாம்! காங்கிரஸ் ஆரியன்தான் கொண்டாடு கிறான் என்றால் காங்கிரஸ் திராவிடனுக்கு ரோஷம் இருக்கவேண்டாமா? ஏன், நமது தோழர்கள் அவினாசியோ, பக்தவத்சலமோ, சிவசண்முகமோ, ஆகஸ்டு சுயராஜ்ய ஜனாதிபதியாக, பிரதமராக இருக்க இலாயக்கில்லையா? வடநாட்டான் தேசபக்திதான் அசல் தேசபக்தி; மற்றவர்களுடையது போலியா? இவ்விதப் பித்தலாட்டங்களையெல் லாம் தகர்த்தெறியாமல் வெத்துவேட்டு சுயராஜ்யத்தில் எத்தனை நாளைக்கு மானத்துடன் வாழமுடியும்?

எனவே, தோழர்களே! வடநாட்டுப் பாசிச ஆட்சியை அறவே அழித்து, நம் மாகா ணத்துக்கு—திராவிட நாட்டுக்குப் பூரண சுதந்திரம் கொண்ட விடுதலையை யடையு

வேண்டுமென்ற போராட்டம் எளிதில் கைகூடுமென்று நாம் நம்ப முடியவில்லை. காங்கிரசின் போக்கே குண்டாந்தடி ஆட்சியாக இருந்துவருகிறது. மக்களைத் துன்புறுத்துவதே அகிம்சா மூர்த்தியின் அருளைப்பெற்ற சீடர்களின் சுயராஜ்யத்தின் அடிப்படையாக இருந்துவருகிறது. தொழிலாளர்களைத் துன்புறுத்துவதே இன்றைய பட்டேலின் பாசிச வெறியாகக் காட்சியளிக்கிறது. நம் நாட்டை நாம் ஆளவேண்டும். மற்ற நாட்டினரின் பொதுவான விவகாரங்களில் நட்புக்கொண்டு வாழ்வதே மானமுள்ள வாழ்வு என்றால், அதை எதிர்க்கும் துரோகிகளின்—பட்டம், பதவிக்காக இனத்தைக் காட்டிக்கொடுக்கும், வடநாட்டவர்களின் ஆதிக்கச் சுரண்டலுக்குத் துதிபாடும் நமது விபீஷணர்களின் போக்கு ஆகியவற்றிற்கிடையே நாம் போராட வேண்டியிருக்கிறது.

எதிர்காலத்தில் இந்துஸ்தானத்தில், குறிப்பாக நம் நாட்டில் 'நவகாளி'கள் தோன்றுவதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. நம்மை அவ்வளவு நாசப்படுத்தவே வடநாட்டு ஏகாதிபத்தியம் தயார் செய்துகொண்டிருக்கிறது, சுயராஜ்யம் என்ற பேரால்.

ஆனால், ஒன்றுமட்டும் நிச்சயம். இவ்வளவு எதிர்ப்புக்களையும் அநீதிகளையும் சகித்து வென்று, நம் திராவிடத்தின் சுதந்திரத்தை நிலைநாட்டியே தீருவோம். எனவே, அதற்கேற்ப, இளைஞர்களே! திராவிட இனத்தவர்களான தொழிலாளர்களே! விவசாயிகளே! மாணவர்களே! அறிஞர்களே! உங்களைத் தயார் செய்துகொள்ளுங்கள். திராவிடத்திலும் 'நவகாளி'கள் தோன்றினால் அதற்கு நாம் அல்ல பொறுப்பு; இந்நாட்டு ஆரியர்கள்தாம் என்பதை எதிர்காலம் கூறும். அந்த நிலையிலிருந்து பழிச்சொல் ஏற்படா வண்ணம், இனியாவது, ஆரியம் வடநாட்டு ஆதிக்கத்துக்குத் தரகராயிருந்து நமது திராவிடத்திற்குத் துரோகம் செய்யவேண்டாமென்று எச்சரிக்கை செய்கிறேன்.

நாட்டை ஆண்டதாக சரித்திரச் சான்றுகளில் தனது இனத்தைப்பற்றி இதுவரை பொறிக்கப்படும்படியான நிலையில்லாதிருந்து வரும் ஆரியம்—நாட்டைப் பிறர்க்குக் காட்டி கொடுக்கும் இனம் என்பதையாவது திராவிட நாடு பிரிவினை விஷயத்திலாகிலும், பிற்காலத்தில் எழுதும்படியான நிலையைத் தேடிக்கொள்ள வேண்டாமென்று எச்சரிக்கை செய்கிறேன். இதனால்—திராவிடத்தால் ஆரியத்துக்குத்தான் முழுதும் அழிவு ஏற்படும் என்பதை ஆரியம் உணரட்டும்.

எனவே, காந்தியாரல்லர், அவர்தம் சீட கோடிகளல்லர், அல்லது அந்தராத்மா அல்ல, யார் எதிர்த்தாலும், திராவிட நாட்டை அடைந்தே தீருவோம் நாம்! அதற்குப் பல தொல்லைகளைத் தாண்டவேண்டியிருக்கும்—சலிப்படையாதீர்கள்! மானமில்லாது வாழ்வது வாழ்வல்ல. திராவிடன் மானமுள்ளவன் என்பது சரித்திரச் சான்று. அதற்கேற்ப அவன் இனி எந்த நாட்டவனுக்கும், எக்காரணத்தை முன்னிட்டும் அடிமையாயிரான் என்பது உறுதி.

['விடுதலை'-அறிக்கை—27-7-1947]

## 14. சுதந்திர நாளா?

வெள்ளையர்கள் இந்தியாவைவிட்டு வெளியேறிவிடவில்லை. இந்தியாவுக்குக் குடியேற்றநாட்டு அந்தஸ்து அளித்திருப்பதாய்ச் சொல்லுவதன் மூலம், இந்தியாவின் நிர்வாக அதிகாரத்தை இந்தியருக்கு மாற்றியிருக்கிறார்கள்.

இந்தியர்களில் எல்லாக் கட்சி மக்களிடையேயும் அதிகாரத்தை ஒப்புவிக்காமலும், எல்லோருடைய குறைகளைக் கேட்காமலும், எல்லாக் கட்சியாரையும் சமரசப்படுத்தாமலும், தங்களுக்குப் பல வழிகளிலும் வியாபாரத்திற்கும் பிரிட்டன் நலத்திற்கும் சில இரகசிய ஒப்பந்தங்களைச் செய்துகொண்டு காங்கிரஸ்காரரிடம் மாத்திரம் அதாவது, பார்ப்பன

ஆதிக்கமும் வடநாட்டார் சுரண்டல் வசதியும் கொண்ட—ஒரு சுயநல தந்திர சூழ்ச்சி கொண்ட கோஷ்டியார் கைக்கு அதிகாரத்தை மாற்றிவிட்டு, அவர்களுக்குப் பாதுகாப்புத் தரும் நிபந்தனையோடு அதிகாரத்தை மாற்றி இருக்கிறார்கள்.

எனவே, குடியேற்றநாட்டு அந்தஸ்து என்பது அதிகார மாற்றமே தவிர, நாடு ஒப்படைப்பு அல்ல.

உதாரணமாக, இந்தியாவுக்கு அரசர் ஜார்ஜ்மன்னர் ஆவார். மேற்பார்வையாளர், கவர்னர்-ஜெனரல் மேன்மைதங்கிய மவுண்ட்பேட்டன் ஆவார்.

ஆதலால், வெள்ளையருக்கும் காங்கிரசுக்கும் ஏற்பட்ட ஓர் ஒப்பந்த ஆட்சிதானே ஒழிய, இந்திய மக்களுக்கு ஏற்பட்ட சுதந்திர ஆட்சியல்ல. இதன் பயனாய் இந்த நாட்டிலுள்ள காங்கிரசல்லாத மக்களுக்கு நன்மை இல்லை; பிரதிநிதித்துவம் இல்லை. வருணாசிரம தர்மக்கொடுமை ஒழிவதில்லை.

ஏற்படப் போகும் மாகாணஆட்சி என்பது வெள்ளையர் அதிகார ஆட்சிக்காலத்தி லிருந்த உரிமையைவிட மோசமான ஆட்சியேயாகும். அதிகாரங்கள் யாவும் மத்திய அரசாங்கத்திற்குத்தான் உண்டு.

சில அதிகாரங்கள்தாம் மாகாணங்களுக்கு என்றாலும், அவைகளும் கவர்னருக்கே ஒழிய, மந்திரிகளுக்கல்ல.

கவர்னர், தெரிந்தெடுக்கப்பட்ட மந்திரிகளுக்கட்டுப்பட்டவரல்லர்; மந்திரிகள் வெறும் பொம்மைகள்—அதாவது ஆலோசனை சொல்லுபவர்கள் ஆவார்கள்.

சென்னை மாகாணத்துக்கு 2000 மைல் தூரமான டில்லியில் இருக்கும் பிரஸிடெண்ட் கையில், சென்னை மாகாண மக்களை நடத்தும் ஆட்சி இருக்கிறது.

பிரஸிடெண்டும் மத்திய அரசாங்க மந்திரிகளும் அசெம்பிளி மெம்பர்களும் சேர்ந்த மொத்த கணக்கில் 10-ல் ஒரு பாக எண்ணிக்கைக்குக் குறைவான எண்ணிக்கையாளர்தாம், அங்கு சென்னை மாகாணப் பிரதிநிதிகளாய் இருப்பார்கள். அவர்களும் பெரிதும் ஆரிய அடிமைகளாகத்தாம் இருப்பார்கள்.

வடநாட்டுக்கும் தென்னாட்டுக்கும் சமுதாயத்துறையிலும் பொருளாதாரத் துறை யிலும் ஏராளமான பேதம் உண்டு.

வியாபாரத்தில் வடநாட்டார் கொள்ளை இனியும் அதிகப்படுமே ஒழிய, சிறிதும் குறையாது.

ஆத்மார்த்தத்துறை என்னும் மதக்கொடுமையால் சமுதாயக்கொடுமை வடநாட்டார் இஷ்டப்படிதான் பெருகுமே தவிர, சமுதாய சமத்துவம் ஏற்பட வழி இல்லை.

நாம் இன்று திராவிடநாடு கேட்பது முக்கியமாய் வடநாட்டான் பொருளாதாரச் சுரண்டலும், ஆரியன் விளைத்த சமுதாய இழிவும் நீங்கவேண்டும் என்பதற்காகவேயாகும்.

அதாவது—இன்று, நைஜாம், திருவாங்கூர், மைசூர் நாடுகள் விரும்புவதுபோல், சென்னை மாகாண 4¾ கோடி திராவிட மக்கள் தங்களது கலாச்சாரம், பொருளாதாரம் முதலியவைகளுக்கு ஏற்ற சுயேச்சை நாடாக இருக்கவேண்டும் என்பதே.

ஆதலால், வெள்ளையர் நம்மை மோசடி செய்ததை வெறுக்கவும் அதாவது, வட நாட்டு பனியாக்களுடையவும், ஆரியப் பார்ப்பனர்களுடையவும் சூழ்ச்சிக்கும், ஏமாற்றுக்கும் உள்ள தந்திரத்திற்கும் நாம் ஏமாந்துவிடவில்லை என்பதைக் காட்டவும்; பூரண சுயேச்சை யுள்ள திராவிடநாடுதான் நமது இலட்சியமே தவிர, அதற்குக் குறைந்த எதைக்கொண்டும்

நாம் திருப்தியடையமாட்டோம், ஓயமாட்டோம், கிளர்ச்சி செய்தே தீருவோம் என்பதைக் காட்டவும் இம் மாதம் 15-ந் தேதி நடக்கும் சுதந்திரத் திருநாள் என்னும் 'ஆரியர்—பனியா' ஏமாற்றுத் திருவிழாவில் நாம் கலந்து கொள்வதில்லை என்கிறோம்.

இதைக் காங்கிரஸ்காரரும், ஆரியர்-பனியாக்கள் அடிமைகளும் திரித்துக்கூறி 'வெள்ளையனை வெளியேற்றுவது, திராவிடர் கழகத்தாருக்கு இஷ்டமில்லை' என்று விஷமப் பிரச்சாரம் செய்வார்களாகில், அது காங்கிரசாரின் மற்றொரு பித்தலாட்டப் பிரச்சாரம் என்று திராவிட மக்கள் கருதவேண்டுமேயொழிய ஏமாந்து போகக்கூடாதென்று வேண்டிக்கொள்கிறேன்.

[ஆதாரம் : அறிக்கை—'விடுதலை' 20-8-1972]

## 15. சுதந்திரப் போராட்டமா? சாதிமதச் சண்டையா?

1857ஆம் ஆண்டில் நடந்த 'சிப்பாய்க் கலகம்' என்னும் ஒரு கலவரத்தை, 'இந்தியாவின் விடுதலைக் கிளர்ச்சி' என்று பெயர் வைத்து—'இன்றைக்கு அது நடந்து 100 ஆண்டுகள் ஆகின்றன; ஆதலால் இந்தியாவின் விடுதலைக் கிளர்ச்சியின் 100—வது ஆண்டு விழாக் கொண்டாடுவது' என்பதாக ஒரு விழாக் கொண்டாடப்படுகிறது.

1857—ல், 'இந்தியா விடுதலை அடையவேண்டும்' என்பதான ஒரு எண்ணமே இந்தியாவில் யாருக்கும் இருந்ததாகத் தெரியவில்லை. 1857—ல் மாத்திரமன்று; காங்கிரஸ் ஏற்பட்டதாகச் சொல்லப்படும் 1885 ஆம் ஆண்டில் காங்கிரசை ஏற்பாடு செய்த பெருந் தலைவர்கள் என்பவர்கள்கூட இந்தியா விடுதலை அடையவேண்டும் என்ற எண்ணத்தின் மீது காங்கிரசை ஏற்படுத்தவில்லை.

சாதாரணமாக நடுநிலையில் இருந்து, பகுத்தறிவைக் கொண்டு பார்த்தால், வெள்ளையர் இந் நாட்டாட்சியைக் கைப்பற்றிஆட்சி செலுத்த முன்வந்த காலத்தைத்தான், 'இந்தியாவின் விடுதலை நாள்' என்று கொள்ள இடங்காணும்படியாக இருக்கிறது.

இதற்கு ஆதாரம் வேண்டுமானால், காங்கிரசின் துவக்க விழாவையும் அதன்பின் ஒவ்வொரு ஆண்டு காங்கிரஸ் விழாவிலும் இந்தியாவின் பெருந் தலைவர்கள் பேசி இருக்கும் பேச்சுக்களையும், அவற்றில் வெகுகாலம் செய்யப்பட்டு வந்திருக்கும் தீர்மானங்களையும் ஊன்றிப் படித்துப் பார்த்தால் தெரியும். இந்தியாவானது வெள்ளையர் ஆட்சி ஏற்படும் காலம் வரையில் ஒரு அடிமை நாடாக இருந்துவந்ததாகவும், இந்தியப் பெண் மக்களுக்குப் பாதுகாப்பு இல்லாத தன்மையில் 'காட்டாளர் ஆட்சியாக' இருந்ததாகவும், இந்திய மக்கள் கண்ணற்ற குருடர்கள்போல் எழுத்து வாசனை அற்றவர்களாகவும், காட்டுமிராண்டிகள் போல் நல்லறிவு நல்லாராய்ச்சி அற்றவர்களாக இருந்ததாகவும், வெள்ளையர் ஆட்சி ஏற்பட்ட பின்பே நாடு நல்ல மனிதத் தன்மை உள்ள உன்னத நிலைக்கு வந்திருப்பதாகவும் பல தலைவர்கள் பேசியிருக்கிறார்கள். மற்றும், ஆங்கிலம் புகுத்தப்பட்டதானது ஒரு 'வரப் பிரசாதம்' என்றும் பல தடவை கூறியிருக்கிறார்கள்.

அது மாத்திரமல்லாமல், 'இந்த நாடு வெள்ளையர் ஆட்சிக்கு வந்தது கடவுளால் அருளப்பட்ட அருள் பிரசாதம்' என்றும்; 'வெள்ளையர் ஆட்சியே இந்நாட்டில் என்றென்றைக்கும் இருந்து வரவேண்டும்' என்றும்; 'அப்படி இருந்துவர, கடவுள் அருள்புரிய வேண்டும்' என்றும்; 'வெள்ளையரைக் கடவுள் காப்பாற்ற வேண்டும்' என்றும் பல பிரபல தலைவர்கள் கடவுளைப் பிரார்த்தித்து ஏகமனதாகத் தீர்மானமும் செய்திருக்கிறார்கள்.

இவை ஒருபுறமிருக்க, இந்நாடு என்றைய தினம் சுதந்திர நாடாக இருந்தது; என்றைய தினம் நல்ல ஆட்சி நடந்த நாடாக இருந்தது என்பதற்கு நல்லதொரு எடுத்துக்

காட்டோ, ஆதாரமோ காண முடிவதில்லை. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், தமிழ் நாட்டிற்கு (திராவிட நாட்டிற்கு) ஒரு உண்மையான—ஆதாரபூர்வமான—நடுநிலை கொண்ட தான சரித்திரமே காணமுடிவதில்லை.

இந்த நாட்டு ஆட்சிக்கு எடுத்துக்காட்டாக, ஆபாசக் காட்டுமிராண்டித்தனமான கற்பனைப் புராண இதிகாசங்களில் உள்ளவைகளைத்தான் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, அறிவும், ஆண்மையும், நீதியும் கொண்டதான ஒரு ஆட்சியோ, ஆட்சி முறையோ இருந்த தாகக் கருதக்கூட இடமில்லை.

கற்பனைப் புராண இதிகாசகால ஆட்சிக்கு உள்ள பெருமையெல்லாம் வருணாசிரம முறைப்படி மக்கள் நடந்துகொள்ளும்படி ஆளப்பட்டு வந்திருக்கிறார்கள் என்பதைத் தவிர வேறு என்ன காணமுடிகிறது? அதை விட்டுவிட்டு, உண்மையாகவே தமிழ்நாட்டைத் தமிழ் மன்னர்கள் ஆண்டு வந்தார்கள் என்ற பெருமை எல்லாம்—வருணாசிரம தருமத்தைக் காப்பாற்றி, அதன்படி ஆண்டு வந்தார்கள் என்று பாராட்டுவதைத் தவிர தமிழர்கள் ஆட்சிக்கு வேறு என்ன பெருமை இருக்கிறது? சேர, சோழ, பாண்டிய சாதிய ரான அரசர்கள் யோக்கியதையும்; அவர்கள் மக்கட்குச் செய்த நன்மையையும் சரித்திர ஆதாரப்படி—கவிராயர்களின் கவிப்படி பார்ப்போமானால், நம் தமிழரசர்கள் யோக்கியதை யெல்லாம் பெருங்கோவில்கட்டி, சோம்பேறிகளும் அறிவற்ற நபர்களும் மக்களை வஞ்சித்து இங்கு மடையர்களாக ஆக்கி வாழ்ந்து வந்தார்கள் என்பதைத்தான் சரித்திர மூலமாகவும் பிரத்தியட்ச அனுபவமூலமாகவும் காண்கிறோம். மற்றும், தமிழரசர்களின் ஆட்சிக்கு மற்றொரு எடுத்துக்காட்டு வேண்டுமானால், இந்திய உபகண்டத்தில் இந்தத் தமிழ் நாட்டைப்போல் ஏராளமான கோவில்களைக்கொண்ட நாடு வேறு எங்கும் இல்லை என்பதும், தமிழ்நாட்டு மக்களைப்போல் மடமை, மூடநம்பிக்கைகளில் ஆழ்ந்து மானம் என்றால் என்ன என்பதை ஒரு சிறு அளவுகூட அறிந்திருக்க முடியாத பாமர மக்களை வேறு எங்குமே காணமுடிவதில்லை என்பதும்தான்.

இதுபோலவேதான், தமிழ் அரசர்கள் ஆட்சி முறையையும் அறிவுத் திறனையும் காண, பாண்டிய அரசர் ஆட்சியையும் அறிவுத் திறனையும் காண, அவர்களது சமய நடத்தையைக் கண்டால் தெரியலாம்.

தமிழரசர்கள் கடுகளவு அறிவும் தன்மானமும் உடையவர்களாக இருந்திருந்தால், இந்த நாட்டில் 2000, 3000 ஆண்டுகளாக இந்த நாட்டு மக்கள்—பழங்குடி மக்கள் கடைச் சாதியாய், இழி மக்களாய் இருந்திருக்க முடியுமா? எந்த அரசனாவது தானுட்பட—தன்னின மக்கள் 100-க்கு 90-க்கு மேற்பட்டவர்கள் கீழ்மக்களாய், இழிமக்களாய் இருக்கிறார்களே என்று சிந்தித்ததாகக் காணப்படுகிறதா? கோவில்களுக்கும் சத்திரங்களுக்கும் மடங்களுக்கும் அவற்றின் விழாக்களுக்கும் விளம்பரங்களுக்கும் விடப்பட்டிருக்கும் சொத்துக் களையும்—அதே நேரத்தில் இந்நாட்டு மக்களின் கல்வியறிவு பெருகுவதற்கு ஏற்ற நடவடிக்கை எடுக்காதபடி விட்டிருக்கும் தன்மையும், மற்றும் நம் மக்களுக்கு நல்லறிவும் நல்லொழுக்கமும் புகுத்தப் பாடுபட்ட பவுத்தர்களையும் சமணர்களையும் வெட்டியும், சித்திரவதை செய்தும், கழுவேற்றியும், கொடுமை செய்த சரித்திரத்தையும் நடப்பையும் பார்த்தால்—நம் தமிழரசர்கள் ஆட்சி ஒரு கொடுங்கோன்மையும், காட்டுமிராண்டித்தனமும் கொண்ட ஆட்சி என்பதைத் தவிர வேறு என்ன ஆட்சி என்று சொல்லமுடியும்?

ஆகவே, நம் நாட்டிற்கு, நம் மக்களுக்கு ஒரு விடுதலை ஏற்பட்ட காலம் என்று சொல்லவேண்டுமானால்—அந்த விடுதலைக்கு என்ன அர்த்தம் சொல்லுவதானாலும் இந் நாடு அன்னியர் ஆட்சிக்கு வந்த காலமேயாகும். அப்போதுங்கூட, வெள்ளையர் இந்தியாவைத் தன்னாட்டு வளத்திற்காகச் சுரண்டுவதை முதல் நோக்கமாகக் கொண்டனர்; அடுத்தபடியாக, இந்திய மக்களிடையே உள்ள சாதிப் பிரிவு, காட்டு மிராண்டித்தனமான சமயம், கடவுள், கடவுள்—சமய ஆதாரங்கள், நெறிகள் ஆகியவை

களில் நல்ல மாறுதல் ஏற்பட வேண்டுமென்றும், இந்திய மக்கள் கல்வி, அறிவு ஆகியவை களில் தலைசிறந்து விளங்க வேண்டுமென்றும் கவலை கொண்டு, இந்திய 'மேல்சாதிக் காரர்'களின் பலமான எதிர்ப்பையும் சமாளித்து, எவ்வளவோ மாறுதல்களை உண்டாக்கினர் என்பதை மறுக்க முடியாது.

ஆகவே 1857-ல் நடைபெற்ற இந்தக் கலவரமானது, உண்மையில் 'வெள்ளையனுடைய ஆதிக்கம் இந்தியத் துணைக்கண்டத்தில் ஏற்படுவது கூடாது; அரசியல் ஆதிக்கம் அன்னியரிடத்திலா இருப்பது!' என்ற கருத்திலல்ல என்பதை அப்போது நடைபெற்ற நிகழ்ச்சிகளை முன் வைத்துப் பார்த்தால் அறியலாம்.

லார்டு டல்ஹவுசியின் சீர்திருத்தங்கள், ஒரு சிலரான பார்ப்பனர்கட்கு ஏகபோக உரிமையாக இருந்த கல்வியை—நாடெங்கும், எல்லோரும் படித்துப் பயன்பெறும் வண்ணம் பரப்பிய முறையையும்; இரயில், நீராவி என்ஜின், தந்தி சாதனம் போன்ற விஞ்ஞான முறைகளைப் புகுத்தியமை போன்ற சீர்திருத்தங்களையும் கண்டு, வைதிக மேல் சாதிக்காரர்கள் என்பவர்கள் வெகுண்டார்கள். 'இத்தகைய அறிவு வளர்ச்சி தங்களுடைய ஆதிக்கத்திற்கு எங்கு உலை வைத்துவிடுமோ!' என்றஞ்சி, எதைச் செய்தால் இவைகளை ஒழித்துக்கட்டலாம் என நினைத்து, அதைக் கண்டுபிடித்து—பாமர மக்களான, சிப்பாய்களாக இருந்த வைதிக மனப்பான்மையாளர்களை, 'உங்கள் சாதியும், மதமும் ஒழிந்துவிட வெள்ளையன் ஏற்பாடு செய்கிறான்' என்று கூறி, வெள்ளைக் காரர்களை எதிர்க்கச் செய்தனர். இந்தச் சீர்திருத்தங்களும் விஞ்ஞானக் கல்வியும் பரவினால்—எங்கே சாதிமுறையும், அதையொட்டி அமைந்துள்ள 'கீழ் சாதி' மக்களின் பணிவும் அடிமைத்தனமும் மாறிவிடுமோ என்ற சுயநல எண்ணத்தின்பேரில்தான் மற்றவர்களைத் தூண்டினர். 'துப்பாக்கிகளில் கொழுப்பைத் தடவிக் கொடுத்தனர்' என்ற குற்றச்சாட்டிலும்கூட, இந்து சிப்பாய்களிடம் அது பசுமாட்டுக் கொழுப்பு என்றும், முஸ்லிம்களிடம் அது பன்றிக் கொழுப்பு என்றும் பிரச்சாரம் செய்து, அவரவர்களுக்கு உள்ள மத உணர்ச்சியையும் அதனடியாகப் பிறந்த மூடநம்பிக்கையையும் பயன்படுத்திக் கொண்டார்கள் என்பதைக் காட்டுகிறது.

நெற்றியில் மதக்குறிகளை யாரும் அணியக்கூடாது; எல்லா சிப்பாய்களும் ஒரே மாதிரியான உடைகளையே உடுத்த வேண்டும்; தாடி வைத்துக்கொள்ளக்கூடாது; காதணி அணியக்கூடாது என்பன போன்ற விதிகளின்மூலம் வெள்ளையர்கள் இவர்களுடைய மதத் தத்துவங்களைத் தகர்த்தெறியச் செய்கிறார்கள் என்ற கண்ணோட்டத்துடன்தான் அவைகளை நோக்கினார்கள்.

அதுபோலவே, கடலைத் தாண்டி பர்மா முதலிய நாடுகளுக்குப் போரிடச் செல்ல வேண்டும் என்ற விதி—தங்களுடைய இந்துமத சாஸ்திரத்திற்குப் புறம்பான முறையில் அமைந்துள்ளது என்று நினைத்தே கொதித்தெழச் செய்தார்கள்.

இரயில் வசதியும், படிப்பு வசதியும் மற்ற விஞ்ஞான சாதனங்களின் மூலமும் கிறிஸ்துவ மதத் தத்துவங்கள் பரவ ஏதுவுள்ளது என்றும்—அதனால் இந்துமதம் எங்கு அழிந்துவிடுமோ என்ற பயமும்; சிப்பாய்களைத் தூண்டிவிட்ட 'மேல் சாதிக்காரர்களுக்கு' இருந்தது என்பது ஒரு மாபெரும் உண்மையாகும்.

மேற்கண்ட உண்மைகளை வைத்துப் பார்த்தால், 1857 கிளர்ச்சி வெள்ளையனுடைய ஆதிக்க வாழ்வை எதிர்த்து ஏற்பட்டதன்று என்பதும், அவனுடைய சீர்திருத்தங்களினால் விளைந்த பலன்களை எதிர்த்தே ஏற்பட்டது என்பதும் புலனாகும். உதாரணமாக, பெண்கள் உடன்கட்டை யேறும் பழக்கமான 'சதி' என்ற முறையைச் சட்டத்தின் மூலம் வெள்ளைக்காரன் ஒழித்தபோது ஏற்பட்ட வைதிகர்களின் கூக்குரலை—வெள்ளைய ஏகாதிபத்தியத்தை எதிர்த்துக் கிளம்பிய விடுதலைச் சங்கொலி என்று கொள்ள முடியுமா? அதுபோலவே தான் இந்த 1857 நிகழ்ச்சியும்.

அப்படியே விடுதலைப் போராட்டத்தின் ஆரம்பக்கட்டம் 1857 என்றே வைத்துக் கொண்டாலும், நமது தமிழ் (திராவிட) மக்களைப் பொறுத்த வரையில்—இன்றைய நிலையிலாவது விடுதலை பெற்றவர்களாகத் திகழ்கிறார்களா என்பது சிந்திக்கத் தக்கது. வெள்ளைக்காரன் காலத்தில் எப்படி எதற்கெடுத்தாலும் லண்டனுக்கு ஓடி முடிவுகளைச் செய்தார்களோ, அதே தன்மையில்—இப்போது டெல்லிக்கு ஓடி முடிவுகளுக்காகக் காத்திருக்க வேண்டியுள்ளது. தொழிற்கல்லூரிகளில் மாணவர் சேர்க்கை போன்ற சிறு சங்கதிகளில் கூட 'டெல்லியின் ஆணையைத் தலையின்மேல் நாம் தாங்கவேண்டி'யுள்ளது என்றால், நாம் எப்படி விடுதலை பெற்றவர்களாவோம்?

வெள்ளைக்காரனுக்கு வால்பிடித்து அவனை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டு, எந்தக் கட்டத்தில் அவனால் தங்களினத்திற்கும் சுயநல வாழ்விற்கும் முடிவு ஏற்படும் என்று எப்போது எண்ணினார்களோ—அன்று தான், அவனை வெளிப்படையாக எதிர்க்க முன்வந்தனர் 'மேல் சாதிக்காரர்கள்' என்ற 'பார்ப்பனர்கள்'.

1857ஆம் ஆண்டு ஏற்பட்ட கிளர்ச்சியில் கலந்து கொண்ட மற்ற சுதேச மன்னர்களும் நானா சாயபு போன்றவர்களும் தங்கள் கையிலிருந்த ஆதிக்கம் மாறிவிட்டதே என்ற சுயநல நோக்கத்தில் தான் சேர்ந்தார்கள்; நாட்டு விடுதலை என்ற பரந்த நோக்கத்தாலல்ல என்று சரித்திரம் படிப்பவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

வெள்ளைக்காரனின் ஆதிக்கத்தால் அரசியல் அடிமைத்தனம் ஏற்பட்டது என்பது விவகாரத்திற்கிடமானதாக இருந்தாலும்—'வெள்ளையராட்சியாலேயே சமுதாய எழுச்சி இந்நாட்டில் ஏற்பட்டது' என்பது மறக்கமுடியாத ஒரு உண்மையாகும். 'நாம் சுதந்திரமாக வாழவேண்டும்' என்ற சுதந்திரக் கிளர்ச்சி எண்ணம் நமக்குப் பிறந்ததற்கே அடிப்படைக் காரணம் ஆங்கிலக் கல்வி என்று பண்டித ஜவஹர்லால் அவர்களே பல இடங்களில் பேசியும் எழுதியும் உள்ளார்கள்.

எனவே, 1857 நிகழ்ச்சியை நாட்டின் விடுதலைப் போராட்டத்தின் முதல் நிகழ்ச்சியாகக் கருத இடமில்லை. மாறாக, வைதிக எண்ணங்களைக் காக்கவும், பழமை, மதம்—இவைகளைப் பாதுகாக்கவும் செய்யப்பட்ட ஒரு முயற்சியாகும்.

நிற்க, மேல் நாடுகளில் 'சுதந்திர நாள்', 'சுதந்திர ஆண்டுவிழா'க் கொண்டாடுவது போல், நம் நாட்டில் சுதந்திர நாள், ஆண்டுவிழாக் கொண்டாடுவது—புலியைப் பார்த்துப் பூனை சூடுபோட்டுக்கொண்டதைப் போலாகும்.

மேல் நாட்டார்கள் சுதந்திரம் பெற்றபின் பெற்றநாளைக் குறிவைத்துக் கொண்டாடுகிறார்கள். நாம் அதுபோல் கொண்டாட நமக்குச் சுதந்திரம் வந்துவிட்டதா? நாம் ஏதாவது சுதந்திரத்தை அனுபவிக்கிறோமா? என்பதைப்பற்றி நமக்குக் கடுகளவு யோசனையும் இல்லாமல்—நம்மை அடிமைப்படுத்தி வைத்திருப்பவர்களின் சூழ்ச்சிக்கும் வஞ்சகத்திற்கும் ஆளாகி அடிமைத் தளையை இறுக்கிக்கொள்ள நாம் 'சுதந்திர விழா'க் கொண்டாடுகிறோம்.

இந்த நாட்டின் சுதந்திரம் பணக்காரர் மீது ஏழை மூட மக்களை ஏவி விடுவதாக இருக்கிறதே யொழிய—மனிதனை (நம்மை) நாயிலும், பன்றியிலும் கேடாக இழிவுபடுத்தி, கீழ்சாதி ஆக்கிய 'கடவுள்', 'சாஸ்திரங்களையோ', சட்டங்களையோ மக்களையோ—ஏனென்று கேட்க நாதியில்லை.

சுதந்திர நாட்டில் பிராமணன், சூத்திரன், பறையன், சக்கிலி இருக்கலாமா? அப்படி இருக்கும் நாடு சுதந்திர நாடா? 'நரக' நாடா?

இதை ஒழிக்கப் பாடுபட இந்த நாட்டில் ஏதாவது உரிமை இருக்கிறதா? உரிமை கேட்க வழி இருக்கிறதா? சுதந்திரநாட்டில் மனித சமுதாயத்தையே அடிமைப்படுத்தி மடையர்களாக ஆக்கி வைத்திருக்கும் இனத்தினர் (பார்ப்பனர்) மந்திரியாய், தலைவராய் இருக்கின்றார்கள் என்றால் இது சுதந்திர நாடாகுமா?

யோக்கியமான முறையில் பேச்சுரிமையில்லை; கூட்டம் போட உரிமையில்லை; 'லவுட் ஸ்பீக்கரு'க்குப் பணம் கட்டவேண்டும்; 'லைசென்ஸ்' வேண்டும்; கூட்டம்போட உள்ள இடங்கள் இராணுவத்திற்குக் கொடுக்கப்பட்டுவிட்டன என்கிறார்கள்.

தமிழனுக்குப் பார்ப்பான் மாத்திரம் எஜமானனல்லன்; மலையாளியும்—எஜமான்; அதிகாரி. வடநாட்டான்—முதலாளி; சர்வாதிகாரி. இது தமிழ்நாட்டுக்குச் சுதந்திரமா? சுதந்திரத்தை நினைத்துக்கொண்டு எழுத எழுத ஆத்திரம் வருகிறது; இத்துடன் நிறுத்திக் கொண்டேன்.

['விடுதலை'-தலையங்கம்—15-8-1957]

## 16. சுதந்திர நாள்

ஆகஸ்ட் மாதம் 15-ந் தேதி 'சுதந்திர தின வெள்ளி விழா'வைக் கொண்டாட அரசாங்கத்தால் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

அதாவது, இந்தியாவுக்குப் பல நூற்றாண்டு காலமாக இருந்துவந்த அன்னிய நாட்டான் ஆட்சி ஒழிந்து, நம்நாட்டை நாமே ஆளும்படியான சுதந்திர சுயாட்சி ஏற்பட்டு 25 ஆண்டுகள் ஆனதாகவும், அதற்கு ஆக 'சுதந்திர தின வெள்ளிவிழா' கொண்டாடுவது என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

என்னைப் பொறுத்தவரையில் நான் இதை 'சுதந்திரம் பெற்ற நாள்' என்று சொல்ல மாட்டேன். மற்றென்னவென்றால், அடிமையும், மடமையும், ஒழுக்கக்கேடும், நேர்மைக் கேடும் ஏற்பட ஏதுவான துக்கநாள் துவங்கிய 25-ஆம் ஆண்டு (துக்க) நாள் என்றுதான் சொல்வேன்.

இதை இன்று மாத்திரம் சொல்லவில்லை. இந்தியாவுக்குச் சுதந்திரம் என்று என்றைக்கு வெளியிடப்பட்டதோ, அன்றே சொன்னவன் நான்.

சுதந்திரம் என்று முதலில் விஷயம் வெளியானவுடன், உயர்திரு. அண்ணா அதைச் 'சுதந்திர நாள்' என்று பாராட்டினார். அதைக் காங்கிரஸ்காரர்கள் பெரிதாகப் பாராட்டி, துணித் தோரணங்களில் 'இது சுதந்திர நாள்' என்று எழுதி அடியில், 'அண்ணாதுரை' என்றும் எழுதி, அவற்றைத் தெருத்தெருவாகக் கட்டிவைத்தார்கள்; பத்திரிக்கைகளிலும் கொட்டை எழுத்துக்களில் விளம்பரம்போல் பிரசுரித்தார்கள்.

அனேகமாக, அந்தச் சம்பவந்தான் அண்ணாதுரைக்கும் நமக்கும் மாறுபாடு வெளியான சம்பவமாக இருக்கலாம்.

அது மாத்திரமல்லாமல், அடுத்த விஷயத்தை மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் ஒரு கூட்டத்தில் (பொள்ளாச்சி கூட்டத்தில் என்பதாக ஞாபகம்) 'இது சுதந்திர நாள் என்று பேசினார்' என்பதைக் கேள்விப்பட்டு, நான் கண்டித்தேன். அப்போது, அதற்குப் பதில் என்பதாக நாவலர் அவர்கள், 'ஒரு விஷயத்தில் தலைவர் ஒரு கருத்துக் கொண்டால், அதை மக்களுக்குத் தெரிவித்திருக்க வேண்டாமா? தலைவர் கருத்து இப்படிப் பட்டது என்று எங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று சொன்னார்.

ஆகவே, இது துக்கநாள் என்பதை சுதந்திர அறிக்கை வெளியிடப்பட்டநாளிலேயே, 'இது துக்கநாள்; நாட்டிற்கும் மனித சமுதாயத்திற்கும் கேடான நாள்'—என்று சொன்னேன். இதை, அந்தநாள் 'குடி அரசு' பத்திரிக்கையில் பார்த்தால் நன்றாக விளங்கும். அது எப்படியோ இருக்கட்டும்.

இன்று இந்த நாட்டில், ஓர் ஆட்சிக்கு இருக்கக்கூடாத எந்த அயோக்கியத்தனமும், ஒழுக்கக்கேடு, நாணயக்கேடு, புரட்டு, பித்தலாட்டம், மானங்கெட்டதனம், கட்சிமாறல்,

கட்சிக்குத் துரோகம், இழிதன்மையான சுயநலம், அபாண்டமாய்க் குறைகூறல் முதலிய கூடாஒழுக்கக் காரியங்கள் எந்தக் கட்சியில் யாரிடம் இல்லாமல் இருக்கின்றன? இப்படிப் பட்ட காரியத்துக்காக யார் வெட்கப்படுகிறார்கள்?

இன்று அரசியல் கிளர்ச்சி என்றாலே காலித்தனம், அயோக்கியத்தனம், மோசடி, துரோகம் முதலிய தன்மைகள் இல்லாமல் யாரால் நடந்துகொள்ள முடிகிறது?

முதலாவதாக, அயோக்கியத்தனத்துக்கு ஓர் உதாரணம் சொல்லுகிறேன் :—

இந்தத் தேசத்தில் எவன் ஒருவன் தன் நாட்டுக்குச் சர்வ சுதந்திரம் கேட்கிறானோ அவன் ஏழு ஆண்டுகள் வரை தண்டிக்கத் தக்க குற்றவாளியாக ஆக்கப்படுவான்.

என்ற சட்டம் உலகில் எந்த நாட்டில், தேசத்தில் இருக்கிறது?

அடுத்துச் சொல்கிறேன் :—

எவனொருவன் தன் நாட்டுக்குத் தொண்டுசெய்ய, எந்த ஸ்தாபனத்தின் தேர்தலில் ஓர் அபேட்சகராக நிற்பதானாலும், அவன் பத்தாயிரம் ரூபாய் முதல் மூன்று இலட்சம் ரூபாய் வரையில் செலவு செய்துதான் வெற்றி, தோல்வி அடையமுடியும் என்ற நிலை எப்படி யோக்கியமான நிலையாகும்?

காலித் தனத்துக்குப் பெயர் வேலை நிறுத்தம்; அயோக்கியதனத்திற்குப் பெயர் அகிம்சை; சண்டித்தனத்திற்குப் பெயர் சத்தியாக்கிரகம்! தான் பதவிபெற்ற கட்சிக்குத் துரோகம் செய்துவிட்டு, எதிர்க்கட்சி ஆளாவது முதலிய அயோக்கியத்தனங்கள் எப்படி யோக்கியமான சுதந்திரமாக இருக்கமுடியும்?

மற்றும், இன்றைய சுதந்திரம் என்பதில், எந்த அயோக்கியத்தனமான காரியம் விலக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லமுடியும்?

இவைகள் ஒருபுறமிருக்க,

தேசத்துக்குப் பூரண சுதந்திரம் கிடைத்து, இன்றைக்கு 25 ஆண்டுகள் ஆன பிறகும், இந்தப் பூரண சுதந்திரம் உள்ள நாட்டில், 54 கோடி மக்களில் 39 கோடி பேர் தற்குறி என்றால்—100-க்கு 70 மக்கள் கையெழுத்துப் போடத் தெரியாத தற்குறிகளாக இருக்கிறார்கள் என்றால்; அதிலும் மொத்த ஜனத்தொகையில் சரிபகுதிப் பேர்களான பெண்கள் 100-க்கு 82 சதவிதம் தற்குறி என்றால்; அதுவும் தேசம் பூரண சுதந்திரம் பெற்று 25 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த நிலை என்றால்; இதற்குப் பெயர் சுதந்திர ஆட்சியா, அடிமை ஆட்சியா என்று கேட்கிறேன்.

இதைச் சுதந்திர ஆட்சி என்று—வயிற்றுப் பிழைப்பு, பதவிவேட்டை தேசியவாதிகளும், மக்களுந்தான் சொல்லிக்கொள்ள முடியுமே தவிர, நேர்மையான, அறிவுள்ள ஜன சமுதாயத்தால் சொல்ல முடியுமா என்று கேட்கிறேன்.

இந்த நிலையில், இந்த நாட்டில் இலட்சக்கணக்கான கடவுள்கள்; பல்லாயிரக் கணக்கான தேர்திருவிழாக்கள், கடவுள் கலியாணங்கள், நித்தியமும் 5 வேளையும் பூசைகள் முதலிய ஆடம்பரங்கள் நடந்தவண்ணம் இருக்கின்றனவென்றால், இந்தத் தேசத்தை மக்கள் ஆள்கிறார்களா, 'பிசாசுகள்'-மனிதத் தன்மையற்றவர்கள் ஆள்கிறார்களா? இந்த நாட்டில் சுதந்திரம் இருக்கிறதா, அடிமைத் தன்மைக்கு ஆதிக்கம் இருக்கிறதா என்றுதான் சிந்திக்க வேண்டியிருக்கிறது.

தவிர, இந்த சுதந்திரத்தின் காரணமாக இந்த நாட்டு மக்களுக்கு எவ்வளவு மானம், ரோஷம் இருக்கிறது என்றால், இந்த நாட்டு மனித சமுதாயம் இரு பிரிவாகப் பிரிந்து, ஒரு

பிரிவு நூற்றுக்கு 3 பேர் என்கின்ற பார்ப்பனர்; மற்றொரு பிரிவு 100-க்கு 97 பேரான சூத்திரர். பார்ப்பனர் என்றால் மேல்சாதி; சூத்திரன் என்றால் கீழ்சாதி (இழிமகன்) ஆவான்.

இந்தப்படியான நிலை, சுதந்திரம் கிடைத்து 25 ஆண்டுகளுக்குப் பிறகும் இருக்கிறது என்றால், இந்தத் தேசம் ஒரு சுதந்திரம்பெற்ற தேசம்–நாடு ஆகுமா? அடிமை சாசனம் பெற்ற தேசம்–நாடு ஆகுமா?

இதற்கு மேலும் நம் சுதந்திரத்தை, சுதந்திரநாள் விழாவைப்பற்றி விளக்குவது என்றால் நம் மனம் மிகுந்த பரிதாபப்படுகிறது; இரக்கப்படுகிறது.

தோழர்களே! இப்படிப்பட்ட நிலைபற்றி எந்தக் குடிமக்களாவது வெட்கப்படுவதாக இருந்தால் அந்த வெட்கத்தை நமது சமுதாயத்திற்குக் கேடாகவும், தங்கள் சமுதாய உயர்வாழ்வுக்குமாகவே நடத்தப்பட்டுவரும், பார்ப்பனப் பத்திரிக்கைகளை வாங்குவதில்லை, படிப்பதில்லை என்று உறுதி எடுத்துக்கொள்வதன் மூலம் காட்டுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். இதுதான் இன்று பொதுமக்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளும் (இன்ஜெக்ஷன்) செய்தியாகும்.

துக்கநாள் ஒழிக! உண்மை சுதந்திரநாள் தோன்றுக!

['விடுதலை'–தலையங்கம்—15-8-1972]

# 2. திராவிடநாடு திராவிடருக்கே

## 1. திராவிடநாடு திராவிடருக்கே!

திராவிடநாடு திராவிடருக்கே என்ற எண்ணம் நம் நாட்டிலே இன்று நேற்று தோன்றியதாக யாரும் கருதிவிட முடியாது. கடந்த 20 ஆண்டுகளுக்கு முன்னதாகவே டாக்டர் டி. எம். நாயர், சர். பி. தியாகராயப் பெருமான் மனங்களிலும் தோன்றிவிட்டது.

ஆரிய ஆதிக்கத்திலிருந்து திராவிட மக்களை, திராவிடநாட்டைக் காப்பாற்ற வேண்டும்; இந் நாட்டிலிருந்து ஆரியக் களையைக் களைந்தெறிய வேண்டும் என்ற கருத்தின் மீது அவர்கள் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தைத் தோற்றுவித்தார்கள். இந்த எண்ணம் அன்று இருந்ததினாலேதான் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தார் 'திராவிடன்' என்ற பத்திரிக்கையைத் தோற்றுவித்து நடத்தி வந்தார்கள். இப்பொழுது அந்த எண்ணம் கொழுந்துவிட்டு எரிகிறது; திராவிட இரத்தம் கொதிக்கிறது. அதன் காரணமாகவே, சென்ற 10-ந் தேதி நாடெங்கும் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற முழக்கம் ஒலித்தது. திராவிட நாட்டைத் தனியாகப் பிரித்துவிட வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. தமிழ் நாடு தமிழருக்கே என்றால் சரித்திர அறிவோ, அரசியல் அறிவோ அற்ற ஒரு சிறுகூட்டம் பரிகாசம் பண்ணுகிறது. தமிழ்நாடு தமிழருக்கே ஆய்விட்டால் கன்னடர், ஆந்திரர், கேரளர் என்னாவது என்று கேட்கின்றன அம் முண்டங்கள். தமிழ், தாய் மொழியென்றும் அதிலிருந்துதான் கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகள் பிறந்தன என்றும் மொழி ஆராய்ச்சி வல்லுனர்கள் புகலுகின்றனரே! அப்படியிருக்க, தமிழ்நாடு தமிழருக்கே என்றால் அவர்களைச் சேர்ந்த குழுவினர்களாகிய கன்னடர், தெலுங்கர், மலையாளிகள் தனித்துப் பிரிந்த போய் விடுவார்களா? இந்த அற்ப விஷயம் எப்படி, அந்த மர மண்டைகளில் ஏறப்போகிறது? ஆகவேதான், தமிழ்நாடு தமிழருக்கே இருக்கவேண்டும் எனக் கோருகிறேன். இதற்காக எத்தகைய கஷ்டம் வந்தாலும் பொறுத்துக்கொள்ளத் தமிழன்

நெஞ்சம் உரம் கொண்டுவிட்டது; இரண்டில் ஒன்று பார்த்து விடுவது என்றே தமிழன் துணிந்துவிட்டான். அதைச் சென்ற 10-ந்தேதி நிகழ்ச்சி நன்கு விளக்கிவிட்டது. தமிழன் தனது இலட்சியம் வெற்றிபெறும் வரை அயரமாட்டான்; அல்லும் பகலும் அதே சிந்தனையாயிருப்பான். தமிழன் இத் துணிச்சலைப் பெற்றிருப்பதில் அதிசயம் ஒன்றுமில்லை. இன்று உலகிலே நடைபெற்றுவரும் சம்பவங்களைப் பார்ப்பவர்களுக்கு இது ஒன்றும் அதிசயமாகத் தெரியாது.

அய்ரோப்பாக் கண்டத்தில் எத்தனை சிறுநாடுகள்—நமது திராவிடநாட்டைவிட ஜனத் தொகையிலும் பரப்பளவிலும் எவ்வளவோ சிறிய நாடுகள் தங்கள் சுதந்திரத்திற்காகப் போராடி வருகின்றன என்பதை யாவரும் அறிவர். ஏன் அவைகள் தங்கள் சுதந்திரத்திற்காகப் போராடுகின்றனவென்றால், அப்பொழுதுதான் தங்கள் கலை, நாகரிகம் முதலியவைகள் காப்பாற்றப்படமுடியும் என்ற காரணத்திலேயேயாகும். அய்ரோப்பா எல்லாம் ஒன்றாகிவிட்டால் மெஜாரிட்டியினர்களுடைய நாகரிகத்தைப் புகுத்தி, மற்றவைகளை அழிக்கச் செய்து விடுமென்ற அச்சம் ஒவ்வொரு நாடும் கொண்டிருப்பதால்தான்—இன்று அவ்வாறு போராடுகின்றன. ஆகவே, உலகம் போற்றும் நமது கலை, நாகரிகம், பழக்க வழக்கம் ஆகியவைகள் வளரவேண்டுமானால்—உலகிலேயே பிரகாசிக்க வேண்டுமானால் முதலில் நமது நாட்டுக்கு, அதாவது திராவிட நாட்டுக்குச் சுதந்திரம் வேண்டும்.

ஏற்கனவே மாகாணங்களுக்குச் சுய ஆட்சி வழங்கப்பட்டுவிட்டது. இப்பொழுது நாம் கோருவதெல்லாம் நமது கலையின் மீதும், நாகரிகத்தின் மீதும், பொருளாதாரத்தின் மீதும் வேறு எந்த மாகாணமும் ஆதிக்கம் செலுத்தக்கூடாது என்பதேயாகும். இந்தப் பாதுகாப்பைக் கோருவதில் என்ன தப்பு என்று கேட்கிறேன். நிலம் படைத்தவன் தனது நிலத்தைச் சுற்றி, அடுத்த நிலத்துக்காரனது ஆடு மாடுகள் வந்து பயிரை அழித்து விடாமல் பார்த்துக் கொள்வதற்காக வேலி போடமாட்டானா? அப்படி அவன் வேலி போடுவது தவறா என்று கேட்கின்றேன். இதுபோலவேதான், நமது மாகாணத்திற்கு பந்தோபஸ்து தேடுகிறோம். இது எப்படிக் குற்றமாகும் என்பது நமக்கு விளங்கவில்லை.

எனவே, 'திராவிடநாடு திராவிடருக்கே' என்ற முழக்கம்—திராவிடநாடு தனி நாடாகப் பிரிக்கப்படுகிறவரை சலிக்காமல் ஒலிக்கப்படவேண்டும் என்று கேட்டுக் கொள்வதோடு, அதற்கு ஆவன செய்ய, ஒவ்வொரு தமிழனும் தன்னைப் பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறேன்.

திராவிடநாடு திராவிடருக்கே!

['குடி அரசு'-தலையங்கம்—17-12-1939]

தலைவரவர்களே! தோழர்களே!

இந்தியா என்று ஒரு பொதுக் குடும்பம் (நாடு) எப்போதும் இருந்ததில்லை. நம் குடும்பத்தின் (நாட்டின்) பயனை மற்றவன் அனுபவிப்பதற்காகப் பல குடும்பங்களை ஒன்றாகப் பிணைத்து வெள்ளையர் உருவாக்கிப் பயன் அனுபவித்து வருகிறார்கள். குடும்ப மக்கள் கூப்பாடு போடாமல் இருப்பதற்கு—முன்னணியில் இருப்பவனை (ஆரியனை) சுவாதீனப் படுத்திக்கொண்டு அவனுக்குச் சற்று அதிக போஷணை கொடுத்து மற்றவனை மந்த காலத்தில் ஆழ்த்தி வைத்துப் பலன் அனுபவிக்கச் செய்த சூழ்ச்சிதான் இன்று 'இந்தியர் ஏககுடும்பம்' என்பது.

இந்தியாவில் உள்ள நாம் எல்லோரும் ஒரு குடும்ப மக்கள் அல்லர். ஒரு தாய் வயிற்றுப் பிள்ளையுமல்லர். நம் எல்லோருக்குமாக ஒரு தகப்பனும் இல்லை; நாம் வேறு வேறு குடும்பத்தவர்கள். நம் தாய் தந்தையர்கள் வேறு வேறு. சிறையில் இருப்பவர்களுக்கு 'சூப்பிரண்டெண்டும்', 'ஜெயிலரும்' குடும்பத் தலைவனாக முடியுமா? 'கான்விக்ட்

வார்டர்கள்' நமது காப்பாளர்களாகி விடுவார்களா? அதுபோல், வெள்ளையருக்காவது அவர்களின் சம்பந்திய வர்க்கத்தாரான ஆரியர்களுக்காவது—நமக்குத் தலைவர்களோ, காவலர்களோ ஆக உரிமையில்லை. இதை நான் ஆங்கிலேயர் எழுதிய சரித்திரப்படியும் ஆரியர்கள் எழுதி வைத்திருக்கும் சரித்திரப்படியுமே சொல்லுகிறேன்.

திராவிடர்கள், தங்களுடைய—தாங்கள் பாரம்பரியமாய்ச் சரித்திர காலம் தொட்டு ஆண்டு அனுபவித்து வந்த—திராவிடநாட்டைக் கைப்பற்றிக்கொண்ட வெள்ளையரை, தங்களுக்குப் பிரித்துக் கொடுத்து, தங்கள் தேவைகளுக்கு, பழக்கவழக்கமான உணர்ச்சிக்கு ஏற்றபடி சட்ட திட்டம் செய்துகொண்டு, முற்போக்கடைய சுதந்திரமும் சவுகரியமும் செய்து கொடுக்கும்படி (வெள்ளைக்காரர்களை)க் கேட்கின்றார்கள். இந் நிலையில் குறுக்கே நிற்க ஆரியர்களுக்கு என்ன உரிமை? இவர்கள் இதைப்பற்றிப் பேசவோ கலந்துகொள்ளவோ என்ன பாத்தியம் என்றுதான் நான் கேட்கிறேன்.

ஆரியனுக்கு வெள்ளையனிடம் உள்ள உரிமையெல்லாம் 'நான் உள்ளாளாயிருந்து சூழ்ச்சி செய்தும், சதி செய்தும், முஸ்லிமிடமிருந்தும், திராவிடனிடமிருந்தும் உன் கைக்கு நாடு வரும்படி செய்தேனே; மறுபடியும் அவர்கள் ஆதிக்கத்திற்கு விடுகிறாயா? பிறகு என் கதி என்ன?' என்று கேட்பதுபோல் தடுப்பதல்லாமல் வேறு என்ன பாத்தியம் என்று கேட்கின்றேன். வெள்ளைக்காரன் இந்தியாவின் பல நாடுகளையும் கைப்பற்றும்போது ஆரியனுக்கு எங்காவது நாடு இருந்ததா என்று கேட்கின்றேன்.

ஆதலால், நாம் வெள்ளையனிடம் நமது நாட்டுச் சுதந்திரத்திற்கும், நமது நாட்டு முற்போக்குக்கும், நமது நாட்டு மக்கள் சுயமரியாதைக்கும் பிரிவினை கேட்டால் இந்த ஆரியன் யார் இதைத் தடுக்க என்கிறேன்.

நாம் கேட்கும் பிரிவினை இன்று நேற்றுக் கிளம்பியதில்லை. குறிப்பாக திராவிடர்—ஆரியர் விஷயமும் இவர்களுக்குள் ஒற்றுமையில்லாத தன்மையும், போராட்டமும் வேத காலம் முதல் இருந்து வருகின்றது. இந்தியாவில் திராவிடம்—ஆரியவர்த்தம் என்ற பிரிவினை வெகு தெளிவாக இன்றும் இருக்கிறது; ஆதாரமும் இருக்கிறது. அப்படியிருக்க, திராவிட நாட்டைப் 'பாரதநாடு' என்று சொல்லவோ, 'பரதகண்டம்' என்று சொல்லவோ, 'பாரததேசம்' என்று சொல்லவோ என்ன உரிமை இந்த ஆரியர்களுக்கு இருக்கிறது என்று கேட்கிறேன். பரதன் திராவிட நாட்டை எப்போது ஆண்டான்? பரதன் என்பவனுடைய ஆட்சி திராவிடத்தில் எப்போதும் இருந்ததில்லை. திராவிட நாட்டைத் திராவிடர்களே ஆண்டிருக்கிறார்கள். முஸ்லிம் ஆட்சிகூட மிகச் சிறிது காலம், சில இடங்களில் இருந்தது என்பதல்லாமல், அதுவும் ஆரியர் குடியேறிய நாடுகளைப் பூரணமாக ஆயிரக் கணக்கான வருடங்களாக ஆண்டதுபோல் ஆண்டதாகச் சொல்லமுடியாது. திராவிட மன்னர்கள் ஆட்சி வேண்டுமானால் ஆரிய நாடுகளிலும் இருந்திருக்கிறது. ஆனால், ஆரியர் சூழ்ச்சியின் பயனாய் இந்த நாட்டை ஆண்ட பழம்பெரும் மன்னர்களின் சமுதாயங்களான திராவிடர்கள் ஆரியர்களுக்கு அடிமை சாதியாகவும், கீழ்த்தர சாதியாகவும் ஆக்கப் பட்டு, திராவிட நாட்டிற்கும் ஆரியர்கள் பெயர்கள் கொடுக்கப்பட்டுவிட்டன.

இன்று திராவிடனுக்கு இந்தத் திராவிட நாட்டில் என்ன யோக்கியதை இருக்கிறது? ஆரியர்களையும் திராவிடர்களையும், ஒப்பிட்டுப்பாருங்கள்! ஆரியன் தெருக் கூட்டுகிறானா? மூட்டை தூக்குகிறானா? வண்டி ஓட்டுகிறானா? 'பியூனாய்' இருக்கிறானா? உழுகிறானா? அறுப்பு அறுக்கிறானா? சரீரத்தில் இருந்து ஒரு துளி வேர்வையோ, நகத்தில் கடுகத்தனை அழுக்கோ படியும்படி ஏதாவது உடலுழைப்புச் செய்கிறானா? ஆனால், அவன் வாழ்வையும் திராவிடன் வாழ்வையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

ஆகவே நானோ, ஜனாப் ஜின்னாவோ இந்தியாவைப் பிரிக்கவேண்டும் என்பதற்காகக் கவலைப்படாதீர்கள். கண்டிப்பாகப் பிரிக்கப்படத்தான் போகிறது. சிலோன்,

பர்மாக்காரர்கள் பிரிந்ததால்—தங்கள் நாட்டைச் சுரண்டுகிற அன்னிய நாட்டு மக்களை 'வெளியில் போ' என்று சட்டம் செய்யவும், சிலோனியன்தான் அதிகாரியாக இருக்கலாம் என்றும் சட்டம் செய்யவும், இந்தியக் கூலிகளைக்கூட விரட்டவும் முடிந்தது. ஆனால், நாம் பிணைந்து இருப்பதால் திராவிட நாட்டில் ஆதிக்கம் அதிகாரம் பூராவும் ஆரியனிடமே இருக்கிறது. வெளி மாகாணத்தில் இருந்து வந்து கொள்ளையடிப்பவனையும், சுரண்டுகிறவனையும், சகல தொழிலையும் கைவசப்படுத்திக்கொண்டு நம் நாட்டு மக்களை வேறு நாட்டிற்குக் கூலியாகத் துரத்துகிறவனையும்கூட—துரத்துவதற்கு, நமக்கு இன்று அதிகாரம் இல்லை.

இந்த நாட்டில் முல்தானி, மார்வாடி, குஜராத்தி எதற்காக வந்து கொள்ளையடித்துப் போவது? பார்ப்பனர்களாவது தொலைந்துபோகட்டும் என்றாலும், இந்த முல்தானிக் கூட்டங்கள் சுரண்டுவதற்கு ஏன் இடம் கொடுக்கவேண்டும்? இவர்களைப் பார்ப்பனர்கள்தாமே அழைத்துவந்து சுரண்டிக்கொண்டு போவதற்கு இடம் கொடுத்து, அவர்களிடம் கூலி வாங்கி நம்மை ஒழிக்கும் இயக்கத்தை நடத்துகிறார்கள்!

'இந்தியை இந்த நாட்டில் பரப்ப—முல்தானி, குஜராத்தி, மார்வாடிகள் இலட்சக் கணக்காகக் கொடுக்கிறார்கள். சென்னை இந்தி மண்டலத்திற்கு வருடம் 20, 30 ஆயிரம் ரூபாய் பார்ப்பனர்கள் செலவு செய்கிறார்கள்; கட்டடங்கள் இலட்சக்கணக்கில் செலவு செய்து கட்டப்படுகின்றன. அங்குள்ள பார்ப்பனர்கள் வாழ்க்கை அரவிந்த ஆசிரமம் போலவும், இராமகிருஷ்ண மடம் போலவும், ரமண ரிஷிகள் ஆசிரமம் போலவும் நடைபெறுகின்றது.

திராவிடன் பம்பாய்க்குக் கூலியாகப் போய்—தோல் கடையில் மயிர் கழிக்கும் வேலையில், நாற்றத்தில் கொசுக்களுக்கு ஆகாரம் கொடுத்துக்கொண்டு—ஒட்டைக் குடிசையில் தீண்டாத சாதியாய் வாழ்கிறான். பம்பாயிலிருந்து இங்கு வந்த பட்டேல், தேசாய், பிர்லா, பஜாஜ் கூட்டக்காரர்கள் திராவிடர்களுடைய இரத்தத்தை உறிஞ்சிக்கொண்டு, தங்கசாலைத் தெருவில் சலவைக்கல் கட்டடத்தில், 3, 4 மோட்டார்களுடன் 2, 3 பம்பாய்த் தாசிகளுடனும் வாழ்கிறார்கள்.

[சேலத்தில், 19-4-1940-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 28-4-1940]

தோழர்களே!

திராவிடநாடு தனியாகப் பிரிந்தால்தான் நாம் சமுதாயத்திலும், பொருளாதாரத்திலும் முன்னேறமுடியும். பர்மா தனியாய்ப் பிரிந்துவிட்டதனால் அதற்கு நன்மையுண்டாகவில்லையா? சிலோன் தனியாகப்பிரிந்து இருப்பதனால் அதற்கு நன்மையுண்டாகவில்லையா? அவர்களுடைய வேலையில்லாத் திண்டாட்டத்தையும் அன்னியர் சுரண்டலையும் ஆரிய ஆதிக்கத்தையும் போக்கிக் கொள்வதற்காக, அங்கேயிருக்கும் நமது மக்களை விரட்டுகிறார்கள். நமது கையில் ஆட்சியிருந்தால் நாமும் இங்கிருக்கும் அன்னியச் சுரண்டலையும் ஆரிய ஆதிக்கத்தையும் விரட்டமுடியும். நமது மக்கள் வேலை தேடி அன்னிய நாடு சென்று மானமிழந்து தவிப்பதைத் தடுத்து, அவர்களுக்கு இங்கேயே வேலை கொடுக்க முடியும்.

இந்த சேலம் நகரத்தை எடுத்துக்கொள்வோம். இங்குள்ள முக்கால்வாசி மக்கள் நெசவுத் தொழிலாளிகள். இவர்களெல்லாம் இன்று போதிய வேலையில்லாமலும், போதுமான கூலியில்லாமலும் திண்டாடுகிறார்கள். தங்கள் வாழ்க்கையை மானமுடன் நடத்த முடியாமல் பலர்—பெண்டு பிள்ளைகளுடன் சிலர் பிச்சைக்காரர்களாகவும் வெளியில் கிளம்பியிருக்கிறார்கள். இந்த நிலையைப்போக்க காங்கிரஸ்காரர்கள் அவர்களது 27 மாத ஆட்சியில் ஏதாவது முயற்சி எடுத்துக்கொண்டார்களா?

ஒரு காலத்தில் இங்கிலாந்தில் அன்னிய நாட்டுத்துணி கட்டினால் 30 பவுன் அபராதம் விதிக்கச் சட்டமியற்றினார்களாம். அவர்களுடைய நெசவுத்தொழிலை விருத்தி செய்ய இச்சட்டத்தை ஏற்படுத்தியிருந்தனர். இன்று நம்மில் 100-க்கு 60, 70 பேர் ஆமதாபாத் வெளி மாகாணத் துணிகளை அணிந்திருப்பதைப் பார்க்கிறோம். பெண்களும் ஆமதாபாத் சேலைகளைக் கட்டுகிறார்கள். நெசவாளிகளிடம் காங்கிரசாருக்கு—ஆரியருக்குக் கவலையிருக்குமானால், ஆமதாபாத் துணியை இந்நாட்டுக்கு வராமல் தடுக்க முடியாதா? அதற்குப் பதிலாக இந்நாட்டு மக்கள் இந்நாட்டுத் துணி உடுத்தும்படி செய்ய முடியாதா? காரைக்கால், பாண்டிச்சேரியிலிருந்து இங்கு துணி வருவதனால் நூற்றுக்கு 40, 50, விகிதம் வரிவிதித்து விடுகிறார்கள். அதனால், அதிகமாக நம்மால் அத் துணிகளை வாங்கமுடியவில்லை. அதற்குப் பதிலாக நம்நாட்டுப் பட்டாடைகளை உபயோகிக்கிறோம். இதுபோலவே, ஆமதாபாத் முதலிய வெளிநாட்டு—அதாவது திராவிடநாடு அல்லாத நாட்டுத் துணிகளை நாம் தடுத்துவிட்டால் நமது கைத்தொழில் வளர்ச்சியடையும்; கைத்தறி நெசவாளர்களின் துன்பம், வறுமை, கஷ்டம் ஒழிந்துபோய்விடும். இதை ஏன் அவர்கள் செய்யவில்லை? ஆரியர்கள் தங்கள் நன்மைக்கு எவ்வளவு காரியம் செய்து கொள்கிறார்கள்?

[சேலத்தில், 28-6-1940-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 7-7-1940]

பெரியோர்களே! தோழர்களே!

நம் கட்சி நோக்கங்கள், திட்டங்கள் ஆகியவை நிறைவேற்றப்படுவதற்கு ஆகவும், நம் மக்கள் உண்மையான விடுதலையும் சுதந்திரமும் பெறுவதற்காகவும் நாம் செய்ய வேண்டிய வேலைகளில் முக்கியமானது ஆரியப் பிணைப்பில் இருந்து—அதாவது 'இந்தியா', 'இந்தியர்' என்ற பிணைப்பிலிருந்து திராவிட நாட்டையும், திராவிட மக்களையும் பிரித்துக் கொள்ளவேண்டியது அவசியமான காரியமாகும்.

என்றாலும், மக்களுடைய ஒழுக்கத்திற்கும் பகுத்தறிவு ஆராய்ச்சிக்கும் மாறுபாடு இல்லாவிட்டாலும், மதசம்பந்தமான உணர்ச்சியின் பலனாய் 'ஹா! பறையனைத் தொடுவதா?' என்பதுபோல—எப்படிச் சில காரியங்களில் திடீரென்று வெறுப்புக்கொண்டு விடுகிறார்களோ அது போலவே—இவ்விஷயத்தில் 'ஹா! பிரிப்பதா!' என்று மக்கள் ஒரு திகில் அடையும்படி எதிரிகள் விஷமப் பிரச்சாரம் செய்கிறார்கள்.

அப்படிப்பட்ட பிரச்சாரகர்களுக்கு ஆதரவெல்லாம், 'தாயை வெட்டுவதா?', 'பிள்ளையை அறுப்பதா?', 'பசுவைக் கொல்வதா?', 'கூரையைப் பிரிப்பதா?' என்பன போன்ற திடுக்கிடத் தகுந்த, பொருத்தமற்ற வார்த்தைகளைப் பயன்படுத்திக்கொள்வதல்லாமல், பிரிப்பதால் என்ன நஷ்டமென்றோ—பிரிக்கப்பட்ட நாடுகள் என்ன கேடுகள் அடைந்திருக்கின்றனவென்றோ ஒரு சிறு ஆதாரத்தையும் எடுத்துக் காட்டினாரகளிலர்.

நாம் திராவிடநாடு பிரிக்கப்படவேண்டும் என்று சொல்லப்படும் காரணங்களுக்கெல்லாம் ஒரு நாட்டு மக்களுக்கும் ஒரு சமுதாய மக்களுக்கும் முன்னேற்ற உணர்ச்சி ஏற்படவேண்டுமானால், அந்த மக்களுக்கு முதலில் தாங்கள் யார் என்ற உணர்ச்சி பிறந்து தங்களைப்பற்றித் தெளிவாய்த் தெரிந்துகொண்டு, அதன் பயனாக நாட்டுப் பற்றும் சமுதாயப்பற்றும் ஏற்பட்டாக வேண்டும். அது இல்லாத நாடோ, மக்களோ, முன்னேற்றமடைந்ததாகச் சரித்திரச் சான்றுகளே கிடையாது.

உலகில் மற்ற நாடுகளெல்லாம் ஒவ்வோர் அளவுக்காவது முன்னேற்றம் அடைந்து வரவும் நம்நாடும் மக்களும் மாத்திரம் எவ்வித முன்னேற்றமுமில்லாமல் தேங்கி இருப்பதற்கும் இதுவே காரணமாகும். மற்றும், வெளிநாட்டு மக்கள் ஏராளமாய் இந் நாட்டிற்கு வந்து நம்மை அடிமைப்படுத்தியும், நம் செல்வங்களைச் சுரண்டிக்கொண்டு

போகவும், நம் மக்கள் இங்கு பிழைப்பும், போதிய வரும்படியும் இல்லாமல் வெளிநாடுகளுக்குப் போய்—கூலியாகவும் அடிமையாயும் இருந்து இழிவுபடவும் இதுவே காரணமாகும். இங்கு நம் நாட்டுமக்கள்—100-க்கு 97 பேர்களாக உள்ள பெருமித எண்ணிக்கை உள்ளவர்களாக இருந்தும், 100-க்கு 3 பேர்களாக உள்ளவர்களும் வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறினவர்களுமான ஆரியர்கள் மிகச் சிறுபான்மையினராக இருந்தும்—அரசியலில், பதவிகளில், உத்தியோகங்களில், சமுதாய உயர்வுகளில், அவர்கள் மெஜாரிட்டிகளாகவும் மேன்மையானவர்களாகவும் இருப்பதற்கும், நாம் மைனாரிட்டிகளாகவும் கீழ்மையாகவும் இருப்பதற்கும்; அரசாங்கத்தார் அரசியல் அபிப்பிராயங்களுக்கு இந்நாட்டுப் பழம்பெரும் மக்களாகிய நம்மை இலட்சியம் செய்யாமல் போவதற்கும், ஆரியர்களை இலட்சியம் செய்வதற்கும்; நம் நாட்டுப் பொது ஸ்தாபனங்கள் என்பவைகள் யாவற்றிலும், தொழில், பொருளாதாரம் யாவற்றிலும் ஆரியர்களே தலைமையும், ஆதிக்கமும் செலுத்துவதற்கும் நாம் அவர்களைப் பின்பற்றுவோராக இருப்பதற்கும் காரணம் இந்த நாட்டுப் பிணைப்பேயாகும்.

[திருவாரூரில், 24, 25-8-1940-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 25-8-1940]

தலைவரவர்களே! பெரியோர்களே!

உலக சமுதாயத்தைப் பொதுவாக எடுத்துக்கொண்டால், இவ் இந்திய நாட்டைப் போன்ற நாடு இருந்ததில்லை; இருக்கவுமில்லை. கையிலே வலுத்தவன் மற்றவர்களைச் சுரண்டிப் பிழைக்கவும், உண்ண ஒரு கூட்டமும், உழைக்க மற்றவர்களும் இருக்கும்படியானதுமான சீர்கேடான நிலை ஏற்படத்தான், இப் பெரிய விஸ்தீரணமும், 'இந்தியா' என்கிற பெயரும் பயன்படுகின்றனவே ஒழிய, இந்தக் கண்டத்தின் பல்வேறு இனங்கள் ஒன்றுபடும்படியான அறிகுறிகள் எதுவும் தோன்றவேயில்லை. இவ்வாறு பல்வேறு இனங்கள், 400, 500 மொழிகள், 1000, 2000 வகுப்புகள், பலப் பல கொள்கைகள்—பழக்க வழக்கங்கள் கொண்ட ஒரு பெரும் நிலப்பரப்பை ஒரு நாடு (நேஷன்) என்று சொல்வதால் பயன் என்ன என்று யோசிக்க இந் நாட்டு 'மேதாவிகளுக்கு' அவகாசமில்லை. 4 கோடி, 2 கோடி, 50 இலட்சம், 20 இலட்சம் என்பன போன்ற எண்ணிக்கையுள்ள மக்களைக் கொண்ட தனி-சிறு நாடுகள், நமது ஒரு ஜில்லா 2 ஜில்லாக்கள் போன்றவைகள் சுதந்திர நாடுகளாக அய்ரோப்பாவில் இருக்கின்றன. அம்மாதிரி சிறு நாடுகள், சுதந்திர நாடுகளாக இருக்க முடிவது ஒரு குறிப்பிட்ட இலட்சியத்தை முக்கியமாகக் கருதியதால்தான். அந்தப்படி இந்தியா கண்டத்தில் வாழ்ந்துவரும் தனி இனத்தவராகிய நாம் பிறருடைய சம்பந்தத்தை விட்டு, நமக்குரிய இலட்சியத்தை விடாப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டு முன்னேற்றமடைய முயற்சி செய்யவேண்டும்.

[விருதுநகரில், 11-6-1944-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 17-6-1944]

திராவிடநாடு என்பதுபற்றிப் பலர் பலவிதமான குறை கூறுகிறார்கள். நம்மவர்கள் என்று சொல்லிக்கொண்டும் சிலர் குறைகூறுகிறார்கள். அதில் சிலர் அறியாமல் சொல்லலாம். சிலர் யோக்கியப் பொறுப்பில்லாமல் விஷமத் தனத்துக்காகவும் சொல்லுகிறார்கள். அவர்களைப்பற்றிக் கவலைப்படவேண்டியகாலம் தீர்ந்துவிட்டது; விளக்க வேண்டிய காலமும் தீர்ந்துவிட்டது; விளக்கவேலை செய்யவேண்டிய காலமும் தீர்ந்துவிட்டது. ஏன், நாம் இதுவரை செய்துவந்த வேலையின் பயன் 'திராவிடநாடு கூடாது' என்று சொல்ல இன்று திராவிடநாட்டில் ஓர் ஆளும் இல்லாமல் செய்துவிட்டது. இதற்கு உதாரணம்,

'மெயில்' பேப்பரின் 22-ம் தேதி தலையங்கத்தைப் பாருங்கள்.

'திராவிடநாடு என்பது பூரண சுயேச்சை கேட்பதாகும். அதில் சிறிது குறைந்தாலும் ஒப்புக்கொள்ள முடியாத மாதிரி அந்தப் பிரச்சினை ஏற்பட்டுவிட்டது. பாகிஸ்தான்

விஷயத்தில் தோழர் ஜின்னா அவர்கள் சற்று இறங்கினாலும் இறங்கலாம். ஆனால், தோழர் இராமசாமி சிறிதும் விட்டுக்கொடுக்கமாட்டார்' என்றும்,

'ஆந்திராக்காரர்கள் இதை ஒப்புக்கொள்ளுகிறார்களா என்று யாராவது கேட்டால் அவர்களும் திராவிடர்களேயாதலால் அவர்களுக்கு ஆகவும்தான் நான் திராவிடநாடு கேட்கின்றேன் என்றும் பதில் சொல்லி அடக்கிவிடுகிறார்' என்றும்,

'எல்லை புரியவில்லை, விஷயம் புரியவில்லை என்று சொல்லுகிறவர்களுக்கும் தோழர் இராமசாமி சென்னை மாகாணத்தை—அதன் எல்லை வரைந்த கோட்டிற்கு உட்பட்ட பாகத்தைத் திராவிடநாடு என்றும், அதன் திட்டம் என்ன என்பதற்குச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் தனது 'திராவிடநாட்டு ஆட்சியானது அதன் சம்பந்தமாக கவர்னர், கவர்னர்-ஜெனரல், மத்திய அரசாங்கத்தார் ஆகியவர்கள் சம்பந்தமில்லாமல் இங்கிலாந்தில் உள்ள அரசரின் பிரதிநிதிகள் கவனிப்பில் இருக்குமென்றும் சொல்லிவிட்டார்' என்றும்,

'இந்தியாவில் சென்னை மாகாணம் தவிர, மற்ற மாகாண மக்கள் வியாபாரம் முதலியவைகள் எப்படி இருக்கும் என்று கேட்பவர்களுக்கும் தெளிவாய், அதாவது ஒரு அய்ரோப்பியன், ஜப்பானியன், அமெரிக்கன் திராவிடநாட்டிற்குள் வந்தால் எப்படி பாஸ்போர்ட் (அனுமதிச்சீட்டு) வாங்கிக்கொண்டு வரவேண்டுமோ அது போலவும், அந்நாட்டு சாமான்கள் திராவிடநாட்டுக்குள் வந்தால் எப்படி வரி போடுகிறோமோ அதுபோல் வரி போடப்படும் என்றும் சொல்லிவிட்டார்' என்பதாகவும் குறிப்பிட்டுவிட்டு கடைசியாக, 'இன்று திராவிட நாடு வியாபாரத்திலும், தொழில் முறையாலும், மதம் முதலியவற்றாலும் திராவிடநாடு அல்லாத நாடுகளால் சுரண்டப்பட்டுக் கேடடைந்திருப்பதற்குப் பரிகாரமாகவே இதைச் சொல்லுகிறார்' என்றும் எழுதியிருக்கிறது.

முடிவாக 'மெயில்' மற்ற மக்களுக்கும் ஒரு நல்ல புத்தி சொல்லி இருக்கிறது.

அதென்னவெனில்,

'நல்ல புத்திசாலித்தனமான முயற்சி இல்லாமல் இந்தியாவைப் பிரிக்கக்கூடாது; இந்தியா ஒற்றுமை கெடக்கூடாது என்கிறவர்கள் இந்தப் பல்லவியை மாத்திரம் பாடிக்கொண்டோ, திராவிட நாட்டுப் பிரச்சினையில் அதில்லை, இதில்லை இதற்கென்ன சமாதானம், அதற்கென்ன சமாதானம் என்று கேட்டுக்கொண்டோ, அதைப் பரிகாசம் செய்வதும், முட்டாள்தனமான பிரச்சினை என்று பேசிக்கொண்டிருப்பதுமான காரியங்களால் திராவிட நாடு பிரச்சினையை அடக்கிவிடலாம் என்று கருதினால் அவர்கள் ஏமாற்றமடைந்து விடுவார்கள்' என்றும்,

'நல்ல அஸ்திவாரத்தின் மீது திராவிட நாட்டுப் பிரச்சினை எழுப்பப்பட்டு விட்டதால், மக்களுக்குள் ஆழப் பதிந்துவிட்டதால், இனி அதை அசைக்கப் பார்ப்பதைவிட அதற்கு இணங்கிப் போவதே அதாவது, எதற்கு ஆக அது கேட்கப்படுகிறதோ அதைப் பரிகரிக்க முயற்சி செய்வதே புத்திசாலித்தனம்' என்றும் எழுதியிட்டது.

இதை நாம் ஏன் எடுத்துப்போட்டுக் காட்டுகிறோம் என்பதை மக்கள் கவனிக்க வேண்டும். பல எதிர்கூட்டப் பத்திரிக்கைகள் பரிகசிப்பதுபோல் 'மெயிலின் ஆசீர்வாதம்' கிடைத்துவிட்டது என்கின்ற பைத்தியக்காரப் பெருமைக்கோ, திருப்திக்கோ அல்ல; அல்லவே அல்ல. மற்றெதற்கு என்றால்,

1930ஆம் வருஷம் நவம்பர் மாதம் 20ஆம் தேதி இதே 'மெயில்' பத்திரிக்கை, பெரியார் சிறையில் இருந்து வெளிவந்ததும், தலையங்கத்தில் தூத்துக்குடியில் திராவிட நாட்டுப் பிரிவினைபற்றிப் பேசியதைப் பரிகாசமாக எழுதி இருந்ததோடு, ஜஸ்டிஸ் தலைமை ஸ்தானத்தையும் நையாண்டி செய்து இருந்தது. அதன் பிறகு இந்த 5 வருட காலத்தில் செய்துவந்த பிரச்சாரத்தால் மக்கள் அதன் தத்துவத்தையும் தேவையையும்

உணர்ந்து பாகிஸ்தான், சீக்கிஸ்தான், ஆதித் திராவிடஸ்தான், ஆரியஸ்தான் என்பதாக இன்னும் பல ஸ்தான்கள் கேட்கும்படியாகவும் காந்தியார், ஆச்சாரியார் முதல் பல அரசியல் வாதிகளும் அக் காலத்தில் அதன் காரண காரியங்களைப்பற்றி எதிர்த்து வாதாடிய வாதங்களையெல்லாம் விட்டுவிட்டு இன்று 'கேட்டால் கொடுக்க வேண்டியதுதான்' என்றும்; கேட்பது என்றால் ஆச்சாரியார், 'மெஜாரிட்டியாக (வெகுபேர்) கேட்டால்தான் கொடுக்கப்படும்' என்றும்; காந்தியார், 'வெகுபேர் என்பது தப்பு, மெஜாரிட்டி என்றால் ஆட்களின் எண்ணிக்கை அல்ல, புத்தியின் மதிப்புதான். ஆதலால் புத்திசாலித்தனமான ஒருவன் கேட்டாலும் போதும்' என்றும் சொல்லும்படியான நிலைமை வந்ததுடன், இந்த 'மெயில்' பத்திரிக்கையும் இவ்வளவு தூரம் ஒப்புக்கொள்ளவும் அதன் எதிரிகளுக்கு அறிவுறுத்தவும் வந்ததை மற்றவர்கள் அறியட்டும் என்பதற்காகவேயாகும்.

மற்றும், 'திராவிடநாடு கிடைத்தால், அதில் ஆரியர், முஸ்லிம், தீண்டப்படாதார் நிலைமை எப்படி இருக்கும்' என்று கேட்கப்பட்ட கேள்விகளுக்குப் பதில் 22-ந்தேதி 'மெயில்' பத்திரிக்கையில் வேறொரு இடத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது, 'அவர்களது நிலை இன்றுள்ளது போல்தான் இருக்கும். அவர்களது குறைகள் போக்கப்படுவதற்கும் நலம் ஏற்படுவதற்கும் ஒற்றுமைக்கும் ஏற்ற சட்டங்கள் செய்யப்படும்' என்று சொன்னதை எடுத்துக்காட்டியிருக்கிறது. ஆகவே, திராவிடநாட்டுப் பிரிவினை ஒரு பாலைவனக் கூச்சல் என்றோ, பயன் அற்றதென்றோ, பரிகசிக்கத் தக்கதென்றோ கருதக் கூடிய நிலைமையைத் தாண்டிவிட்டது.

மற்றொரு விஷயமும் இதுசமயம் குறிப்பிடத்தக்கதாகும். அதாவது:

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் தோழர் முத்துரங்க முதலியார் அவர்கள் மதுரையில் 20-ந் தேதி பேசியதாக 21-ம் தேதி 'விடுதலை' பத்திரிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்னவென்றால்,

'இந்தியாவில் மொழிவாரியாக மாகாணங்களைப் பிரிக்க காங்கிரஸ் ஏற்கனவே வாக்குறுதி அளித்திருப்பதால் திராவிடநாடு பிரிவினையை ஜஸ்டிஸ் கட்சித் தலைவர் கேட்பது அவசியமில்லை' என்பதாகக் காணப்படுகிறது.

நாம் திராவிடநாடு கேட்கும் முறையையும், அதன் அரசியல் தன்மையையும் அவர் முதலிலேயே குறிப்பிட்டுவிட்டு இப்படிச் சொன்னதாக அப் பத்திரிக்கையில் தெரிவதால், தோழர் முத்தரங்க முதலியார் அவர்களும் அதாவது, சென்னைக் காங்கிரஸ்வாதிகளும் ஒப்புக்கொண்டதாகத்தான் அர்த்தமாகும்.

மற்றொரு விஷயம் என்னவெனில், அதுதான் 23-ந்தேதி 'தினசரி' பத்திரிக்கையின் 'எதற்காக திராவிடஸ்தான்?' என்னும் தலையங்கமாகும்.

அதில்,

'திராவிடஸ்தான் கேட்பதைக் கேலி செய்யக்கூடாது என்று 'மதராஸ்மெயில்' உபதேசம் செய்கிறது......நாயக்கர் குறிப்பிடும் (திராவிடஸ்தான் எல்லைப்) பிரதேசங்கள் தமிழ்நாடு, ஆந்திரா, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு நாடுகளும் சேர்ந்திருக்கின்றன. அந்த நாட்டார் திராவிடஸ்தானை ஆதரிக்கிறார்களா?' என்று கேட்கிறது. அதற்குப் பதில் 'மெயிலி'லேயே இருக்கிறது. அதாவது, அந்த நாட்டாரும் திராவிடர்களே யாதலால் திராவிடர்களுக்காகக் கேட்கப்படும் காரியங்களுக்குத் திராவிடர்கள் எல்லோருமே சேர்ந்து கேட்கவேண்டும் என்பது ஏமாற்றுவதற்காகச் சொல்லப்படும் காரணமாகுமே தவிர, அதில் நியாயம் இருக்க முடியாதென்பதாகும். முஸ்லிம்களுக்காக 'பாகிஸ்தானில் உள்ள எல்லா முஸ்லிம்களும் சேர்ந்து கேட்கவில்லையே?' என்று சொன்ன காந்தியார், ஜின்னா வாயை அடக்க ஏன் பயந்தார்? 'எல்லோரும் சேர்ந்து கேட்டால்தான்

ஒப்புவோம்' என்று சொன்ன ஆச்சாரியார் தானாகவே, தனிமையாகவே ஜின்னா சாயபு வீட்டிற்கு ஏன் போனார்? ஒரு சமுதாயத்துக்கோ, ஒரு நாட்டுக்கோ நலனைத் தேட ஒரு மனிதன் முயற்சித்தால் அது எந்தச் சட்டப்படியும் தப்பாகிவிடாது. அந்த நாட்டை, அந்த இனத்தைச் சேர்ந்த எந்தத் தனி மனிதனுக்கும் உரிமையுண்டு.

அன்றியும், எல்லோரும் எப்படிக் கேட்கமுடியும்? முதலாவது, இந்தத் திராவிடர்கள் 100-க்கு 90 பேர் எழுத்து வாசனை அற்ற தற்குறிகள்; இரண்டாவது, 100-க்கு 90 பேர்கள் தங்கள் இனத்தின் பிறப்பு வளர்ப்பு அறியாதவர்களும், அல்லாததையும் இல்லாததையும் தங்களுடையதென்றும் கருதிக்கொண்டிருக்கிற பகுத்தறிவு இல்லாத மூடநம்பிக்கை மக்களும் ஆவார்கள். இந்த இலட்சணத்தில் இவர்களில் 100-க்கு 80 பேர் சுயநலத்திற்கு எதையும் விட்டுவிடும்படி பயிற்றுவிக்கப்பட்டவர்கள். இவர்கள் யாவரும் சேர்ந்து, அல்லது மெஜாரிட்டியார் சேர்ந்து ஒரு நல்ல நேரான காரியம் செய்வதென்றால், அமாவாசையன்று சந்திரகிரகணம் இருக்கவேண்டும் என்று கோருவது போலவேயாகும்.

இவ்வளவு தர்க்கம் ஏன்? எந்த ஆந்திர, கர்நாடக, மலையாள மக்களாவது இந்த 5 வருஷகாலத்தில் வெளியில் வந்து, 'எங்களுக்குத் திராவிடநாடு வேண்டாம்' என்று சொன்னார்களா?

அன்றியும், ஜஸ்டிஸ் கட்சி என்பது சென்னை மாகாணத்தில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நாலு நாட்டின் பிரதிநிதித்துவம் வாய்ந்தது என்பதை 'தினசரி'யோ மற்றவர்களோ மறக்கிறார்களா? அப்படி இருக்க, இப்படிப் பேசுவது நியாயமா, அறிவுடைமையா என்பது யோசிக்கத்தக்கதாகும்.

அன்றியும், 'தினசரி' அதே தலையங்கத்தில் மற்றொரு இடத்தில் வடஇந்தியர் தென்னிந்தியாவில் ஏராளமாய் வந்து கூடி பொருள் சுரண்டிக்கொண்டு போவதை ஒப்புக் கொண்டு, 'அதற்குக் காரணம் தென் இந்தியரே ஒழிய வட இந்தியரல்ல' என்றும் 'தென் இந்தியர்கள் அறிவு பெற்றால் அவர்களாலும் முடியும்' என்பதாக எழுதியிருக்கிறது.

மேலும். தென்னிந்தியர்களுக்குப் பொருளாதார அறிவு இல்லை, கூடிவாழ்ந்து 'கூட்டுக் கம்பெனி நடத்தும் வழக்கமே தென்னிந்தியரிடம் இல்லை, நடத்தினாலும் சதி செய்துவிடுகிறார்கள்' என்று துணிந்து திராவிடநாட்டாரைப் பற்றி எழுதிவிட்டது. இப்படிப்பட்ட அறிவும் நல்ல வழக்கமும் இல்லாதவர்களிடமும், பணம் போட்ட ஒவ்வொருவரும் தம்மிஷ்டப்படி நடக்க வேண்டுமென்கின்றவர்களிடமும், 'சதிகாரர்கள்' இடமும், அதாவது, அறிவற்ற சுயநலக்காரரிடமிருந்து அன்னியரால் சுரண்டப்படும் பொருளாதார சுரண்டலை நிறுத்த மெஜாரிட்டி ஓட்டுப்பெற முடியுமா என்பதையும், எல்லோரும் சேர்ந்து கேட்கும்படி செய்ய முடியுமா என்பதையும் யோசித்துப் பார்க்கும்படி 'தினசரி' ஆசிரியரைக் கேட்கிறோம். தவிர, 'தினசரி'யானது 'நாம் அடுத்த வீட்டுக்காரனை அவநம்பிக்கைப் பட்டு விட்டு, 6000 மைலுக்கு அப்பால் இருப்பவனை நம்பலாமா' என்கிறது. இது பொருளுள்ள வாதமாகாது.

இன்று நடக்கும் யுத்தத்திற்கு காந்தியாரையும் காங்கிரசையும் நம்பி இருந்தால் நம் கதி என்ன ஆகி இருக்கும்? ஜெயிலுக்குப் போய்விட்டு வந்ததைத் தவிர வேறு என்ன செய்ய முடிந்தது? 6000 மைலுக்கு அப்பால் உள்ளவனை நம்பியதால், அவன் கேட்டதை நம்மாலான அளவு கொடுத்ததால் நாம் ஜப்பான் பிரஜை ஆகாமலும், நம் வீட்டின்மீது வெடிகுண்டு விழாமலும், நம் செல்வம், பெண்டு பிள்ளை ஓர் அளவுக்காவது கேடுறாமலும், கவலையற்று இருக்க முடிந்தது. அதை அவன் யாருக்காகச் செய்திருந்தாலும் சரி.

நாமே நம்மைக் காப்பாற்றிக்கொள்ள வகை ஏற்பட்டுவிட்டால் 6000 மைல்காரனும் வேண்டாம், அடுத்த வீட்டுக்காரனும் வேண்டாம். அண்ணன், தம்பி, அப்பனும் வேண்டாம் என்கின்ற நிலை எய்துவது இயற்கையேயாம். ஆதலால், இதில் 6000 மைல்காரனைவிட

அடுத்த எல்லையில் இருப்பவன் வேறுபட்டவன் என்பதோடு, உரிமை இல்லாத கொள்ளைக்காரனாக இருக்கிறான் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

திராவிட நாட்டைப் பிரித்தால், 'திராவிடநாடு நிரந்தர அடிமையாய் இருக்க நேரிடும்' என்கிறது 'தினசரி'.

அப்படியே (பிரிந்தால் இருக்க நேராது)யிருந்தாலும், 'நாம் ஒருவனுக்கு அடிமையாய் இருக்கிறதே போதும். இருவருக்கு அடிமையாய் இருக்கமாட்டோம்' என்று தான் சொல்லுகிறோம்.

வெள்ளையனுக்கு அடிமையானதால் அதிக நஷ்டம் இருந்தாலும் சிறிது இலாபமாவது பெற்று நாம் மனிதன் என்பதை உணர்ந்திருக்கிறோம். வடநாட்டானுக்குப் பூராவுமே அடிமையாய் இருந்தால் நாம் 'சூத்திரன்' 'ராட்சசன்' 'சண்டாளன்' 'அசுரன்' 'குண்டகன்' 'கோளகன்' 'பிரதிலோமன்' 'நரகன்'... ஆகத்தான் இருக்க நேரும். இப்பொழுதும் அப்படியே இருக்கிறோம் என்றாலும் அது ஓரளவுக்காவது ஆட்டம் கொடுத்துவிட்டது. திராவிடநாடு ஏற்பட்டவுடன், ஆட்டம் கொடுத்தவைகளைப் பிடுங்கி எறிந்துவிடுவோம். பிறகு 6000 மைலை 60000 மைல் தூரம் ஆக்கி அவனையும் திராவிடநாட்டுக்குப் பாஸ்போர்ட் வாங்கிக்கொண்டு வரும்படி செய்வோம் என்பதை உலகத்தில் உள்ள மற்ற சிறு சிறு நாட்டின் சரித்திரத்தையும், நிலையையும் கண்டு தெரிந்துகொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

['குடிஅரசு'-தலையங்கம்—25-11-1944]

தோழர்களே!

திராவிடநாடு என்பது ஒரு பொருளாதார சமுதாய சீர்திருத்தப் பிரச்சினையே ஒழிய அது ஒரு அரசியல் பிரச்சினை அல்ல. தீண்டாமை ஒழியவேண்டும் என்பது போலவே சுரண்டல் ஒழிய வேண்டும் என்கிறோம். அன்னியனுக்கு நம்நாடு சந்தையாய் இருக்கப்படக்கூடாது என்பது போலவே, அன்னிய மாகாணத்தானுக்கு நம்நாடு சந்தையாய் இருக்கக்கூடாது என்கிறோம்.

வாழ்க்கையில் பகுத்தறிவு வாதியாய், சீர்திருத்த வாதியாய் இருப்பதுபோலவே மதத்தில் பகுத்தறிவு வாதியாய் சீர்திருத்த வாதியாய் இருக்கவேண்டுமென்கின்றோம். இவைகளில் அரசியல் என்ன இருக்கின்றது? நம் அரசியல் நம் நாட்டைப் பொறுத்ததாக மட்டும்—நம்நாட்டு மக்களைப் பொறுத்ததாகமட்டும் இருக்கவேண்டும் என்கின்றோம்.

நம் திராவிட நாட்டுப் பிரச்சினையில் பிரிட்டிஷ் அரசாங்கம் இருப்பதா போவதா என்கின்ற பிரச்சினையோ, பிரிட்டனுக்கு எவ்வளவு உரிமை, நமக்கு எப்படிப்பட்ட உரிமை என்கின்ற பேச்சோகூடக் கிடையாது. அவை முதலியவை தனிப்பட்ட வேறு விஷயமாகும். அது திராவிடநாடு பெற்றதும் கிளம்பும். அன்னியர் ஆதிக்கமும் அன்னியர் தயவு, உதவியும்கூட தேவை இல்லாமலும், தனித்து இயங்க நாம் வேறுமுயற்சி செய்வோம். அதை வேண்டுமானால் அரசியல் என்று சொல்லிக்கொள்ளட்டும். அதுவும் பிரிட்டிஷ் ஆதிக்கம் மாத்திரம் கூடாது என்பதோடு, நம் அரசியல் தீர்ந்துவிடாது.

பிரிட்டன், அமெரிக்கன், ஜெர்மானியன், ஜப்பானியன், ஆரியாவர்த்தம், காந்தி-நேரு கம்பெனி ஆதிக்கம் முதலிய ஒன்றுமே இல்லாத நம் (திராவிடர்) ஆதிக்கமே இருக்க வேண்டும் என்பது நம் அரசியலாகும். நாம் கேட்கும் திராவிடநாடு நம்மை இப்படிப்பட்ட சுதந்திரத்துக்கு, முழு முழு சுயேச்சைக்குக்கொண்டுபோய்விடும். ஆதலால், திராவிடநாடு பிரிவினை, இன்று அரசியலாகாது. திராவிடநாடு பிரிவினை என்று நாம் என்ன சொல்லுகிறோம் என்றால்,

1. சென்னை மாகாணம்தான் இன்று திராவிடநாட்டு விஸ்தீரண அளவு.

2. மற்ற மாகாணத்தான் திராவிட நாட்டிற்குள் காலடி வைப்பதானால் அனுமதிச் சீட்டு—'பாஸ்போர்ட்' வாங்கிக்கொண்டு வரவேண்டும்.

3. மற்ற மாகாண சரக்கு சுங்கம் கொடுத்துவிட்டு, அதுவும் நாம் அனுமதித்தால் தான் திராவிட நாட்டிற்குள் வரவேண்டும்.

4. விஸ்தீரணம் கூடுவதும் குறைவதும் நம்நாட்டின் சவுகரியத்தையும் இஷ்டத் தையும் பொறுத்தது.

5. வெளிநாட்டார் இங்கு வர்த்தகம், கைத்தொழில் செய்வதும் நம்நாட்டு சவுகரி யத்தையும், தேவையையும் பொறுத்ததாகும்.

6. நாடு முழு சுதந்திரமடையும் வரை பாதுகாப்பு இன்றுள்ளது போலவே இருக்கும்.

முஸ்லிம்கள், ஆதித் திராவிடர்கள், கிறிஸ்தவர்கள், பவுத்தர்கள் ஆகியவர்கள் அவர் களும் திராவிடர்களே. ஆனதால், அவரவர்கள் சமயம், ஆத்மார்த்தம் என்பவற்றின் உணர்ச்சி இன்றுள்ளது போலவே அவரவர்கள் இஷ்டப்படி இருக்கும்.

ஆரியர்கள் நிலையும் அதுபோலவே—மற்றவர்கட்கு நட்டமும், கேடும், இழிவும் இருப்பதற்கு இல்லாத நிலையில்—சம உரிமையோடிருக்கும்.

[சென்னையில் 19-11-1944 முதல் 22-11-1944 முடிய சொற்பொழிவு—'குடிஅரசு' 2-12-1944]

தோழர்களே!

நம் சமுதாயத்திலும், சமயத்திலும், நாட்டு உரிமையிலும்—நாம் 'இந்தியர்', 'இந்துக்கள்', 'பாரத மக்கள்' என்று சொல்லிக்கொள்வது தவறு என்றும், நாம் நம்மை 'திராவிடர்', 'பகுத்தறிவுவாதிகள்', 'திராவிட நாட்டவர்' என்று சொல்லிக்கொள்ள வேண்டும் என்றும் திருவாரூர் மாநாட்டில் 1940 ஆம் வருடத்திலேயே தீர்மானித்துக் கொண்டிருக்கிறோம்.

ஏனெனில், இந்த எண்ணம் நமக்கு இல்லாத காரணத்தாலேயே நாம் குறை களுக்கும், இழிவுகளுக்கும், முற்போக்குத் தடைகளுக்கும் ஆளாகி இன்றைய ஈனநிலையில் இருக்கிறோம்.

நாம் நம்மை இந்துக்கள் என்று சொல்லிக்கொள்வோமானால் இந்து சமயத்தின் வருணாசிரம தர்ம முறைப்படி—அதாவது பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், அவர்ணர் என்கின்ற 5 பிரிவுகளில் நாம் 4-வது, 5-வது பிரிவுக்கு ஆளாகி—மிகுதியும் தாழ்மையும், இழிவும் இருக்கிற ஈனமக்களாக ஆகிவிடுகிறோம்.

இவை சட்டப்படியும், சமயப்படியும், சாஸ்திரப்படியும், அமுலில் இருந்துவரும் நடவடிக்கைக் கிரமப்படியும் நம்மைச் செய்துவிடுகின்றன என்பதோடு—இதை நாமே மனப் பூர்வமாய் ஒப்புக்கொண்டு ஏற்றுக் கொண்டவர்களாகவும், சகித்துக்கொண்டு இருப்பவர் களாகவும் ஆக்கிவிடுகின்றன.

[திருச்சியில், சொற்பொழிவு—'குடிஅரசு' 29-9-1945]

கழக இலட்சியத்தை—நீதியும் சமாதானமுமான முறையில் இந்தியாவிற்குப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குட்பட்ட சுயராஜ்யம் பெறவேண்டும் என்பதாக, கட்சியின் இலட்சியம் இருந்து வந்தது. பெரியார் நீதிக்கட்சியின் தலைவராக வந்ததும் முதல் மாநாட்டிலேயே (1938-ல்) இந்தியா பூரண சுயேச்சை அடையப் பாடுபடவேண்டியது

என்பதாகத் திருத்தப்பட்டது. இப்போது திருச்சி மாநாட்டில் (1945) இந்தியா என்கிற வார்த்தையே எடுக்கப்பட்டு திராவிடநாடு அரசியல், சமுதாயம், பொருளாதாரம், தொழில் துறை, வியாபாரம் ஆகியவற்றில் பூரண சுதந்திரமும் ஆதிக்கமும் பெறவேண்டும் என்பதாகவும்,

திராவிடநாடும், நாட்டுமக்களும் திராவிட நாட்டவர்கள் அல்லாத அன்னியரின் எல்லா விதமான சுரண்டல்களிலிருந்தும் ஆதிக்கத்திலிருந்தும் விடுவிக்கப்பட்டு, காப்பாற்றப்படவேண்டும் என்றும்,

திராவிடநாட்டு மக்களிடத்தில் சமயம், சமயாசாரம், பழக்க வழக்கம் என்பவைகளின் பேரால் இருந்துவரும் பேத உணர்ச்சி, மூடநம்பிக்கை ஆகிய இவைகள் மறையச் செய்து—மக்களைத் தாராள நோக்கமும் நல்ல அறிவு வளர்ச்சியும் பெற்ற ஒன்றுபட்ட சமுதாயமாகச் செய்யவேண்டும் என்றும்,

இவைகள் வெற்றிபெறுகிற வரை சாதி, சமயம், வகுப்பு, பேதம் ஆகியவை உள்ள மக்களுக்கு நம்மிடம் முழு நம்பிக்கையும் நல்லெண்ணமும் ஏற்பட்டு மேற்கண்ட முயற்சிகளுக்கு நம்மோடு களங்கமற்று ஒத்துழைக்கவேண்டிய அவசியத்திற்காக, அவர்களுக்கு எண்ணிக்கை, அவசியம் ஆகியவைகளுக்குத் தக்கபடி முக்கியமான துறைகளிலெல்லாம் பிரதிநிதித்துவம் கிடைக்கும்படி செய்யவேண்டும் என்றும் திருத்தப்பட்டிருக்கிறது.

['குடி அரசு'-தலையங்கம்—6-10-1945]

தோழர்களே!

இன்று, நம் நாட்டில் சகல துறைகளிலும் அன்னிய ஆதிக்கமே உள்ளது. நீங்கள் உங்கள் 'மில்' காவலாளி அன்னியன்; அவன் கூடாது என்கின்றீர்கள். ஆனால், மற்ற விஷயத்தில் பாருங்கள்! இந்த நாட்டுத் தலைவர்கள் அன்னியர்கள்; இந்நாட்டு அதிகாரிகள் பெரிதும் அன்னியர்கள்; இந்நாட்டுப் பிரதம மந்திரி அன்னியர்; மற்றும் எவ்வளவோ ஜீவநாடியான முக்கியஸ்தர்கள் அன்னியர்கள்.

இந்தப்படி, அன்னியர் என்பவர்கள் யாரென்றால்—நம் இனத்தவரல்லாதவர், நம் மொழியினரல்லாதவர், நம் வகுப்பினரல்லாதவர், நம்மைச் சமமாகக் கருதுபவரல்லாதவர், நம்மைச் சுரண்டாதவரல்லாதவர், நம்மை இழிமக்களாய்க் கருதாதவரல்லாதவர்களும், நம்மை இந்நாட்டுக் கல்வி, ஆட்சி ஆகியவைகளுக்குத் தகுதியற்றவர்கள் என்பவர்களும், நம் நாட்டுப் பழக்க வழக்கம், நாகரிகம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்டவர்களும், நம் திராவிட நாட்டு இன்றைய எல்லைக்கு வெளிப்பட்டவர்களும் அன்னியர்களேயாவார்கள் என்கின்றேன். இந்த உணர்ச்சி நம் மக்களுக்கு வருவதற்காகக் குறைந்த அளவு, அன்னியன் காவல்காரனாக இருக்கக்கூடாது என்கின்ற உணர்வு உங்களுக்கு வந்தது போற்றக்கூடியதேயாகும்.

நம் நாட்டாட்சியில் இன்று பிரதம மந்திரி அன்னியர். அதாவது, அவர் நம் இனத்தவரல்லர்; நம் வகுப்பினரல்லர்; நம்மைச் சரிசமமாய்ச் சமுதாயத்தில் கருதுபவரல்லர்; நம் மக்களைவிட எந்தவிதத்திலும் புத்தியில், திறமையில், நேர்மையில் மேம்பட்டவருமல்லர். அப்படிப்பட்ட ஒருவர் இன்று ஆட்சிமன்றத்தில் உங்களுக்குப் பிரதமராய் இருக்கக் காரணம் என்ன? திராவிடரின் மான உணர்ச்சியற்றதனம் என்பதல்லாமல், வேறு என்ன சொல்லமுடியும்?,

நம் அரசியல் தலைவர்கள் அன்னியர்கள். நம் பண்டிதர்களும், மகாத்மாக்களும், 'மவுலானா'க்களும், 'சர்தார்'களும்—ஏன் நம் நாட்டவராய், நம்மவராய் இருக்கக்கூடாது? காவல்காரர்கள்கூட நம்மவராய் இருக்கவேண்டும் என்று கருதிய உங்களுக்கோ, உங்கள் ஸ்தாபனங்களுக்கோ, உங்கள் தலைவர்களுக்கோ இந்தக் கவலை எப்போதாவது

தோன்றியதுண்டா? உங்கள் நாட்டவரில் ஒருவரை மகாத்மாவாகச் செய்துகொள்ள, சொல்லிக்கொள்ள உங்களுக்கு ஆள் இல்லையா? உங்கள் இனத்தவர் ஒருவரை, உங்கள் வகுப்பினர் ஒருவரை இராஷ்டிரபதியாக ஆக்கிக்கொள்ள உங்களுக்கு ஆளில்லையா? இருந்தும் உங்களுக்கு அது விஷயத்தில் கவலையும் மானமுமில்லையே, ஏன்?

தோழர்களே! இந்த நாடும், இந்த இனமும், சுதந்திர உணர்ச்சியும், சுயமரியாதைத் தன்மையும் கொண்டதானால், இங்கு—'நேரு பார்க்', 'காந்தி சவுக்', 'திலகர் கட்டடம்' இருக்கலாமா? இதற்குப் பெயர்தானா சுயேச்சை யென்பது? இதற்குப் பெயர்தானா சுயமரியாதையுள்ள நாடு என்பது? இவைகளைப் பார்த்து உங்கள் மனம் பதறவில்லையே! வயிறு எரியவில்லையே!

'தென்னாப்பிரிக்காவில் வெள்ளையர் அட்டூழியம்' என்கின்ற உங்களுக்கு, திராவிட நாட்டில் ஆரியன் அட்டகாசம், திராவிட நாட்டில் திராவிடர்களை ஆரியன் சித்திரவதை செய்கிறான், திராவிட நாட்டில் திராவிடரை ஆரியன் தீண்டப்படாதவன் என்கிறான்; தாசி மகன், வேசிமகன், அடிமை என்கிறான்—என்று எந்தத் திராவிடனுக்கு மான உணர்ச்சி ஏற்பட்டு உள்ளம் துடிக்கிறது? இரத்தம் துடிக்கிறது? திராவிடர்களுக்கு ஆரியனா குரு சந்நிதானம்? திராவிடனுக்கு ஆரியனா எஜமான், அதிகாரி, ஜட்ஜ், கலெக்டர், மாஜிஸ்ட்ரேட், குலகுரு? நாம் சிறிதும் மான உணர்ச்சியற்ற சமுதாயம், நம் நாடு ஒரு காட்டுமிராண்டி அடிமை நாடு என்பதற்கு இதைவிட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

தென்னாப்பிரிக்காவிலே உள்ள வெள்ளையன்—திராவிடர்களை இந்திய ஆரியன் நடத்துவதில், கொடுமைப் படுத்துவதில், இழிவு செய்வதில் நூறில் ஒரு பங்கு செய்கிறானா? தோழர்களே, தென்னாப்பிரிக்க வெள்ளையர்களைக் குறை கூறுபவர்கள், அவர்கள்மீது மக்களுக்குத் துவேஷத்தை உண்டுபண்ணுகிறவர்கள்—இதே ஆரியர்கள்தாம். ஆனால், அதைவிடக் கொடுமையாகத் திராவிடர்களை நடத்துகிறவர்கள் இந்த ஆரியர்கள்தாம். இதை உணராமல் ஆரியனுக்கு வால்பிடித்து அனுமாராய் அவர் பின் திரிபவர்கள் திராவிடர்கள். இதுதானே, இன்றைய நம் நிலைமை?

இன்று இந்தத் தமிழ் நாட்டில் ஆரிய அட்டூழியம் எவ்வளவு என்பது உங்களுக்குத் தெரியுமா? ஆரிய ஆதிக்க மந்திரி சபை வந்தநாள் தொட்டு நம்மவர்களுக்குக் கண்டகண்ட பக்கமெல்லாம் அடி, உதை, குத்து, வெட்டு, கொடுமை, கொள்ளை, வழிப்பறி நடந்த வண்ணம் இருக்கின்றன. இதைப்பற்றி யார் கவலைப்பட்டார்கள்? இந்தமாதிரி ஆரியர்களுக்கோ, ஆரியப் பெண்களுக்கோ, ஆரியக் கொட்டகைகள், கட்டடங்கள் ஆகியவைகளுக்கோ நடந்திருந்தால்—அவர்கள் எவ்வளவு முயற்சிகள் எடுத்துக் கொண்டிருப்பார்கள்? எவ்வளவு சீக்கிரம் அடக்கியிருப்பார்கள்? இன்று நாம் செல்லும் பக்கங்களில் எல்லாம்—நம் கூட்டங்கள் நடக்கும் பக்கங்களிலெல்லாம் நடக்கும் அட்டூழியங்களைப் பாருங்கள். திராவிட வாலிபர்களுக்கு, மாணவர்களுக்கு, தொழிலாளர்களுக்குச் சிறிதாவது மான உணர்ச்சி, இன உணர்ச்சி இருக்கிறதா என்று கேட்கிறேன். மே மாதம் 12ஆம் தேதி மதுரை காலித்தனம் ஒருபுறமிருக்க—அதற்கப்புறம் பல நடந்திருக்க, சென்ற மாதம் 23ஆம் தேதி சேலம் காங்கிரஸ்காரர்கள் செய்த அட்டூழியத்தால் ஒரு திராவிடனுக்குக் கால் வெட்டப்பட்டுவிட்டது; ஒரு திராவிடனுக்குக் கண் அடிபட்டு நசுங்கி ஒழுகிப் போய் விட்டது; 30, 40 திராவிடர்களுக்கு அடி, உதை, குத்து என்பதுடன் 10, 12 பேர்கள் ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்கள். இதே மாதிரியாக நீடாமங்கலத்திலும் காலித்தனம் நடந்திருக்கிறது. இதன் காரணமென்ன? மற்றும் பல இடங்களில் கண், மூக்கு போய்—பெண்களுடன் பலர் அடிபட்டு, ஆஸ்பத்திரியில் இருக்கிறார்கள். இதுவரை சுமார் 10, 15 திராவிடர்கள் கொல்லப்பட்டு இருக்கிறார்கள். இதற்குக் காரணம் என்ன? ஆரிய மந்திரி அரியாசனம் ஏறியதால்—திராவிட மக்கள் அந்த மந்திரிகளின் கால் கழுவித் தீர்த்தம் பருகுவதால் அல்லாமல், வேறு என்ன காரணம்? நம் நாட்டில் நம்மவர்களுக்கு, நம் மக்கள் நலத்

திற்குப் பாடுபடும் தொண்டர்களுக்கு இதுதான் கதியா என்று கேட்கின்றேன். இந்த மந்திரிகள் பதவிக்கு வருமுன் இந்த அட்டூழியம், அயோக்கியத்தனம், காலாடித்தனம் இப்படி நடந்ததா என்று கேட்கின்றேன்.

ஆரியர் பதவிக்கு வந்தார்கள். ஆங்காங்குள்ள ஆரியப் புரோகிதர்கள் 'மாமா'க்கள், அர்ச்சகர்கள், அதிகாரிகள் முதல்—ஆணவம் பிடித்துத் தலைகொழுத்து ஆடுகிறார்கள்; மக்களைத் தூண்டிவிட்டு, கள் ஊற்றி, நம்மீது காலித்தனத்துக்கு ஏவுகிறார்கள். அதிகாரிகள் ஆதரவு இருப்பதாலும் எப்படிப்பட்ட அக்கிரமம், அட்டூழியம், கொலை, கொள்ளை, நாசவேலை, சித்திரவதை செய்தாலும் கேட்கமாட்டார்கள் என்றும்; கேட்கப் பட்டாலும் நடவடிக்கை எடுக்கப்படமாட்டாது என்றும்; நடவடிக்கை எடுத்தாலும் மந்திரிகள் சிபாரிசால் தண்டிக்கப்பட மாட்டார்கள் என்றும்; தண்டிக்கப்பட்டாலும் மந்திரிகளால் விடுதலை செய்யப்படுவார்கள் என்றும்; விடுதலை மாத்திரமல்லாமல் வாத்தியம், மாலை ஊர்வலத்துடன் வரவேற்கப்படுவார்கள் என்றும்—காலிகளுக்கும், குழப்பக்காரர்களுக்கும், கூலிகளுக்கும் தைரியம் கொடுக்கப்பட்டு, காரியத்திலும் காட்டப்பட்டு இருப்பதாலும்—ஒன்றும் அறியாத திராவிட மக்கள் வெறியர்கள் போல் நடத்தப்பட்டு விடுகிறார்கள்.

தோழர்களே! நமக்கு, இனிப் பாதுகாப்பு மிக மிகக் குறைவுதான். கேள்வி இல்லை; கேட்பாருமில்லை. ஆரியப் பேய், இன்று தலைவிரித்தாடுகிறது. திராவிட மண்டுகள் பல அதற்கு உடுக்கை அடிக்கின்றன. இந்த நிலையில் அன்னியர் ஒழியவேண்டும்; அவர்கள் ஆதிக்கம் அழிய வேண்டும் என்கின்ற பிரச்சினையில் எங்களுக்கு முழு அனுதாபம் உண்டு. தொழிலாளத் தோழர்களே! நீங்கள் செய்யும் சமாதானமான கிளர்ச்சிக்கு எங்களால் கூடிய எல்லா ஆதரவும் தருகிறோம்.

நீங்கள் திராவிடர்கள்; நாங்கள் திராவிடர்கள். நம்மை இழிவுபடுத்திக் கொடுமைப் படுத்தித் துன்பப்படுத்தி நடத்துகிறார்கள் ஆரியர்கள். இதை நீங்கள் உணர்ந்துவிட்டால் நமக்கு இந்தக் கஷ்டமிருக்காது. ஆகவே, தொழிலாளத் தோழர்களே! இதுவரை நடந்து போனது போகட்டும். இனியாவது, திராவிடர்கள் யாவரும் கட்டுப்பாடாய்—ஆரியர்கள் போல் ஒற்றுமையாய், ஒருமனப்பட்ட இலட்சியமாய் நடந்துகொள்ளுங்கள். நீங்கள் தொழிலாளர்கள் என்றாலும், நாங்கள் உங்கள் தொண்டர்கள். உங்களுக்காகவே உயிர் வாழ்பவர்கள், இதை உணருங்கள்!

[திருவல்லிக்கேணியில் சொற்பொழிவு—'விடுதலை' 2-7-1946]

**தோழர்களே!**

இன்று நீங்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறீர்கள். இதை நாங்கள் முழுமனதோடு ஆதரிக்கிறோம். ஆனால், கூலி உயர்வுக்குச் செய்யும் வேலை நிறுத்தத்தை நாங்கள் அவ்வளவு முக்கியமானதாகக் கருதுவதில்லை. ஏனெனில், அது தொழிலாளிகளை தொழிலாளர்களாகவே இருக்கவைக்கும் வேலை என்பதே எங்கள் கருத்து. ஏனென்றால், தொழிலாளிக்கு அதிகக் கூலியும், வீடு, வைத்தியம், படிப்பு வசதியும் முதலாளி செய்வது என்பது, ஒருவன் தன் மனைவியை எப்போதும் அடிமையாய் அடைத்துத் தனது நலனுக்கு வைத்திருப்பதில், அவளை அந்தக் காரியத்தில் உற்சாகமூட்டி நல்ல பக்தி விசுவாசமுள்ள அடிமையாகச் செய்ய, தங்க வைரநகைகள், பட்டுச்சேலை, சீப்பு, சோப்பு, கண்ணாடி, வாசனை எண்ணெய், பவுடர் வாங்கிக் கொடுப்பது போலவே தவிர, சம உரிமை அடைவதற்கல்ல என்பது போலவேயாகும்.

தொழிலாளிக்கு வேண்டியது கூலியும், நல்வாழ்க்கை வாழச் செலவுமே அல்ல என்பதை ஒவ்வொரு தொழிலாளியும் கவனத்தில் வைக்கவேண்டும். அவனுக்கு

வேண்டியது தொழிலின் பயனை சம உரிமையுடன் அனுபவிக்க வேண்டும். அடைய வேண்டும் என்பதோடு, தான் அந்த இயந்திர சாலைக்கு ஒரு கூட்டாளியாக, பங்காளியாக இருக்க வேண்டுமேயொழிய, ஒரு தொழிலாளியாக, வேலைக்காரனாக இருக்கக்கூடாது என்பதேயாகும். தொழிலாளி-முதலாளி தன்மைமுறை இருக்கவேகூடாது. 'தொழிலாளர் சங்கம்' என்கின்ற பெயரும் இருக்கக்கூடாது. தொழிற்சாலைக்கு—அங்கு வேலை செய்பவர்கள், பங்காளிகளாக இல்லாமல் கூலிக்காரர்களாக இருப்பதென்பது—முட்டாள் தனம், அடிமைத்தனம், மானமற்றதனமாகும்.

தொழிலாளி தன் சரீரத்தினால் நேரே பாடுபடுகிறான். முதலாளி என்பவன், வேறு தொழிலாளிகள் பாடுபட்டபாட்டின் பயனாய் மீதப்படுத்தப்பட்ட பணத்தை, முதலாகப் போடுகிறான் என்பதல்லாமல் முதலாளிக்கு முதல் ஏது? சரீர உழைப்பு ஏது? பல தொழிலாளிகளை மோசம் பண்ணி, அவர்களுக்குச் சரி பங்களிக்காது வஞ்சித்த பொருளல்லாமல் எப்படி முதலாளிக்குப் பொருள் வந்தது? பாடில்லாமல் பணம் ஏது? பாடில்லாத பணம் திருட்டுதானே? ஆகவே, மோசம் பண்ணின, வஞ்சித்த, திருடிய பணத்துக்கு இலாபம் பூராவும் தருவதும்; பாடுபட்டவனுக்குச் சோறுமாத்திரம் என்றால்—கொஞ்சம் நல்லசோறு என்றால், இதுவா தொழிலாளர் இயக்க இலட்சியம் என்று கேட்கிறேன்?

பணத்தைப் போட்டு இயந்திரம் வாங்கி, தொழிலாளியைப் போட்டு வேலை செய்தால் தானே இலாபம் வருகிறது? இந்த இலாபத்தில் பெரும்பாகம் வேலைக்காரர்தானே கிடைக்க வேண்டும்? முதலுக்குச் சிறு வட்டிதானே கிடைக்கவேண்டும்? அதுவும் மிஷினுக்கு எண்ணெய் போடுவது எப்படியோ, எஞ்சினுக்கு விறகு போடுவதெப்படியோ—அதுபோல் அதில் வேலை செய்பவருக்கும் அந்த 'மனித மிஷின்' கெடாமல், எண்ணெயும் விறகும் போல் நல்ல சாப்பாடும், நல்ல சுகமும் கொடுக்க வேண்டியது இயற்கைத் தர்மமாகும். ஆகவே, நிர்வாகஸ்தன் சம்பளம், முதலுக்கு வட்டி, மிஷினுக்கு எண்ணெய் விறகு என்பன போல்—தொழிலாளிக்கும் வாழ்க்கைச் சவுகரியம் செய்து கொடுத்து விட்டு, மீதியுள்ள இலாபத்தில் மிஷின் தேய்மானத்திற்கு ஒரு தொகை ஒதுக்குவது போல், தொழிலாளியின் ஓய்வுகால நல்வாழ்க்கைக்கும் ஒரு தொகை ஒதுக்கிவைத்துவிட்டு மீதியையே முதலும், வேலையும் பங்கிட்டுக்கொள்ளவேண்டும். நாளாவட்டத்தில் இயந்திரசாலை, தொழிற் சாலைகள் தொழில் செய்பவர்களுக்குச் சரிபாக சொந்தமாக ஆகவேண்டும். இதற்காக வல்லவா—இந்தக் காரியத்திற்கல்லவா தொழிலாளர் இயக்கம், கம்யூனிஸ்ட் இயக்கம் ஆகியவை இருக்கவேண்டும்? ஆனால், இன்று இவையிரண்டும் முதலையும் முதலாளி களையும் பெருக்கிக் கொழுக்க வைத்து, தொழிலாளிகளுக்கு மயக்கத்தைக் கொடுக்கும் மதுபோல்—கொஞ்சம் கூலி உயர்வும், சிறிது சவுகரியமும் செய்து கொடுத்து, அவர்கள் என்றும் தொழிலாளிகளாகவே இருக்க வைக்கும் சதிவேலை ஸ்தாபனமாக இருந்து வருகின்றன.

இதிலிருந்து தெரிவதென்ன வென்றால், நம் நாட்டுத் தொழிலாளர் ஸ்தாபனங் களுக்கும், தொழிலாளர் தலைவர்களுக்கும், தொழிலாளிகளுக்கும் இனிவேண்டியது என்ன என்பதே தெரியாது என்றுதான் சொல்ல வேண்டும். காரல் மார்க்சின் காலம் வேறு; லெனின் காலம் வேறு; இந்தக் காலம் வேறு. இந்தக் காலத்துக்கு வேண்டியது பழைய காலத்தில், பழைய காலப் பெரியார்கள் கண்டுபிடித்தும், சொன்னது மாகியவற்றில் இருக்க முடியாது; அவை போதாது. 1946 ஜூன் மாதத்திய இரயில்வே கைடு—ஜூலை மாதத்துக்குச் செல்லாது; இரயில் தவறிவிடும். ஆகவே, தொழிலாளிகள் தங்களை இனி அரை நிமிடமும் தொழிலாளி என்றெண்ணாமல், முதலாளிகள்—சொந்தக்காரர்கள் ஆகப் போகிறவர்கள் என்று எண்ணவேண்டும். இதற்கு அவர்கள் இன்றைய சுயநலப் புலிகளான தலைவர்களிடமிருந்து விடுபட வேண்டும். புராண வாழ்வுக்காரர்களை, பார்ப்பனர் (பிராமணர்)களை விட்டு விலகவேண்டும். பார்ப்பனர்களைவிட—புராணக்காரர்களான

பார்ப்பன அடிமைகளைவிட, முதலாளிகள் அதிகம் கெட்டவர்கள் அல்லர். ஆகவே, தொழிலாளத் தோழர்கள் என்கின்றவர்களே! நீங்கள் முதலில் உங்கள் ஆசாபாசங்களையும் இலட்சியங்களையும், ஸ்தாபனங்களையும், தலைவர்களையும் திருத்திக்கொள்ளுங்கள். இதுவரை நான் உங்களுக்குத் தொழிலாளர்களைப்பற்றிய எனது கருத்தை, திட்டத்தை முகவுரையாகச் சொன்னேன்.

இனி, உங்கள் விஷயமாகிய தற்காலப் பிரச்சினை பற்றிப் பேசுகிறேன்: அதாவது, நீங்கள் இப்போது வேலை நிறுத்தம் செய்திருக்கும் விஷயம்பற்றிப் பேசுகிறேன்.

உங்கள் வேலை நிறுத்தத்திற்கு என்ன காரணம் இருந்தாலும், வெளிநாட்டுப் 'பட்டாணியர்'களைக் கொண்டு வந்து உங்களுக்குக் காவல்காரர்களாகப் போட்டு அவர்கள் மரியாதையில்லாமல் உங்களிடம் நடந்துகொள்ளும் மூர்க்கத்தனத்தைப்பற்றி நீங்கள் வருத்தமடைந்து, இனி, அப்படிப்பட்ட அயலார் ஆதிக்கமும் அத்துமீறின காரியமும் 'மில்'லில் இருக்கக்கூடாது என்கின்ற கருத்தின்மீது வேலை நிறுத்தம் செய்திருக்கிறீர்கள். இந்த உணர்ச்சி உங்களுக்கு ஏற்பட்டது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். இது இன்னும் ஒவ்வொரு துறையிலும் ஒவ்வொரு திராவிடனுக்கும் ஏற்படவேண்டியது அவசியமாகும். அதற்காக நீங்கள் செய்யும் கிளர்ச்சி பாராட்டத்தக்கதேயாகும். உங்கள் மில் முதலாளிகள் இதற்கு இணங்க வேண்டியது அவசியமும் நேர்மையுமாகும். உங்கள் முதலாளிகள் நிர்வாகிகள் யார்? உங்களுழைப்பால் பயனடைபவர்களேயாவார்கள்.

உங்கள் உழைப்புக்குக் கூலி, அதாவது உங்களுக்குச் சாப்பாடு போட்டுவிட்டதால் அவர்கள் கடன் தீர்ந்துவிட்டதாகக் கருதக்கூடாது. ஒவ்வொரு ஜீவனுக்கும் உணவு என்பது இயற்கை நியதியாகும். அனேக ஜீவன்கள் உழைப்பில்லாமலே உணவு கொண்டு ஜீவிக்கின்றன. அனேக மனித ஜீவன்களும் உழைப்பில்லாமல் பெருவயிறோடு நடமாடுகின்றன. நீங்கள் உழைத்துவிட்டு உணவு கொண்டு ஜீவிப்பதென்பது மற்றவர்களுடைய உதவியாலல்ல; அது இயற்கையாலேயே, நிர்ப்பந்தத்தாலேயாகும்.

உங்கள் உழைப்பால், உங்கள் முதலாளிகள் உணவு கொள்வதுடன் இலாபம் அனுபவிக்கிறார்கள். பொதுமக்கள் இயற்கை நியதிப்படி உணவு கொள்வதுடன் உங்கள் உழைப்பால் ஆடை அணிகிறார்கள். ஆகவே, உங்கள் முதலாளிகளும் பொதுமக்களும் உங்களுக்கு உணவைத் தவிர வேறு காரியங்களுக்கும் அவர்கள் கடமை, கடன்பட்டிருக்கிறார்கள். அந்த முறையில் முதலாளிகள் உங்களுடைய இந்த விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவேண்டியவர்களாவார்கள். இந்தப் பிரச்சினை உங்களுடைய உணவு சவுகரியத்தைப் பற்றியதல்ல; உங்கள் சுயமரியாதையைப்பற்றியது. உங்களுடைய சுயமரியாதையை மாத்திரம் பற்றியதல்ல; திராவிட நாட்டையும், திராவிட சமுதாயத்தையும் பற்றிய சுயமரியாதையைப் பொறுத்தது. ஆகவே, இதில் வெற்றி பெற்றாலும், பெறாவிட்டாலும் போராடியே தீரவேண்டிய பிரச்சினையாகும். நாடு விடுதலை, நாடு சுதந்திரம், நாடு சுயமரியாதை பெற்றுவிட்டது என்றால் என்ன அர்த்தம்? அன்னியனும், அன்னிய நாட்டான் ஆதிக்கமும், வியாபாரப் பெருமையும், தலைமையும் இந்த நாட்டில் இருப்பது தான் அர்த்தமா என்கின்றேன்.

[திருவல்லிக்கேணியில் சொற்பொழிவு—'விடுதலை' 2-7-1946]

தலைவரவர்களே! தோழர்களே!

எனது கவலை, இலட்சியம் யாதெனில் அன்னியன் என்றால் வெள்ளையன், பனியா, மூல்தானி, மார்வாடி, காஷ்மீரி, குஜராத்தி ஆகிய இவர்கள் ஆதிக்கத்திலிருந்து—அதாவது எந்தவித ஆரிய ஆதிக்கத்திலிருந்தும் விலகுவதும், பிரிட்டிஷ்காரன், அமெரிக்கன், ரஷ்யன், மேற்கண்ட மார்வாடி, பனியா, பார்ப்பனன், மேல் லோகத்தான் என்பவன்

எவனும் நம்மைச் சுரண்டக்கூடாது என்பதும் ஆகும். இங்கு உள்ள பார்ப்பனன் சமுதாயத்தின் பேரால், ஆரியத்தின் பேரால் சுரண்டக்கூடாது என்றும், மீறி எவன் சுரண்டினாலும் திராவிட நாட்டை விட்டு வெளியே கொண்டு போகக்கூடாது என்றும் சொல்லுகின்றோம்.

விளக்கமாக—சென்னை மாகாணம் முழு சுயேச்சையுடன் இருக்கவேண்டும்—பிர்லாக்கள், டாட்டாக்கள், மகாத்மாக்கள், நேருக்கள், வெள்ளைக்காரர்கள் யாராயிருந்தாலும் சென்னை மாகாணம் என்னும் திராவிட நாட்டு எல்லைக்குள் நுழையவேண்டுமென்றால், 'பாஸ்போர்ட்'—அனுமதிச்சீட்டு வாங்கிக்கொண்டுதான் உள்ளே நுழைய வேண்டும். எந்த வடநாட்டானும், நமது நாட்டுக்குத் தலைவனாகவோ, இராஷ்டிரபதியாகவோ, மகாத்மாவாகவோ இருக்கக்கூடாது. மனிதரெல்லாம் சமமாக வாழவேண்டும். மனித வர்க்கத்திலே, பறையனோ, சூத்திரனோ, சக்கிலியோ, பிராமணனோ, இழி சாதியானோ இருக்கக்கூடாது. உலகநாடுகள் பெற்றுள்ளதைப்போல நமது நாடு சுதந்திரம் பெற்றுத் தனிநாடாக இருக்கவேண்டும். அய்ந்து கோடி மக்களிலே யார் வேண்டுமானாலும் மந்திரியாகவோ, மகாத்மாவாகவோ இருக்கட்டும். நம்மிலே அத்தகைய தகுதியுடையவர்கள் இல்லையா ?

நமக்கு அரசியல் தெரியும். பரம்பரை பரம்பரையாகக் கப்பலோட்டி வாணிபம் செய்தவர்கள் நாம். பிறன் ஆதிக்கம், உயர்வு இங்கு வேண்டாம். திராவிடர்கள் இங்கு 'நான்காவது சாதி'யினராக இருக்கின்றார்கள். திராவிடரல்லாத ஒரு கூட்டம், முதலாவது சாதியாக இருக்கின்றது. நூற்றுக்குத் தொண்ணூறு பங்காகவுள்ள திராவிட இனம் இன்று சட்டத்திலே, சாஸ்திரத்திலே சூத்திரனாக பஞ்சம, இழிமகனாக வாழ்கின்றது. திராவிடன் மனிதனாக வாழ வேண்டாமா ? திராவிடநாடு, இழிமக்கள் இல்லாத நாடு ஆகவேண்டாமா ? இந்தக் காலத்திலே சிம்மாதனத்திற்கோ, மகுடத்திற்கோ மதிப்பில்லை. 'ஜனநாயக ஆட்சியே இக் காலத்திற்குத் தேவை' எனப்படுகிறது. நாணயம், ஒழுங்கு, மனிதத் தன்மையுடன் யார் வேண்டுமானாலும் அதிகாரம் செலுத்தட்டும். இந்தியா என்னும் இப் பரந்த உபகண்டம் சுமார் மூவாயிரம் மைல் நீளம், இரண்டாயிரம் மைல் அகலம் உள்ளதாக இருக்கின்றது. இங்கு மக்களிடையே பண்டைக் காலந்தொட்டு இன்று வரையில் பல பேதங்கள் வளர்ந்துவந்துள்ளன. ஒருவர் வீட்டில் ஒருவர் சாப்பிடுவதற்கில்லை; மணந்து கொள்வதுமில்லை. பல மொழிகள், பல நாகரிகங்கள், பல உயர்வு-தாழ்வுகள் ஆகிய வித்தியாசங்கள் இருந்துவருகின்றன. இத்தகைய பேதம் உள்ள பிரதேசம் உலகத்தில் எங்குமே இல்லை. இவ்வளவு வேற்றுமைக் கருத்துடைய ஒரு பெரிய உபகண்டத்தை—ஒரே நாடு என்றும், ஒரே ஆட்சியில் இருக்கவேண்டுமென்றும் சொன்னால் இதை நாம் எப்படி ஒப்புக்கொள்ள முடியும் ? நாம் கேட்கின்றபடியே உபகண்டத்திலிருந்து திராவிட நாட்டைத் தனியாகப் பிரிக்கவேண்டுமென்றால், இதில் யாருக்கு—எந்த இந்தியனுக்கு என்ன அசவுகரியம் ஏற்படுகின்றது ? திராவிடநாடு தனியாகப் பிரிந்தால் கிழக்கே கன்னியாகுமரி முதல் பர்ஹாம்பூர் வரையும்; மேற்கே பம்பாய் வரையிலும் ஆயிரம் மைல் நீளமுள்ள கடற்கரை நமக்குக் கிடைக்கின்றது. கிழக்கரை முதல் சிக்மகளூர் வரை அகலமான ஆறுகள், அகண்ட அணைகள், ஏரிகள் உயர்ந்த நன்செய் நிலங்கள், முத்துக் கொழிக்கும் கடல்கள், தங்கம் விளைகின்ற பல கனிகள் மலைகள் நமக்குண்டு. இத்தகைய திராவிட நாட்டை அதிலுள்ள 5 கோடி மக்களுக்காகப் பிரித்தால்—இந்தத் திராவிட மக்களுக்கு என்ன கஷ்டம் இருக்கமுடியும் ? சிறிய, சிறிய நாடுகளாகிய துருக்கி, கிரீஸ், ஸ்வீடன், லிதுவேனியா, சுவிட்சர்லாந்து, டென்மார்க், பெல்ஜியம், அயர்லாந்து முதலிய 20, 30 நாடுகள் தனித்தனி வல்லரசுகளாக விளங்கவில்லையா ? நாம் தனி ஆட்சியாக ஏன் இருக்க முடியாது ? இப்படிப்பட்ட நமது நாட்டுக்குத்தான் நாம் பூரண சுயேச்சை கேட்கிறோம்.

வெள்ளையன் (ஆங்கிலேயன்) எங்களுக்கு வேண்டாம்; அவன் எதற்கும் எங்களுக்குத் தேவை இல்லை. நாட்டை ஆண்டு வந்த நாங்கள், வெள்ளையன் வந்த பிறகு, பியூனாக, பட்லராக, கான்ஸ்டபிளாக இருக்கின்றோம். ஆனால், பிச்சை எடுத்த கூட்டத்தார் இன்று அய்க்கோர்ட் ஜட்ஜாக, அட்வகேட் ஜனரலாக, திவானாக, மந்திரியாக, சங்கராச்சாரியாக, பகவான்களாக இருக்கின்றனர்.

பார்ப்பனர்கள், ஜட்ஜு முதலிய பெரிய பதவிகளில் இருக்கின்றார்கள். அதனால் அவர்களுக்கு வெள்ளையன் இருப்பதால் நஷ்டமொன்றுமில்லை. எங்களுக்குத்தான் முதலில் வெள்ளையன் வெளியே போக வேண்டுமென்ற கவலை—ஏனெனில், நாங்கள்தான் வெள்ளையனுக்கும் ஆரியனுக்கும் அடிமைகளாக இருக்கிறோம்.

கம்யூனிஸ்ட் கட்சியார் 'மில்'லிலும் 'எஞ்சினி'லும் வேலை செய்யும் தொழிலாளர்களையே தொழிலாளர்களாகக் கருதுகின்றார்கள். சரீரத்தினால் பாடுபடும் சூத்திரப் பட்டம் தாங்கிய 4 கோடி மக்களும் தொழிலாளர்களல்லவா? 'சூத்திரனைக் கூலி இல்லாமல் பார்ப்பான் வேலை வாங்கலாம்' என்று மனுதர்ம சாஸ்திரம் சொல்லுகின்றதே! இது கடவுளின் கட்டளையாம்! 'திராவிடர் சங்கம்' என்றால் சூத்திரன் சங்கம் என்றுதானே கருத்து! இதற்குத்தானே—இப்படிச் சொல்ல வெட்கப்பட்டுத்தானே, 'பார்ப்பனரல்லாதார் சங்கம்' என்றும் சொன்னோம். ஏன் இந்த இழிவான பெயர்கள் நமக்கு? பார்ப்பனர் வேண்டுமென்றால் தங்கள் சங்கத்தை, 'சூத்திரரல்லாதார் சங்கம்' என வைத்துக் கொள்ளட்டுமே! 'பிராமணன் உயர்வானவன் என்று யக்ஞவல்க்யர், நாரதர், பராசரர் ஆகியோர் சொன்னது, இன்று இந்து சட்டமாகக் காட்சியளிக்கின்றதே! சட்டத்திலே, சாஸ்திரத்திலே, நடத்தையிலே, பிறவியிலே, நாம் சூத்திரர் ஆயிற்றே! 'கடவுளாலே கொடுக்கப்பட்டது' என்று சொல்லப்படும் இந்தச் சூத்திரப் பட்டத்தைத் தாங்கி நிற்பவர்கள் கஷ்டப்பட்டு வேலை செய்யும் தொழிலாளர்களாகிய திராவிடர்களல்லரோ? நாம் எப்போது இந்தச் சூத்திரப்பட்டத்தை ஒழிப்பது?

கம்யூனிஸ்ட் தோழர்களே! சூதுகள், தந்திரங்கள் ஒழியவேண்டும். நயவஞ்சகமாக இவ்வளவு நாள் நடந்த இந்த ஆட்சி பிரிட்டிஷ் ஆட்சியா? இது பிரிட்டிஷ் நாட்டு ஆட்சி அல்ல. இந்தப் பேதங்கள் அங்கே இல்லை. பார்ப்பனர் 100-க்கு 100 படிக்க வசதிசெய்து கொடுத்தது இந்த ஆட்சி. 'சூத்திரன் படித்தால் இராசாவுக்குக் கேடு; பட்டத்துக்குக் கேடு' என்று மனுதர்ம சாஸ்திரம் சொல்வதுபடி நடந்தது இந்த ஆட்சி. பிராமணன் உடலால் உழைக்கக்கூடாது என்பதற்காகத்தான் அவனுக்கு ஜட்ஜு முதலிய உயர்ந்த உத்தியோகங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

தோழர்களே!

வெள்ளையன் பார்ப்பானுக்கு உடந்தையாக இருக்கிறான். இது வெள்ளை ஆரியனுக்கும் மஞ்சள் ஆரியனுக்கும் உள்ள ஒப்பந்தந்தான். இனி ஏற்படப்போவதுகூட அந்த ஒப்பந்தந்தான். மற்ற பேச்சுகளெல்லாம் தந்திரம். இதை இரண்டு வருடங்கட்கு முன்பே நான் சொல்லிவிட்டேன். ஜின்னாவும் அம்பேத்காரும் இப்போது சொல்கிறார்கள். இன்றையச் சமுதாய அமைப்பைக் காப்பாற்றுவதுதான் சுயராஜ்யம். இதற்கு ஓர் உதாரணம், திருவையாற்றிலே சாப்பாட்டில் பேதம் கூடாது என்று சொன்ன காலத்திலே, மகாகனம் சாஸ்திரியார், பி. எஸ். சிவசாமி அய்யர், டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரியார் முதலியோர், 'நாம் செய்துகொண்ட உடன்படிக்கையை மீறுகின்றாயே' என வெள்ளையனைக் கேட்டார்கள். இதைத்தான் நாம் உடைக்கவேண்டும்.

வெள்ளையன் இந்த நாட்டை விட்டுப் போய்விடுகிறேன் என்று சொல்லுவது (1946-ல்) மற்ற வல்லரசுகளிடம் அவன் செய்துகொண்ட ஒப்பந்தம். 'சண்டை நீங்கினவுடன் அவரவர்கள் நாட்டை அவரவர்களிடம் விட்டுவிட வேண்டும்' என்று நிபந்தனை

செய்துகொண்டார்கள். அந்தப்படியே அமெரிக்கன் பிலிப்பைன் நாட்டை விட்டுவிட்டான். அதைப்போலவே பிரெஞ்சுக்காரனும் விட்டுவிட்டான். ஆனால், நமது நாட்டை நம்மிடம் விடாமல் வெள்ளையன் தந்திரம் செய்கிறான். காங்கிரஸ் அவனை வெளியே விடாமல் தடுத்து நிற்கின்றது. காங்கிரஸ் ஏன் அவனிடம் பேரம் பேசுகின்றது? நாட்டை ஆள நமக்குத் தகுதி இல்லையா? நாட்டின் ஆட்சிக்கு முட்டுக்கட்டையாக, ஒற்றுமைக்கு விரோதமாக எவன் சாதிப்பட்டம் வைத்திருக்கின்றானோ—எவன் பெயருக்குப் பின்னால் சாதியைக் குறிப்பிட்டு வால் வைத்திருக்கின்றானோ—அவனுக்கு 6 மாத தண்டனை விதிக்கட்டுமே!

பெருவாரியான சாதிப் பாகுபாடுகள் உள்ள நாட்டிலே—ஒரே கொள்கையுடைய ஒரு இனம் அதுவும் 100-க்கு 60-க்கு மேல் மெஜாரிட்டியாக உள்ள இடத்தைத் தங்களுக்கென முஸ்லிம்கள் தனியே பிரித்துக் கொள்கிறதென்றால் இதில் என்ன தவறு? இது என்ன முட்டுக்கட்டை? நாடு என்ன பிளந்து போகும்? நாடு என்ன வெடித்துப்போகும்! இதற்கு எதிர்ப்பு இருக்கிறதென்றால், இது வெள்ளையனும் ஆரியனும் உண்டாக்குகிற கலகம். இங்கு இருக்கின்ற பிணக்கு, ஆபாசம் வெள்ளையனுக்குத் தெரியாதா! பார்ப்பான் என்று ஒரு சாதியும், பறையன் என்று ஒரு சாதியும் இருப்பதையும்; ஹோட்டலுக்குள் ஒரு சாதி போகக்கூடாது என்பதையும் பார்த்து வெள்ளைக்காரன் சிரிக்கமாட்டானா?

[கும்பகோணத்தில், 18-8-1946-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 19-10-1946]

தலைவரவர்களே! தோழர்களே!

இது திராவிட நாடு பிரிவினை நாள். இன்று 50,000 பேர் இங்குக் கூடியிருக்கிறீர்கள். கடற்கரையாய் இருந்தால் இலட்சம் பேர் கூடியிருப்பீர்கள். இதுபோல ஆண்டுதோறும் கூட்டம் கூடி நமது விருப்பத்தை அரசியலாருக்குத் தெரிவித்துவருகிறோம்.

திராவிடநாடு பிரிவினை வேண்டுமென்று நாம் விரும்புவது, இன்று நேற்றல்ல. இன்றைக்கு 10 ஆண்டுகளுக்கு முன்பிருந்து—அதாவது, பிரிட்டிஷ் ஆட்சி இந்நாட்டில் இருந்துவந்த காலமாகிய 1938-ம் ஆண்டிலிருந்து திராவிட நாடு பிரிந்து தனிச் சுதந்திர ஆட்சி நாடாக இருக்க வேண்டுமென்று கேட்டுவருகிறோம். இதற்கு இன்றைக்கு 5, 6 ஆண்டுகளுக்கு முன்பே, எனது நண்பரும், இன்றைய இந்திய கவர்னர் ஜெனரலுமான இராஜகோபாலாச்சாரியார் அவர்களது ஆசியும், சம்மதமும் கிடைத்திருக்கிறது. ஜின்னா சாயபு பாகிஸ்தானுக்காகக் கிளர்ச்சி செய்த காலத்தில் அதற்கு ஆதரவாக ஆச்சாரியார் அவர்கள் பிரச்சாரம் செய்துவந்தபோதே—திராவிட நாடு பிரிந்து கிடைக்க வேண்டும் என்று கேட்டதும் நியாயம்தான், என்றும் அந்தந்த நாடு பிரிந்து தனிச் சுதந்திர நாடாய் இருக்கவேண்டுமென்று கேட்க ஒவ்வொரு நாட்டாருக்கும் உரிமை உண்டென்றும் பேசி இருப்பதோடு, என்னிடம் நேரிலும், 'நீ கேட்பது சரி' என்றும் தெரிவித்திருக்கிறார்.

அதற்கப்புறம் இந்த 5, 6 வருட காலத்தில் திராவிட நாடு பிரிவினைக்கு அதிகமான தேவையும் ஆதரவும் ஏற்பட்டிருக்கிறது. அய்ரோப்பாவைப் பாருங்கள்! அய்ரோப்பாக் கண்டம் இந்தியாவைப் போன்ற விஸ்தீரணமும், ஜனத்தொகையும் கொண்டது. அது இன்று சுமார் 30 தனித் தனி சுதந்திர நாடுகளாக இருக்கின்றது. அவர்களின் முன்னேற்றம் எந்த வகையிலும் தடைப்பட்டுவிடவில்லை. அதுமட்டுமல்லாமல், அய்ரோப்பாவில் ஏற்படும் மகா யுத்தங்களின் பலனாக மேலும் நாடுகள் பிரிந்து தனித்தனி நாடுகளாக—ஒவ்வொரு சிறு நாட்டாரும் விரும்பி புது இராஜ்யங்களை ஏற்படுத்திக் கொண்டார்களே தவிர, 'பிரித்தால் கெட்டுப்போவோமே; பாதுகாப்பு இல்லாமல் போகுமே; வியாபாரம் கெடுமே; தொழில் கெடுமே!' என்று ஒரு சிறு நாட்டார்கூடக் கவலைப்பட்டதோ, எண்ணியதோ கிடையாது. உலக அரசியல் ஞானமற்றவர்களும், சுரண்டல் கூட்டத்தாரும், ஒரு

நாட்டை ஒரு நாட்டார் அடக்கிச் சுரண்டி ஆதிக்கம் செலுத்தி வருகிறவர்களும்தாம் பிரிவினையை ஆட்சேபிப்பார்கள்; அல்லது இப்படிப்பட்டவர்களுடைய கூலிகள், கருங் காலிகள்தாம் ஆட்சேபிப்பார்கள்.

[சென்னை பீப்பிள்ஸ் பார்க்கில், 1-7-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 2-7-1948]

பந்தயம் வேண்டுமானாலும் கட்டுவேன்!

மத்திய அரசாங்கப் பிடியில் இருந்து திராவிட நாடு தனி நாடாகப் பிரியாவிடில், சுதந்திரம் இல்லை,—சோறு இல்லை,—மான வாழ்வு இல்லை.

இது உறுதி! உறுதி! உறுதி!

பந்தயம் வேண்டுமானாலும் கட்டுவேன்.

['விடுதலை'—அறிக்கை—25-2-1949]

தோழர்களே!

இதே போலத்தான் 1935 வரை அகில இந்தியா என்று பேசிவந்த நான், வடநாட்டார் ஆதிக்கத்தை உணர ஆரம்பித்ததும் 1938-ல் திராவிடநாடு பிரிவினைக் கொள்கையை முக்கியக் கொள்கையாகக் கடைப்பிடிக்க ஆரம்பித்தேன்.

1950 ஜனவரி 26-ம் தேதிய பலம் 1947 ஆகஸ்டு 15-ம் தேதியைப் போல் ஒரு விலாசம் மாற்றும் தினமேயாகும். அதே முதலாளிதான்; அதே பணப்பெட்டிதான்; அதே தாரசுதான்; அதே படிக் கல் தான்; அந்த சரக்குதான்; அதே பித்தலாட்டம்தான். ஆனால், விலாசம் அதாவது 'டிரான்ஸ்வர்' செய்யப்பட்டது மட்டும் மாற்றம் அடைகிறது. குடி அரசு ஆட்சி என்கிற புதுப் பெயரால் பழைய கொடுங்கோல் ஆட்சியே மேலும் அதிக பலத்துடனும், மேலும் அதிகப் பாதுகாப்புடனும் 26-ந் தேதி முதற்கொண்டு நடைபெறப் போகிறது.

இந்த உண்மையைத் தெளிவாக உணரும் நாம் இதை ஏன் புரட்டு என்று எடுத்துச் சொல்லக்கூடாது? உண்மையை எடுத்துச் சொல்ல நாம் ஏன் பயப்பட வேண்டும்? அக்கிரமத்தை எடுத்துச்சொல்ல நமக்கேன் அச்சம்?

[சேலம், மாயூரம் ஆகிய ஊர்களில் 14-1-1950 முதல் 18-1-1950 முடிய சொற்பொழிவு—'விடுதலை' 20-1-1950]

பெரியோர்களே! தோழர்களே!

எந்தெந்த நாடுகளில் தங்களுக்கு ஓர் அளவுக்குச் சுதந்திரம் வந்தது என்று கூறினார்களோ—அன்றைய தினத்திலிருந்தே தங்கள் எல்லையைக் காவல் காக்கும் பணியில் ஈடுபட்டார்கள். 'எங்களுடைய நாட்டிலேயிருந்து வெளியே பணம் கொண்டு செல்லக் கூடாது; வேறு நாட்டானாகிய நீ வெளியே போ' என்று இலங்கை சர்க்கார் சொல்லி விட்டது. அங்கே கூலி வேலை செய்து வாழ்ந்துகொண்டிருந்த அன்னியர்களையும் வெளியே போகச் சொல்லிவிட்டார்கள் 'ஏன் இப்படி?' என்று கேட்டால், 'எங்களவர் களுக்கே இங்கு வேலை இல்லை; நீ வாழுவதற்காக உழைப்பின் பெயரைச் சொல்லிக் கொண்டு இங்கே இருக்கிறாய்' என்று கூறுகிறார்கள். அங்கிருந்து ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் பணத்தை யாரும் எங்கேயும் கொண்டுபோக முடியாது. சாதாரணமாக ஒருவனுக்கு 10,000 ரூபாய் சொத்து இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். அந்த 10,000 ரூபாய் சொத்தை எதற்காக, ஏன் விற்கவேண்டும் என்று காரணம் காட்டி 7500 ரூபாய்க்குத்தான் விற்க முடியும். அப்படி விற்று வந்த பணத்தை இங்கு கொண்டுவர

வேண்டுமென்றால், அதற்கென்று இருக்கும் சிலரிடம் பேரம் பேசி, அதில் பாதியை 3750 ரூபாயை அவனுக்குக் கொடுப்பதாக ஒத்துக்கொள்ளவேண்டும். அதன் பிறகு பரிபாஷை மூலம் செய்தி அனுப்பி, தங்கள் ஆட்கள் உதவியால் தன்னுடைய பங்கு 3750 போக, மீதி ரூ. 3750 கொண்டுவந்து சேர்ப்பான். இவ்வளவு கஷ்டப்பட்டும் வழியில் சிக்கிவிட்டால் ரூ. 10,000-த்தில்—தனக்கு வரவிருந்த 3750 ரூபாயும் போய்விடும். எவ்வளவு எவ்வளவு கஷ்டப்படவேண்டியிருக்கிறது! அங்கே இருந்துகொண்டு சம்பாதிப்பதும் முடியாது; நாம் சம்பாதித்ததைக் கொண்டுவருவதென்றாலும் முடியாது. ஏன்? அந்த நாட்டில் பிறர் கொள்ளையடிக்கக் கூடாது; அடிக்க அவர்கள் விடுவதில்லை.

அதுபோலவே, பர்மாவில் பட்டப்பகலில் கொலை, கொள்ளை, குத்து வெட்டு நடக்கின்றன. சர்க்காரும் அதைப்பற்றிக் கவலை எடுக்காமல் விட்டுவிடுகிறது. கேட்டால், 'அன்னியருக்கு இங்கென்ன வேலை?' என்கிறார்கள். ஆகவே, அங்கு யாரும் போக முடியவில்லை. இன்று இங்கே உள்ள சர்க்கார் பேச்சுவார்த்தை நடத்திவருகின்றது—அந்த நாட்டுச் சர்க்காருடன். அதுபோலவே மலேயாவிலிருந்து பணம் வரவழைக்க முடியாது. 'கொச்சின் சைனா'விலிருந்து நம்மவனுக்கு மாதம் ரூ. 1000, 2000 வரும்படி வரக்கூடிய சொத்து இருக்கிறது. 200 ரூபாய்க்கு மேல் அங்கிருந்து கொண்டுவரக் கூடாது என்று சொல்லிவிட்டான்.

சுதந்திரம் பெற்ற மற்ற நாடுகளிலெல்லாம் அப்படியிருக்கும்போது, நமது நாட்டில் என்னவென்றால் மார்வாரி, குஜராத்தி, மூல்தானி, பனியாக் கூட்டத்தார்கள்—அவர்கள் நாட்டிலேயிருந்து வந்து, இங்கே கோடிக்கணக்காய்க் கொள்ளையடித்துக்கொண்டு போகிறார்கள். இன்று அவர்கள் இராஜ்யம்! தங்கள் நாட்டுக்காரர்களை இங்கே அனுப்புகிறார்கள். பலப்பல சலுகைகளோடு அவர்கள் இங்கே வந்து கொள்ளையடித்துக்கொண்டு, பெரிய பெரிய கட்டிடங்களைக் கட்டிக்கொண்டு கவலையற்ற வாழ்வு வாழ்கிறார்கள். சென்னை மவுண்ட் ரோட்டில் முன்பிருந்த வெள்ளைக்காரன் போல்—பனியாக்கள், மார்வாரிகள் முதலியோர் வாழ்கிறார்கள். ஒவ்வொருவனும் கோடிக்கணக்காய், இலட்சக்கணக்காய்ச் சம்பாதிக்கிறான். பல இனங்கள்—நாடுகள் கொண்ட இவ்வளவு பெரிய நாட்டை ஒன்றாக்கி, 'எவன் வேண்டுமானாலும், எங்கு வேண்டுமானாலும் சென்று, எப்படி வேண்டுமானாலும் சம்பாதித்து அதை எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம்' என்ற சட்டம் செய்துவிட்டு இங்கே வந்து கொள்ளையடிக்கிறார்கள். இந்தத் தன்மையை மாற்றாவிட்டால் நம்முடைய அத்தனைச் செல்வங்களும் அவர்களுக்கே போய்விடும். நாம் என்றைக்கும் அவர்களுக்கு—வடநாட்டாருக்கு மீளாத அடிமைகளாய், வேலைக்காரர்களாய்த்தான் இருக்க நேரிடும். இரும்பு அவனுக்கு, சிமெண்ட் அவனுக்கு, கப்பல் கட்டும் தொழில் அவனுக்கு; இப்படி 'எல்லாம் அவனுக்கு!' என்றே ஆகிவிட்டது. 1000 ரூபாய் 2000 ரூபாய்க்குத்தான் நம்மவன் லேவாதேவி செய்யமுடியும்.

எவ்வளவு மூலதனத்தையும் நம்மாலேயே உண்டாக்க முடியும். ஆகவே, இந்த வடநாட்டானுடைய மூலதனம் பொருள் இல்லாமல் நாம் வியாபாரம் செய்யமுடியாது என்பது ஒழுங்கான நியாயம் அல்ல. இந்த நாட்டில் உள்ள எல்லாத் தொழில்களையும் வடநாட்டார் கைப்பற்றிக் கொண்டார்கள். 10,000, 20,000 ரூபாய் லேவாதேவியெல்லாம் அவனாலேயே செய்யமுடியும். நம்மவர்களுக்குப் பாதுகாப்பில்லை. கொடுத்த கடனை வசூலிக்க கோர்ட்டுச் செலவு அதிகமாகும். ஆனால், ஒரு காசு செலவில்லாமல் வியாபாரம் நடத்த அவனுக்கு அனுமதி, பாதுகாப்பு!

அவை மட்டுமல்ல; இருக்க இருக்க அவர்கள் வெள்ளம்போல் வந்து உப்புகிறார்கள். அகதிகள் என்ற பேரால் நம்முடைய நாட்டிற்குச் சுமார் 10 இலட்சம் பேர்கள் அனுப்பப்பட்டிருக்கிறார்கள். வெறுங்கையுடன், குடும்பத்தோடு வந்தவர்களுக்கு இந்த மாகாண சர்க்கார் சலுகை காட்டி அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்துதருவதில் தீவிரமாக

ஈடுபட்டு இருக்கிறார்கள். மேலே இருக்கிற டெல்லி—'இந்த அகதிகளுக்கு வீடு, வாசல், வியாபார வசதி செய்துகொடு' என்று உத்தரவு இட்டதின் காரணமாக, சென்னை, கோயம்புத்தூர், ஈரோடு, திருப்பூர், திருச்சி, மதுரை, பெங்களூர், கள்ளிக்கோட்டை, கொச்சி ஆகிய இடங்களில் எல்லா வியாபாரங்களையும் அவர்களே கைப்பற்றிவிட்டார்கள். நம்மவர்கள் அவர்களுக்கு மூட்டை தூக்குகிறார்கள். பெரிய பெரிய கடைகளிலிருந்து திண்ணை, ரோடு, வண்டி முதலிய கடை வியாபாரம் வரையில் அவர்களே கைப்பற்றிக்கொண்டார்கள்.

வசதிகள் பல உள்ள இந்தப் பெரும் நாட்டில் அவன் இப்படிப் புகுந்து கொள்ளையடிப்பதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பதா? இதைப்பற்றிப் பார்ப்பனர்களுக்குக் கவலையே இல்லை; காட்டிக்கொடுத்து பங்கு வாங்குகிறார்கள். இந்தக் கொள்ளையை—கொடுமையை எடுத்துக்காட்டி, 'இத்தகைய தன்மைகள் ஒழியவேண்டும்; எங்கள் நாட்டை நாங்களே ஆள எங்களிடத்தில் விட்டுவிடு' என்று கேட்பது தேசத் துரோகமா? இது தவறா?

'வெள்ளைக்காரன், ஜப்பான்காரன் வரவேண்டும்' என்று கூறினால், அது தேசத் துரோகக் குற்றமாக இருக்கலாம். ஆனால், இருக்கிற அன்னியனையும், 'வெளியே போ!' என்று கூறுவது எப்படிக் குற்றமாகும்? அது 'மாபெரும் தேசாபிமானம்' ஆகும்.

வெள்ளைக்காரன் நம்மவர்களிடத்திலேயிருந்துதானே நாட்டை வாங்கினான்? அப்படி வாங்கிய நாட்டை—நம் நாட்டானிடம் கொடுத்துவிட்டுப் போனான் என்றால், எல்லாவற்றையும் வடநாட்டானே எடுத்துக்கொண்டால் என்ன நியாயம்?

['விடுதலை' 8-4-1950]

பெரியோர்களே! தோழர்களே!

நம்முடைய நாட்டில் வளம் இல்லையா? ஆளும் வாய்ப்புகள் இல்லையா? நம்முடைய நாட்டில் நல்ல வியாபார நுணுக்கங்கள் கொண்டவர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கெல்லாம் வசதியும் வாய்ப்பும் கொடுக்கப்படவில்லை. வடநாட்டாருக்கே நல்ல வாய்ப்புகள் கொடுத்து, அவர்களையே விளம்பரப்படுத்தி, சகலத்தையும் அவர்களே கொள்ளையடித்துக்கொண்டு போகும் நிலையில் வடநாட்டு ஆட்சி உண்டாக்கிவிட்டது.

நம்முடைய நாட்டில் வீரர்கள் இல்லையா? உலகமே வியக்கத்தகுந்த முறையில் சென்ற யுத்தத்தில் வீரமாய்ப் போர்புரிந்தவர்கள் சென்னைச் சிப்பாய்கள்தாம்! இன்றுகூட காஷ்மீர் யுத்தத்தில் தீவிரமாய்ப் போரிடும் வீரர்கள் நம் நாட்டவர்கள்தாம். அவர்களைக் கொண்டு நம் நாட்டில் நல்ல பலமான இராணுவத்தை வைத்துக்கொள்ளலாம்.

நம்மிடத்தில் அறிவாளிகள் இல்லையா? நம்மைவிட அறிவாளிகள் வடநாட்டில் ஏது? அய்ந்து பண்டித நேருக்கள் சேர்ந்தால்தானே நம்முடைய ஒரு ஆச்சாரியாரின் அறிவுக்குச் சமமாக முடியும்? அதுபோலவே அய்ந்து பட்டேல்கள் சேர்ந்தால்தான் நம்முடைய சண்முகஞ் செட்டியார், இராமசாமி முதலியார் ஆகியோர்களின் அறிவுக்குச் சமமாக முடியும்?

நான் அஸ்ஸாம், அய்க்கிய மாகாணம், பஞ்சாப், பீகார் மற்றும் எல்லா இராஜ்யங்களுக்கும் போயிருக்கிறேன். வடநாட்டின் பல பகுதிகளிலும் சுற்றியிருக்கிறேன். அங்கு இருக்கிற கோவில்களில் கலைத் தன்மையே கிடையாது. அவர்களுடைய சாமிகள்கூட வெந்த பிணங்கள் போலத்தான் காட்சியளிக்கும். சமீபத்தில்தான் ஏதோ காசி விஸ்வநாதர் கோயிலைக் கொஞ்சம் சீர்திருத்தியிருக்கிறார்கள். ஏன் இவைகளையெல்லாம் கூறினேன் என்றால், அவர்கள் நாகரிகம் அற்றவர்கள்—நம்மைவிட எல்லாவிதங்களிலும் மட்டமானவர்கள், குறைந்தவர்கள், மூடநம்பிக்கைக்காரர்கள் என்பதற்காகத்தான். அப்படியிருந்தும் இன்று அவர்கள் ஆதிக்கம்தான் தலைவிரித்தாடுகிறது.

'சுதந்திர ஜனநாயகக் குடிஅரசு வந்துவிட்டது' என்று கூறுகிறார்கள்! யாரைக் கேட்டு அங்கு போய் உட்கார்ந்து, இந்த நாட்டை ஜனநாயகச் சுதந்திரக் குடிஅரசு ஆகச் செய்தார்கள். ஆகஸ்ட் 15-ந் தேதி முதல், 'இந்த நாட்டை நீ வைத்துக்கொள்!' என்று, வெள்ளையன் தன்னுடைய சவுகரியத்திற்காகக் காங்கிரஸ்காரர்களிடம் கொடுத்துவிட்டுச் சென்றான். அவனுடைய பிரதிநிதிகளாகத்தானே அதற்கு முன் இவர்கள் ஆண்டார்கள்?

அந்தப்படியிருக்க, அவனிடத்தில் இருந்து (Made Over) 'மேடோவர்' செய்து ஆட்சி வாங்கிக்கொண்டு இவர்கள் ஆளுவதென்றால், எப்படி இவர்கள் மக்கள் பிரதிநிதிகளாய் இருக்கமுடியும்? வெள்ளைக்காரன் வெளியே போனபிறகு தேர்தல் வைத்து, அந்தத் தேர்தலில் வெற்றிபெற்று இவர்கள் ஆளுவார்களானால், 'மக்கள் ஆட்சி' என்று வேண்டுமானால் சொல்லலாம். அப்படியில்லாமல், அவன் இவர்களிடத்தில் கொடுத்துவிட்டுப் போனான் என்பதால்—இவர்களே ஆளுவது என்பது என்ன நியாயம்? இந்த ஒரு கட்சிக் காரர்களே கூடிக்கொண்டு, 'சுதந்திரம் வந்துவிட்டது, பார்' என்று கத்தினால் ஒப்புக் கொள்ள முடியுமா? இது வெள்ளையனுடைய பிரதிநிதிகள் ஆட்சிதானே?

200 ஆண்டுகளாக வெள்ளைக்காரனுக்கு வரியைக் கொட்டிக் கொடுத்தோம். நம்மவர்கள் படிக்கவில்லை. பார்ப்பனர்கள் 100-க்கு 100 பேர்கள் படித்தார்கள். ஏனென்றால், வெள்ளைக்காரன் கல்வி இலாக்காவைப் பார்ப்பானிடம் ஒப்படைத்தான். அவர்கள் தங்கள் படிப்பிற்கு ஏற்ற முறையில் எல்லா சவுகரியங்களையும் செய்துகொண்டார்கள். நம்மவர்களில் 10 பேர்தானே படித்தோம்? பெரும்பாலான மக்களை இப்படித் தற்குறிகளாய் வைத்துக் கொண்டு, அவர்களுக்கு அரசியல் என்றால் என்ன என்றே தெரியாத நிலையில் வைத்துக் கொண்டு—ஏதோ 4 பார்ப்பனர்கள் கூடிச் சுதந்திரம் வந்துவிட்டது என்று கூப்பாடு போட்டு இன்று அவர்களே ஆள உட்கார்ந்துகொண்டு காரியங்களை நடத்துவதென்றால் என்ன அர்த்தம்?

ஆகவேதான், 'இது குடிஅரசு ஆட்சியல்ல; கொடுமைக்கார, கொள்ளைக்கார ஆட்சி' என்று கூறுகிறோம். இந்தச் சுரண்டல் ஆட்சியிலிருந்து விலகவேண்டும் என்று சொல்லுகிறோம்.

இன்னும், நம் நாட்டில் இவ்வளவு பணக்காரன், சாதி இருக்கக்கூடாது. இந்த இரண்டு வருடமாகத் தயாரித்த அரசியல் திட்டத்தில் இவைகளை ஒழிக்க ஏதாவது ஒரு வரி எழுதினார்களா? இல்லை. ஒருவனுக்குச் சம்பளம் ரூ. 10,000, 8000, 5000; மற்றவனுக்கு ரூ. 30. இந்த வித்தியாசம் ஏன் இன்னமும் இருக்க வேண்டும்? வெள்ளைக்காரன்தான் அவனது 'டாம்பீகச்' செலவுகளுக்காக வைத்துக்கொண்டான் என்றால் பார்ப்பனர்களும் அப்படி வைத்துக்கொண்டு இருக்கலாமா? இந்தப் பேதங்களையெல்லாம் நம்மால் ஒழிக்க முடியும். ஒருவனிடத்தில் ஏராளமாய்ச் சொத்துக்கள் முடங்கியும், மற்றவனுக்குச் சோற்றுக்கு இல்லாத நிலைமையும் இருப்பதனால்தானே நாட்டில் பஞ்சம், பித்தலாட்டம், நாணயமின்மை வளருகின்றன! இது மாறி 'எல்லோருக்கும் ஒரே நிலை' என்று ஆக்கி விட்டால் இந்தப் பித்தலாட்டங்கள் நடைபெற வாய்ப்பு இருக்குமா? கல்வித் துறையிலும் அப்படியே சீர்திருத்தம் செய்ய நம்மால் முடியும். உதாரணமாக '6 மாதத்திற்குள் கையெழுத்துப் போடத் தெரிந்துகொள்ளாதவர்களுக்கெல்லாம் 3 மாதம் தண்டனை விதிக்கப்படும்' என்று சட்டம் போட்டால், அவரவர்கள் விழுந்து விழுந்து படிக்க மாட்டார்களா?

இந்தப்படி அனேக சங்கதிகளை நம்மால் செய்ய முடியும். இந்தப்படி, இங்கு எல்லோரும் சமம், எல்லோருக்கும் ஒரே நிலை என்று ஏற்பட்டுவிடுமோ என்றுதான் பார்ப்பனர்களும் வடவர்களும் சேர்ந்து கூட்டுச்சதி செய்கிறார்கள்.

[குன்னத்தில், 2-4-1950-ல் சொற்பொழிவு—'விடுதலை' 9-4-1950]

பெரியோர்களே! தோழர்களே!

நாம் திராவிட மக்கள். ஏறக்குறைய 10 கோடி மக்கள் இருக்கிறோம். நீங்கள் கணக்குப் பார்த்தால் திராவிடர்களுடைய எண்ணிக்கை பத்துக் கோடி ஆகும்.

இவ்வளவு ஜனத் தொகை கொண்ட ஒரு நாடு, ஐரோப்பாவில் ரஷ்யாவைத் தவிர வேறு ஒரு நாடுகூடக் கிடையாது.

ஐரோப்பாவில் இரண்டு கோடி, ஒரு கோடி, அறுபது இலட்சம் உள்ள நாடுகள் எல்லாம் கூடப் 'பரிபூரண சுயேச்சை'யோடு இருக்கின்றன. அன்னியனுடைய ஆதிக்கத்திற்கு அங்கு இடமே இல்லை. அந்த நாட்டிற்கு 100 மைலுக்கு அப்பால் இருக்கின்றவன் அந்த நாட்டுக்கு வரவேண்டுமானால் 'பாஸ்போர்ட்' வாங்கிக்கொண்டுதான் வரவேண்டும். ஒரு நாட்டு உப்பு இன்னொரு நாட்டுக்கு வராது. ஒரு நாட்டுத் தீப்பெட்டி, உருளைக்கிழங்கு பக்கத்திலே இருக்கிற இன்னொரு நாட்டுக்கு வரக்கூடாது; வரமுடியாது. நம் மாகாணத்தில் உள்ள ஒரு ஜில்லா அளவு உள்ள நாடு, அங்கு பூரண சுயேச்சையோடு இருக்கிறது.

நாம்—திராவிட நாட்டுக்காரர்கள் ஆகிய நாம் 1938-லேயே ஆரம்பித்தோம், 'திராவிட நாடு திராவிடருக்கே', 'தமிழ் நாடு தமிழருக்கே' என்று. ஒரு அங்குலம் கூட முன்னேறவில்லை.

நம் நாட்டில், வடநாட்டானுக்குக் கூலிகள்—அடிமைகள்தாம் அதிகம் ஆகி வருகிறார்கள். நாம் துவக்கிய இரண்டு, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு துவக்கினார்கள் பாகிஸ்தான் கிளர்ச்சியை. அவர்களது வீட்டுவாசலில் கொண்டுபோய்க் கொடுத்தார்கள் பாகிஸ்தானை. 'உயிர் போனாலும் கொடுக்கமாட்டேன்; என் பிணத்தின்மேல் நடந்துதான் பாகிஸ்தானைக் காணலாம்' என்றார் காந்தியார். இராஜகோபாலாச்சாரியார் சொன்னார், 'தாயை வெட்டினாலும் கூட, இந்த பாகிஸ்தானைப் பிரிக்கமாட்டேன்' என்று.

இவர்கள் எல்லோரும் கூடி வெள்ளித்தட்டில் கொண்டுபோய் அவர்கள் வீட்டுவாசலில் வைத்துப் பாகிஸ்தானைக் கொடுத்துவிட்டு வந்தார்கள். பாகிஸ்தானை இல்லை என்று சொல்லமுடியுமா? முடியாது.

காரணம்? இதற்குக் காரணம் முஸ்லிம்கள் ஒற்றுமையாக இருந்ததுதான். அவர்கள் ஒற்றுமையாக இருந்ததற்குக் காரணம் அவர்களுக்கு ஒரே மதம். அந்த மதத்தினுடைய முக்கியமான தத்துவம் ஒற்றுமை; கட்டுப்பாடு; ஒரே ஆண்டவன். ஆனால், நமக்கு அப்படி இல்லையே! ஆயிரக்கணக்கான மதம், கோடிக்கணக்கான கடவுள்கள், பல ஆயிரக் கணக்கான சாதிகள்! நாம் எப்படி உருப்படமுடியும்?

அனேகமாக, நம்முடைய பணக்காரர்கள் இன்றைய தினம் பார்ப்பனர்களுக்கு அடிமைகளாக இருக்கிறார்கள். காங்கிரசுத் தோழர்கள் பார்ப்பனர்களுடைய நிபந்தனை இல்லாத கூலிகளாக இருக்கிறார்கள்.

இந்த இரண்டு தரத்தாரும் நமக்கு எதிர்ப்பு என்ற முறையிலே என்ன வேலை செய்கிறார்கள் என்றால், கடவுள் பிரச்சாரம் செய்வது, மதப் பிரச்சாரம் செய்வது—இந்த மாதிரி வேலைகளில்தான் ஈடுபட்டு இருக்கிறார்கள்.

நம்மவர் எவ்வளவு பெரிய பதவியில் இருந்தாலும், பார்ப்பனர் எவ்வளவு சிறிய பதவியில் இருந்தாலும் அவர்களைக் கண்டதும் நடுங்குகிறார்கள்! இந்த நிலை மாற வேண்டும். அதற்கு ஒற்றுமையாகக் கிளர்ச்சி செய்ய வேண்டும். பெருங்கிளர்ச்சிகள் ஆரம்பிக்க வேண்டும்!

அவற்றைச் சகிக்க முடியாமல் வடநாட்டாரும் பார்ப்பனரும் ஓடவேண்டும். ஏன் நாம் அவர்களைப் பகிஷ்காரம் பண்ணக்கூடாது? வடநாட்டான் கடையில் சரக்கு வாங்கக்

கூடாது என்றால் என்ன தப்பு? பார்ப்பானுக்குச் சிரைக்கக் கூடாது; பால் அரிசி கொடுக்கக் கூடாது என்றால் என்ன தப்பு?

பார்ப்பான் நம்மைத் தொட்டால் தீட்டு என்று எட்டி நிற்கிறானே, அவனைத்தானே பகிஷ்கரிக்கச் சொல்லுகிறோம்? அவனைப் பகிஷ்காரம் செய்தால் என்ன தப்பு?

இந்த அடிமைத்தன்மை நீங்கவேண்டும்; இந்தச் சுரண்டல் நீங்கவேண்டும்; அன்னிய ஆதிக்கம் ஒழியவேண்டும் என்ற உணர்ச்சியை நம் மக்கள் பெறவேண்டும்.

[சென்னை கிருஷ்ணாம்பேட்டையில், 10-2-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 14-2-1951]

தோழர்களே!

முன்னே பேசிய தோழர்கள் சொன்னார்கள், அரசியல் சுரண்டல் முக்கியமானது; அதை ஒழிக்க வேண்டும் என்று. நாமும் அரசியல் சுரண்டலை முக்கியமாகக் கொண்டு இருக்கிறோம்.

இந்த நாடு பூரண சுதந்திரம் அடைய வேண்டும். இந்த நாடு இந்த நாட்டு மக்களால் ஆளப்பட வேண்டும். இதுதான் முதல் காரியம். இப்பொழுது நாம் பொருளாதாரச் சுரண்டலை முக்கியமாகக் கூறுகிறோம். ஏனென்றால், ஆட்சி என்று சொல்லுவது, ஒரு நாட்டானுடைய அரசாங்கம் என்று சொல்லுவது முன்னே எப்படி இருந்தது என்றால் —ரொம்ப நாளைக்கு முந்தி சுமார் 100, 50 ஆண்டுகளுக்கு முன்னாலே, இன்னமும் சொல்லுவேன்—வெள்ளைக்காரனுடைய ஆட்சிக்கு முன்னாலே ஆட்சி எப்படி இருந்தது என்றால், 'இவ்வளவு விஸ்தீரணம் நம் நாட்டிற்குள் இருக்கிறது. இவ்வளவு விஸ்தீரணத்திற்கு நான் அரசன்; சக்கரவர்த்தி' என்று இருப்பார். மற்றபடி அரசர்கள் எல்லோரும் இருப்பார்கள். அங்கங்கேயுள்ள அரசர்கள் அங்குள்ள மக்களுக்கு ஆவன செய்து கொடுப்பார்கள். அவ்வளவுதான் இருக்கும் முன்னே. நாளாக நாளாக—அந்த விஸ்தீரணம், அதிலே இருக்கிற அதிகாரம் முக்கியம் அல்ல. பின்னை என்ன முக்கியம்? வளப்பத்தை செல்வத்தை அன்னிய நாட்டிற்குப் பயன்படுத்திக் கொள்ளுகிறான்; கொள்ளை கொண்டு போகிறான் என்பதுதான் இதன் தத்துவம். இந்தக் கருத்திலேதான் நாம் இன்றைய தினம் நம்முடைய நாடு அன்னிய ஆட்சியில் இருக்கிறது என்று சொல்லுகிறோம்.

ஏன் நம் நாட்டுச் செல்வம் அன்னியனுக்குப் பயன்படுகிறது? நம்முடைய நாடு இன்றைய தினம் விடுதலை அடையவேண்டுமானால், நம் நாட்டுப் பொருளாதாரம் நம் நாட்டைவிட்டுப் போகாமல் இருக்கவேண்டும் என்பது முக்கியமான சங்கதி ஆகும்.

பெயரளவில் சொல்லுகிறார்கள்—நம் நாடு ஏதோ சுதந்திரம் பெற்றுவிட்டது என்றும் அது குடி அரசு என்றும், ஜனநாயக ஆட்சி என்றும் எல்லாம், இப்படியாகப் பித்தலாட்டமாகச் சொல்கிறார்கள். இப்படி ஆரியர்கள் சொல்லுவதிலே அதிசயம் இல்லை; நம் மக்கள் நம்புவதிலும் அதிசயம் இல்லை; ஏன்?

நமக்குச் சில துறைகளிலே அறிவு இருந்தாலும், சில துறைகளிலே அறிவு கிடையாது. அந்தத் தலைப்பு வார்த்தைக்குத்தான் மரியாதை இருக்குமே தவிர கருத்துக்கு மரியாதை இருக்காது.

[காஞ்சிபுரத்தில், 7-4-1951-ல் தலைமையுரை—'விடுதலை' 19-4-1951]

பெரியோர்களே! தோழர்களே!

காங்கிரஸ்காரர்கள் தங்களுடைய தேர்தல் வாக்குறுதியில் என்ன சொன்னார்கள் என்றால், '21 வயதுக்கு மேற்பட்ட மக்களுக்கு ஓட்டுரிமை கொடுத்து, அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்புகின்ற பிரதிநிதிகளைக் கொண்டு இந்நாட்டுக்கு அரசியல் நிர்ணய சட்டம் வகுப்போம்; அத்துடன் ஒவ்வொரு மாகாண மக்களுக்கும் சுயாட்சி உரிமை அளிப்போம்' என்று சொன்னார்கள்.

ஆனால், இன்று நடப்பது என்ன? வெள்ளைக்காரன் ஆட்சிக் காலத்தில்—அதுவும் அவனுடைய அதிகாரத்தில் படித்தவனுக்கும், பணக்காரனுக்கும் ஓட்டு உரிமை அளிக்கப் பட்டு நடத்தப்பட்ட தேர்தலில் பிரதிநிதியாக வந்தவர்களைக்கொண்டு—அதுமட்டும் அல்லாமல், எந்தத் தொகுதியிலும் நின்று வெற்றி பெறாமல் வெள்ளைக்காரனாகக் கொடுத்த (Nomination) நியமனம் மூலமாகப் பதவி பெற்றவர்களைக் கொண்டு அரசியல் சட்டம் செய்து இருக்கிறார்கள், காங்கிரஸ்காரர்கள்.

இரண்டாவது சந்தியான மாகாண சுய ஆட்சி என்பது இன்று எப்படி இருக்கிறது என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். வெள்ளைக்காரன் காலத்திலே மாகாணங் களுக்கு எவ்வளவு அதிகாரம் இருந்ததோ அதுகூட இன்றைய தினம் இல்லாமல் மாகாணத்து ஆட்சி என்பது வெறும் பொம்மை சர்க்கார் இருக்கும் ஆட்சி என்பதாக ஆகிவிட்டது. எதற்கெடுத்தாலும் டில்லி நோக்கித் தெண்டனிட வேண்டிய மாதிரியில் தான் மாகாண ஆட்சியென்பது இருக்கிறது. இப்படியாக காங்கிரஸ்காரர்கள் தங்களுடைய தேர்தல் வாக்குறுதியிலே சொன்னதைச் சிறு அளவுக்குக்கூட நிறைவேற்றவில்லை.

தேர்தல் வாக்குறுதியாக மேற்சொன்ன சங்கதிகளில் சொல்லும்போது உள்ளபடியே அவர்களுக்கு நல்லெண்ணம் இருந்திருக்கலாம். நாம் பதவிக்குப் போனால் செய்யலாம் என்றே கருதி இருக்கலாம். ஆனால், இன்றைய தினம் அவர்களால் அவர்கள் சொன்னது போல் செய்யமுடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது.

இந்த இரண்டு காரியங்களையும் செய்தார்கள் என்றால் வருணாசிரமம் அடியோடு ஒழிந்துபோய்விடும். தெளிவாகவே சொல்லுகிறேன், இப்பொழுது நம்முடைய மாகாணத் திற்குச் சுயாட்சி கொடுக்கப்பட்டது என்றால் இங்கு பார்ப்பனர் இருக்கமுடியுமா? அவனு டைய பூணூலும், மேல்சாதித் தன்மையும் இருக்குமா? ஒரேநாளில் மறைந்துவிடாதா? எனவேதான், வருணாசிரமம் ஒழிந்துவிடும் என்கிற பயத்தினால்தான் இன்றையதினம் அந்தக் காரியங்களைச் செய்யவில்லை. இன்னமும் அவர்கள் இன்றைய முறைப்படியே, இன்று நடத்துகிற மாதிரியில் இல்லாமல் வேறு முறையில் சென்றால் நிச்சயமாக அவர்கள் அழிந்துவிடுவார்கள்.

இந்த நாடு நமது கையில் இருக்கவேண்டும். இந்த நிலைமை எப்பொழுது ஏற் பட்டது என்றால் தோழர்களே, இந்தப் பிரிவினை கேட்பது இப்பொழுது ஏற்பட்டது அல்ல. நாடு, வெள்ளைக்காரனிடமிருந்து காங்கிரஸ்காரர்களிடம் வருவதற்கு முன்பே நம்நாடு பிரியவேண்டும் என்றும், அதாவது 1938 ஆம் ஆண்டிலேயே இராஜகோபாலாச்சாரி யார் முதல் மந்திரியாக இருந்து சென்னையை ஆட்சிசெய்த காலத்தில், இவர்களுடைய ஒரு வருட ஆட்சியைப் பார்த்த பிறகுதான் நாம் பிரிந்தாக வேண்டுமென்று—1938லேயே சொல்லி இருக்கிறேன்.

[வாடிப்பட்டியில், 20-5-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 30-5-1951]

எங்களின் விடுதலைக் கொள்கை, நம் நாடு விடுதலை அடையவேண்டும் என்பது. நம் நாட்டை, நம் இராஜ்யத்தை (இந்த சென்னை இராஜ்யத்தை), 9 கோடி மக்கள் இருக் கின்ற இந்த இராஜ்யத்தை இதற்கு முன் வெள்ளைக்காரர்களிடம் அடிமைப்பட்டுக் கிடந்த நம் இராஜ்யத்தைத்தான், நாம் நம் கைக்கு வரவேண்டும் என்று சொல்லுகிறோம். ஆனால், அவர்கள் இது சுதந்திர நாடுதானே, ஆகையால் இதில் ஒரு வித்தியாசமும், வேற்றுமையும் இல்லையே என்று சொல்லுகிறார்கள்.

ஆனால், இன்றைய நிலையில் நம் நாட்டைப் பார்த்தால், 'குச்சிக்காரித்தனம் செய் கிறவளுக்கு எப்படி தேவ—அடியாள்' என்று பெயர் வைத்து இருக்கிறார்களோ, அதே மாதிரிதான் இருக்கிறது—அடிமையாக இருக்கிற இந்த நாட்டைப் பார்த்துச் சுதந்திரநாடு

என்று கூறுவது. இதையே நம்முடைய பொதுமக்களும் நம்பிக்கொண்டு இருக்கிறார்கள். நமக்கு இன்று நம் நாட்டு ஆட்சியில் எதில் சுதந்திரம் இருக்கிறது?

இன்று நமது நாடு வடநாட்டானின் ஆதிக்கத்திலே, ஒரு ஸ்தல சுயாட்சி நிர்வாகத்தின் கீழ் இருக்கிற ஒரு பஞ்சாயத்து போர்டு எப்படி இருக்குமோ—அதுபோல் இருக்கின்றது. நம் மக்களுக்கு அரசாங்கத்திலே ஒரு உரிமையும் கிடையாது.

இன்று நமக்கு மந்திரி பதவிகள் கிடைக்கும் என்றால் அவை எதற்கு உதவும்? வடநாட்டானுக்கு நிபந்தனை இல்லாத கூலியாக இருக்கவும், சொத்து சுயநலத்திலே பூரண சுதந்திரமாக இருக்கவும்தான் உதவுமே தவிர, நம் நாட்டு மக்களின் நலத்திற்கு—முன்னேற்றத்திற்கு—பொருளாதார வளத்திற்கு என்ன சுதந்திரம் இருக்கிறது?

ஆகையினால், இந்த மாதிரியாக நம் நாட்டுக்கு இருக்கிற அடிமைத்தனம் நீங்கி, நியாயமான வரியை நாம் போடவும்—அதை நாமே நாட்டுக்குச் செலவழிக்கவும், நம் இஷ்டப்படி தொழில் செய்யவும், வியாபாரம் செய்யவும்—நம்நாட்டுச் செல்வம் வெளிநாட்டுக்குப் போகாமல் இருக்கவுமான சுதந்திரம் நமக்கு வேண்டும் என்கிறோம். பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான்போல் உரிமை வேண்டும் என்றே கேட்கிறோம்.

இந்த நாட்டை வடநாட்டான் சுரண்டுகிறான் என்று கூறினால் அது தவறா? இந்த நாட்டிலே யோக்கியமில்லாவர்கள் அரசாங்கத்தை ஆட்டிப்படைக்கின்றார்கள் என்று கூறினால் அது தவறா? இந் நாட்டிலே இந்த நாட்டுப் பாதுகாப்புக்குப் பாடுபடும் போலீஸ்காரர்கள் மாதம் 30 ரூபாய் சம்பளத்தில் கஷ்டப்பட்டுக் கஞ்சிக்கு வழியில்லாமல் தவிக்கின்ற போது மற்ற நாட்டு 'அகதி' மக்கள் இங்கு வந்து கொள்ளை அடிக்கிறார்களே என்று கூறினால் அது தவறா?

[சேலம் விக்டோரியா மைதானத்தில், 22-7-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 27-7-1951]

இந்த நாட்டு வரிப்பணம் 100 கோடிக்கணக்காய் வடநாட்டுக்குச் சென்றால் அவர்கள் வயிறு வீங்குகிறதே, நம்முடைய வயிறு வாடுகிறதே என்று கூறினால், அது தவறா? இவைகளைச் சொல்வதில் என்ன தப்பு இருக்கிறது? அல்லது, இவைகளுக்கு ஆக எங்களைத் தவிர வேறு யாராவது பாடுபடுகிறார்கள்; கவலைப் படுகிறார்கள் என்றாவது சொல்ல முடியுமா? சொன்னால் நாங்கள் அதை ஒப்புக்கொள்கிறோம்.

ஜின்னா செய்த மாதிரி இலட்சக்கணக்கான பேர்களின் தலை உருண்டால்தான் நமக்கு விடுதலை கிடைக்கும் என்ற நிலை வருகிறது. ஜின்னா, இதற்கு ஆக எத்தனை முஸ்லிம்களைப் பலி கொடுத்தார்? இதன் பிறகுதான் அவர்கள் நாட்டை அவருக்கு விட்டுக்கொடுத்தார்கள். அதேபோல், நாமும் வாங்கவேண்டிய நிலை ஏற்பட்டால்தான் முடியும்போல் இருக்கிறது. எப்படியாவது நம் நாடு நம் கையில் வந்தால் ஒழிய நமக்கு நல்ல வாழ்க்கை இல்லை. இல்லையானால், என்றும் நாம் அடிமையாகத்தான் இருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும்.

நம் திராவிட நாடாகிய சென்னை இராஜ்யமானது சுதந்திரத் தனி அரசு நாடாகப் பிரிந்து ஆகவேண்டும் என்பது திராவிட கழகத்தின் மூச்சு. இந்த மூச்சு நமக்கு இன்றல்ல, நேற்றல்ல, பார்ப்பன துவேஷத்தால் அல்ல, காங்கிரசுக்கு விரோதமாக அல்ல, சுதந்திரத்துக்கு எதிர்ப்பாக அல்ல. ஏனெனில், இன்றைய இந்த நாட்டின் சுதந்திர சுயேச்சை ஆட்சியானது திராவிட நாட்டுக்கு, திராவிட மக்களுக்கு வெள்ளை ஆரியன் ஆட்சியைவிடக் கொடுமையான, புராண கற்பனைகளில் ஆரிய ஆட்சிக் கொடுமைகளைவிட மோசமான மனு ஆட்சியாகவே இருந்துவருகிறது. வடிகட்டின மஞ்சள் ஆரியன் சர்வாதிகார ஆட்சியாகவே இருந்துவருகிறது. அரசியல், பொருளியல், கல்வி இயல், கலை இயல், மொழி இயல், கலாச்சார இயல், பண்பு இயல், சமய இயல், சமுதாய இயல் முதலிய எல்லா இயல்

களும் மந்சன் ஆரிய ஆதிக்க இயலாகவும், ஆரியர்களின் சுகபோக இன்ப வாழ்விற்காகவே அமைக்கப்பட்டதாகவும் இருந்துவருகிறது.

['விடுதலை'-தலையங்கம்—27-7-1951, 1-8-1951, 12-11-1952]

## 2. மொழிவாரிப் பிரிவினை ஏன்?

பெரியோர்களே! தோழர்களே!

முதலாவதாக, நாட்டுப் பிரிவினை என்பதைப்பற்றிப் பேசுகிறேன். பிரிவினை என்பது எதற்காக? ஒரு ஆட்சியின் கீழ் இருப்பவர்கள் பிரிந்து கொள்ள வேண்டும் என்பது எதற்காக? ஆட்சி நலத்திற்காகவா? ஒரே ஆட்சியில் எவ்வளவு பிரிந்தாலும் அந்த ஆட்சியின், அந்த ஆட்சிக் கொள்கையின் பயனைத்தானே அனுபவிப்போம்! இந்தப் பிரிவினையால் என்ன மாறுதல் நாட்டு மக்களுக்கு ஏற்படுத்தமுடியும்?

ஒரு குடும்பம் பிரிந்துகொள்ள வேண்டுமானால் பிரிந்துகொள்ள ஆசைப்படுபவர்கள் எதற்காக ஆசைப்படுகிறார்கள்? பிரிந்து போனால் ஏதோ நம் இஷ்டம் போல நலம் அனுபவிக்கலாம் என்பதுதானே கருத்து. மற்றபடி, அப்படிக்கு இல்லாமல் இவன் பயிர் செய்தால் உழவேண்டி இருக்கிறது; தண்ணீர் பாய்ச்சவேண்டி இருக்கிறது. பிரிந்து போனால் உழாமல், தண்ணீர் பாய்ச்சாமல் வெள்ளாமை எடுக்கலாம் என்பதற்கு ஆகவா? வெறும் சுயநலம் தவிர இந்தப் பிரிவினைக்கு அர்த்தமே இல்லை. பிரிந்து வேறு எந்த ஆட்சியில், எந்த ஆட்சிக் கொள்கையின் கீழ் இருக்கப் போகிறார்கள் இவர்கள்? மத்திய ஆட்சியில்—மத்திய ஆட்சி அரசியல் திட்டத்தின் கீழ்தான் வாழவேண்டும்.

பிரிந்தவர்களுக்குப் 'பார்லிமெண்ட்' டில்லியில்தான்; முதல்மந்திரி பண்டித நேரு தான்; குடியரசுத் தலைவர் இராஜேந்திர பாபுதான்—இது இன்று மாத்திரமல்ல—இந்தப் பிரிவினை உணர்ச்சி 1921-லேயே ஏற்பட்டதாகும்.

ஏன்? காங்கிரஸ் கிளர்ச்சியால் சில அதிகாரம் பதவி ஆதிக்கம் ஏற்படும் என்கின்ற எண்ணம் அதில் அக் கிளர்ச்சியில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோருக்கும் தெரியும். அப்போது கிளர்ச்சியில் சம்பந்தப்பட்டவர்கள் படித்தவர்களில் பலர். அதிகாரம், பதவி வந்தால் சிலருக்குத்தான் வாய்ப்பு ஏற்படும். அதற்காகச் சிலர் எதிர்பார்க்கிறார்கள்; அதற்கு என்ன செய்வது என்ற எண்ணம் பலருக்குத் தோன்றியது. அதற்காகப் பிரிவினை கோரினார்கள். அப்படிப் பிரிந்தால் பல கவர்னர்கள், பல மந்திரிகள், பல முதல் மந்திரிகள் ஏற்படுவார்கள் என்று கருதி, அந்தப் பிரிவினைக்குக் காரணம் என்ன சொல்லுவது என்று யோசித்து—அதற்கு ஆசைப்பட்ட தலைவர்களும், பலமொழி பேசுபவர்களாக இருந்ததால் 'மொழிவாரி நாட்டுப் பிரிவினை' என்று பிரிந்தால் அந்தந்த மொழித் தலைவனுக்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று கருதி, 'மொழிவாரி மாகாணம்' என்றும் பெயர்வைத்து, அப்போதே இந்தியாவை 20 மாகாணங்களாக்கி, இருபது காங்கிரஸ் தலைவர்கள், காங்கிரஸ் செகரட்டரிகள், முதலியவர்கள் தலைமையை ஏற்படுத்திப் பிரித்துக்கொண்டார்கள்.

அவற்றுள் ஒன்றுதான் எனக்குக் கிடைத்தது. நானும் முதலில் செகரட்டரிஆகி பிறகு தலைவனும் ஆனேன். அப்போதே என்னைப் புகழ்பவர்கள் 'நாயக்கரே! நமக்கு சுயராஜ்யம் வந்தால் நீங்கள்தான் சென்னை (தமிழ்நாடு) கவர்னர்' என்று சொல்லுவார்கள். ஏன் இதைச் சொல்லுகிறேன் என்றால், அந்தப் பிரிவினை உணர்ச்சிக்குக் காரணம் பதவி, சுயநலம் ஆகிய இரண்டேதான்; வேறு ஒன்றுமே இல்லை என்பதைத் தெளிவு படுத்தவேதான்.

இனி, 'மொழிவாரி' என்பதைப் பற்றிச் சில சொல்லுகிறேன். மொழியின்மீது ஒரு நாடு எதற்காகப் பிரியவேண்டும்? சாதியின்மீது, மதத்தின்மீது, இனத்தின்மீது பிரிவது

என்றால் அதற்கு அர்த்தம் உண்டு. ஏனெனில், அவை ஒவ்வொன்றுக்கும் மாறுபட்ட, பொருத்தமற்ற, ஒற்றுமையற்ற கொள்கைகள் திட்டங்கள் உண்டு. அவைகளால் இலாப நஷ்டம், சாதக பாதகம் அடைபவர்கள் இருப்பார்கள். அவர்கள் இலாபத்தைப் பெருக்கவோ, கஷ்டத்தைக் குறைக்கவோ தாங்கள் 'மெஜாரிட்டி'யாய் இருக்கும் நாட்டைப் பிரித்துக்கொண்டால் நல்லது என்று ஆசைப்படுவார்கள், இது இயற்கை.

மொழிகளில் அப்படிக் கொள்கையோ, திட்டமோ, அனுபவமோ, கலாச்சாரமோ—பழக்க வழக்கமோ மாற்றமாய் இருக்கும்படி நமக்குள் எந்த மொழியுமே இல்லை. மொழியினால் பெருமை, சிறுமை, இலாப நஷ்டம் ஒன்றுமே இல்லை. ஆதலால், இதைக் காரணம் காட்டிப் பிரித்துக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. 'பிரிவினை கூடாது; பேதம் கூடாது; சாதி, மத, வகுப்பு பேதமற்ற தேசியவாதிகள், தியாகிகள் நாங்கள்' என்று பேசுகிற காங்கிரசாருக்கு அல்லது சர்க்காருக்கு மொழிக்காகப் பிரியவேண்டும் என்பதும், மொழிக்காகப் பிரிக்கவேண்டும் என்பதும் சுயநலமல்லாமல் இதில் பொதுநலம் என்ன என்று கேட்கிறேன்.

அப்படித்தானாகட்டும்; மொழிக்காகப் பிரிவதை ஒப்புக்கொள்வதானாலும் நம்மில் இப்போதுள்ள சென்னை இராஜ்யத்தில் பிரிக்கப்படவேண்டிய அளவுக்கு என்ன வேறு வேறு மொழிகள் இருக்கின்றன? இந்திக்கும் இந்துஸ்தானிக்கும் உள்ள பேதம் அளவு கொண்ட பிரிவினை மொழிகூட நம்மிடம் இல்லையே! சென்னை இராஜ்ய மொழி என்ன? எது, எது? எத்தனை? ஒன்றுமில்லையே! ஒரே ஒரு மொழிதானே இருக்கிறது; அதுவும் தமிழ்தானே! உள்ள மக்களில் 100-க்கு 90 பேர் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள்தாமே! ஒரு மொழிக்கு சென்னை இராஜ்யத்தில் நான்கு பெயர்கள் வழங்குகின்றன. அவை முறையே தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்று சொல்லப்படுகின்றன. இதற்குக் காரணம், ஒருவருக்கொருவர் சம்பந்தமற்ற—சுலபத்தில் போக்குவரவுக்கு வசதியற்ற காலத்தில் தனித்தனியாக வாழ்ந்த கூட்டங்கள் பேசிய தமிழ்மொழியை, நிலத்தை உத்தேசித்து, சீதோஷ்ண நிலைமையை உத்தேசித்து, ஆங்காங்குள்ள தெனிவை உத்தேசித்து, தமிழை ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாக உச்சரித்த உச்சரிப்பு பேதம் தானே இன்றைய தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளமாக மாறிவிட்டன! நான் இதைப்பற்றி 20 ஆண்டுகளுக்கு முன்னாலேயே பேசி இருக்கிறேன்; பத்திரிக்கைகளில் எழுதி இருக்கிறேன்; சவால் விடுத்திருக்கிறேன்.

இந்த விளக்கத்திற்காக இந்தக் கூட்டத்தையே பயன்படுத்திக்கொள்ள எனக்கு இஷ்டமில்லை. உதாரணத்திற்காகச் சிலவற்றை மட்டும் சொல்லுகிறேன். தெலுங்கு, கன்னடம், மலையாளம் இவைகளுடைய வயது என்ன என்பது உங்களுக்குத் தெரியாதா? இந்த எழுத்துக்கள் எப்போது எப்படி ஏற்பட்டன என்று உங்களுக்குத் தெரியாதா? வயது ஒரு பக்கம் இருக்கட்டும். சொற்களை எடுத்துக்கொள்வோம். தமிழுக்கும், தெலுங்கு முதலியவற்றிற்கும் சொற்களில் என்ன மாறுதல் இருக்கின்றன? இப்பொழுதும் சவால் விடுகிற தன்மையிலே பேசுகிறேன். மலையாளியோ, தெலுங்கரோ, பண்டிதர்களாய் இருப்பவர்கள் விளக்கட்டும்; ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கிறேன்.

தோழர்களே! தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்கின்ற மொழிகளை எடுத்துக் கொண்டு அவைகளிலுள்ள வடமொழி முதலிய அன்னியமொழி, சார்பு நாட்டு மொழி முதலியவைகளை அடியோடு நீக்கிவிட்டு, மீதமுள்ள மொழிகளை எடுத்துக்கொண்டு அவற்றில் தமிழ் அல்லாத மொழிச் சொற்கள் எவ்வளவு இருக்கின்றன என்று யாராவது கணக்குச் சொல்லட்டுமே, பார்ப்போம்! சுத்த மலையாளம், சுத்தக் கன்னடம், சுத்தத் தெலுங்கு என்று ஒரு பத்துச் சொற்களையாவது காட்டக்கூடியவர்கள் இருக்கிறார்களா? இதுவரையில் யாராவது காட்டினார்களா—இதுதான் சுத்தத் தெலுங்கு என்று; இதுதான் சுத்தக் கன்னடமென்று; சுத்த மலையாளமென்று! தமிழிலேயே இசைப்பாட்டுக்கள் இருக்க

வேண்டுமென்று நான் போராட்டம் துவக்கிய காலத்தில் நான் ரூ. 2–8–0 கிரயம் போட்டு, தியாகராஜ கீர்த்தனை என்ற புத்தகத்தை விலைக்கு வாங்கி, ஒரு கீர்த்தனையிலாவது 50% (விகிதத்துக்கு) குறைந்த தமிழ் வார்த்தைகள் இருக்கின்றனவா, காட்டுங்கள் பார்ப்போம் என்று ஒவ்வொரு கூட்டத்திலும் காட்டிக் கேட்டிருக்கிறேன்.

தமிழ், தெலுங்கு முதலிய சொற்களில் என்னபேதம் இருக்கின்றன? வீடு என்று எடுத்துக்கொண்டால் தெலுங்கில் 'இல்' என்பான்; கன்னடன் 'மனை' என்பான்; மலையாளி 'பொறை' அல்லது 'உள்' என்பான். இதில் எது தமிழ் அல்லாதது?

தண்ணீரை எடுத்துக்கொண்டால் தமிழன் தண்ணீர் என்பான்; தெலுங்கன் 'நீள்' என்பான்; கன்னடியன் 'நீரு' என்பான்; மலையாளி 'வெள்ளம்' என்பான்; இதில் எது தமிழ் அல்லாதது?

சோற்றை எடுத்துக்கொண்டால் தெலுங்கன் 'வன்னம்' என்பான்; கன்னடியன் 'அன்ன' என்பான்; மலையாளி 'ஊணு' என்பான்; இல்லாவிட்டால் 'சோறு' என்பான்; இதில் எது தமிழ் அல்லாதது?

சேலையை எடுத்துக்கொண்டால், தமிழன் 'சீலை' என்பான். தெலுங்கன் 'சீர' என்பான்; கன்னடியன் 'சேலே' என்பான்; மலையாளி 'முண்டு' அல்லது 'வேட்டி' என்பான். இதில் எது தமிழ் அல்லாதது?

மற்றும் நான், நீ, எனக்கு, உனக்கு, வா, போ முதலிய சொற்களையும் எடுத்துக் கொண்டால் என்ன பேதம் காணமுடியும்?

உதாரணமாக, தமிழன் எனக்கு, உனக்கு என்கிறான்; தெலுங்கன் நாக்கு, நீக்கு என்கிறான்; கன்னடன் நதிக்கே, நிதிக்கே என்கிறான்; மலையாளி எனிக்கி, உனிக்கி என்கிறான்; இங்கேயே பல தமிழர்கள் நேக்கு, நோக்கு என்கிறார்கள்; இதில் எது தமிழ் அல்லாதது? என்ன பெரிய வித்தியாசம்? இந்த வித்தியாசத்துக்காக ஒரு நாடு பிரிய வேண்டுமானால், அதுவும் சிறிதும் பேதமல்லாத ஆட்சிக் கொள்கைகளிலிருந்து பிரிய வேண்டும் என்றால், இதில் நாணயமான, யோக்கியமான காரணம் ஏதாவது இருக்க முடியுமா? பிரிகிறவர்கள் நாட்டைப் பிரித்துக்கொண்டு என்ன கொள்கையை மாற்றிக் கொள்ளப் போகிறார்கள்? நமது நாட்டில் அரசியல் வாழ்வில் கலந்தவர்கள் பெரிதும் பதவியையும் சொந்த சுயநலத்தையும் இலட்சியம் கொண்ட மக்களாகப் போய்விட்டதால், இம்மாதிரியான சூழ்ச்சிகரமான காரண காரியங்களுக்கு நம்நாடு ஆளாக வேண்டியதாகப் போய்விட்டது!

தவிர, இந்தப் பிரச்சினைகள் தனிப்பட்ட மக்களின் சுயநலப் பிரச்சினை என்பது ஒருபக்கம் இருந்தாலும், நமது சர்க்காரின் தலைமையில் இருப்பவர்களுடைய சுயநல உணர்ச்சி காரணமாகவே இந்தப் பிரிவினைப் பிரச்சினைகள் இப்போது பொதுமக்களிடையில் பெரிய விவாதத்துக்கு உரிய பிரச்சினைகளாகப் போய் விட்டன. எதற்கு ஆக நமது மத்திய சர்க்கார் இந்தப் பிரச்சினையை இதுவரையில் தீர்க்காமல் விட்டுக்கொண்டிருந்தார்கள்? இதற்கு நாணயமான காரணம் ஏதாவது சொல்லமுடியுமா?

பிரிவினை, ஆந்திரா—தமிழ்நாடு என்பதுபற்றி 1921-லேயே முடிந்து விட்டது. அதனுடைய எல்லைகளும் அப்போதே தீர்ந்துபோய்விட்டன. இன்றைக்கு 30 வருஷங்களாக அனுபோக பாத்தியதைகளும் ஏற்பட்டுவிட்டன. இந்த 30 வருஷங்களாக எல்லையிலேயே தமிழனோ, தெலுங்கனோ காங்கிரசை, அனுபோகத்தை எதிர்த்தவர்களும் இல்லை. யாராவது எதிர்த்தார்கள் என்றால் காரியம் நடப்பதற்கு முட்டுக்கட்டை போடவேண்டும் என்பவர்கள் எதிர்த்தார்களே தவிர, மாற்ற வேண்டும் என்பவர்கள் எதிர்க்கவே இல்லை. தமிழர்களில்தான் ஆகட்டும், இன்றைய தினம் தமிழ்நாடு எல்லைக்குப் போராடுகிறோம்

என்று வருகிறார்களே, வீரர்கள்—இவர்கள் இந்த 20, 30 வருடகாலமாக என்ன செய்தார்கள்? இன்றைய தினம் சிலர் தங்கள் விளம்பரத்துக்கு, பிழைப்புக்கு ஒருவகை செய்வது போன்ற சுயநலன்களுக்குக் கூப்பாடு போடுகிறார்களே தவிர, 'குமரி முதல் வேங்கடம்வரை' என்கிற அறிவு இன்றைக்கு வருவானேன்?

இந்தப் பேச்சை இன்றைக்குத்தானே காண்கிறோம்! காங்கிரசார் பிரித்து 30 வருடமாய் மக்கள் அனுபவித்து வருகிறார்கள். இந்தப் பிரிவினையில் கலந்துகொண்டு கூப்பாடு போடுபவர்களில் ஒருவரும் அந்தக் காலத்தில் பேசினவர்களல்லர். அதற்கப்புறம் 20 வருஷங்களிலும் பேசினவர்களும் அல்லர். அனாவசியமாக—காரணம் இல்லாமல், இருந்துவருகிற அமைப்போடு போராடுவது நியாயமல்லவென்றே கருதுகிறேன்.

காங்கிரஸ் சர்க்கார் பதவிக்கு வந்தவுடன் இந்தக் காரியத்தைச் செய்திருக்க வேண்டியது அவர்களுடைய யோக்கியமான கடமை. அவர்கள் இவ்வளவு நாள் தள்ளிப் போட்டுக்கொண்டு வந்ததன் காரணம், பதவியில் உள்ள சிலரின் சுயநலக் காரணமான சூழ்ச்சியே தவிர வேறு இல்லை. ஆந்திரர், தமிழர்கள் கலவரத்தினால் சில வசதிகள் செய்துகொள்ளலாமென்று மத்திய அரசாங்கத் தலைவர்கள் நினைத்தார்கள்; நினைக்கிறார்கள். ஆந்திரர்களும் தங்களுக்கு வாய்ப்பு, பதவிக்கு வசதி ஏற்படுகிற நேரத்தில் பிரித்துக்கொள்ளலாமென்று கருதி அதுவரையில் அழிவழக்கு செய்யலாமென வழக்காடுகிறார்கள்.

பிரிவினைக்குப் பெயர் மொழிவாரி நாட்டுப் பிரிவினை; இதில் பிரிந்துபோக வேண்டுமென்று வாதாடுகிறவர்கள் மொழியை ஆதாரமாகக் கொண்டுதானே பிரிவினை கேட்க வேண்டும்? அதை விட்டுவிட்டு, வேறு மொழி 100-க்கு 69, 70, 80 வீதம் பேசுகிற மக்கள் உள்ள நிலையைத் தங்கள் நாட்டுடன் சேர்க்கவேண்டுமென்று கேட்பது எப்படி யோக்கியமாகும்? அல்லது, இந்தப் பிரிவினைக்கு, 'மொழிவாரி மாகாணப் பிரிவினை' என்றாவது எப்படிச் சொல்லமுடியும்?

இந்த அழிவழக்குக்குக் காரணம், ஆந்திரர்கள் மாத்திரமே அல்லர்; அதிகப் பங்கு மத்திய அரசாங்கத்தாருக்கே உண்டு. ஆந்திரருக்கு ஒரு கஷ்டம்—ஏதோ சில வசதிகள் போய்விடுகின்றனவே என்ற ஒரே கஷ்டம்தான். மத்திய அரசாங்கத்துக்கு இரண்டு விதமான கஷ்டங்கள். என்னவென்றால், மத்திய அரசாங்கத்தை விட்டுப் பிரிந்துகொள்ள வேண்டும் என்று ஒரு கிளர்ச்சி தமிழ்நாட்டில் இருக்கிறது. இவர்களைத் தனிப்படுத்தி விட்டால் கிளர்ச்சி வலுத்துவிடுமே என்கிற பயம். ஆந்திராவில் கம்யூனிஸ்டுகள் பலமும், காங்கிரஸ் எதிரிகள் பலமும் அதிகம். இவர்களைத் தனியாகப் பிரித்தால் அங்கு காங்கிரஸ் ஆட்சிக்கு இடமிருக்காதே என்ற பயம். எனவே, கலகத்தை வளர்ப்பதில் முக்கிய பங்கு மத்திய அரசாங்கத்திற்கு இருக்கிறது. இந்தப் பிரிவினைக் கிளர்ச்சியில் தமிழர்கள் செய்ய வேண்டியதெல்லாம், மத்திய அரசாங்கத்தை எதிர்ப்பதற்கு வசதி செய்துகொள்ள வேண்டியதுதான்.

நிற்க. ஒரு சங்கதியைத் தெளிவுபடுத்த வேண்டியது அவசியமாகும். பிரிவினையின் காரணமாக நம்மிடையில் உரிமை விவகாரம் ஒன்றும் இல்லை. அதாவது, ஆந்திரர்கள் இப்பொழுது அனுபவித்து வருவதற்கு மேலாகக் கேட்பது என்பதற்குக் காரணம் வேண்டும் என்பது ஒருபுறம் இருந்தாலும், ஆந்திரர்களே ஒரே குரலாக எல்லோரும் இப்போது அனுபவிப்பதற்கு மேலாக எங்களுக்கு ஒன்றும் வேண்டியதில்லை என்று சொன்ன பிறகு—நமக்கு விவகாரமேது? அப்படிக் கேட்டாலும், நமக்கு ஆட்சேபம் இல்லை. எந்த அளவில் என்றால், ஆந்திர மொழி பேசுகின்ற மக்களை மெஜாரிட்டியாகக் கொண்ட பகுதிகளை ஆந்திர நாட்டோடு சேர்த்துக்கொள்வதில் ஆட்சேபமில்லை. தமிழ்மொழி பேசும் மக்களைப் பெருவாரியாகக் கொண்ட நாட்டை ஆந்திராவோடு சேர்க்க வேண்டும் என்பது எப்படி, 'மொழிவாரி மாகாணப் பிரிவினை' என்று சொல்லமுடியும்?

அடுத்தாற்போல், அதுபோலவே இன்றைய அனுபவத்தில் தமிழ்மொழி அதிகமாகப் பேசும் மக்களின் பிரதேசம் ஆந்திர நாட்டிலே சேர்ந்தாலுங்கூட, அவர்களுக்கு மொழிவாரிப் பிரதேச உரிமையை உத்தேசித்து எந்த நிமிஷத்திலும் விலகிக்கொள்ள கிளர்ச்சி செய்ய உரிமை உண்டு. அதை நாம் மறுக்கவில்லை; நம்மாலான உதவி செய்யவும் தயாராக இருக்கிறோம். ஆனால், நம்முடைய சொந்தப் பிழைப்பையோ, சுயநலத்தையோ, விளம்பரத்தையோ, கட்சி நலத்தையோ உத்தேசித்து, இன்றைக்குத்தான் இந்தச் சங்கதி தெரிந்ததுபோல் பாவனை காட்டிக் கொண்டு கூத்தாட நமக்கு இஷ்டமில்லை. இது ஏதோ ஒரு அளவில் முடிவுபெறப்போகிற காரியத்தைத் தொல்லைப்படுத்துவதே ஆகும் என்று கருதுகிறேன்.

யோக்கியமான சர்க்காராய் இருந்தால், மொழிவாரிப் பிரதேச அமைப்பு என்பதின் பேரால் செய்யும் எந்தக் காரியத்தையும் இதில் ஜனநாயகம் இருக்கிறதா? பெருவாரியாக தெலுங்கு மொழி பேசுகிற பிரதேசத்தைத்தான் நாம் சேர்க்கிறோமா? அல்லது பெருவாரியாகத் தமிழ் பேசுகிற மக்களைச் சேர்க்கிறோமா? என்பதைச் சிந்திக்க வேண்டியது அவர்கள் கடமையாகும். அதில் அவர்கள் தவறுவதை நியாயத் தவறு என்று சொல்ல முடியாது; நாணயத் தவறு என்றேதான் நான் சொல்லவேண்டியிருக்கிறது.

மொழிவாரிப் பிரதேசப் பிரச்சினையின் தன்மை இவ்வாறு இருக்க, இனி மற்றப் பிரச்சினைகளைப் பற்றிச் சிந்திப்போம். அவை ஆந்திர இராஜ்யத்தின் தலைநகர் சென்னையில் இருக்கவேண்டும் என்பதும்; பொது கவர்னர், பொது அய்க்கோர்ட் இருக்க வேண்டும் என்பதும்; சிறிது காலத்திற்காவது ஆந்திர அரசாங்கக் காரியாலயம் சென்னையிலேயே இருக்க வசதியளிக்கவேண்டுமென்பதும்; இவை ஒன்றுமே முடியாவிட்டால் சென்னையைத் தனி இராஜ்யம் ஆகச் செய்து அது ஆந்திராவுக்கும், தமிழ்நாட்டுக்கும் சம்பந்தமில்லாத, டெல்லியைப் போன்ற ஒரு கமிஷனர் இராஜ்யமாக ஆக்கவேண்டுமென்றும் கேட்கப்படுபவைகளாகும்.

இவைகளைப் பார்க்கும்போது, ஆந்திரர்களுக்கு இந்த விஷயங்களில் பொறுப்புள்ளதும் குறிப்பிட்டதுமான ஒரு யோசனையோ, இலட்சியமோ இல்லை என்பதாகவே தெரியவருகிறது. ஆந்திராவின் தலைநகரம் சென்னையில் எதற்காக இருக்கவேண்டும்? இப்போது ஆந்திர நாடு அமைப்பு என்கிற பிரச்சினை ஒரு விடுதலைப் பிரச்சினையேயொழிய, பாகப் பிரச்சினை அல்ல. எப்படியெனில், சென்னை இராஜ்யம் 4 மொழிவாரிப் பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. நாலில் ஒன்றுதான் ஆந்திரா. இப்பொழுது ஆந்திராதான் மற்ற மூன்றையும் விட்டு விலகிக்கொள்கிறது. ஆகவே, இந்த விலகிக்கொள்ளுதல், சென்னை இராஜ்யத்திலிருந்து விடுதலை பெறுதல் என்பது அர்த்தமாகும். விடுதலை செய்துகொண்டு போகிறவர்கள், விடுதலை செய்துகொண்டு போகவேண்டுமே தவிர, மறுபடியும் ஒன்றாக இருக்க வசதி கேட்பது பொருத்தமற்ற காரியமாகும். ஒரு குடும்பத்தில் ஒருவருக்கொருவர் பிடிக்காமல், ஒருவர் வெளியேறுகிறேன் என்று சொல்லிவிட்டு, அதே அடுப்பிலே நானும் சமையல் செய்துகொள்ளுகிறேன் என்றால் அது கலகத்துக்கு வசதி செய்வதாகுமே தவிர—வாழ்க்கைக்கு வசதியாகாது. அன்றியும், ஒரு இராஜ்யத்திற்குள்ளாக இன்னொரு இராஜ்யத்தின் தலைநகரம் இருப்பது நிர்வாகத்துறையில் நிர்வாகக் குறைவும், இராஜதந்திரக் குறைபாடும் ஏற்படும்.

அதுபோலவே, பொது கவர்னர், பொது அய்க்கோர்ட் இருப்பது என்பதும் அரசியல் சட்டப்படி அனுமதிக்க முடியாததாகும். வேறு வழியில் அனுமதி ஏற்படுத்திக் கொள்ளுவதானாலும் வீண் போட்டிக்கும், நிர்வாகக் கேட்டுக்கும் இடமாகும். சில நாளைக்காவது சர்க்கார் நிர்வாகக் காரியாலயம் சென்னையில் இருக்கவேண்டும் என்று விரும்புவதும் அர்த்தமற்றதேயாகும். இவைகளையெல்லாம் ஒன்றாகவோ—ஒன்றிலேயோ இருக்க வேண்டும் என்று கருதுகிறவர்கள் எதற்காகப் பிரியவேண்டும் என்று கருதுகிறார்கள்

என்பது எனக்குத் தெரியவில்லை. ஏதாவது ஒரு வகையில் தொல்லை ஏற்படும்படி செய்ய வேண்டும், அல்லது, தந்திரமான வழியில் ஆக்கிரமிப்புச் செய்துகொள்ள வேண்டும் என்பதைத் தவிர, வேறு உண்மையான எண்ணம் ஒன்றும் இருக்கமுடியாது என்பதுதான் எனது கருத்து.

உண்மையிலேயே, இந்த ஸ்தாபனங்களுக்குப் பிரிக்கப்படும் ஆந்திர இராஜ்யத்தில் இன்று இடமில்லை என்று கருதுவார்களேயானால், ஆந்திரப் பிரிவினை உணர்ச்சி ஏற்பட்ட இந்த 30 வருஷ காலமாக இவர்கள் என்ன செய்தார்கள்? சமீபத்தில் சுமார் 20 வருஷமாகக் கிளர்ச்சி இருந்தும், பிரிந்துகொண்டால் தங்கள் நாட்டு நிர்வாகத்துக்கும், நீதி ஸ்தலத்துக்கும் இடமில்லை என்று இன்று சொல்லுவது இவர்களுக்கு வெட்கக்கேடாக இல்லையா? இன்னமும் தலைநகரையே இன்ன இடத்தில் என்று நிர்ணயிக்காத இவர்கள் இனி என்றைக்கு நிர்ணயிக்கப் போகிறார்கள்? இந்தமாதிரியான காரியங்களுக்கு ஆந்திர இராஜ்யத்தில் இடமில்லை என்று சொல்லமுடியுமா? ஜமீன்தார்கள் அரண்மனைகள் பல இருக்கின்றன; இவை தவிர சினிமா மண்டபங்கள் பல இருக்கின்றன. இவைகளில் ஏதோ சிலவற்றைப் பிடித்துக்கொண்டால், கைப்பற்றிக்கொண்டால் நாளைக்கே எந்தவிதமான கோர்ட்டும், காரியாலயமும் வைத்துக்கொள்ள முடியும். மற்றும், ஆந்திர ஜில்லாக்களில் ஒவ்வொரு ஜில்லாக்காரரும் தங்கள், தங்கள் ஜில்லாக்களிலே, நகரங்களிலே நிர்வாகக் காரியாலயம், அய்க்கோர்ட் இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள். இதனால் ஆந்திர நாட்டில் காலி இடங்களுக்கு ஏராளமாக விலையுயர்ந்துவிட்டதாகவும் தெரிகிறது. ஆகவே இடத்துக்கும், கட்டடத்துக்கும் யாரும் கவலைப்படவேண்டியதில்லை. அதுபோலவே, பொது கவர்னர் வேண்டுமென்பதும் தேவையில்லாதது ஆகும். கவர்னர்களுக்கா இப்போது பஞ்சம்!

இவைகளை யெல்லாம்விட நாம் கவனிக்கவேண்டிய சங்கதி ஒன்று இருக்கிறது. ஏதோ காரணம் சொல்லி நாம் இவர்களை உள்ளே இருக்கச் சம்மதிப்போமேயானால், பிறகு இவர்களை எப்படி வெளியேற்றுவது? அதற்கு என்ன சட்டம் இருக்கிறது? ஆகவே, இந்தப் பிரச்சினைகள் பெரும் தொல்லைக்கு இடமான பிரச்சினைகளேயாகும்; இதில் எந்தவிதமான உண்மையும் இல்லை என்பதே எனது கருத்து.

இனி, சென்னை நகரத்தைத் தனி மாகாணமாக்குவது என்பது எதற்கு ஆக? ஆந்திரர்களுக்கு இதன் அவசியம் ஏன்? ஒரு இராஜ்யத்தைப் பிரிப்பதும், வேறு இராஜ்யம் ஆக்குவதும், மற்றும் ஒன்றோடொன்று சேர்ப்பதும் அந்த இராஜ்யத்தாருடைய விருப்பத்தைப் பொறுத்ததே ஒழிய, அந்த இராஜ்யத்தார் அல்லாதவர்களுடைய இஷ்டத்தைப் பொறுத்ததா? ஆந்திர நாடு பிரிந்தது என்றால் ஆந்திரர்கள் சென்னையை விட்டு வெளியேறிவிட்டார்கள் என்றே அர்த்தம். வெளியேறினவர்களுக்கு இந்த இராஜ்யத்தைப்பற்றிப் பேச என்ன உரிமை? 'மடத்தை விட்டு வெளியேறின ஆண்டிக்கு நந்தவனத்தைப்பற்றிய கவலை ஏன்?' என்று சொல்வதுபோல, சென்னையைப்பற்றி யோசனை கூற இவர்கள் யார்? தமிழ்நாட்டாராவது, சென்னை நகரத்தாராவதுதான் இதைப்பற்றிப் பேச உரிமை உள்ளவர்கள்.

ஒரு சமயம் மத்திய சர்க்காருக்கு இது விஷயத்தில் அதிகாரமிருக்கிறது என்றாலும்—அவர்கள், தமிழ்நாட்டு மக்கள் விருப்பப்படியும், சென்னை நகர மக்களின் விருப்பப்படியும் தான் செய்யக் கடமைப்பட்டவர்களே ஒழிய தாங்களாகவே ஒன்றும் செய்ய உரிமையற்றவர்களே ஆவார்கள்.

இந்த விஷயங்களைப்பற்றி யெல்லாம் ஆந்திரா இராஜ்யத்தார் பேசுகிறார்கள் என்றால், இதற்கெல்லாம் காரணம் மத்திய அரசாங்கத்தின் வழவழாத் தன்மையேயாகும்; அல்லது தந்திரமேயாகும்.

இதற்கெல்லாம் மற்றொரு காரணம் என்னவென்றால், தக்க யோசனையும் கிடையாது பலமும் கிடையாது என்றுதான் சொல்லவேண்டும். இந்தக் காரியத்தில் நாம் ஏதாவது போராட வேண்டி இருக்குமானால் அது கண்டிப்பாக மத்திய அரசாங்கத்தோடுதான் போராடவேண்டி இருக்கும். அதற்காக இன்றைய தினம் மத்திய அரசாங்கத்துக்கு ஒரு சரியான எச்சரிக்கைத் தீர்மானம் செய்து அனுப்பவேண்டும்.

அவர்களுக்கு ஆதிக்கம் செலுத்த ஆசை இருக்கிறதேயொழிய, அதைக்கொண்டு தங்கள் தனிப்பட்ட சுயநலத்தைப் பெருக்கிக்கொள்ள முயற்சி இருக்கிறதே தவிர, ஒழுங்கு முறையான—கெட்டிக்காரத்தனமான ஆட்சி செலுத்தத் தகுதியோ அனுபவமோ சிறிதும் இல்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

இரண்டு நாட்களுக்கு முன் மேயர் வீட்டில் நடந்த சர்வ கட்சிக் கூட்டம் என்பதிலும் நான் பேசியபோது இதையே சொல்லியிருக்கிறேன். அதாவது, 'இந்தப் பிரிவினையில் ஏற்படுகிற தொல்லைகள் எல்லாம் மத்திய அரசாங்கத்தாலும், மத்திய அரசாங்கத்தில் செல்வாக்கு உடையவர்களாலும் ஏற்படுகிற தொல்லைகளே தவிர, வேறு ஆந்திர மக்கள் தொல்லை அல்ல. ஆதலால், இதே சமயத்தில் தமிழ்நாட்டின் நிலைமை இன்னதென்றும், தமிழர் விருப்பம் இன்னதென்றும் தெரிவித்துவிடவேண்டியது அவசியம் என்றும்; அந்தப்படி நடக்காதபட்சம் தமிழர்களுடைய அதிருப்திக்கு மத்திய அரசாங்கம் ஆளாக வேண்டிவருமென்றும் ஒரு தீர்மானம் போட வேண்டும்' என்றும் சொன்னேன்.

பிரிவினை விஷயத்தில் என் கருத்து உங்கள் எல்லோருக்கும் தெரியும். பூரண விடுதலை, பிரிவினை வேண்டும் என்பவன் நான். அந்த அளவில் எவ்வளவு எல்லை குறைத்துக் கிடைத்தாலும் கவலை இல்லை என்று சொன்னவன் நான். இன்று காலையிலுங்கூட டாக்டர் A. கிருஷ்ணசாமி அவர்களிடம், 'எனக்குச் சென்னை நகரம் முக்கியமல்ல; அன்னியன் ஆதிக்கமற்ற, அன்னியன் சுரண்டலற்ற பூரண சுயேச்சையுள்ள பிரதேசம் எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அதுதான் தேவை' என்று சொன்னேன். 'ஒரு சமயம் சென்னைபோய்விடுமானாலும் நான் ஒன்றும் அதிகமாகக் கவலைப்பட மாட்டேன்' என்றும், 'சென்னை ஒழிந்து போனால் பாக்கி உள்ள தமிழ் நாட்டை என் இஷ்டம்போல ஆக்கி நாளைக்கே பூரண விடுதலை பெற்ற பிரதேசமாக ஆக்க விளம்பரம் செய்துவிட முடியும்' என்றும் சொன்னேன். ஆனால், 'நான் விஸ்தீரணத்துக்காகப் போராடுகிறவன் அல்லன்; சுதந்திரத்திற்காகப் போராடுகிறவன் என்றாலும் இதில் ஏன் சம்பந்தப்படுகிறேன் என்றால்—மொழிவாரி என்று சொல்லிக்கொண்டு போகிறவர்கள் மொழிவாரியாகவும் பிரித்துக்கொண்டு, மொழி அல்லாத நாட்டிலும் ஆதிக்கம் செலுத்தப்பார்க்கிறார்களே என்ற ஒரே கருத்துத்தானே அல்லாமல், மற்றபடி சென்னை நகரம் தமிழருக்கோ, தமிழ் நாட்டுக்கோ பெரிய தொண்டு செய்திருக்கிறது—செய்து வருகிறது, அல்லது செய்ய முன்வரும் என்பதற்கு ஆக அல்ல' என்றும் சொன்னேன்.

'மற்றும் இவை ஒரு பக்கம் இருந்தாலும், நாம் பிரயத்தனப்படாவிட்டால் சென்னை நகரம் ஆந்திரர்களுக்குப் போய்விடுமோ என்கிற கவலை சிறிதும் வேண்டியதில்லை. ஏனெனில், அனேகமாகத் தமிழ்நாட்டுப் பிராமணர்கள் சென்னையில்தான் வாழ்கிறார்கள். அவர்கள் ஒருநாளும் சென்னை ஆந்திராவுடன் சேரவோ, தனி மாகாணமாக ஆக்கவோ சம்மதிக்கமாட்டார்கள். அவர்கள் இதில் வெற்றி பெற்றே தீருவார்கள். ஆதலால், நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை' என்று இன்று காலையில் சொன்னேன். மற்றும், இது விஷயமாக என்னிடம் பேசவந்த பலரிடத்திலும் இந்தப்படியே பேசியிருக்கிறேன். அதற்காக அவர்கள் என்னிடத்தில் அதிருப்தி கொண்டதாகவும் சாடை காட்டினார்கள்.

[ராயப்பேட்டை லட்சுமிபுரத்தில், 5-1-1953-ல் தலைமையுரை—'விடுதலை' 7-1-1953, 8-1-1953]

# 3. தட்சணப் பிரதேச அமைப்பு

இன்று தமிழ் நாட்டின் முக்கியமான பிரச்சினைகளில் முக்கியத்துவம் பெற்றிருப்பது தட்சணப்பிரதேசம் அமைப்பது என்பதே ஆகும். இது தமிழ்நாட்டைப் பொறுத்த விஷயம் என்பதாக மாத்திரம் இருக்குமானால் இதற்கு எவ்விதத்திலும் முக்கியத்துவம் இருக்காது என்பதோடு, எல்லைப் பிரச்சினைக்குப் பிற்பட்டதாகவே ஆகியிருக்கும்.

எல்லைப் பிரச்சினை தமிழர்களுக்கும் மலையாளிகளுக்கும் மாத்திரம், நிலப்பரப்பு-இன உணர்ச்சி ஆகியவைகளை முக்கியமாகக் கொண்ட பிரச்சினையாக இருப்பதுபோல் இருக்கலாம். ஆனால், தட்சணப் பிரதேசம் அப்படிக்கு இல்லாமல்—மலையாளம், தமிழ் நாடு என்பதாக மாத்திரம் இல்லாமல், இந்தியப் பொது அரசியல் தத்துவத்தையும் சேர்த்து அரசியல் ஆதிக்கத்தில் இருக்கும் சிலரின் சுயநலத்தையும், பொதுவாகப் பார்ப்பனர்களின் அடிப்படை நலத்தையும் சேர்த்துப் பிணைத்துக்கொண்டிருப்பதாக இருப்பதால் தட்சணப் பிரதேசப் பிரச்சினை மிகமிக முக்கியத்துவம் கொண்டதாக இருந்துவருகிறது. இந்தப் பிரச்சினைக்கு, அதாவது தட்சணப் பிரதேச அமைப்புக்குத் தமிழ் நாட்டு மக்கள் 100-க்கு 90 பேர் இஷ்டப்படாதவர்களாகவும், எதிர்ப்பாளர்களாகவும் இருந்தாலும் தமிழர்களுக்கு நாட்டுப்பற்று, இனப்பற்று என்பது தங்கள் தங்கள் சுயநலத்தைவிடப் பிற்பட்டதாயிருப்பதாலும், தங்களில் ஒற்றுமை உணர்ச்சி இல்லாமல் இருப்பதாலும் மெஜாரிட்டி பலம் சரியானபடி பயன்படுவதற்கு இல்லாமல் போயிருக்கிறது.

உதாரணமாக, சென்ற 20-ந் தேதி தமிழ்நாட்டில் நடந்த கடை அடைப்பு ஆகிய காரியங்கள் எந்த அளவுக்கு நடந்திருந்தாலும், அதை நடத்த முற்பட்டவர்கள் என்பவர்கள் கட்டுப்பாடாகவோ, அந்தரங்க ஒற்றுமையாகவோ இல்லாமல் அவரவர் தன்னலத்திற்கு, கட்சி நலத்திற்கு ஏற்றபடி நடந்து கொண்டதன் மூலம் தட்சணப் பிரதேச அமைப்பு முக்கியத்துவம் பெறமுடியாமல் போய்விட்டது. ஏனெனில், ஒவ்வொருவர் ஒவ்வொரு பிரச்சினையை முக்கியமாகக்கொண்டு பேசியதன் பயனாய், இந்தக் கடையடைப்பு எதற்காக—எதை முக்கியமாகக்கொண்டது என்பதை மக்களோ, அரசாங்கமோ உணர முடியாமல் போய்விட்டது. பத்திரிகைக்காரர்களும் அந்தப்படியே பிரச்சாரம் செய்து விட்டார்கள்.

இவை எப்படி இருந்தபோதிலும் இப்போது ஒரு விஷயம் நாம் கவலைப்படத்தக்கதாகக் காணப்படுகிறது. அதாவது, காங்கிரஸ் தவிர்த்து வெளியிலுள்ள கட்சிகளும், கோஷ்டிகளும் தங்களுக்குள் தலைவிரி கோலமாய் இருந்தாலும், காங்கிரஸிலும் மந்திரிகளிலுங்கூடக் கட்டுப்பாடில்லாமல்—ஒற்றுமையில்லாமல் தலைவிரி கோலமாய்த் தமிழ் நாட்டுக்கு ஆபத்தைக் கொண்டுவந்து விட்டுவிடுவார்கள்.

நமது அரசாங்க முதல் மந்திரி, நேரிடையாக எதிர்ப்பு உணர்ச்சியைக் காட்டிக் கொள்ளாவிட்டாலும் அந்தரங்கத்தில் முழு எதிர்ப்புணர்ச்சி உள்ளவராக இருந்து வருகிறார். மற்றும், அவர் எந்தச் சந்தர்ப்பத்திலும் அமைப்பை ஆதரித்ததாகச் சாடைகூட காட்டவில்லை.

ஆனால், அடுத்த மந்திரியாய் இருப்பவர் கட்டுப்பாட்டையோ ஒழுங்கு முறையையோகூட இலட்சியம் செய்யாமல், தட்சணப் பிரதேச அமைப்பைத் தான் முழு பலத்தோடு ஆதரிப்பதாகக் கூறிக்கொண்டு, பிரச்சாரமும் செய்துகொண்டு, அதற்கு ஆதரவாகக் கட்சி சேர்த்துக்கொண்டும் வருவதாகத் தெரிகிறது.

இது காங்கிரஸின் பிளவைக் காட்டுவதாக இருப்பது மாத்திரமல்லாமல், அரசாங்க—மந்திரி சபையின் ஒழுங்கு முறையற்ற தன்மையையும் காட்டுகிறது.

அமைப்புக்கு ஆதரவாகப் பிரச்சாரம் செய்துவரும் மந்திரிக்கு மெஜாரிட்டி இல்லையானாலும், பலம் அதிகமாக இருக்கிறது. எப்படியெனில், (1) மத்திய அரசாங்க ஆதரவு;

(2) பிரதமமந்திரி பண்டித நேருவின் பலம்; (3) பார்ப்பனர்களின் ஆதரவு; (4) பார்ப்பனப் பத்திரிகைகளின் ஆதரவு; (5) தன் கட்சி (சி. ஆர். கட்சி) ஆதரவு ஆகிய இவை தவிர; (6) சென்னை முதல் மந்திரி காமராஜரின் எதிரிகளின் ஆதரவு; (7) இவ்வளவுடன் சமய சஞ்சீவிகளின் ஆதரவு—ஆகியவைகள் இருக்கின்றன. காமராஜருக்கு இருக்கும் ஆதர வெல்லாம் பொதுஜனங்களின் ஆதரவுதான் முக்கியமான ஆதரவென்னலாம்.

இந்த நிலையில், காமராஜர் சும்மா இருப்பது ஆபத்தென்பதாக நமக்குத் தோன்று கிறது. காமராஜர் மவுனமாக இருந்தாலும் காங்கிரஸ் தட்சணப் பிரதேச அமைப்புக்கு எதிராயிருப்பவர்களில் யாராவது தைரியமாய் முன்வந்து அமைப்பு எதிர்ப்பை நல்ல வண்ணம் நாட்டி, ஒழுங்கு முறைக்கு விரோதமாக ஆதரிப்பவர்களைக் கண்டித்து அறிக் கைகள் விடவேண்டியதும், தட்சணப் பிரதேசத்தை எதிர்த்தும் காங்கிரஸ் பிரமுகர்கள், காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்கள், காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள், காரிய கமிட்டி அங்கத்தினர்கள் முதலானவர்களுடைய கையொப்பங்களையும் உடனடியாகப்பெற முயற்சிக்க வேண்டுமென விரும்புகிறேன். இவர்களில் யாராவது ஏதாவது தாட்சண்யத் திற்குக் கட்டுப்பட்டு ஆதரிப்புக்கு வாக்குக் கொடுத்துவிட்டால், பிறகு அவர்களைத் திருப்பு வது கடினமான காரியமாகிவிடும் என்று கருதுகின்றேன்.

தட்சணப் பிரதேச அமைப்பைத் தமிழ் நாட்டவர்கள் முழுமூச்சுடன்—உயிரைக் கொடுத்து எதிர்ப்பார்கள் என்பதையும், அதனால் அண்மையில்வரும் தேர்தலில் தலைகீழ் மாற்றம் ஏற்பட நேரலாம் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

['விடுதலை'—அறிக்கை—1-3-1955]

தட்சணப் பிரதேசம் தற்கொலையானது. இன்றும் நாளையும் பெங்களூரில் தங்கு கின்ற தமிழ்நாடு முதலமைச்சர் திரு. காமராசர் அவர்கட்குத் தலைவர் பெரியார் அவர்கள் பின்வரும் அவசரத் தந்திச் செய்தியை அனுப்பியுள்ளார்:

'தட்சணப் பிரதேசம் ஏற்படுவதென்பது தமிழர்களுக்கு வாழ்வா? சாவா? என்பது போன்ற உயிர்ப் பிரச்சினையாகும். உங்களுக்கும் மற்றெல்லோருக்கும் இது தற்கொலை யானதும் ஆகும். தட்சணப் பிரதேசம் ஏற்படுமானால் முன்பின் நடந்திராத கிளர்ச்சி செய்வதற்குத் தமிழ் மக்களை நெருக்குவதாகிவிடும். அருள்கூர்ந்து நம் எல்லோரையும் தமிழ் நாட்டையும் காப்பாற்ற வேண்டுகிறேன்.'

['விடுதலை' 1-2-1956]

பெரியோர்களே! தோழர்களே!

தட்சணப் பிரதேசம் வந்தால் தமிழராகிய நமக்குத்தான் ஆபத்து. தமிழ், கன்னடம், மலையாளம் மூன்று நாடுகளும் ஒன்றுசேர்ந்தால், பார்ப்பனர்களால் கழித்து விடப்பட்டு நம்மவருக்குக் கிடைத்துவரும் உத்தியோகங்களெல்லாம் மலையாளிகளின் கைக்குள் போய்விடும். நாமெல்லோரும் போலீஸ், கக்கூஸ் எடுத்தல், ரெயில்வே கூலி முதலிய வேலைகளைத்தான் செய்யவேண்டிய நிலைமை வரும். முழு அதிகாரம் எல்லாம் வடநாட்டவருக்கும், மலையாளிகளுக்கும் பார்ப்பனர்களுக்கும்தான் போகும். மத்திய சர்க்கார் சுரண்டல் பெரிதாக உள்ளது. இப்பொழுதே நம்மை அடிமைபோல் நடத்து கிறார்கள். கோடிக்கணக்கான ரூபாய்கள் புகையிலை வரி, போக்குவரத்து, சுங்க வரி முதலிய பெரிய வருமானங்கள் அங்கு போகின்றன. அவர்கள் இஷ்டப்படி சம்பளம் போட்டுக்கொள்கிறார்கள். மத்திய அரசாங்கத்தில் ஒரு போர்ட்டருக்குக் கொடுக்கும் சம்பளம், இங்கு ஒரு எஸ். அய். க்கும், ஒரு கிளார்க்குக்கும் கொடுக்கப்படுகிறது. காங்கிரஸ் மொழிவாரியில் பிரியவில்லையா? வெள்ளையன் ஆட்சி முறைக்காக அமைத்த அமைப்பைக் காந்தி போன்றவர்கள் குறைசொன்னார்கள். மொழிவாரியாக மாகாணங்

1686—92

களைப் பிரிக்கவேண்டும் என்று கூறினார்கள். அதன்படி தமிழ்நாடு போன்று 21 மாகாணங்களாகப் பிரித்து, 21 காங்கிரஸ் கமிட்டிகளை உண்டுபண்ணினர். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கு முதல் செகரட்டரியாக இருந்தது நான்தான். ஆகவே, நாட்டை அப்பொழுதே மொழிவாரியாகப் பிரிக்க ஒப்புக்கொண்டார்கள். இப்பொழுதே தமிழனுக்கு வேலை இல்லை. அன்னியரும் ஆதிக்கம் செலுத்த வந்தால் நிலைமை மிக மோசமாகிவிடும்.

[மதுரையில், 5-6-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 14-6-1956]

'நாடு பிரிவினைக் கமிட்டி' அறிக்கையைப் பார்த்தேன். இந்த அறிக்கை வெளியாவதற்கு முன்பே அறிக்கைபற்றிய சேதிகளின் சுருக்கம் ஒருவாறு எனக்குத் தெரிய வந்தது.

பொதுவாக, ஆந்திரா பிரிந்ததிலிருந்தே நாட்டுப் பிரிவினையில் எனக்குக் கவலை இல்லாமல் போய்விட்டது. பிறகு கன்னடமும், மலையாளமும் (கர்நாடகமும் கேரளாவும்) பிரிவதில் இரண்டு மூன்று காரணங்களால்—இவை சீக்கிரத்தில் பிரிந்தால் தேவலாம் என்கின்ற எண்ணம் தோன்றிவிட்டது. என்ன காரணம் என்றால்,

ஒன்று, கன்னடியனுக்கும், மலையாளிக்கும் இனப்பற்றோ, இனச் சுயமரியாதையோ, பகுத்தறிவுணர்ச்சியோ இல்லை என்பதாகும். எப்படியெனில், அவர்களுக்கு வருணாசிரம வெறுப்புக் கிடையாது; சூத்திரன் என்பதுபற்றி இழிவோ, வெட்கமோ பெரும்பாலோருக்குக் கிடையாது; அவர்கள் மத மூடநம்பிக்கையில் ஊறிவிட்டவர்கள்.

இரண்டு, அவர்கள் இருவருக்குமே—மத்திய ஆட்சி என்னும் வடவராட்சிக்குத் தங்கள் நாடு அடிமையாய் இருப்பதுபற்றியும் சிறிதும் கவலையில்லை.

ஆகவே, இவ்விரு துறைகளிலும் நமக்கு எதிர்ப்பான எண்ணங்கொண்டவர்கள்; எதிரிகள் என்றே சொல்லலாம்.

மூன்றாவது, இவர்கள்—இருநாட்டவர்களும் பெயரளவில் இருநாட்டவர்களானாலும், அளவில், எஞ்சிய சென்னை இராச்சியம் என்பதில் 14 மாவட்டங்களில் (ஜில்லாக்களில்) இரண்டே ஜில்லாக்காரர்களாவார்கள்.

1. சென்னை, 2. செங்கற்பட்டு, 3. வடஆர்க்காடு, 4. சேலம், 5. கோவை, 6. நீலகிரி, 7. திருச்சி, 8. மதுரை, 9. இராமநாதபுரம், 10. திருநெல்வேலி, 11. தஞ்சை, 12. தென்னார்க்காடு, 13. தென்கன்னடம், 14. மலபார்.

அப்படி 14-ல்—7-ல் ஒரு பாகஸ்தர்களாக இருந்துகொண்டு, தமிழ்நாட்டின் அரசியல், பொருளாதாரம், உத்தியோகம் முதலியவைகளில் 3-ல் 2 பாகத்தை அடைந்துகொண்டு, இவை கலந்து இருப்பதால் நம் நாட்டைத் தமிழ்நாடு என்றுகூடச் சொல்வதற்கு இடமில்லாமல் தடுத்து ஆண்டு கொண்டிருக்கிறார்கள்.

இதை, நான் ஆந்திரா பிரிந்தது முதல் சொல்லிக்கொண்டே வந்திருக்கிறேன். ஆதலால், இவர்கள் சீக்கிரம் ஒழியட்டுமென்றே கருதிவந்தேன். அந்தப்படி நல்ல சம்பவமாகப் பிரிய நேர்ந்துவிட்டது. ஆதலால், நான் இந்தப் பிரிவினையை வரவேற்கிறேன்.

இந்தப் பிரிவினை நடப்பதில் சேர்க்கை சம்பந்தமாக ஏதாவது சிறு குறைபாடு இருந்தாலும், அதை மேற்கண்ட பெரும் நலத்தை முன்னிட்டு, கூடுமானவரை ஒத்துப் போகலாமென்றே எனக்குத் தோன்றிவிட்டது. மற்றும், இந்தப் பிரிவினை முடிந்து தமிழ்நாடு தனி நாடாக ஆகிவிட்டால் நமது சமய, சமுதாய, தேசிய, சுதந்திர முயற்சிக்கும் அவை சம்பந்தமான கிளர்ச்சிக்கும், புரட்சிக்கும் நமது நாட்டில் எதிர்ப்பு இருக்காதென்றும் இருந்தாலும் அதற்குப் பலமும், ஆதரவும் இருக்காதென்றும் கருதுகிறேன்.

நிற்க, இந்தப் பிரிவினை அமைப்பு ஏற்பாட்டில் எனக்கிருக்கும் சகிக்கமுடியாத குறை என்ன இருக்கிறது என்றால், நாட்டினுடையவும், மொழியினுடையவும், இனத்தினுடையவும் பெயர் அடியோடு மறைக்கப்பட்டுப் போய்விடுகிறதே என்கிற குறைபாட்டு ஆத்திரந்தான்; நம் நாட்டுக்கு, சமுதாயத்திற்கு, இனத்திற்கு திராவிடம் என்று இருந்த பெயர், அது தமிழல்ல என்பதானாலும், நமக்கு அது ஒரு பொதுக் குறிப்புச்சொல்லும், ஆரிய எதிர்ப்பு உணர்ச்சிச் சொல்லுமாக இருக்கிறதே என்று வலியுறுத்தி வந்தேன். அதை ஆந்திர, கர்நாடக, கேரள நாட்டு மக்களல்லாமல் தமிழ் மக்களில் சிலரும் எதிர்த்தார்கள். பின்னவர்கள் என்ன எண்ணங்கொண்டு எதிர்த்தாலும், அவர்களுக்கு மற்ற மூன்று நாட்டார் ஆதரவு இருந்ததால் அதை வலியுறுத்துவதில் எனக்குச் சிறிது சங்கடமிருந்தது. அவர்கள் மூவரும் ஒழிந்த பிறகு அவர்களையும் சேர்த்துக் குறிப்பிடத்தக்க ஒருசொல் நமக்குத் தேவை இல்லை என்றாலும், 'திராவிடன்' என்ற சொல்லை விட்டு விட்டுத் 'தமிழன்' என்று சொல்லியாவது தமிழ் இனத்தைப் பிரிக்கலாமென்றால், அது வெற்றிகரமாக முடிவதற்கு இல்லாமல் பார்ப்பான் (ஆரியன்) வந்து, 'நானும் தமிழன்தான்' என்று கூறிக்கொண்டு உள்ளே புகுந்துவிடுகிறான்.

இந்தச் சங்கடத்திற்கு, தொல்லைக்கு என்ன செய்வது என்று யோசித்துக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும்போது, இப்போது மற்றொரு மாபெருந் தொல்லை நெஞ்சில் இடி விழுந்தது போன்று வந்து தோன்றி இருக்கிறது.

அதுதான் திராவிடத்தை அல்லது தமிழ்நாட்டைவிட்டு ஆந்திரர், கர்நாடகர், மலையாளிகள் பிரிந்துபோன பின்புகூட, மீதியுள்ள—யாருடைய ஆட்சேபணைக்கும் இடமில்லாத தமிழகத்திற்குத் 'தமிழ்நாடு' என்ற பெயர்கூட இருக்கக்கூடாதென்று பார்ப்பானும், வடநாட்டானும் சூழ்ச்சிசெய்து, இப்போது அந்தப் பெயரையே மறைத்து ஒழித்துப் பிரிவினையில், 'சென்னை நாடு' என்று பெயர் கொடுத்திருப்பதாகத் தெரிய வருகிறது.

இது சகிக்க முடியாத மாபெரும் அக்கிரமமாகும். எந்தத் தமிழனும், அவன் எப்படிப்பட்ட தமிழனானாலும் இந்த அக்கிரமத்தைச் சகித்துக்கொண்டிருக்கமாட்டான் என்றே கருதுகிறேன். அப்படி யார் சகித்துக்கொண்டிருந்தாலும் என்னால் சகித்துக்கொண்டிருக்க முடியாதென்று சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன்.

இதைத் திருத்த, தமிழ்நாட்டு மந்திரிகளையும், சென்னை, டில்லி, சட்டசபை, கீழ்-மேல்சபை அங்கத்தினர்களையும் மிகமிக வணக்கத்தோடு இறைஞ்சி வேண்டிக்கொள்கிறேன்.

மற்றும், தமிழ் நாட்டிலுள்ள புலவர்கள், பிரபுக்கள், அரசியல், சமுதாயஇயல் கட்சிக்காரர்களையும் முயற்சிக்கும்படி அதுபோலவே வேண்டிக்கொள்கிறேன்.

'தமிழ்', 'தமிழ்நாடு' என்கின்ற பெயர்கூட இந்நாட்டுக்கு, சமுதாயத்திற்கு இருக்க இடமில்லாதபடி எதிரிகள் சூழ்ச்சிசெய்து வெற்றிபெற்றுவிட்டார்கள் என்கின்ற நிலைமை ஏற்பட்டு விடுமானால், பிறகு என்னுடையவோ, என்னுடைய கழகத்தினுடையவோ, என்னைப் பின்பற்றும் நண்பர்களுடையவோ வாழ்வு வேறு எதற்காக இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை.

இந்தக் காரியம் மாபெரும் அக்கிரமமான காரியம் என்பதோடு, மாபெரும் சூழ்ச்சிமீது செய்யப்பட்ட காரியம் என்றே கருதுகிறேன். நம்நாடு எது? நமது மொழி எது? நமது இனம் எது? என்பதையே மறைத்து விடுவதென்றால், பிறகு தமிழன் எதற்காக உயிர்வாழ வேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. ஆகவே, இக்கேடு முளையிலேயே கிள்ளப்பட்டு விடும்படி முயற்சி செய்யும்படியாக எல்லாத் தமிழர்களையும் உண்மையிலேயே வணங்கி வேண்டிக்கொள்கிறேன்.

['விடுதலை'—அறிக்கை—11-10-1955]

## 4. திராவிட நாடா? தமிழ் நாடா?

பெரியோர்களே! தோழர்களே!

திராவிடநாடு எது? இதற்கு முன்—1956-க்கு முன் இருந்த சென்னை மாகாணத்தை நான் 'திராவிடநாடு' என்று சொன்னேன். அப்பொழுது மலையாளம், கன்னடம், ஆந்திரம் பிரிந்திருக்க வில்லை. வெள்ளையன் இந்த நாட்டைவிட்டுப் போய்விட்ட, பிறகு வட நாட்டானும், இந்த நாட்டுப் பார்ப்பானும் சேர்ந்துகொண்டு இனிமேல் நமக்கு ஆபத்து என்று கருதி, நான்கு பிரிவுகளாக வெட்டிவிட்டார்கள். இப்பொழுது நம்மோடு ஒட்டிக் கொண்டிருந்த கன்னிக்கோட்டை, மங்களூர் மாவட்டங்களும் மலையாளம், கன்னட நாடுகளுடன் சேரப்போகின்றன. இப்பொழுது நம்முடன் மலையாள, கன்னட நாடுகளின் சம்பந்தமில்லாமல் தனித் தமிழ்நாடாக ஆகிவிட்டோம். ஆகவே, இதை இப்பொழுது 'தமிழ்நாடு' என்று சொல்லலாம். முன்பு அவர்களையும் சேர்த்துக்கொள்ளலாம் என்று சொன்னோம். ஆனால், அவர்கள் பிரித்து தனியாகப் போவதிலேயே கவனத்தைச் செலுத்திப் பிரிந்துபோய்விட்டார்கள். நாம் நிபந்தனையற்ற அடிமைகளாய் உள்ளோம். வெள்ளையர் ஆண்ட காலத்தில் பார்ப்பனரின் அக்கிரமங்களைச் சொல்ல வழி இருந்தது. அவர்களும் நாம் சொல்வதைக் கேட்டுச் சிலவற்றைக் கவனித்துவந்தார்கள். இப்பொழுது நம் நாடு வடநாட்டிற்கு நிபந்தனையில்லா அடிமை நாடாகிவிட்டது. நாங்கள் வெள்ளையரை அப்பொழுதே கேட்டோம்: 'நாங்கள், உங்களை யுத்த காலத்தில் ஆதரித்தோம். பார்ப்பனரும் வடநாட்டுக்காரரும் உங்களை எதிர்த்தார்கள்; எங்கள் இனம் வேறு; அவர்கள் கலை, பழக்க வழக்கங்கள் வேறு' என்று சொன்னோம். அதற்கு வெள்ளைக்காரர்கள், 'நீங்கள் எல்லோரும் ஒன்றுதான் என்று நினைத்து இருந்தோம். இதெல்லாம் உங்கள் குடும்பச் சண்டை; நாங்கள் சீக்கிரத்தில் இந்த நாட்டை விட்டுப் போய்விடப் போகிறோம்' என்று கூறி, முஸ்லிம்களுக்கு சிறு இராஜ்யத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டு, நம்மைப் பார்ப்பனருக்கும், வடநாட்டவருக்கும் காட்டிக்கொடுத்துவிட்டுப் போய்விட்டனர். இப்பொழுதும் நாம் வடநாட்டு ஆட்சியில் இருந்து பிரிந்து தனி நாடு ஆகவேண்டுமென்று கூச்சல் போடுகிறோம். தமிழ்நாடு தனியாகப் பிரிந்தால் இருக்குமா என்று கேட்கிறார்கள். இல்லாமல் காக்கை, கழுகு தூக்கிக்கொண்டா போய்விடும்? பக்கத்தில் இருக்கும் இலங்கையும், பர்மாவும் இருக்கும்பொழுது நாம் மட்டும் இருக்க முடியாதா? நமக்குப் போதுமான வசதி இங்கேயே இருக்கிறது. நமக்கு நாடு கிடைத்து வெள்ளையருடன் ஒப்பந்தம் செய்து கொண்டால் இந்த வடநாட்டான் ஓடிவிடுவானே!

[திருவண்ணாமலையில், 19-8-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 29-8-1956]

## 5. தமிழ்நாடு தமிழருக்கே!

பெரியோர்களே! தோழர்களே!

நாடு சுதந்திரம் பெறவேண்டுமென்றும், திராவிட நாடே—தமிழ்நாடு தமிழருக்கே ஆகவேண்டுமென்றும் சொல்லுகிறோம்.

மலையாளம், ஆந்திரம், கர்நாடகம் பிரிந்துபோய் அவை அவைகளுக்கென தனிச் சட்டசபைகள் அமைத்துக் கொண்டுவிட்டன. நமக்கும் அவைகளுக்கும் சம்பந்தமில்லை. என்றைக்காவது நம்நாடு பிரிந்தேதான் தீரும். பலரின் உயிர்த் தியாகத்தின் மூலந்தான் நாட்டைப் பிரிக்கமுடியும். பாகிஸ்தானும் பல வெட்டு, கொலைகள் நடந்து பலர் செத்துத் தான் பிரிந்தது. பாகிஸ்தான் கொடுத்தால்தான் இந்துஸ்தான் நிலைக்கும் என்ற அளவில், ஆச்சாரியார் காந்தியாருக்கு உணர்த்தியே பாகிஸ்தான் தான் கேட்ட பகுதிகளைப் பெற முடிந்தது. நியாயமுறையில் பாகிஸ்தான் கொடுக்கவில்லை—பலரைப் பலியிட்டது; பல தலைகள் உருண்டன. நாம் ஏன் வடவர் காலடியிலிருக்க வேண்டும்? நம்மை ஏன் அவர்கள் கொள்ளையடிக்க வேண்டும்? ஆகவே, நம்நாடு என்றாவது தனியாகப் பிரிந்து தானாக வேண்டும்.

நம் நாட்டைப் பிரிக்கவும், பொதுவாக இந்திய நாட்டைப் பற்றியும் சென்னையிலுள்ள சட்டசபையில் பேசி ஒன்றும் செய்யமுடியாது. மக்களை ஏமாற்றுகிறார்கள்; சிலர் வரி என்று கூச்சல் போடுகிறார்கள். வரி போடுபவன் டில்லியிலிருக்க, இங்கு கலகம் செய்தால் என்ன ஆகும்?

['விடுதலை' 24-7-1957]

1937-லேயே நாடு பிரியவேண்டுமென்றேன். இதை அன்றிருந்த வடநாட்டார் தெரிந்துதான் இருக்கிறார்கள். பதவி ருசியைக் காட்டி நம்மவர்களை ஏய்த்துவிடுகிறார்கள். பார்லிமெண்ட் மெம்பருக்கு ரூ. 500 சம்பளம்; தினம் 30, 40 ரூபாய் படி—இன்னும் பல வகைகளில் வசதி வாய்ப்பு; கட்டடம் உண்டு. பல நாட்கள் சட்டசபைக்குச் செல்லாமலேயே பணம் பெறலாம். இவ்வளவு வாய்ப்பும் வசதியும் தந்து வசியப்படுத்துகிறார்கள்—வடநாட்டார்.

கடந்த தேர்தலில் டில்லி சென்ற 'மெம்பர்'கள் என்ன சாதித்தார்கள்? யாராலும், 'பார்லிமெண்டை' அசைக்க முடியாது. பெரும்பாலும் காங்கிரசே ஜெயிக்கிறது. இப்படிப் பட்ட பாராளுமன்றத்தினால் நாம் ஒன்றும் சாதித்துக்கொள்ளமுடியாது. எல்லா வசதிகளும் அவன் கையில். எல்லாச் சாமான்களும் அவனிடம் கேட்டு வாங்க வேண்டும். வட நாட்டானின் அரசாங்கத்தின் தயவில்லாமல் நாம் ஒன்றும் செய்துவிடமுடியாது என்ற நிலையில் வைத்துக்கொண்டு, நம்மை அடிமைப்படுத்தி வைக்கிறான். நம்நாடு மற்ற நாடுகளைப் போல முன்னேற வேண்டுமானால் நம்நாடு பிரிந்தே ஆகவேண்டும்.

நம் அதிகாரமெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக டில்லிக்கே போய்க்கொண்டிருக்கிறது. 'யூனிவர்சிட்டி' பூராவும் டில்லி கையில்; கல்லூரிக்கு இடம் ஒதுக்க அவர்கள் இடும் உத்தரவுக்கு நாம் கீழ்ப்படியவேண்டும்.

நம்முடைய மாகாண சர்க்காரின் சிப்பந்திகளுக்குச் சம்பளம் மிகக் குறைவு; டில்லி சர்க்கார் சிப்பந்திகளுக்குச் சம்பளம் இரண்டு மடங்கு கிடைக்கிறது. மத்திய அரசாங்கம் பூராவும் பார்ப்பான் கையில்! சுங்கம், எக்சைஸ் இலாக்காக்களில் ஒரே பார்ப்பனர் மயம். பாலம் அணைகட்ட டில்லி உத்தரவு தேவை.

இவ்வளவு நெருக்கடியான பாதுகாப்போடே வளர்ந்துகொண்டே போகும் மத்திய ஆட்சியிலிருந்து—டில்லி தொடர்பிலிருந்து பிரிய, நாம் பலியாகித்தான் பெறமுடியும். கொலை, இரத்தவெள்ளம் ஏற்படவேண்டும். இப்படிப்பட்ட மிகப் பெரிய போராட்டங்களை நடத்த இருக்கும் இளைஞர்களுக்கு 'சினிமா'வைக் காட்டினால் எப்படி எழுச்சி, உணர்ச்சி உண்டாக முடியும்? நம் நாடு பாகிஸ்தானைப் போலப் பிரியவேண்டாமா? பிரிந்த நாடுகள் தாம் என்ன கெட்டுப்போயின?

நீயும் பாகிஸ்தானுக்குப் பயந்து படைச் செலவை ஏராளமாகப் பெருக்கிக் கொண்டுள்ளாய்; உன் யோக்கியதை இப்படி? நீ என்னைப்பற்றிக் கவலைப்படுகிறாய். நம் நாடு பிரிந்தால் இராணுவச் செலவு இத்தனை கோடியாகாதே! 4 கப்பல்கள் இருந்தாலே போதுமே! நாதியில்லாத்தனம் கொண்டது இந்திய சர்க்கார். இந்தச் சர்வாதிகார யூனியனை எங்களைத் தவிர யாரும் எதிர்ப்பதில்லை; மற்றவர்கள் அவர்களுக்குத் துதிபாடுபவர்களாகவே இருக்கின்றனர்; அவர்கள் தயவை நாடியே இருக்கின்றனர்.

சமுதாயத் துறையில், பிச்சை எடுத்துப் பிழைத்த பார்ப்பனர்களால் நாம் ஆளப் படுகிறோம். எண்ணிக்கையில் நாம் அதிகமிருந்தும் நாம் ஏன் இப்படி ஒரு சிறு கூட்டத்திற்கு அடிமையாய் இருக்கவேண்டும்?

['விடுதலை', 25-7-1957]

பாகிஸ்தான் கிடைக்கவில்லையா?

பாகிஸ்தான் கிடைப்பதற்கு முதலில் எவ்வளவு கஷ்டப்பட்டார்கள்? பிறகு என்ன ஆனது? 'எடு கத்தியை! வெட்டு!' என்றான்.

உடனே ஆச்சாரியார், 'பாகிஸ்தான் பிரித்துக்கொடுக்க வேண்டியதுதான்' என்று சொன்னார். காந்தியார்கூட முதலில் ஒப்புக்கொள்ளவில்லை; ஆச்சாரியார் காங்கிரசை விட்டு வெளியேறிப் பிரச்சாரம் செய்தார். என்னிடம் ஆச்சாரியார் அப்போது சொன்னார்: 'இராமசாமி, இந்த வடநாட்டானுக்குப் புத்தியே இல்லை' என்று.

பாகிஸ்தான் கொடுக்கவேண்டும் என்று ஊர் ஊராய் ஆச்சாரியார் பிரச்சாரம் செய்தார்.

உங்களுக்குத் தெரியாத இரகசியம் ஒன்று சொல்லுகிறேன். அந்தச் சமயத்தில் இராஜகோபாலாச்சாரியின் சட்டையை எல்லாம் கிழித்துவிட்டார்கள்; சட்டை மேலெல்லாம் தார் ஊற்றிவிட்டார்கள்.

பிறகு பாகிஸ்தான் வந்தேவிட்டது. அதேபோல் திராவிட நாட்டை வாங்க முடியும். என்னிடம் திட்டமெல்லாம் இருக்கிறது.

[மேட்டுப்பாளையத்தில், 6 7-1957-ல் சொற்பொழிவு—'விடுதலை' 30-7-1957]

தலைவரவர்களே! தோழர்களே!

உலக நாடுகளை ஒப்பிடுகையில் தமிழ்நாடு பெரிது. உலகத்தில் 85 நாடுகள் உள்ளன. இவற்றில் 74 நாடுகளுக்குமேல்—பரப்பிலும் சரி, ஜனத்தொகையிலும் சரி—மேலானவர்களாகவே நாம் இருக்கிறோம். மற்ற 74 நாட்டுக்காரர்கள் பிழைக்கும்போது நம்மைத் தானா காக்கை தூக்கிக்கொண்டு போய்விடும்?

பூகோளம் தெரியுமா? சரித்திரம் தெரியுமா உனக்கு? உன் இரத்தம் கொண்டவர் தமிழ் மக்கள்—இலங்கையில் நாய் போலத் திண்டாடுகிறார்கள்! அதைப்பற்றிக் கொஞ்சமாவது கவலைப்பட்டதுண்டா? தமிழனுக்கு ஆளும் வசதியில்லையா? புதுக் குடித்தனமாகவே வைப்பதானாலும் வாழமுடியாதா? மந்திரி எவரும் இதுபற்றிப் பேசமாட்டேன் என்கிறாரே? நமக்கு என்ன மற்றவன் தயவு வேண்டுமா? உட்கார்ந்த இடத்திலேயே கம்பியின்மூலம் வியாபாரம் செய்துவிடலாம். நீ (வடவர் ஆட்சி) என்ன அய்யன்—வர்த்தகத்துக்கு உதவி செய்ய? இதைப்பற்றி சப்தம் போட ஆளில்லை; நான் சப்தம் போட வேண்டியது; அது செல்வாக்கைப் பெற்றதும் அதை வயிறு வளர்க்க உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டியது சிலரது வேலையாக உள்ளது. இது என்ன நியாயம்?

இந்த மந்திரிகளை வடவன் பியூன் மாதிரித்தானே நடத்துகிறான்? அவனைப் பிடித்துப்போடு என்றால்—'இதோ ஆய்விட்டது, சாமி' என்றுதானே இவன் சொல்லுகிறான்? சர். இராமசாமி முதலியார் 'முனிசிபாலிட்டி மாதிரி ஆக்கிவிட்டாயே' என்று நன்றாய்க் கேட்டிருக்கிறார்.

நீ (நேரு) பிறந்த நாடு என்பதற்காக அக்கிரமமாக காஷ்மீர் வேண்டும் என்கிறாயே? நீ பிறந்த நாடு என்பதற்காக அக்கிரமமாகப் போகிறாய்! காஷ்மீர் என்ன நேஷன்? என்ன சம்பந்தம் உனக்கும் காஷ்மீருக்கும்? முக்கால் வாசி மக்கள் முஸ்லிம் என்றிருக்கும்போது, அங்குபோய் ரகளை செய்கிறாய்! நீ பிறந்த நாடு என்பதற்காக இவ்வளவு ரகளை செய்கிறாய்.

நான் பிறந்த நாடு எனக்கு வேண்டும் என்று நான் கேட்கக்கூடாதா? 'எதைச் செய்தாலும் சகித்துக் கொள்வேன்—ஆனால் நாடு பிரிவதை மட்டும் சகிக்கமாட்டேன்' என்பது எவ்வளவு திமிர்?

ஆகவே, தோழர்களே! நீங்கள் நன்றாக நினைவு வைத்துக்கொள்ளவேண்டும். நான் போவதற்குள் படம் போட்டுத் தருகிறேன்.

சீக்கிரம் அழைக்கவேண்டும்—எல்லோரையும் அழைக்கிறேன். அழைப்பு அனுப்புகிறேன். அத்தனைபேரையும்—தமிழன் என்பவன் எல்லோரையும் கூப்பிடுகிறேன். நான் தலைவனே அல்லன், தொண்டனாக இருந்து சேவிக்கிறேன். யாராவது தலைவராக இருக்கட்டும். எனது தொண்டர்களையும் சேவிக்கச் செய்கிறேன்—சீக்கிரத்தில் நடக்க வேண்டும்.

இது கண்போன்ற பிரச்சினை—எவ்வளவு மோசமாக நடத்துகிறான்?

நம்நாட்டில் வசூல்செய்யும் பணத்தில் 60 கோடி ரூபாய் எடுத்துக்கொண்டு 8 கோடி நமக்குக் கொடுக்கிறான்—பிச்சை கொடுப்பது போல! யார் கேட்பது? ஏன் என்றால்—'அதிகப் பிரசங்கி'' என்பானே என்று இவன் பயப்படுகிறான்! இங்கு சுரண்டிக் கொண்டு போய் வடநாட்டானுக்குத் தருகிறான்.

எலக்ஷனுக்கு தடவைக்கு 25 கோடி வசூல்செய்கிறான். முதலிலே சொன்னான் டாட்டா கம்பெனிக்காரன் என்னும் ஒரு கம்பெனி 10 இலட்சம் கொடுத்தான். ஒரு டைரக்டர் அதைக் கேட்டான். ஒரு கூட்டாளி, 'அரசியல் கட்சிக்கு எதற்குப் பணம் கொடுப்பது?' என்றான். 'அட பைத்தியமே, நான் கம்பெனி நலனை உத்தேசித்துத்தான் கொடுத்தேன்; இதைக் கொடுத்தால்தானே கோடி கோடியாகக் கொள்ளையடிக்கலாம்' என்று பதில் சொல்லியிருக்கிறானே வடநாட்டான்.

வடநாட்டான் 2 பூனையை வைத்துக்கொண்டுகூட ஆண்டுவிடுவானே? இந்த காமராசர் போனால் வேறொரு ராசர் அவனுக்குக் கிடைக்கக்கூடும். இந்தக் கொடுமை ஒழியவேண்டும்.

நம் நாடு தனியாகப் பிரிந்தே ஆகவேண்டும். ஒரு சுண்டைக்காய் 'எகிப்து' உலகத்தையே கலக்கிவிட்டதே! நம்மால் ஆளமுடியாதா? நான் சொல்லுகிறேன்—பிரிந்தால் நாம் சிறந்த வல்லரசாக வாழ்வோம்.

நாம் ஆரம்பித்தால்—பல வெளிநாட்டான் காத்துக்கொண்டிருக்கிறான்; நம்மோடு சேர்ந்துகொள்வான். நேற்று மராட்டியர்கள் 15 ஆயிரம் பேர் சேர்ந்து நேருவை எதிர்த்திருக்கிறார்கள். இதற்கு முன் செருப்பு மாலையை காந்திக்குப் போட்டிருக்கிறான். நாடு பிரியவேண்டுமென்ற ஆத்திரத்தில் நேருமீது கல் போட்டிருக்கிறான்.

ஆகவே, நாம் பெரிய இயக்கம் நடத்தவேண்டும்; ஆதரவு கட்டாயம் இருக்கும். எனக்குப் பிறகு என்ன நடக்குமோ என்ற கவலையாகத்தான் உள்ளது; பாதியிலாவது விட்டுவிட்டுப் போனால் கொள்கையை விற்றுத் தின்னத்தான் ஆள்வரும்.

ஆகவே, தயவு செய்து சிந்தியுங்கள்! காரியம் நடந்து தீரவேண்டும். இந்தியா படம் கொளுத்தத் தயாராக இருக்கவேண்டும்.

நாளைக்கு இந்திய யூனியன் படம் கொளுத்தப் போகிறோம். கைது செய்யட்டும். இல்லை அது 'நேஷனல் ஆனருக்குப் பங்கமில்லை' என்றால் விட்டுவிடட்டும். நேரு ஒரு பொறுப்புள்ளவர். உலகம் பூராவும் போய் தோட்டா வாங்கி வருபவர்—'காட்டுமிராண்டித்தனம்' என்று எதற்கெடுத்தாலும் சொன்னால் என்ன அர்த்தம்?

முன்பு கண்ணீர்த் துளிகள் ஏதோ செய்ததற்கு—'காட்டுமிராண்டித்தனம்' என்றார். தமிழரசுக் கழகக்காரரையும் 'காட்டுமிராண்டித்தனம்' என்றார். எதற்கெடுத்தாலும் காட்டுமிராண்டித்தனம் என்று சொல்லுகிறார். இதற்கு ஏற்ற பதில், நாம்செய்கை

யில் அமைதியுடன் நடத்திக் காட்ட வேண்டும். யூனியன் படத்தில் தமிழ்நாடு என்பதற்கு மட்டும் ஒரு கோடு போட்டு, பாக்கியுள்ள பாகத்தை—இந்திய யூனியன் படத்தை எரிக்க வேண்டும்.

['விடுதலை' 1-12-1957]

இந்த இராஜ்ய ஆட்சிக்கு எதில் அதிகாரமிருக்கிறது? இந்நாட்டில் அரிசிப் பற்றாக் குறை இருக்கையில்—நாளுக்கு நாள் விலை விஷம்போல் ஏறிக்கொண்டிருக்கையில்—கேரள இராஜ்யத்துக்கு அரிசி ஏற்றுமதியாவதைத் தடுக்க முடிகிறதா? கேரளத்துக்கு வேண்டுமானால் வெளிநாட்டிலிருந்து தருவித்துக்கொடு என்று மத்திய ஆட்சியிடம் கண்டிப்புச் செய்ய முடிகிறதா? இங்கிருந்து 60 கோடி ரூபாய்க்கு மேல் வரிகளைக் கொண்டு போகிறான்; அவனிடமிருந்து நீ பிச்சைக் காசு போல் 8 கோடி பெறுகிறாயே, எதனால்? அவனுக்கு அடிமைப்பட்டிருப்பதால்தானே? அங்கெல்லாம் பலகோடிக் கணக்கில் செலவிடும் பல திட்டங்கள் நடத்திவருகையில், இங்கு என்ன திட்டம் செய்கிறான்? நாம் வரிப் பணம் அழுவதுதானே மிச்சம்? நெய்வேலியில் ஒரு திட்டம் ஆரம்பித்தனர்; அதற்குள்ளாகவே வடநாட்டார்களை அங்கு அதிகாரத்தில் திணித்துவிட்டான். பெரம்பூரில் ஒரு 'கோச் ஃபாக்டரி' ஆரம்பித்துள்ளான்; அதில் அதிகாரம் எல்லாம் வடநாட்டானுக்கும், பார்ப்பானுக்கும்தானே? இந்த இரண்டு இடங்களிலும் பார்ப்பான்கள்தானே அட்டகாசம் புரிகின்றனர். திராவிடர்கள் வெறும் கூலிகளாகத்தானே இருக்கமுடிகிறது? இதை எதிர்த்து இந்த இராஜ்ய அரசாங்கம் கேட்கமுடிகிறதா?

எனவே நாம் தனியாகப் பிரிந்து கொண்டாலொழிய நம் மக்களுக்கு நன்மை செய்ய முடியாதென்று ஆதார பூர்வமாகக் கூறுகிறேன்.

[எழும்பூரில், 30-11-1957-ல் சொற்பொழிவு—'விடுதலை' 2-12-1957]

'இந்திய அரசியல் சட்டம் பிடிக்கவில்லையானால் நாட்டைவிட்டு வெளியேறிவிடு' —பண்டிட் நேரு.

இன்றைய ஆட்சி முட்டாள்தனமான காட்டுமிராண்டி ஆட்சி என்றும், இது பார்ப்பன ஆட்சி என்றும், இது திராவிடமக்களை ஆரியர் (பார்ப்பனனும், வடநாட்டானும்) அடிமைகொண்ட ஆட்சி என்றும், இந்த வடநாட்டாராலும் பார்ப்பனராலும் அவர்களது நலனுக்கும் உயர்வுக்கும் ஆகவே செய்யப்பட்டிருக்கும் அரசியல் சட்டம்—மனுதர்ம சட்டத்தின் மறுபதிப்பே என்றும் 1949-லேயே நான் சொன்ன கருத்துக்கு இது எடுத்துக் காட்டாக இல்லையா என்பதைத் தமிழ் மக்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறேன்.

தவிரவும் 'இந்த அரசியல் கொடி உனக்குப் பிடிக்கவில்லையானால்—நாட்டைவிட்டு வெளியேறிவிடு' என்றும் பேசியிருக்கிறார்! யார் என்றால், பண்டித ஜவஹர்லால் நேரு!

அவர் என்ன சாதி என்றால்—பார்ப்பன புரோகித சாதி; எந்த நிலையில் என்றால்—இந்தியாவின் முதல் மந்திரி (அதாவது ஆட்சித் தலைவர்) என்ற நிலையில்.

'தோலைக் கடித்து, துருத்தியைக் கடித்து மனிதனையே கடிக்க வந்துவிட்டது' என்று ஒரு பழமொழி உண்டு. அதற்கு ஏற்ப, இந்தப் பார்ப்பனர்கள் சாதி காரணமாகத் தாங்கள் சம்பாதித்துக்கொண்ட உயர் பதவிகளையும், ஆதிக்கத்தையும் ஆதரவாகக் கொண்டு சட்டம் செய்துகொண்டு, 'இந்தச் சட்டம் பிடிக்கவில்லையானால்—அதாவது சாதிமுறைக்குப் பாதுகாப்பளிக்கும் இந்தச் சட்டம் உனக்குப் பிடிக்கவில்லையானால்—இந்தச் சட்டத்திற்குக் கீழ்ப்பட்டு நீ சூத்திரனாய், பார்ப்பானின் வைப்பாட்டி மகனாய் வாழ உனக்கு இஷ்டமில்லையானால், இந்தத் திராவிடநாட்டை—தமிழ் நாட்டை விட்டு வெளியேறி விடு; இல்லாவிட்டால் ஜெயிலில் வைப்பேன்; இல்லாவிட்டால் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் வைப்பேன்' என்பதாகப் பேசியிருக்கிறார்.

எங்கு முழக்கி இருக்கிறார் என்றால், தமிழ்நாட்டின் மார்பு (இருதயம்—மத்திய ஸ்தானம்) போன்ற திருச்சி நகரில்—தமிழ் உணர்ச்சிக்குத் தாயகமான திருச்சி நகரில் சுமார் 20-30 ஆயிரம் பேர் நகர மக்கள் கொண்ட மாபெரும் தமிழ்க் கூட்டத்தில் சொல்லியிருக்கிறார்.

சொன்னது மாத்திரமல்லாமல், இப்படிச் சொல்லிவிட்டுத் திரும்பித் தனது ஊருக்கும் பத்திரமாகப் பறந்து சென்றிருக்கிறார்! எப்படிச் சென்றார் என்றால், 8000 பேர் கொண்ட போலீஸ் பாதுகாவலில் சென்றார்.

உண்மையாக உள்ளது உள்ளபடி சொல்லவேண்டுமானால், இந்தப் பனியா-பார்ப்பன ஆட்சி ஏற்பட்ட பிறகு தமிழ்நாட்டில் தமிழன், சிறையில் இருக்கும் சிறைக் கைதி போலவே நடத்தப்பட்டு வருகிறான்; 'கான்விக்ட் வார்டர்களாக' தமிழர் சேவகர்கள், தமிழர் அதிகாரிகள் ஆகியவர்கள் இருந்துவருகிறார்கள்.

தமிழர்கள் மந்திரிகளாக இருந்தாலும், நிர்வாக அதிகாரிகளாக இருந்தாலும் சரி, இவர்கள் யாவருமே 'கான்விக்ட் வார்டர்களை'ப் போலவேதான் இருந்துவர வேண்டியதாக இருக்கிறது.

(கான்விக்ட் வார்டர் என்றால் நல்ல அடிமையாக இருந்து விடுதலை பெறக் கருதி, சிறையில் தொண்டு செய்யும் நீண்டநாள் தண்டனை பெற்ற கைதி.)

இந்தப் பாதுகாப்பான நிலையில்தான் நேரு பார்ப்பனர் திருச்சி நகரத்தில், திருச்சி மக்கள் முன்னிலையில் 'எங்களுக்கு அடங்கிக் கீழ்ப்பட்டுச் சூத்திரனாக இருந்தால் இரு. இல்லாவிட்டால் நாட்டைவிட்டு வெளியில் போ! போகாவிட்டால் ஜெயிலில் போடுவேன்' என்று எக்காளமிட்டுச் சென்றுவிட்டார்.

இந்தச் சமயத்தில் மந்திரிகளைப்பற்றி, அதிகாரிகளைப்பற்றி, போலீசாரைப்பற்றிச் சிறிதும் சிந்திக்காமல், அவர்கள் ஏற்படுத்திக்கொண்ட வாழ்வுக்கு ஏற்ப அதைப் பார்த்துக் கொள்ள அப்படி (அதாவது கான்விக்ட் வார்டர்களாக) நடந்துகொள்ள வேண்டியவர்களாவார்கள். அவர்களை மறந்துவிடுங்கள்! மறக்கும்போது அந்த இடங்களில் பார்ப்பனர்கள் இருந்தால் எப்படி இருக்கும் என்பதை நினைவில் வைத்து மறந்துவிடுங்கள்.

தமிழ் மக்களே! இந்தச் சந்தர்ப்பத்தில் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? உங்களுடைய கடமை என்ன என்பதுதான் இப்போதைய பிரச்சினை.

ஆனால், அரசியல் சட்டம் எதற்காகக் கொளுத்தப்பட்டது? யாருக்காகக் கொளுத்தப்பட்டது? 3000 பேர் எதற்காகச் சிறைபிடிக்கப்பட்டார்கள்? நான் எதற்காகச் சிறைத் தண்டனை இடப்படுகிறேன்?

பார்ப்பனர்களைக் குத்தியதற்கா, கொன்றதற்கா? பார்ப்பனச் சேரியில் நெருப்பு வைத்துக் கொளுத்தினதற்கா? பார்ப்பனப் பெண்களை இம்சித்ததற்கா? இல்லவே இல்லை; இதற்காக இன்று யாரும் சிறையில் இல்லை.

குத்தச் சொன்னதற்காகவோ, கொல்லச் சொன்னதற்காகவோ, கொளுத்தச் சொன்னதற்காகவோகூட இன்று யாரும் சிறையில் இல்லை; என்றாலும், என் ஒருவன் பேரில் மட்டும்தான் அப்படிப்பட்ட குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. அதுவும் 'வெள்ளரிப் பழத்திற்குப் பூண்போட்டுக் கெட்டிப்படுத்துவது' போன்ற குற்றம்தான் சாட்டப்பட்டிருக்கிறது; இது எப்படியோ போகட்டும். அதைப்பற்றித் தமிழர்களாகிய உங்களுக்குக் கவலை வேண்டாம்.

'சாதி காப்பாற்றப்படும் சட்டம் எங்களுக்கு வேண்டாம்; அதைத் திருத்து; சாதி ஒழிக்கப்பட வசதி செய்துகொடு' என்பதற்கு அறிகுறியாக—சாதியைப் பாதுகாக்க வசதியுள்ள பாகத்தைக் குறித்த ஒரு துண்டுக் காகிதத்தை, அறிக்கை கொடுத்துக் கொளுத்து

வதன் மூலம் வலியுறுத்திக் காட்டியதற்காக குழந்தைகள், குஞ்சுகள், வயோதிகர்கள், பெண்கள், கர்ப்பப் பெண்கள், இளைஞர்கள் உள்பட 3000 மக்களை—அதுவும் கொளுத்தின மக்கள் 10,000 பேர்களில் பலவிதமாக 7000 பேர்களை விட்டுவிட்டு, 3000 பேர்களைச் சிறையில் அடைத்து—ஊசிப்போன சோளக் கஞ்சியையும் களிமொத்தையையும் கொடுத்து, உண்ணச் சொல்லி அடித்து, கடும் வேலை கொடுத்து, கொடுமைப்படுத்துகிற இந்த அட்டூழியத்திற்கு என்ன பதில் சொல்லுகிறார்கள்?

சிறையில் கொடுமைப்படுகிறவர்களில் 1, 2, 3 இலட்சம் ரூபாய் மதிப்புள்ள சொத்துக்காரர்களும், ஆண்டு ஒன்றுக்கு 1000, 5000, 10,000 ரூபாய்போல் வரும்படி உள்ளவர்களும் ஆன பல செல்வவான்களும், உயர்வாழ்வு வாழ்கின்ற சுக புருஷர்களும், அது போன்ற தாய்மார்களும், பகுதிக்கு மேம்பட்ட மக்களாக இருந்துவருவது அரசாங்கத்திற்கே தெரியும்.

அப்படிப்பட்ட மக்களையும் இப்படிக் கொடுமைப்படுத்துவதற்கு நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்?

வெள்ளையன் ஆன அன்னியன் ஆட்சிக் காலத்தில் 'வெள்ளையனே வெளியேறு!' என்ற கூட்டத்தையும், வெடிகுண்டு ஏந்திய கூட்டத்தையும், தண்டவாளங்களைப் பெயர்த்து, இரயிலைக் கவிழ்த்து, தபாலாபீசுக்கும் நீதிஸ்தலத்திற்கும் இரயில்வே ஸ்டேஷன் கட்டிடங்களுக்கும் நெருப்பு வைத்துக் கொளுத்தி, கோடிக்கணக்கான ரூபாய் சொத்துக்களை—ஆயிரக்கணக்கான உயிர்களை நாசப்படுத்தியவர்களையும் மனிதத் தன்மைக்கு மேலாகவே நடத்தினான்.

'உங்கள் நாட்டை நீங்கள் ஆண்டுகொள்வதில் எனக்கு ஆட்சேபணை இல்லை' என்று வெள்ளையன் சொன்னான்.

'நாங்கள் உங்களுக்குப் பிடிக்கவில்லை யென்றால் நாங்கள் மனப்பூர்வமாய்ப் போய்விடுகிறோம். உங்கள் நாட்டை நீங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்' என்று சொல்லி ஒப்புவித்தானே தவிர, இந்தப்படி வடகோடியிலிருந்து தென்கோடிக்கு வந்து, தென்கோடி மக்களை—'என்னுடைய ஆட்சி, என்னுடைய சட்டதிட்டம், உங்களுக்குப் பிடிக்கவில்லையானால்—நீங்கள் இந்த நாட்டைவிட்டு வெளியேறி விடுங்கள்' என்று சொல்லவில்லை.

இந்தப் பேச்சு நேருவின் கெட்டிக்காரத்தனத்தையும் வீரத்தையும் காட்டுகிறதா? அல்லது, தமிழர்களின் மானங்கெட்ட தன்மையையும், மடமையையும், கோழைத் (சோதா) தனத்தையும் காட்டுகிறதா என்பதுதான் இங்கு சிந்தித்துப் பார்க்கத்தக்கதாகும்.

நேரு சாதியார் இந்த நாட்டில் எவ்வளவு கட்டுப்பாடு, ஒற்றுமை, தங்கள் இன நலத்தில் கவலை, முயற்சி முதலியவைகளோடு இருந்துகொண்டு இருக்கிறார்கள் என்பதையும்—நம் சாதியார் என்பவர்கள் எவ்வளவு கவலை ஈனமாய், ஒற்றுமை இன்றி, இனத்தைப் பற்றிய உணர்ச்சியே இல்லாமல் சுயநலவாழ்வு வாழ்கிறார்கள் என்பதையும் ஒப்பிட்டுப் பார்த்தால் தமிழனைப் பார்த்து,

'ஓ......தமிழர்களே! நீங்கள் எங்களுக்கு வைப்பாட்டி மக்களாய், இழிமக்களாய் சூத்திரர்களாய், கீழ் மக்களாய் இருந்தால் இந்த நாட்டில் இருங்கள்; இஷ்டம் இல்லாவிட்டால் இந் நாட்டைவிட்டு வெளியேறுங்கள்' என்று சொல்ல இந்த நேருகூட வேண்டியதில்லையே? இன்னமும் பரம முட்டாளும் படு கோழையும், பிழைக்க வழியற்றுத் தெருவில் பிச்சையெடுத்து வயிறு பிழைக்கும் ஒரு பார்ப்பன விதவைகூடப் போதுமானதாகுமே?

இதில் நேருவுக்கு ஒன்றும் கெட்டிக்காரத்தனத்தையோ, துணிவையோ, வீரத்தையோ பொருத்த வேண்டியதில்லை; தமிழனின் மானமற்ற சுயநல ஈனப்பிழைப்பும் கோழைத்தனமும், நாட்டைக் காட்டிக்கொடுத்து வயிறு வளர்க்கும் தன்மையும்தான் காரணமாகும்.

கொலைக் குற்றப் பிரிவின்படி குற்றம் சாட்டப்பட்டு, முச்சலிக்கா பாண்டுமீது நான் வெளியில் இருக்கிறேன்; வழக்கு விசாரணை 12-ந் தேதி நடக்க இருக்கிறது; நான் இந் நாட்டுக்கு 100-க்கு 90 பேர்களைக் கொண்ட திராவிடர் கழகத்திற்குத் தலைவன்; இந்த நிலையிலும் சட்டம் எரித்தார்கள் என்ற குற்றம் சாட்டப்பட்டு இனியும் விசாரணை செய்து தீர்ப்புச் சொல்லவேண்டிய 2000-க்கு மேற்பட்ட கழகத் தோழர்கள்—அதாவது என்னைப் பின்பற்றுகிறவர்கள் சிறையிலும் விசாரணையிலும் இருக்கிறார்கள்; இந்த நிலையிலும் ஆட்சித் தலைவன் என்னும் பேரால் ஒரு நபர் இங்கு வந்து—அதாவது, எங்கு விசாரணை நடக்கிறதோ அந்த ஊருக்கு வந்து, எந்த நீதிபதியும் மாஜிஸ்ட்ரேட்டும் விசாரிக்க வேண்டியவர்களோ, விசாரிக்கிறார்களோ—அந்த மாஜிஸ்ட்ரேட்டையும் நீதிபதியையும் அழைப்பு அனுப்பி வரவழைத்து எதிரில் உட்காரவைத்து அவர்களைப் பார்த்து—'இவர்கள் (இந்தக் குற்றவாளிகள்) சிறையிலிருக்க வேண்டியவர்களாவார்கள்! இவர்கள் மன்னிக்கப் படக் கூடாதவர்கள்; மன்னிக்கத் தக்கவர்கள் அல்ல!' என்று இடிமுழக்கம் செய்கிறார் என்றால், இந்த ஆட்சி எவ்வளவு நீதியும், நேர்மையும், நாணயமும் ஆன ஆட்சி என்பதைத் தமிழர்கள்—மானம், ஈனம் பற்றி கவலைப்படாத தமிழர்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக.

இதில் ஒரு குறிப்புக்கு இடமான விஷயம் என்னவென்றால், இதே நேரு, முதல் நாள்—8-ந்தேதி கொலை, கொள்ளை, கொளுத்தல், நாசவேலை, உயிருடன் தூக்கி நெருப்பில் போட்டுப் பொசுக்குதல், சுமார் 100—200 பேர்களுக்கு மேல் உயிரிழக்கச் செய்திருத்தல் ஆகிய காரியங்களைப் பற்றிப் பேசும்போது, விவகாரம் விசாரணையிலிருப்பதால் அதைப் பற்றிப் பேசுவது நீதியாகாது, நேர்மையாகாது என்று சொல்லிப் பேசாமல் வாயை மூடிக் கொண்டு வந்து—மறுநாள் காலையில் விசாரணை நடக்கும் இடத்திற்கே வந்து—நீதிபதி அவர்களிடத்திலேயே நேரில், 'இவர்கள் ஜெயிலிலிருக்க வேண்டியவர்கள் (நல்லபடி கடின மாகத் தண்டிக்கப்படவேண்டும்; இல்லாவிட்டால் உங்களுக்கு உத்தியோகம் நிலைக்காது, பிரமோஷன் இருக்காது)' என்று சொல்லுவதுபோல்—அதுவும் பெரிதும் பார்ப்பன நீதிபதிகளிடமே எக்காளம் போட்டுச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார் என்றால் இந்த ஆட்சி, சட்டம், ஆட்சிக்கொடி மாத்திரமல்லாமல்—ஆட்சிமுறை, ஆட்சி நீதி, ஆட்சிப் பீடம் ஆகியவையும் சுட்டுப் பொசுக்க வேண்டியவை ஆகுமா, ஆகாதா? இதில் நமக்கு நலமான வாழ்வோ நீதியோ கிடைக்குமா? என்பதைச் சிந்தித்துப் பாருங்கள், தமிழர்களே! சிந்தித்துப் பாருங்கள், தமிழர்களே! சிந்தித்துப் பாருங்கள், தமிழர்களே!

['விடுதலை'-தலையங்கம்—11-12-1957]

தலைவரவர்களே! தோழர்களே!

வாமனாவதாரக் கதையில் காணப்படும் அசுரன் மாபலி சக்கரவர்த்தி, ஒரு பெரிய பணக்காரனும் பேரரசனுமான திராவிடன் ஆவான். அவனை ஒழிக்கப் பார்ப்பனர்கள் எண்ணினார்கள். குள்ளப் பார்ப்பானாக வந்து மகாவிஷ்ணு மூன்றடி மண் கேட்டான். உலகத்தையும் வானத்தையும் இரண்டடியால் அளந்துவிட்டான். மூன்றாவது அடிக்கு இடங் கேட்டான். இதோ என்று மாபலி தனது தலையைக் காட்டினானாம். விஷ்ணு காலால் மிதித்து அவனை அழித்துவிட்டான்.

இம் மாதிரியாகவே போராட்டங்களெல்லாம் முறையாக நடந்திருக்கின்றன.

சாதி ஒழியவேண்டுமென்றால் நாம் பார்ப்பான் ஒழியவேண்டும் என்று சொல்கிறோம் என்கிறார்கள். ஆம், சாதிக்கு ஆதாரம் எது என்று சொல்லப்படுகிறதோ—மதமாய் இருந்தாலும் கடவுளாயிருந்தாலும் ஒழிக்கப்பட வேண்டியதுதான்.

இதுவரை பார்ப்பான் ஆண்டது கிடையாது; சேர, சோழ, பாண்டியர்கள் ஆண்டார்கள் என்றால், அவர்களெல்லாம் பார்ப்பானுக்கு ஆதரவாகவே ஆண்டார்கள். பார்ப்பானுக்கு ஆதரவாக நடக்கவில்லை என்று யாராவது சொல்லமுடியுமா? இன்று

பார்ப்பான் ஆளுகிறான் என்றால் நிலைமை அப்படிக் கொண்டுவந்துவிட்டது. அதாவது, சாதியை ஒழிக்கக் கூடிய தருணம் ஏற்பட்டுவிட்டதுதான் பார்ப்பானே ஆளவேண்டி ஏற்பட்டது! இல்லையென்று சொல்லமுடியுமா?

1885-ல் காங்கிரஸ் துவங்கிற்று என்றால் நாடு வெள்ளைக்காரனிடமிருந்து பிரித்துக் கொண்டு நாம் ஆளவேண்டும் என்றா துவக்கிற்று? பார்ப்பான் ஆதிக்கம் மேலும் மேலும் பலப்படுத்த வேண்டும் என்றுதான். பலப்படுத்தப்பட வேண்டிய அவசியம் என்ன வந்தது? அன்று இந்த நாட்டில் முஸ்லிம் ஆட்சி வலுத்திருந்தது. வெள்ளையனிடம் வாதாடி உரிமை பெற்றார்கள். அன்று வெள்ளையன் ஆதிக்கம் இல்லாத இடங்களில் பார்ப்பனரல்லாதார் ஆதிக்கம் இருந்துவந்தது.

காங்கிரசார் முதல்முதலாக உத்தியோகம் கேட்டார்கள். அதிகாரம், பணம், பதவி இப்படியே படிப்படியாகக் கேட்டார்கள். ஆதாரம் என்ன என்பீர்கள். 1885 முதல் 1920 வரை சுமார் 35, 40 வருடகாலம் வரை, 'பிரிட்டிஷ் ஆட்சி நீடூழி வாழவேண்டும்; பிரிட்டிஷ் அரசர் நீடூழி வாழவேண்டும்' என்று பக்தி விசுவாசத்துடன் தீர்மானம் போட்டிருக்கிறார்கள். மற்றவர்களாகிய முஸ்லிம்கள், ஜஸ்டிஸ் கட்சியார்—எல்லாரும் பங்கு கேட்கவே ஒரு நெருக்கடி ஏற்பட்டது. வெள்ளையனுக்குத் தொல்லை தர ஆரம்பித்தார்கள். அவனுக்கும் இவர்கள் ஆள்வதில் விருப்பமில்லை. வெள்ளையன் நாணயமாக நடவாமல் பார்ப்பானிடம் சாவியைக் கொடுத்தான்.

பார்ப்பானோடு போட்டியிட்டு வெற்றிபெற முஸ்லிமால்தான் முடிந்தது. ஒரே தலைவரின் கீழ் நின்று ஒற்றுமைப்பட்டனர். உயிரிழக்கவும் துணிந்தனர். ஜின்னாவின் காலத்திலேயே உரிமை பெற்றனர். நாம் அப்படி இல்லாமல் பல சாதி, பல்வேறு உட்பிரிவு காரணமாகவும் ஒற்றுமையில்லாதபடியாலும், சுயநலம் காரணமாகவும் அடிமையாகவே இருக்க நேர்ந்தது; பார்ப்பான் சர்வாதிகாரியானான்.

எப்படி என்றால், சாதியை, மதத்தை, சமுதாயத்தை, அந்தஸ்தை, நிலை நிறுத்துவது அடிப்படை உரிமை (Fundamental Right) யாக ஆக்கிச் சட்டம் செய்து கொண்டான். அதைப்பற்றி யாரும் பேசக்கூடாது. அசெம்பிளியில், பார்லிமெண்டில் சத்தியம் செய்வதென்ன? 'இந்திய அரசியல் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு அடங்கி பக்தி விசுவாசத்துடன் நடப்பேன்' என்றுதான் சத்தியம் செய்கிறான். அசெம்பிளியிலோ பார்லிமெண்டிலோ அடிப்படை உரிமைகள் என்பவை பற்றி யாரும் பேசமுடியாது!

ஆகவேதான், எங்கள் முதல் போராட்டம் 'பிராமணாள்' என்று போடாதே என்று துவங்கிற்று. ஏன், பிராமணாள் என்று போடுகிறாய்? அது எங்களை இழிவு படுத்துகிறது? வேறு போடேன்—'சைவ உணவு' என்பது போல. வாய்தா கொடுத்த, அழிக்கா விட்டால் நாங்கள் அழிப்போம் என்றோம்; மேற்கொண்டு வளர்ந்தது—இப்போது சாதயை ஒழிப்பதுதான் நமது முதல் இலட்சியம்.

சாதி ஒழியக்கூடாது என்று சொல்ல ஆளில்லை. இராசகோபாலாச்சாரிகூட சொல்லிவிட்டார்—ஜனநாயகமும் சாதியும் மாயை, பித்தலாட்டம் என்பதாக! பார்ப்பனர்களைப் பாதுகாக்க இருக்கிற ஒரே ஆள் அவர்தான்.

இந்த ஆட்சியை ஒழிக்காவிட்டால் வேறு எப்படி சாதியை ஒழிக்க முடியும்? அரசாங்கத்தை ஒழிக்க நம்மாலாகுமா? திராவிடர்களான—மற்ற கன்னடர், தெலுங்கர், மலையாளிகள் யாரும் சொல்லவில்லையே என்று, நாம் டில்லியிலிருந்து விலகக்கொள்ளாமலிருக்க முடியுமா? இலங்கை, பர்மா, பாகிஸ்தான் பிரியவில்லையா? கிளர்ச்சிமூலம்தான் நம் நாட்டைத் தனியாகப் பிரித்துக்கொள்ள முடியும்.

பெங்களூரை மைசூர் நாட்டிலிருந்து பிரிக்க முடியாது; அதுபோல, சென்னையிலுள்ள தஞ்சையைப் பிரிக்க முடியாது. ஆனால், தமிழ்நாடு என்பதை டில்லியிலிருந்து

பிரிப்பது அப்படியல்ல. டில்லி ஆட்சி என்பது கூட்டாட்சிதான். டில்லிக்கு நாம் அடிமைகளல்லரே! பெங்களூர் வேண்டுமானால், மைசூருக்கு அடிமை, கட்டுப்பட்டது என்று சொல்லலாம். சென்னைக்கு சேலம் மாவட்டம் போல, டில்லிக்காரன் நமக்குச் சக்கரவர்த்தி (Emperor) அல்லன். நமக்கும் அவனுக்கும் சம்பந்தமில்லை. மைசூரும், சென்னையும் ஒரு கூட்டாட்சி நடத்துகிறது என்று வைத்துக்கொள்வோம். அந்தக் கூட்டாட்சிக்கு யார் எஜமானர்? யாருக்காவது மற்றவரைப் பிடிக்கவில்லை என்றால் பிரிந்து போக வேண்டியது தானே? ஆனால், சட்டத்திலே பிரிவதற்கு உரிமையில்லை; வேண்டுமானால் சேர்த்துக் கொள்ளலாம்.

சக்கரவர்த்தி ஆட்சி நடந்த காலத்தில் ஜின்னாவுக்கு நாடு பிரித்துக்கொள்ள வேண்டும் என்ற ஆலோசனையைச் சொன்னவன் நான்தான். பிரியவில்லையா?

நாடு பிரிவது, பொதுவாக எந்த அரசியல் சட்டத்திற்கும் விரோதமல்ல. சாதி ஒழிய வேண்டும் என்றார். அதற்கு மதம் இடம் தரவில்லை, பார்ப்பான் இடம் தரவில்லை, சட்டம் இடம் தரவில்லையானால் இவற்றிலிருந்தெல்லாம் பிரிந்து கொள்ள வேண்டியது தானே? பிரிந்தால் ஆபத்து, கஷ்டம் என்கிறார்களே—எப்படி ஆபத்து? பிரிந்துவிட்டால் வடநாட்டிக்குப் போகிற வருமானம் நமக்கு மிச்சமில்லையா? அவனுக்கு வேண்டுமானால் வருமானம் நஷ்டமாகும்.

தமிழ்நாடு தமிழருக்கானது என்றால், அவர்கள் எல்லாம் இங்கு வருவார்கள்; அவர்கள் எல்லாம் வருவார்களானால் இங்கு இருக்கும் அன்னியர்கள் வெளியே போக வேண்டியது தானே? பாகிஸ்தானில் இருக்கும் இந்தியர்களை அவர்கள் 'போ' என்று சொல்லவில்லையா?

நமது தமிழ்நாடு ஏறத்தாழ நாலுகோடி மக்களைக் கொண்டது. ரஷ்யா, அமெரிக்கா, சீனா, ஜப்பான் முதலிய 7–8 நாடுகள் நம்மைவிடப் பெரியவை. 25 லட்சம் மக்கள் தொகை கொண்ட நாடெல்லாம் தனி நாடு; அதுவும் ஐ. நா. வில் மெம்பராகவே இருக்கின்றது. 4 கோடி மக்களைக்கொண்ட தமிழ் நாட்டிக்கு என்ன நஷ்டம் வந்துவிடும்? பெரிய நாடாக மட்டுமே இருப்பதால் இலாபம் என்ன? பாகிஸ்தான்காரன் இந்திய நாட்டு எல்லையில் சுடுகிறான், உதைக்கிறான்; கிராமங் கிராமமாகச் சேர்த்துக்கொள்கிறானே! என்ன செய்ய முடிந்தது? அதுதான் போகட்டும். கோவாவை என்ன செய்தாய்?

முன்பு நான் இந்த ஊருக்கு வந்திருந்தபோதுதான் சொன்னேன்: கோவாவில் இந்தியர்கள் சுடப்பட்டதற்கு யார் காரணம்? நேருவும் பிரசாதும்தான்; நியாய விசாரணை நடத்த வேண்டுமானால் இவர்களைத்தான் அதற்குக் குற்றவாளிகளாக்கித் தண்டிக்க வேண்டும் என்றேன். போர்ச்சுகீசியர்களுடைய மொத்த ஜனத்தொகை $1\frac{1}{4}$ கோடிகூட இருக்காது. அவனையே ஒன்றும் செய்ய முடியாத போது தமிழ்நாட்டை என்ன செய்து விட முடியும்?

இதற்கெல்லாம் கடுதாசியைக் கொளுத்தினால் தீர்ந்து விடுமா என்பீர்கள். ஆம், தமிழ்நாடு நீங்கிய இந்திய யூனியன் படத்தைத் தீவைத்துக் கொளுத்தினால், நம்முடைய எதிர்ப்பைக் காட்டினதாக ஆகும். முன்பு இந்திய அரசியல் சட்டத்தைக் கொளுத்தினோமே என்ன ஆயிற்று? வெளிநாட்டுப் பத்திரிக்கைகளில் எல்லாம் செய்தி வெளியாயிற்றே! இந்திய யூனியன் படத்தைக் கொளுத்தினார்கள் என்பதை வெளிநாட்டார் அறிந்தால் இந்த ஆட்சியை என்னவென்று எண்ணுவார்கள்? இவனுக்கென்ன மதிப்பு வரும்? இது என்ன ஜனநாயக ஆட்சியா, சர்வாதிகார ஆட்சியா, என்று நினைக்கமாட்டானா?

இந்திய யூனியன் படத்தைக் கொளுத்தியும் ஒன்றும் ஆகவில்லையென்றால் வேறு என்ன செய்வது என்பது எனக்குத் தெரியும்.

[குமரி மாவட்டம் ஈத்தா மொழியில் சொற்பொழிவு—'விடுதலை' 20-12-1958]

'நம் தமிழ்நாடு இந்தியக் கூட்டாட்சியில் இருந்து, அதாவது வடநாட்டான் ஆதிக்கத்தில் இருந்து பிரிந்தால் பெரும் கேடு ஏற்பட்டுவிடும்' என்றும்,

'ஒன்று பிரிந்ததே—அதாவது முஸ்லிம்கள் வாழும் நாடு முஸ்லிம்களுக்கு என்று ஆகிவிட்டதே பெரிய கேடாக இருக்கிறது' என்றும் காங்கிரஸ்காரர்கள்—பண்டித ஜவஹர்லால் முதல் அனேகமாக எல்லாக் காங்கிரஸ் தலைவர்களும் கூப்பாடு போட்ட வண்ணம் இருந்தார்கள்.

ஆனால், பிரிந்தால் என்ன கேடு ஏற்படும் என்று இதுவரை குறிப்பிட்ட எவரும் எதையும் கூறவில்லை.

இந்திய யூனியன் ஏற்பட்ட நாள் முதல் இன்றுவரை தமிழ்நாடு பொருளாதார ஏற்றத்திற்கு, யூனியன் இந்தியா எத்தனை கோடி ரூபாய் கைப்பொறுப்பில் இருந்து செலவு செய்திருக்கிறது? அப்படி ஏதாவது இருந்தாலும் அதைத் தமிழ்நாடு, இந்தியா தவிர்த்த மற்ற நாடுகளில் இருந்து சரிசெய்துகொள்ள முடியாதா?

உண்மையைச் சொல்லவேண்டுமானால், இந்திய யூனியன் காரணமாகத் தமிழ் நாட்டைத்தான்—பஞ்சாப் முதல் பம்பாய், வங்காளம் வரை உள்ள முதலைகள் தமிழ் நாட்டிற்குள் புகுந்து, சிறு மீன்களை விழுங்குவதுபோல் விழுங்கிக்கொண்டு போகின்றனவே அல்லாமல், தமிழ்நாடு எந்தப் பொருளாதார ஏற்றம் பெற்று இருக்கிறது என்று சொல்ல முடியும்?

தமிழ்நாடு பிரிந்தால், அது சிறு நாடு ஆகிவிடுமே என்கிறார்கள். இலட்சக்கணக்கில் மக்கள் உள்ள சிறு சிறு நாடான கொழும்பு, பர்மா முதலிய நாடுகளும், அய்ரோப்பாவில்—ஆப்பிரிக்காவில்—ஆசியாமைனர் முதலியவற்றில் உள்ள சுமார் 100 நாடுகள்—சற்றேறக் குறைய தமிழ்நாடு போன்ற நாடுகள்—இன்று பொருளாதாரம் மாத்திரமல்லாமல், மற்றும் பல துறைகளிலும் முன்னேற்றமடைந்து பயமற்று மானத்துடன் முழுச் சுதந்திரமாய் வாழுகின்றன.

ஒன்று நான் சொல்லுவேன்; உறுதியுடன் சொல்லுவேன்: வெள்ளையன் சென்றவுடன் தமிழ்நாடு தனி நாடாக ஆகியிருக்குமேயானால், முதலாவது, தமிழனின் சமுதாய இழிவு ஒழிந்திருக்கும்.

இரண்டாவது, தமிழன் பகுத்தறிவின் உச்ச நிலையை அடைந்து, இன்றுள்ள காட்டுமிராண்டித் தன்மையில் தன் தாய்நாட்டில் ஈனப் பிறவி மனிதனாக—கீழ் சாதியாக—வயிற்றுப் பிழைப்புக்கு, பதவிக்கு எதையும் விற்றுப் பிழைக்கும் ஈனத் தன்மை நல்ல அளவுக்கு மறைந்திருக்கும்; பதவிக்காக வடநாட்டானுடையவும் பார்ப்பானுடையவும் பெருவிரலைச் சூப்பும் ஈனத்தனம் ஒழிந்திருக்கும்.

மற்றும், பிறவி உயர்வு தாழ்வு, அயோக்கியத் 'தகுதி—திறமை' விகிதாச்சார உரிமைத்தனம் ஒரு சிறு சின்னஞ் சிறு கூட்டத்திற்கு அபரிமிதமான ஏகபோக உரிமை; பெரும், மாபெரும் கூட்டத்திற்கு இழிதொழிலில் பிழைக்கவேண்டிய மானமற்ற தன்மை முதலிய இவைகள் ஒழிந்திருக்கும்.

இன்று இந்திய யூனியனின் முக்கிய கொள்கைகள் என்னவென்றால், சாதி காப்பாற்றப்படவேண்டும்; மேல் சாதியான் மேல்பதவியில் இருக்கும்படியான தன்மைகள், முறைகள், பரம்பரைப் பழக்க வழக்கங்கள் இவை தவிர, யூனியனில் வேறு எந்த, மற்ற நாடுகளில் இல்லாத சிறப்பான, குறிப்பான 'நன்மை'கள் இருக்கின்றன?

ஒன்று சொல்லுவேன்; யூனியனில் தமிழ் நாட்டுக்கோ தமிழர்களுக்கோ நன்மை இருக்குமானால்—யூனியன் அரசியலில் இருப்பது போதாமல், புலாத்காரப் புணர்ச்சிக்காகத்

தண்டிக்கும் தண்டனைக் காலத்தைவிட அதிக தண்டனை விதிக்கும்படியான அளவுக்கு, பிரிவினைத் தடைச் சட்டம் விதிக்கத் துடிப்பானேன்?

['விடுதலை'–தலையங்கம்—9-6-1972]

## 6. பதவியா, தனிநாடா?

தலைவரவர்களே! தோழர்களே!

மந்திரி பதவி வந்தாலும் வேண்டாம்; எந்தப் பதவி வந்தாலும் வேண்டாம் என்று தானே நாங்கள் சொல்லி வந்திருக்கிறோம்!

கவர்னராக இருந்த ஆர்தர் ஹோப், என்னை மந்திரிசபை அமைக்கும்படி மிகவும் கெஞ்சி வேண்டிக் கொண்டாரே! 'இந்த மாகாணத்தில் மந்திரிசபை இல்லாததால் இந்தியா முழுமைக்குமே மந்திரிசபை அமைக்க முடியவில்லை; ஆகவே, தாங்கள் மந்திரிசபை அமைக்கவேண்டும்' என்று அவர் கெஞ்சினாரே! எங்களுக்கு மந்திரி பதவி காத்துக் கிடந்ததே!

இன்னமும் சொல்கிறேன்; எழுதிவேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள். ஆச்சாரியாரே என்னிடத்தில் வந்து, 'இந்தச் சண்டை சமயத்தில் (1936–39) அட்வைசரி சர்க்கார் நியமிக்க அவர்களை விட்டுவிடுவது ஆபத்து; தயதுசெய்து நீங்கள் மந்திரி பதவி ஏற்றுக் கொள்ளுங்கள். வேண்டுமானால் எங்கள் ஆட்களிலும் 2, 3 பேரை அனுப்பி, நானும் ஒரு மந்திரியாக இருந்து உதவி செய்கிறேன்' என்று சொன்னார்.

நான் முடியாது என்று சொல்லிவிட்டேன். ஏன்? மந்திரி பதவி ஏற்றால் நம்மால் என்ன செய்யமுடியும்? 8 அவுன்ஸ் அரிசி என்பதை 9 அவுன்ஸாக ஆக்க முடியுமா? ரூபாய்க்கு 3 பைசா விற்பனை வரி என்பதை மாற்றி 2 பைசா வாங்க முடியுமா? ஒன்றுமே செய்யமுடியாதே! சூத்திரக் கயிறு டெல்லியில் அல்லவா இருக்கிறது? இப்போது போனால்—இலஞ்சம், கொள்ளை, உறவினர்களுக்கு உத்தியோகம் தேடித்தர முடியுமே தவிர, வேறென்ன செய்ய முடியும்? இன்றைய நிலையில் பதவிக்குப் போனால் யோக்கியனும் அயோக்கியனாய் விடுவானே!

நாங்கள் பதவி ஏற்கவேண்டுமானால், பஞ்சாயத்து போர்டு, முனிசிபாலிட்டியைப் போல் மாகாண சர்க்காரை நடத்தும் அளவுக்கு மத்திய சர்க்காருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரம் ஒழிய வேண்டும்; மத்திய சர்க்கார் ஆதிக்கம் நம்மீது இருக்கக் கூடாது.

பார்ப்பனர்கள் எழுதிவைத்த சரித்திரப்படியே சேர, சோழ, பாண்டியர்கள் என்ற மூவேந்தர்கள் இங்கு ஆண்டதாக இருக்கிறது. தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய மொழிகள் பிற்காலத்தில் ஏற்பட்டவை. தமிழைத் தவிர—வடநாட்டு சம்பந்தமில்லாத இலக்கியமே இல்லையே, மற்ற மொழிகளில்! வெள்ளையன் வரும்வரை நம்மவர்கள் தாமே ஆண்டார்கள்? வெள்ளைக்காரன் நம்மவர்களிடத்திலிருந்துதானே நாட்டை வாங்கினான்?

'கர்ப்ப ஸ்திரீகள் பிட்டுத் தின்றதைத் தவிர—பகைவர்களின் காலடி படாத மண்' என்று அவ்வளவு சிறப்பாக இருந்த நாடுதானே இது!

அடுத்துக் கெடுத்து ஆரியம் வென்றதே தவிர, போர் செய்தா வென்றது?

ஆண்ட அரச பரம்பரையினர் இழிந்தவர்களாய், தேவடியாள் மக்களாய் ஏன் வாழ வேண்டும்? பாடுபடுவது நம்மவர்கள்; கட்டடம் கட்டுபவர்கள் நம்மவர்கள்; உழுகிறவர்கள், நாட்டை அழகு படுத்துகிறவர்கள் நம்மவர்கள். இத்தனை பணிகள் செய்தாலும்—நாம் இழிந்த மக்களாய், கீழ் சாதிக்காரர்களாய் வைக்கப்பட்டிருக்கிறோம் என்றால் என்ன நியாயம்?

தமிழ் நாட்டில் இருக்கும் பெரிய பெரிய கோயில்களையெல்லாம் கட்டி வைத்தது யார்? காணிநிலம் எந்தப் பார்ப்பனனாவது, எந்தக் கோவிலுக்காவது எழுதிவைத்திருக்கிறானா? 'உன் சவுகரியத்திற்காகக் கோயில்களும் அக்கிரகாரமும், கட்டிக்கொடுத்து—உன் சுக வாழ்வுக்கு வழிதேடிக் கொடுத்தவர்கள், சூத்திரர்களா?' என்று ஏன் பார்ப்பானைக் கேட்கக் கூடாது? பார்ப்பான் உழுதால் பாவம் என்று எழுதிவைத்துக்கொண்டு, நிலத்தில் இறங்காமலேயே வாழ வழி வகுத்துக் கொண்டானே? உழுது அறுவடைசெய்ததைத் தின்பது மட்டும் புண்ணியமாகுமா? ஒருவன் உழைக்க, அதன் பலனை மற்றவன் அடையவேண்டும் என்று ஆண்டவன் எழுதிவைத்தான் என்கிறானே, இதுவா வேதம்?

பிச்சைக்கு வந்தவன் பிரபுவாகவும், நாட்டிற்கு உரியவன் பஞ்சையாகவும் ஓட்டாண்டியாகவுமா இருக்கவேண்டும்?

[மணப்பாறையில், 27-3-1950-ல் சொற்பொழிவு—'விடுதலை' 31-3-1950]

## 7. குடியாட்சி என்றால் என்ன?

தலைவரவர்களே! தோழர்களே!

இது உண்மையில் குடிஆட்சியல்ல. இதற்கு முன் ஆண்டிருந்த வெள்ளையனுக்கு இலஞ்சம் கொடுத்து, அவனுடைய சுரண்டலுக்கு நிரந்தர வசதி செய்துகொடுத்து 'மேட் ஓவர்' (Made over) செய்துகொள்ளப்பட்ட ஆட்சிதான். தங்கள் பேருக்கு மாற்றிக் கொள்ளப்பட்ட ஆட்சிதான்.

காங்கிரஸ்காரர்கள் வெள்ளையனை வெற்றிகொண்டு, இந் நாட்டு ஆட்சியைப் பெற்றவர்களாகார். வெள்ளையன்தான், தான் கொடுத்த வாக்குறுதிப்படி ஆட்சியை இவர்களிடம் ஒப்படைத்தான்.

இக் குடி அரசுச் சட்டத்தைத் தோற்றுவித்தவர்களும் ஒரே கட்சிக்காரர்கள்தாம். அதுவும் வெள்ளையன் காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள்தாம். நாட்டில் 100-க்கு 10 பேரான பணக்காரர்களுக்கும் படித்த பார்ப்பனர்களுக்கும்தான் இவர்கள் பிரதிநிதியானவர்களே ஒழிய, மற்ற 90 பேருக்கும் இவர்கள் பிரதிநிதிகளாக ஆகமாட்டார்கள்.

குடிஆட்சி என்றால் குடிமக்களின் பிரதிநிதிகளால் ஆளப்படும் ஆட்சியாக இருக்க வேண்டும். குடி அரசுச் சட்டம் என்றால் எல்லாக் குடிமக்களின் பிரதிநிதிகளாலும் தோற்றுவிக்கப்பட்ட சட்டமாயிருக்கவேண்டும். இந்தச் சட்டத்தை உண்டாக்கினவர்களுக்கு அவ்விதம் கூறிக்கொள்ளத் தகுதியில்லை. ஏனெனில், அத்தனை பேருமே காங்கிரஸ் மேலதிகாரத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டு, சட்டசபைக்கு அனுப்பிவைக்கப்பட்டவர்கள் ஆவார்கள்.

எனவே, நமக்குக் குடிஆட்சி என்றால், நம் நாடு தனி நாடாகி நம்மவன் ஒருவன் அக் குடியாட்சியின் தலைவனாக இருக்கவேண்டும். நமக்கு வேண்டிய பொருள்களை நாமே வாங்க உரிமை உடையவராக ஆகவேண்டும்; நம் நாட்டு வளப்பம் நமக்கே சொந்தமாக வேண்டும்; இந் நாட்டுப் போக்குவரத்து மூலம் வரும் இலாபம், வருமான வரி மூலம், புகையிலை வரி மூலம் வரும் இலாபம், தபால் தந்தி இலாக்காக்கள் இவற்றின் மூலம் வரும் இலாபம் இவையாவும் இந் நாட்டவரான நமக்கே உரியதாகவேண்டும். அதுதான் உண்மைக் குடியரசாகும். இன்று வடநாட்டான்தான் இத்தனை இலாபத்திற்கும் உரிமையுடையவனாக இருந்துவருகிறான்.

இன்று பிரிவினை கேட்கும் நான் கிழவனாக இருக்கலாம். அதன் காரணமாக பலாத்காரத்தில் நம்பிக்கையற்றவனாக இருக்கலாம். நாளை நம் இளைஞர்களும் இப்படியே இருந்துவிடமாட்டார்கள். இரத்த வெள்ளத்தின் மத்தியில் பிரிவினை கேட்பார்கள்; கத்தி

முனையில் பிரிவினை கேட்பார்கள். ஆட்சியாளர்கள் இப்படியெல்லாம் நடக்கவிடாமல் நம் நாட்டை ஒழுங்காக நடக்குப் பிரித்துக்கொடுத்துவிட வேண்டும் என்றுதான் நான் ஆசைப்படுகிறேன்.

[சென்னை சைதாப்பேட்டையில், 25-1-1950-ல் சொற்பொழிவு—'விடுதலை' 27-1-1950]

## 8. சட்டசபை நுழைவும் நாட்டுப் பிரிவினையும்

தோழர்களே!

நமது நாடு விடுதலை பெறுவதற்கு—வெளி இராச்சியங்கள் நம்முடைய நாட்டைச் சுரண்டிக்கொண்டு இருப்பதிலிருந்து விடுவிப்பதற்கு ஆகிய இக் காரியங்களைச் செய்வதற்கு ஆட்கள் இருக்கிறார்களா என்று பாருங்கள்.

சிலர் கூறுகிறார்கள், 'நீங்கள் சொல்லுகிற சங்கதிகளெல்லாம் முற்றிலும் உண்மை தான். இந்த நாட்டை வெளியார்கள் ஆதிக்கத்திலிருந்து விடுபடச்செய்து சுதந்திர நாடாக்க வேண்டியதுதான். ஆனால், அதற்கு இப்படி வெளியில் இருந்து பேசிக்கொண்டு இருக்கக்கூடாது. தேர்தலில் நின்று சட்டசபைக்குப் போகவேண்டும்' என்று சொல்லு கிறார்கள். அதாவது, அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றி (Power Politics) அதன் மூலம் போராடவேண்டும் என்கிறார்கள்.

நான் கூறுகிறேன், அங்கே நம்மால் ஒன்றுமே செய்யமுடியாது. நாம் ஒன்றும் செய்ய முடியாதபடியான சட்டதிட்டங்களை அங்கு அமைத்துக்கொண்டு இருக்கிறார்கள். நாம் போய், திராவிடநாடு தனிநாடாகப் பிரியவேண்டும் என்று என்னதான் ஏகமனதாகத் தீர்மானித்தாலும், சட்டசபைக்குத் தலைவராக இருப்பவர், 'இந்த மாதிரியான தீர்மானம் இங்கு செய்வதற்குச் சட்டத்தில் இடம் இல்லை' என்று கூறித் தள்ளிவிடுவார்கள். இதைச் செய்யமுடியாமல் அங்கு போய் நாம் இருக்கவேண்டும் என்கின்ற அவசியம் ஒன்றும் நமக்கு இல்லை. எனவேதான், அத்தகைய சட்டங்கள் மாற்றியமைக்கப்படவேண்டும் என்று நாம் வெளியில் இருந்து போராடி வருகிறோம்.

ஒரு வீட்டை இடிக்கவேண்டும் என்றால் அந்த வீட்டுக்கு வெளியில் இருந்து கொண்டுதான் இடிக்கவேண்டுமே தவிர வீட்டுக்குள் இருந்துகொண்டே இடித்தால்—வீடு நம்மீதே விழுந்து, நாமே அழிய வேண்டியதுதான். எனவேதான், நாம் வெளியில் இருந்து மக்களுக்குப் பகுத்தறிவை உண்டாக்கும் பணியில் வேலைசெய்கிறோம்.

[ஈரோட்டில், 13-2-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 20-2-1951]

## 9. நாடு கேட்பது தேசத் துரோகமா?

தோழர்களே!

நாம் வேறு எந்த நாட்டானையாவது, 'இந்த நாட்டிற்கு வந்து ஆட்சி செய்!' என்று கூப்பிடுவதாய் இருந்தால்—அது தேசத் துரோகம் ஆகும். ஒரு அமெரிக்கனை, ஜப்பான்காரனை, பிரெஞ்சுக்காரனைக் கூப்பிட்டால், அது வேண்டுமானால் தேசத் துரோகம் ஆகும்.

ஆனால், நாம், இங்கே இருக்கிற அன்னிய இராஜ்யத்தானை 'வெளியே போ!' என்றால், அது எப்படித் தப்பு ஆகும்? எப்படித் தேசத் துரோகம் ஆகும்? சொல்லட்டுமே யாராவது!

எங்கள் நாட்டிலே—சென்னை இராஜ்யத்திலே, சென்னை இராஜ்யத்தார் அல்லாதவர் இருக்கக்கூடாது; அதிகாரம் செய்யக்கூடாது; அவனுக்குச் சுரண்ட உரிமை, வகை இருக்கக்கூடாது என்று சொன்னால் எப்படிக் குற்றம் ஆகும்?

இன்றைய தினம் நமக்குச் சுதந்திரம் இல்லை என்பது மாத்திரம் அல்ல; நம்மை—நம் இராஜ்யத்தை வடநாட்டான்தான் ஆள்கிறான். எனவே, அவர்களுடைய ஆதிக்கம்—அந்த ஆட்சி ஒழியவேண்டும் என்று சொல்லுகிறேனே தவிர, இந்த நாட்டிற்கு வேறு ஒருவனை நாங்கள் அழைக்கவில்லை.

அமெரிக்கன் வந்தாலும் இடம் கொடுக்கமாட்டோம், ஜப்பான்காரன் வந்தாலும் இடம் கொடுக்கமாட்டோம்.

நாங்கள் கூறுவது எல்லாம்—எங்கள் நாட்டை, எங்கள் இராச்சியத்தான் அல்லாத அன்னியன் யாரும் ஆளக்கூடாது; நாங்களே இந்த நாட்டை ஆளவேண்டும்; வெளியில் இருப்பவனுக்கு எவ்வித அதிகாரம், ஆதிக்கம் இருக்கக்கூடாது.

இன்றைய தினம் அரசியல் திட்டத்திலே இருக்கிற சென்னை மாநில (Madras State) எல்லைதான் நம்முடைய எல்லை. நாளைக்கு எங்களுக்குச் சக்தி இருந்தால் அடுத்த இராஜ்யங்களையும் சேர்த்துக்கொள்ளலாம். ஆனதனாலேயே எங்கள் நாட்டை நாங்கள் ஆளவேண்டும் என்று சொல்லுகின்றோம்.

சென்னை திருவல்லிக்கேணியில், 25-2-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 2-3-1951]

# 1. அரசியல்

## 1. சுயராஜ்யம்

சுயராஜ்ய மென்னும் பதம் நமது நாட்டில் பெரும்பான்மையாய் ஒவ்வொருவருக்கும் தங்கள் தங்கள் சுயநலத்துக்கே பயன்படுத்தப்பட்டு வருவதோடு, பாமர ஜனங்கள் அதை அறியாதபடி சுயகாரியப் புலிகளால் சூழ்ச்சிகள் செய்யப்பட்டு வருகின்றது. சுயராஜ்யம் என்பதைப் பலர் பல விதமாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

திருடர்கள் தாங்கள் திருடுவதைப் பிறர் கவனியாமல் விட்டுவிடுவதுதான் சுயராஜ்ய மென்று நினைக்கிறார்கள். சிறையிலிருக்கும் கைதிகள் தங்களை வெளியில் விட்டுவிடுவது தான் சுயராஜ்யம் என்று நினைக்கிறார்கள். குடிகாரர்கள், தாங்கள் தாராளமாகவும் விலை நயமாகவும் வேண்டிய அளவு குடிக்க வசமுள்ளதாய், கலால்வரி எடுபட்டுப் போவதுதான் சுயராஜ்யமென்று நினைக்கிறார்கள். பாமர ஜனங்கள் பலர் இந்தியாவை விட்டு வெள்ளைக் காரரை விரட்டி விடுவதுதான் சுயராஜ்யமென்று நினைக்கிறார்கள். ஏழைகள் ரூபாய் 1-க்கு 8 படி அரிசி விற்பதுதான் சுயராஜ்யமென்று நினைக்கிறார்கள். தரித்திரர்கள் பணக்காரரின் சொத்துக்களை யெல்லாம் பிடுங்கித் தங்களுக்குச் சரிசமானமாய்ப் பங்கிட்டுக் கொடுப்பதுதான் சுயராஜ்யமென்று நினைக்கிறார்கள்.

இவையெல்லாம் அறியாமையால் நினைப்பதாக வைத்துக் கொண்டாலும் அறிந்த வர்கள், படித்தவர்களென்போரோ, வெள்ளைக்காரர் உத்தியோகங்களை யெல்லாம் தாங்களே அனுபவித்துக்கொண்டு 500, 1000. 5000, 10000 ரூபாய் சம்பளம் பெறுவதுதான் சுயராஜ்ய மென்று நினைக்கிறார்கள். உயர்ந்தோர்கள் என்கின்ற பிராமணர்களோ பாமர ஜனங்களைக் கொண்டு கிளர்ச்சி செய்வித்து மேற்படி சம்பளமுள்ள சர்க்கார் உத்தியோகங் களையும், பதவிகளையும் தாங்களே பெறுவதும், தாங்கள் பிறவியில் உயர்ந்தவர்கள், மற்ற வர்கள் தாழ்ந்தவர்களென்பதை நிலைநிறுத்தி ஆதிக்கம் பெறுவதுதான் சுயராஜ்யமென்று நினைக்கிறார்கள். இராஜ தந்திரிகளென்போரும் இராஜியவாதிகளென்போரும் சீமையி லிருந்து பார்லிமெண்டார் மூலம் நமக்கு வழங்கப்படும் சில அதிகாரங்களையும் பதவி களையுந்தான் சுயராஜ்யமென்று நினைக்கிறார்கள். காங்கிரசில் தற்காலம் பிரதான ஸ்தானம் வகிப்பதாய்ச் சொல்லப்படும் சுயராஜ்யக் கட்சியார் என்போரும், அரசாங்கத் தாரிடமிருந்து எதையாவது பெறுவதைத்தான் சுயராஜ்யமென்று சொல்லிக் கொண்டிருக் கிறார்கள். (இவற்றையெல்லாம் அறிந்துதான் இங்கிலாந்தில் ஸ்ரீமான் சத்தியமூர்த்தியின் பிரசங்கம் கேட்ட கர்னல் வெட்ஜ்வுட் துரை இந்தியர்கள் இன்னமும் தங்களுக்கு வேண்டியது என்ன (சுயராஜ்யம்) வென்பதையே தெரிந்து கொள்ளவில்லை என்று சொன்னார் போலும் !)

மகாத்மா காந்தியடிகள் இவற்றை ஒன்றையும் சுயராஜ்யமென்று கருதவேயில்லை. இவ்வித சுயராஜ்யங்களில் எதுவரினும், நமது நாட்டில் இப்போதுள்ள கஷ்டங்கள் எதுவும் மாறவே மாறாது என்பது அவருடைய அபிப்பிராயம். இப்போது சுயராஜ்யமில்லையென்று சொல்வதற்கு அறிகுறியாக இருப்பது :—

1. மக்கள் சுயமரியாதை இல்லாமலும், சமத்துவமில்லாமலும் ஒருவன் உயர்ந்தவன், ஒருவன் தாழ்ந்தவன் எனச் சொல்லிக்கொண்டு, பெரும்பான்மையான மனிதர்களைத் தீண்டாதார்களென்று ஒதுக்கி, இழிவான மிருகங்களிலும் கேடாய் மதித்து, மனித சுதந்திர மில்லாமல் கொடுமைப்படுத்தி வைத்திருப்பது.

2. தினம் ஒரு வேளைக் கஞ்சிக்கு வழியில்லாமலும், தங்கள் மானத்தைக் காக்க ஆடையில்லாமலும் கோடிக்கணக்கான ஜனங்கள் பட்டினியாலும், மானாபிமானத்தாலும் சாவது.

3. தேசத்தில் பெரும்பான்மையோரான தொழிலாளிகள் தங்களுக்குத் தொழிலில்லாமல் தங்கள் ஜீவனத்திற்காக எதுவும் செய்ய ஒருப்பட்டு ஜீவனத்திற்காக அன்னிய நாட்டிற்குச் சென்று இழிவாய் வாழ்ந்து மாய்வது.

4. நமது தேவைக்கு வேண்டிய சகல வஸ்துக்களும் அன்னிய நாட்டிலிருந்து வருவதாய் ஏற்பட்டு, அதன் பொருட்டு நமது செல்வங்கள் வெளிநாடுகளுக்குப்போய் நமது நாடு தரித்திரத்தில் மூழ்கிக்கொண்டு போவது.

இப்படிப்பட்ட கெடுதிகள் நம் நாட்டை விட்டு என்று அகலுமோ அன்றுதான் நமது நாடு சுயராஜ்யம் பெற்ற நாடு ஆகுமேயல்லாமல், அன்னியர்கள் அரசாட்சி செய்யும் காரணத்தினாலேயே சுயராஜ்யமில்லையென்று சொல்லிவிட முடியாதென்றும் மகாத்மா காந்தி அடிக்கடி கதறி வருவதோடு, இவ்வித சுயராஜ்யத்தை அடையவே ஒத்துழையாமையையும், கதர், தீண்டாமை, மதுவிலக்கு முதலிய நிர்மாணத் திட்டங்களையும் உபதேசித்தார்.

இதனை மேல்சாதியாரென்போரும், படித்தவர்களென்போரும், இவ்விரண்டும் சேர்ந்த சுயராஜ்யக் கட்சியாரென்போரும் ஆதியிலிருந்தே ஒப்புக்கொள்ளவில்லை. இவை ஒப்புக்கொள்ளப்பட்டு அமுலுக்கு வந்து பலன் தருவதானால், மேல்சாதியாரென்போருக்கும், படித்தவர்களென்போருக்கும் பெரிய ஆபத்தாய்த்தான் முடியும். ஏனெனில், தீண்டாமையொழிந்தால் மேல்சாதியென்பது போய்விடும். கதர், மதுவிலக்கு வெற்றிபெற்றால் ஏழ்மை நிலையும், தரித்திரமும் மறைந்துவிடும். இவ்விரண்டும் மறைந்தால் படித்தவர்களுக்குப் பிழைப்பிருக்காது.

இந்த இரகசியத்தை அறிந்தேதான், உயர்ந்த சாதியார்கள் என்போரும் படித்தவர்களென்போரும், கூட இருந்தே குடியைக் கெடுத்ததுபோல், மகாத்மாவின் திட்டத்தை அவருடன் இருந்தே ஒழித்துவிட்டார்கள். அது மாத்திரமல்லாமல், இராஜீய சுதந்திரமென்ற பொய்ப் பெயர் வைத்து உத்தியோகம் சம்பாதிப்பதையே பிரதான தத்துவமாய்க் கொண்ட சுயராஜ்யக் கட்சியென்று ஒரு கட்சியையும் சிருஷ்டித்துக்கொண்டு, காங்கிரசிலிருந்து மகாத்மாவை விரட்டிவிட்டு, உத்தியோக வேட்டையாட காங்கிரசை ஓர் ஆயுதமாயும் ஏற்படுத்திக்கொண்டார்கள். சுயராஜ்யக் கட்சியாரின் கொள்கையான இராஜீய சுதந்திரமென்னும் பொய் அதிகாரமும் பதவியும் நமக்குக் கிடைக்கக் கிடைக்க நாடு இன்னும் சீர்கேடடையவும், ஒற்றுமை குலையவும், தரித்திரம் பெருகவும், அடிமைத்தன்மை பலப்படவுந்தான் ஆகுமேயல்லாமல் தேசம் ஒருகாலும் முன்னுக்கு வர முடியவே முடியாது.

உதாரணமாக, ஒத்துழையாமைக்கு முன்னிட்ட காங்கிரஸ்களின் முயற்சியால் நமது அரசாங்கத்தார் இதுவரை இரண்டு தடவைகளில் இராஜீய சுதந்திரமென்னும் இரண்டு சீர்திருத்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள். அதாவது, ஒன்று மிண்டோ-மார்லி சீர்திருத்தம்; மற்றொன்று மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தம். இவைகளின் பலனாய் தேசம் என்னவாயிற்று? இவற்றால் ஏற்பட்ட பதவியையும், உத்தியோகத்தையும், ஆயிரம் பதினாயிரக் கணக்கான சம்பளங்களையும் நம்மில் யார் அடைவது என்கின்ற சண்டைகளும், பொறாமைகளும் வலுத்து வந்ததும், ஒருவரை ஏமாற்றி ஒருவர் அடைய பொது ஜனங்களை உபயோகித்துக் கொண்டதுமல்லாமல் வேறென்ன கண்டோம்? 5500 ரூபாய் சம்பளமுள்ள நிருவாக சபை மெம்பர் பதவிகளும் மந்திரி பதவிகளும் இந்தியருக்குக் கொடுப்பது என்கின்ற சீர்திருத்தம் பெறாமலிருந்திருப்போமேயானால், இந்து-முஸ்லிம் சண்டைகளும், பிராமணர்-பிராமணரல்லாதார் கட்சிகளும், உட்பிரிவு துவேஷங்களும்

ஏற்பட்டிருக்குமா? சுயராஜ்யக் கட்சியென்று ஓர் கட்சி ஏற்பட்டு, மகாத்மாவின் இயக்கத்தைக் குலைத்து, உத்தியோக வேட்டையாட முன்வந்திருக்குமா? மேற்படி சீர்திருத்தங்களென்னும் இராஜீய சுதந்திரங்கள் கொடுக்குமுன் 70 கோடி ரூபாயாக இருந்த வரி இப்போது 150 கோடி ரூபாயாக மாறியிருக்குமா? 24 கோடியாக இருந்த இராணுவச் செலவு இன்று 60, 70 கோடியாக மாறியிருக்குமா? அரசாங்கத்தாரிடமிருந்து பெற்ற சீர்திருத்தம் என்னும் சுயராஜ்யத்தாலல்லவா இவ்விதக் கஷ்டங்கள் விளைந்தன! மகாத்மாவின் சீர்திருத்தமாகிய நிர்மாணத் திட்டமென்னும் சுயராஜ்யத்தைப் பெற்றிருப்போமேயானால், இக்கெடுதிகள் நமக்கு வந்திருக்குமா? சுயராஜ்யக் கட்சியார் கோருகிறபடி இன்னுமொரு சீர்திருத்தமென்னும் சுயராஜ்யம் சர்க்காரால் கொடுக்கப்பட்டால் நமது கதி என்னவாகும்? இன்னும் எவ்வளவு கோடி ரூபாய் வரி அதிகமாகும்? எவ்வளவு சாதிச் சண்டைகளும் வகுப்புத் துவேஷங்களும் வளரும்?

இந்தச் சீர்திருத்தங்களின் பலனால் ஏற்பட்ட உத்தியோகங்கள்தானே இன்றைய தினம் ஸ்ரீமான்களான சி. பி. இராமசாமி அய்யரும், முகமது உஸ்மானும், இராமராய நிங்கரும், பாத்ரோவும், சிவஞானம் பிள்ளையும் ஆளொன்றுக்கு மாதம் 5500 ரூபாய் வீதம் சம்பளம் என்னும் பெயரால் கொள்ளையடிப்பதும், தனி வண்டியில் பிரயாணம் செய்வதுமாயிருக்கிறது. இதைப் பார்த்துப் பொறுக்காமல் ஸ்ரீமான்கள் ஸ்ரீனிவாசய்யங்கார் நாக்கிலும், சத்தியமூர்த்தி நாக்கிலும், ஏ. ரெங்கசாமி அய்யங்கார் நாக்கிலும் ஊறின தண்ணீர்தானே—நமது நாட்டில் சுயராஜ்யக் கட்சியாய்க் கிளம்பி, தேசத்தையும் சமூகத்தையும் பாழாக்கிக் கொண்டு வருகிறது! இந்த உத்தியோகங்கள் இந்திய மக்களுக்கு வீண் தெண்டத்துக்குத் தானே, குறைக்கும் நாய்க்கு எலும்பு போடுவது போல அரசாங்கத்தாரால் வீசி எறியப்பட்டிருக்கிறது! இந்த உத்தியோகங்களால் ஏழைகள் தலையில் கைவைத்து, வரியை உயர்த்தி வசூல் செய்து, ஆயிரக்கணக்கான ரூபாய்களை ஒரு சிலர் அனுபவிப்பதல்லாமல் வேறென்ன பிரயோசனம்? இவ்வுத்தியோகங்களில்லாத காலத்தில் இராஜாங்கம் நடக்கவில்லையா? அந்த இராஜாங்கத்திற்கும் இந்த இராஜாங்கத்திற்கும் வித்தியாசம் தானென்ன? இந்த உத்தியோகங்கள் ஏற்பட்டதின் பலனாய் ஒரு வெள்ளைக்கார உத்தியோகமாவது, அதிகாரமாவது குறைந்ததா?

இந்த உத்தியோகத்தின் பலனாய்த் தேசத்தில் செல்வநிலை பெருகிற்றா? வரி குறைந்ததா? தீண்டாத மக்கள் தங்கள் தெய்வங்களைக் காணவாவது, தெருவில் நடக்கவாவது உரிமை பெற்றார்களா? கோடிக்கணக்காய் அன்னிய நாட்டாரால் வியாபாரத்தின் மூலமாய்ச் சுரண்டப்படும் பணத்தில் முக்கால் துட்டாவது நமது நாட்டில் தங்க வழியேற்பட்டதா? கோடிக்கணக்கான மக்கள் மதுபானத்தினால் பாழாவதையாவது நிறுத்த முடிந்ததா? தேசத்துக்கு என்ன பலனைக் கொடுத்தது? சுயராஜ்யக் கட்சியாரென்போர், இந்த இரகசியத்தைப் பாமர ஜனங்கள் அறியாதபடி பத்திரிகைகளில் சதாகாலமும் பொய்யும், புளுகும் எழுதியும், மனதறிந்த பொய்ப் பிரச்சாரங்கள் செய்தும், பொதுஜனங்களை ஏமாற்றி எல்லா உத்தியோகங்களையும் தாங்களே அடைய வேண்டுமென்னும் ஆசைப்பட்டுக்கொண்டும், கூடிக்கூடி எப்படி இந்த உத்தியோகத்தை அடைவது என்று சதியாலோசனை செய்துகொண்டும் இருக்கிறார்களேயல்லாமல், இவ்வித உத்தியோகங்கள் நமக்கு அவசியமா, அவசியமில்லையா என்பதைப்பற்றி ஒரு நாளாவது பேசியதே கிடையாது.

சுயராஜ்யக் கட்சியாரின் சுயராஜ்யம் தேசத்திற்கு உண்மையான சுயராஜ்யம் ஆகாது. இவ்வித சுயராஜ்யம் நமது நாட்டிற்கு வேண்டவே வேண்டாம். சுயராஜ்யக் கட்சியார் கேட்கிறபடி சர்க்காரால் கொடுக்கப்படும் சுயராஜ்யமென்னும் சீர்திருத்தம் மறுபடியும் வருமானால் படித்தவர்களுக்கும் உயர்ந்த சாதியாரென்று சொல்லுபவர்களுக்கும் ஆயிரக்கணக்கான சம்பளமும், உத்தியோகமும் கிடைக்கும். இதற்காக மறுபடியும்

வரியை அதிகப்படுத்த வேண்டும். மக்களுக்குள் உயர்வு, தாழ்வு நிலைத்திருக்கும். குடியை ஒழித்தால் சர்க்கார் வரும்படி குறைவதன் மூலம் தங்களுடைய சம்பளம் குறைந்து போகுமானதால், குடியை நிறுத்த முடியாது. வியாபாரத்தின் மூலமாக அன்னிய நாட்டுக்குப் போகும் செல்வத்தை நிறுத்த இவர்கள் கையில் திட்டமொன்றுமில்லாததால் அதவும் சாத்தியப்படாத. உத்தியோகத்தைக் குறைப்பதால், படித்தவர்களுக்கு ஜீவனோபாயத்திற்கு மார்க்கமில்லாமல் போய்விடும். ஆகையால் அதையும் இவர்கள் செய்யமுடியாது.

உண்மையான சுயராஜ்யம் நமக்கு வேண்டும். அது மகாத்மாவின் சுயராஜ்யமான கதர் உற்பத்தி செய்வதிலும், அதை உடுத்துவதிலும், தீண்டாமையை ஒழித்து மக்கள் சமமாய் வாழ்வதிலும், மதுபானம் ஒழிந்து மக்கள் ஒழுக்கமடைவதிலுமேதானிருக்கிறது. மகாத்மா சொல்லும் சுயராஜ்யமாகிய, கதர் உற்பத்தி செய்து உடுத்தினால் அன்னிய நாட்டுக்குப் போகும் 70 கோடி ரூபாயும், மில் இயந்திரக்காரர் அனுபவிக்கும் 70 கோடி ரூபாயுமாக 140 கோடி ரூபாயில், குறைந்தது வருடம் 1-க்கு 100 கோடி ரூபாயாவது ஏழைகளுக்குப் பங்கு வீதம் கிடைக்கும். மகாத்மா சொல்லும் தீண்டாமை என்னும் சுயராஜ்யத்துக்குப் பாடுபட்டு வெற்றி பெற்றால், மிருகங்களுக்கும், புழுக்களுக்கும் கேவலமாயிருக்கும் தீண்டாதாரென்று சொல்லப்படும் 7 கோடி பேர்கள் மனிதர்களாவார்கள். இந்திய மனித சமூகத்துக்கு 7 கோடி மனிதர்கள் இலாபமாகும். பிராமணரல்லாதாருக்கு இருக்கும் இழிவான தாசிமக்கள், சூத்திரர் என்கிற பெயரும் நீங்கும். மகாத்மாவின் சுயராஜ்யமாகிய மது விலக்குக்கு வேலைசெய்து வெற்றிபெற்றால், தேசத்தில் மதுபானம் ஒழியும். ஏழைகள் சுகமாய் வாழ்வார்கள். வருடத்தில் 20 கோடி ரூபாய் ஏழைகளுடைய பணம் மதுபான வகையில் சர்க்காருக்குப்போய், உத்தியோகஸ்தர்கள் பங்கிட்டுக்கொள்வதை நிறுத்தும். ஆதலால் சுயராஜ்யக் கட்சியின் சுயராஜ்யம் வேண்டுமா? மகாத்மாவின் சுயராஜ்யம் வேண்டுமா?

['குடி அரசு'-தலையங்கம்—15-11-1925]

## 2. வரதராஜுலு அறிக்கைக்கு சமாதானம்

'தமிழ்நாடு' பத்திரிக்கையின் ஜூன் மாதம் 3-ந்தேதி தலையங்கமாகிய, 'வரதராஜுலு அறிக்கை' என்னும் விஷயத்திற்கு, நான் ஏதாவது சமாதானம் சொல்ல வேண்டும் என்பதாக நமது வாசகர்கள் எதிர்பார்க்கக் கூடுமென்பதாக நினைத்தே, அதே தலையங்கமிட்டு இவ்வியாசத்தைத் தொடங்குகிறேன். ஸ்ரீ வரதராஜுலு அறிக்கையின் முதல் வாக்கிய ஆரம்பத்தில், 'காங்கிரஸ் மகாசபையே தேசத்தில் பிரதானமானது' என்பதாக ஆரம்பிக்கப்பட்டிருக்கிறத. அது எந்த விஷயத்தில் யாருக்குப் பிரதானமானது? எந்தத் தேசத்திற்குப் பிரதானமானது? தேசத்தில் உள்ள 33 கோடி மக்களில் எந்த வகுப்பாருக்கு, எந்தக் கூட்டத்தாருக்குப் பிரதானமானது? தென்னாட்டில் படித்த வகுப்பாரான பார்ப்பனருக்கும், வடநாட்டில் படித்த கூட்டத்தாரான சிலருக்கும் உத்தியோகம் சம்பாதித்துக் கொடுப்பதற்கும், அவர்களை வாழவைக்கவும் பிரதானமானதேயல்லாமல், வேறுயாருக்கு? எதற்கு? அதனால் என்ன பிரயோஜனம் உண்டென்றும் கேட்கிறேன். காங்கிரஸ் ஏற்பட்டு 40 வருஷத்திற்கு மேலாகியும், தேச மக்களின் பெரும்பாலோரான விவசாயி, தொழிலாளி, குடியானவன் ஆகிய கூட்டத்தாருக்கு என்ன நன்மை செய்திருக்கிறது? காங்கிரசுக்கு முன் விவசாயிகளுக்கு ஏற்பட்ட வரி எவ்வளவு? காங்கிரசுக்கு முன் விவசாயிகளுக்கு ஏற்பட்டிருந்த கடன் எவ்வளவு? காங்கிரசுக்குப் பின் விவசாயிகளுக்கு ஏற்பட்ட வரி எவ்வளவு? கடன் எவ்வளவு? காங்கிரசுக்கு முன் தொழிலாளிகளின் நிலைமை, சம்பாத்தியம் முதலியவைகள் சவுகரியம் எப்படி இருந்தது? காங்கிரசுக்குப்பின் தொழிலாளிகளின் நிலைமை, தொழில் சம்பாத்தியம், சவுகரியம் எப்படி ஆய்விட்டது? என்று கேட்கிறேன்.

வியாதியை மருந்து சாப்பிடுவதின் மூலம் சவுகரியம் செய்வதைவிட, நேராய் இரத்தத்தில் கலக்கும்படி மருந்தை (இன்ஜக்ட்) ஊசிவழி ஏற்றுவதன் மூலம் சவுக்கியப் படுத்துவது சீக்கிரமாகவும், சுலபமாகவும் முடியக்கூடியதா அல்லவா என்றுதான் கேட்கின்றோம்.

அன்றியும், கடவுள் உண்டு என்னும் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கும் மக்களில், மடாதிபதிகளில், பண்டிதர்களில் 1000-ல் எத்தனைபேர் ஒழுக்கமுள்ளவர்களாக இருக்கின்றார்கள் என்பதையும், ஒழுக்கத்திற்குக் கடவுளைச் சம்பந்தப்படுத்தாமலும், ஒழுக்கத்தையே ஒழுக்கத்திற்காகக் கொண்டவர்களில், அதாவது பவுத்தர்கள், சமணர்கள், நிரீச்சுரவாதிகள் என்பவர்களில் ஆயிரத்திற்கு எத்தனை பேர்கள் ஒழுக்கமில்லாதவர்களாக இருக்கின்றார்கள் என்றும் கேட்கின்றோம்.

எனவே, சைவப் பெரியார்கள் தாமாக தாங்கள் ஒழுக்கமாக நடக்கமுடியாதவர்கள் என்றும், கடவுள் உண்டென்ற கொள்கை மூலம்தான் தாங்கள் ஒழுக்கமான வாழ்க்கையை நடத்தமுடியும் என்றும் முடிவைக் கொண்டவர்கள் என்றுந்தான் இத் தீர்மானத்தால் விளங்குகின்றது.

இரண்டாவது தீர்மானம், 'சைவ சமயம் அறிவு ஆராய்ச்சிக்குப் பொருத்தமுள்ள தாகவும் அன்பு நெறியையே அடிப்படையாகக் கொண்டதாகவும் இருத்தலினால் அது எக் காலத்திற்கும் எச் சமூக நிலைக்கும் இசைந்ததாயிருக்கின்றது' என்பதாகும்.

இது சுத்தப் பைத்தியக்காரத் தீர்மானம் அல்லது மதப்பித்துகொண்ட தீர்மானம் என்றுதான் சொல்லவேண்டும். முதலாவது, சைவசமயம் அறிவுக்கும், ஆராய்ச்சிக்கும் பொருத்தமாயிருந்தால் அறிவும், ஆராய்ச்சியும்பெற்ற மக்கள் என்று நம்மாலேயே ஒப்புக் கொள்ளுகின்றவர்களிடம் சைவ சமயம் இருக்கின்றதா? உலகத்தில் இருக்கும் சுமார் 150 கோடி மக்களில் பவுத்தர்களும் பவுத்தசமய சார்புடையவர்களும் 54 கோடி மக்களாவார்கள். அடுத்தாற்போல் கிறிஸ்தவ மதத்தவர்கள் சுமார் 50 கோடி மக்களா வார்கள். முகமதியர்கள் 20 கோடியாவார்கள். இந்துக்கள் என்பவர்களும் 21 கோடி மக்களாவார்கள். மற்றபடி 2, 3 கோடிமக்கள் சில்லறை மதங்களைச் சேர்ந்தவர்களாக இருக்கக்கூடும். இவற்றுள் மேற்கண்ட 21 கோடி இந்துக்களில் 5, 6 கோடி மக்கள் தீண்டாதவர்கள். இவர்கள் சைவக் கொள்கைப்படி சைவர்களாக இருப்பதாகச் சைவர்களே ஒப்புக்கொள்ள மாட்டார்கள். மீதி 15 கோடி மக்களில் அனேக மதங்கள் உண்டு. அனேக மாக வடநாட்டில்தானே கடவுள் என்கின்ற சங்கர மதமும், விக்கிரக வணக்கமில்லாத ஆரிய சமாஜமும், வேத புஸ்தகத்தை வணங்கும் சீக்கிய மதமும், வைணவ மதமுமே சிறப்பாக உள்ளவை. எனவே, தென்பாகத்தில் அதிலும் தென்னாட்டில் உள்ள மக்களில் 'பேய்த் தெய்வ' வணக்கக்காரர்கள், சமணர்கள், ஜெயினர்கள் இதுபோன்ற மற்றும் மத வித்தியாசமில்லாதவர்கள், ஸ்மார்த்தர்கள் ஆகியவர்களையெல்லாம் கழித்து மீதியுள்ள விபூதி பூசாதவர்களையும், விபூதி பூசுபவர்களையும், மாமிசம் சாப்பிடுபவர்களையும், இயற்கை வணக்கக்காரர்களையும் கழித்துக் கணக்குப் பார்த்து, இதில் சைவர்கள் எவ்வளவு பேர் இருக்கக்கூடும் என்பதை யோசித்துப் பார்த்தால், உமியை ஊதினால் என்ன மீதியாகுமோ அதுதான் மீதியாகலாம். இந்த மாதிரியான ஒரு சிறு கூட்ட மக்கள் ஓர் இடத்தில் கூடி ஒருவரை ஒருவர் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டு, சாப்பிடாமல் இருந்துகொண்டு 'சைவ மதம் அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் ஒத்த மதம். எத்தேசத்திற்கும் எக் காலத்திற்கும் பொருத்தமானது' என்று தீர்மானிப்பதில் ஏதாவது அர்த்தமிருக்க முடியுமா என்பதை யோசித்து முடிவு கட்டும்படி பொதுஜனங்களுக்கே விட்டு விடுகின்றோம்.

மூன்றாவதாக, சாதாரணமாய் இந்த நாட்டில் சைவர்களது குறுகிய புத்தியும் அவர் களது சமய அகம்பாவமும் சமீப காலத்தில்தான் அதாவது, திரு. வேதாசலம் அவர்களது

ஆராய்ச்சியும், திரு. சுப்ரமணியப் பிள்ளை அவர்களது ஆராய்ச்சியும் மேநாட்டு முறையை ஒட்டிச் செய்துகொண்டு போனதின் பலனாய் சைவர்கள் கண்ணுக்கு மற்ற மனிதர்களைப் பார்த்தால் அவர்களும் மனிதர்கள்தான் என்று எண்ண முடிந்தது. இதற்குமுன் அவர்களது குறுகிய புத்திக்கும் ஆணவத்திற்கும் அனேக உதாரணம் சொல்லலாம். அவர்களது தீட்சையும் பஞ்சாட்சர மகிமையும், ஜபமும் மற்றவர்களை நாயினும் கடையாய் மதிக்கச் செய்தாலும் சுமார் 20 வருடத்திற்குமுன் அவர்களை மனிதப் பிறவி என்று சொல்லுவதற்குக்கூட யோக்கியதை இல்லாமல் இருந்தது என்பதை நாம் நேரில் அறிவோம். ஏன்— இப்போதுகூட எத்தனையோ பதர்கள் தங்களைச் சைவர்கள் என்று சொல்லிக்கொண்டு மனிதனைத் தொட்டால் பாவம் என்றும், ஒரு மனிதனோடு வேறு ஒரு மனிதன் கூட இருந்து உணவு கொண்டால் அது உணவு அல்லவென்றும், மற்ற சமயக்காரர்கள் எல்லாம் மக்கள் அல்லவென்றும், சாம்பலும் கொட்டையும் தவிர, வேறு கொள்கை சைவத்திற்கு இல்லை என்றும் கருதும்படி நடப்பவர்களையும் தாராளமாய்க் காணலாம்.

நான்காவதாக, 'சைவ சமயத்திற்கு ஆதாரம் 12 திருமுறைகளும் 14 மெய்கண்ட சாத்திரங்களும் வேத சிவாகமப் பகுதிகளும்' என்று தீர்மானித்திருக்கிறார்கள். சைவ சமயம் மிகுதியும் மோசமானது என்பதற்கு இதைப்போல வேறு உதாரணம் தேவையில்லை. திருமுறைகளில் அனேகம், எல்லாம் புராணக் குப்பைகளை ஆதாரமாகக் கொண்டவையே ஒழிய வேறில்லை. அவற்றுள்ளும் பிற சமயக்காரர்களை பார்ப்பனர்களைப் போல் இழிமுறையில் வையும்படியும், சொல்லும்படியும் வைததாகவும் கொன்றதாகவும் ஒவ்வொரு பதிகத்திலும் மிதக்கக் காணலாம். ஆகமங்களோ எந்த அளவில் அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் மனிதத் தன்மைக்கும் பொருத்தமானவை என்று கருதினார்களோ தெரியவில்லை.

இவ்வளவும் போதாமல், வேத சிவாகமப் பகுதிகளும் ஆதாரமாம். எனவே, சைவ சமய ஆராய்ச்சி 'பிள்ளையார் பிடிக்க அது குரங்காய் முடிந்தது' என்பதுபோல் முடிந்தது.

அய்ந்தாவதாக, சைவச் சின்னம் சிவன்தான். பதி சரியை, கிரியை, மோகம், ஞானம் என்பவைகள் எப்படி ஆராய்ச்சிக்குள் அடங்கின என்பது விளங்கவில்லை. இதை விளக்கினால் 10 பக்கம் போதாது.

இது இப்படி இருக்க, வருணாசிரம மாநாடுகளின் தீர்மானங்களோ சைவப் பெரியார் மாநாட்டிற்குக் கொஞ்சமும் பின்வாங்கியவையல்ல. உருண்டைக்கு நீளம், புளிப்பிற்கு அவன் அப்பன் என்பதுபோல் சைவப் பெரியார்கள் தீர்மானங்களைத் தோற்கடித்துவிடக் கூடியவையாகவே இருக்கின்றன. இவற்றைப்பற்றி அடுத்த வாரம் விளக்குவோம்.

['குடி அரசு'–தலையங்கம்—7-4-1929]

## 5. வருணாசிரம மாநாடு

சென்றவாரம் 'இரண்டு மாநாடுகள்' என்னும் தலைப்பின்கீழ் நமது முன்னேற்றத்திற்கு விரோதமான கிளர்ச்சிகளைப்பற்றி எழுதி, முதலாவதாக சைவப்பெரியார் மாநாட்டைப்பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, இந்த வாரம் வருணாசிரம மாநாடு, பார்ப்பனர்கள் மாநாடு ஆகியவைகளைப்பற்றி எழுதுவதாகக் குறிப்பிட்டிருந்தோம். அதோடு இந்த வாரம் சென்னையில் திரு. ஏ. இராமசாமி முதலியார் அவர்கள் தலைமையில் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த முக்கிய தலைவரான திரு. சாமி வெங்கடாசலம் செட்டியார் சீர்திருத்தம் சம்பந்தமாகவும் சுயமரியாதை மாநாட்டின் தீர்மானங்கள் சம்பந்தமாகவும் தமது அபிப்பிராயத்தை ஓர் உபன்யாசமூலமாகத் தெரிவித்திருக்கின்றார்.

அதுவும் ஏறக்குறைய பார்ப்பனர்கள் மாநாடு, வருணாசிரம மாநாடு, சைவப் பெரியார் மாநாடுகள் போன்றவைகளின் அபிப்பிராயத்தையே வர்த்தகயுக்தி முறையில் பேசியிருக்கின்றார். அதன் சாரமும் அதற்கு திரு. ஏ. இராமசாமி முதலியார் அவர்களின் விளக்கமான சமாதானமும் வேறு பக்கத்தில் பிரசுரித்திருக்கின்றோம்.

திரு. சாமி வெங்கிடாசலமவர்கள் வவ்வாலைப் போல் பார்ப்பனர்களுக்கும், பார்ப்பன ரல்லாதாருக்கும் நல்ல பிள்ளையாக நடந்துகொள்ளவேண்டும் என்னும் முறையில் எவ்வளவோ சாமர்த்தியமாகப் பேசியிருந்தாலும் தன்னைப் பொறுத்தவரை தான் சூத்திரன் அல்லவென்ற எண்ணத்தினால் வருணாசிரமத்தைக் காப்பாற்ற எண்ணி, அதை மக்களிடம் புகழ்ந்து பேசியிருக்கிறார்.

திரு. சாமி அவர்கள் எவ்வளவு தூரம் பார்ப்பனீயத்தை ஆதரித்தாலும் பார்ப்ப னர்கள் திரு. சாமியையும் சூத்திரர்கள் என்பவர்களின் கணக்கில்தான் சேர்த்து வாழ்க்கை யில் கோவில், ஓட்டல் முதலியவைகளில் சூத்திரன் மரியாதையைத்தான் கொடுத்து வருகின் றார்கள் என்பதை மறுக்கமுடியாது. அன்றியும், திரு. சாமி வெங்கிடாசலம் அவர்களின் வருணம் என்பதான வைசிய வருணத்திற்கு வருணாசிரம தர்ம வியாக்கியானமொன்றில் 'பிராமண அணும் க்ஷத்திரியப் பெண்ணும் சேர்ந்து பிறந்த பிள்ளை வைசியனாகின்றான்' என்று எழுதி இருப்பது தெரியுமா, தெரியாதா? அல்லது, தெரிந்தே வருணாசிரமத்தை ஆதரிக்கின்றாரா என்பது விளங்கவில்லை.

நிற்க, மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி முதலிய பார்ப்பன மாநாடுகளில் அதன் தலைவர்கள் பேசியிருப்பதைப் பார்த்த பிறகாவது திரு. சாமி வெங்கிடாசலம் செட்டி யாரவர்களுக்கு ஏதாவது மாறுதல் உண்டாகுமோ அல்லது பழைய எண்ணமேதான் இருக்குமோ என்பது குறிப்பிடமுடியாதது. மேற்படி மாநாட்டுத் தலைவர்கள் பேசியிருப் பதின் சாரமாவது :—“மோட்சத்திற்கு ஆதாரம் வேதம், வேதத்தை அப்யசிக்கின்றவர்கள் பிராமணர்கள். கிரேக்கர், பார்சி, டச்சு, போர்ச்சுகீசு, பிரஞ்சு, முகமதியர் ஆகிய நம்மத துவேஷ ராஜாக்கள் காலத்திலும் இம் மாதிரி ஒரு மாநாடு கூட்டவேண்டிய அவசிய மில்லாமல் நமது மதம் நிலை நின்றிருக்கின்றது.

நாம் தினமும் செய்துவரும் பிரார்த்தனை பிராமணர்களுக்கும் பசுக்களுக்கும் க்ஷேமம் உண்டாகவேண்டும், ராஜா (இதற்கேற்றபடி) நீதியாய் நடக்கவேண்டும் என்பவை களாகும். இம் மாதிரிப் பிரார்த்தனை எந்த மதத்திலாவது உண்டா?

இப்பொழுது நாடார், சுயமரியாதைக்காரர், ஸ்திரீகள், விதவைகள், யுவர்யுவதிகள் முதலியவர்கள் சங்கங்கள் விருத்தி அடைந்து வருகிறது. நமது அப்பிராமணர்கள் (சூத்தி ரர்கள்) நம்மீது துவேஷங் கொள்ளுகின்றார்கள். இவைகள் எல்லாம் நாம் ஈடேறவிடாமல் செய்யத்தக்கதல்லவா?

சூத்திரர்கள் அவர்களுடைய கடமைகளைக் கடந்ததால் பிராமணர்கள் சுயநலக்காரர் களாக வேண்டியதாயிற்று.

மத விஷயங்களிலும் சமூக விஷயங்களிலும் சட்டசபைகள் பிரவேசிக்கக் கூடாது. (அவர்கள் யார்?) சதிசாப்பு, விதவாவிவாகம், சாதிபேத விலக்கு, தர்ம சொத்து ஆகியவை களைப்பற்றிச் சட்டம் கொண்டுவந்து இருக்கின்றார்கள். இன்னும் ருதுமதி, கல்யாண ரத்து, பெண்களுக்குச் சொத்து உரிமை ஆகியவைகளுக்கும் சட்டம் வேண்டுமாம்.

தேவதாசிகளை நீக்கவும், பாலிய விவாகத்தைத் தடுக்கவும் வந்துவிட்டார்கள். இவைகள் எல்லாம் இந்துமதத்தையே வேரறுக்கச்செய்வதே தவிர, இதனால் ஒரு பலனும் விளையாது. (இவைகள் இந்துமதக் கொள்கை ஆனால் இந்துமதம் இருக்கவேண்டுமா?)

பெண்களைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிக் கற்பித்தல் கூடாது. அப்படிச் செய்வதால் அவர்களும் ஆண்களாகி விடுகிறார்கள். பெண்களுக்குக் குடும்ப காரியம், கற்பு, புத்திராபிவிர்த்தி செய்வதற்கும் இராமாயண பாரதம் கற்பித்தல் ஆகியவைகளே போதுமானது.

சூத்திரர்கள் வேதம் படிக்கக்கூடாது என்பதுபற்றியும், சூத்திரன், பஞ்சமன் என்று அழைப்பதைப்பற்றியும் ஆட்சேபித்துச் சிலர் கிளர்ச்சிசெய்து வருகின்றார்கள். சூத்திரன் என்ற சொல் மிகப் பரிசுத்தமானது. யாக எக்யாதிகளுக்கு சூத்திரன் அவசியமானவனாகிறான்.

பஞ்சமர், தீண்டாதார் என்று வித்தியாசப்படுத்திக்கொண்டு அப்படி ஒரு சாதி இருப்பதாய் வித்தியாசம் கற்பிப்பது கொடிதான காரியமாகும்.

பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் ஆகியவர்கள் அவரவர்கள் கடமையிலிருந்து தவறும்போதுதான் பஞ்சமர்களாகின்றார்கள். அப்படி தன் வருண தர்மத்திலிருந்து தவறினவன் மறுபடியும் அந்த வருணத்தை அடையமுடியாது.

தினமும் ஸ்நானம் செய்யாததினாலேயே தீண்டாதவர்களாகின்றார்கள். தீண்டாமையை விலக்கத் தீண்டாதவர்களே சம்மதிக்கமாட்டார்கள். ஏனென்றால், தீண்டாதவர்களிடம் உயர்குணம் இருக்கிறது. உள்ளதுபோதும் என்று திருப்தியடைகின்றார்கள்."

தலைவர் உபன்யாசத்தின் சாரம்: "துவேஷமும் தெய்வ தூஷனையும் ஏற்பட்டுவிட்டதால் பிராமண சபை கூட்டவேண்டியதாயிற்று. ஒவ்வொரு வருணத்தாரும் அவரவர்கள் தர்மப்படி நடந்தால் எல்லோரும் நன்மையடையலாம். சூத்திரர்கள் வேதம் படிக்காததால் ஒன்றும் முழுகிப்போய்விடாது. அவர்களுக்குப் புராணங்கள் இருக்கின்றன. சூத்திரன் என்கின்ற பதம் நல்ல பதம்.

ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு தர்மம் இருக்கின்றது. அதுபோல், இங்கும் அவனவன் தருமப்படி நடக்கவேண்டும். பிராமணர்களை அப்பிராமணர்கள் (சூத்திரர்கள்) ஏன் தூஷிக்கவேண்டும்? சூத்திரர்களில் நாயக்கர், வேளாளர் ஆகியவர்கள் எவ்வளவோ ஆசாரமாயிருக்கின்றார்கள்.

சூர்ப்பனகை எதிரில் வந்ததால் சீதை அக்கினிப் பிரவேசமாக நேர்ந்தது. ஸ்திரீகளைப் பத்திரமாகக் காப்பாற்றவேண்டியது ஆண்கள் கடமை. ஸ்திரீகள் உத்தியோகத்திற்கு லாயக்கில்லை. மேலதிகாரிகளுக்கு என்னவெல்லாம் செய்ய நேரிடுமோ!"

எனவே, பிராமணன்தான் இந்து மதத்திற்கு ஆதாரமானதென்னும் வேதம் படிக்கலாம் என்பதும்; தாங்கள்தான் பிராமணர் என்பதும்; இந்துமதத் தத்துவப்படி மற்றவர்களைச் சூத்திரர்கள் என்பதும்; வெகுகாலமாக அனேக இந்து மகமதிய ராஜாக்கள் காலத்தில்கூட தாங்கள் அவர்களை ஏமாற்றி தங்களது ஆதிக்கங்களை நிலைநிறுத்தி வந்திருப்பதும்; பிராமணனும் அவனது ஆகாரத்திற்கு மாடுகளும் க்ஷேமமாக இருந்தால் போதும், மற்றவர்கள் எக்கேடு கெட்டாலும் கவலை இல்லை என்பதும்; இதை நிலைநிறுத்தத் தக்கவன்தான் அரசனாக இருக்க வேண்டும் என்பதும்; நாடார் முதலிய சமூக மாநாடுகளும் சுயமரியாதை மாநாடுகளும் தங்கள் ஆதிக்கத்திற்கு விரோதமானவை என்பதாகக்கருதி இருக்கின்றார்கள் என்பதும்; சூத்திரன் பிராமணனுக்கு அடிமையாய் இருக்க வேண்டியதும் சூத்திரப் பெண்கள் அவர்களுக்குத் தாசிகளாக இருக்க வேண்டியதுமான சூத்திர தர்மம் தவறினதாலேயே பிராமணர்கள் சுயநலக்காரர்களாக இருக்கின்றார்கள் என்று சொல்லுவதன் மூலம் பார்ப்பனர் தங்கள் சுயநலத்திற்குச் சமாதானம் சொல்லுவதும்;

சமத்துவம் இருக்கக்கூடாது, தர்ம சொத்துக்களின் கணக்குக் கேட்கக்கூடாது, குழந்தைப் பெண்களுக்குக் கல்யாணம் செய்யவேண்டும், பெண்களுக்குச் சொத்துக்கள் இருக்கக் கூடாது, படிப்பு கூடாது, சுதந்திரம் கூடாது, தாசிகள் இருக்கவேண்டும், விதவைகள் கலியாணம் செய்து கொள்ளக்கூடாது-என்பது போன்ற கொள்கைகளே இந்துமதம் என்பதும்; மேற்கண்ட கொள்கைகளில் எதைத் திருத்துவதானாலும் இந்து மதத்தை அழித்ததாகுமாதலால் சர்க்கார் அதற்கு இடம்கொடுக்கக்கூடாது என்பதும்; பெண்கள் வீட்டு வேலை செய்வதும் பிள்ளை பெறுவதும் தவிர வேறு உரிமைக்கு லாயக்கில்லை என்பதும்; கற்பு பெண்களுக்கு மாத்திரமேயொழிய ஆண்கள் விஷயத்தில் கவலை இல்லை என்பதும்; இராமாயணம், பாரதம் ஆகியவைகளே தர்மத்திற்கு ஆதாரமானதென்பதும்; சூத்திரன், பஞ்சமன் என்று அழைப்பது மிகவும் சரியானதென்பதும்; அவை அவர்களுக்கு மிகவும் மேன்மையானதென்பதும்; சூத்திரன் என்றசொல் மிகவும் பரிசுத்தமானதென்பதும்; பிராமணர்களின் யாகத்திற்குப் பயன்படவே சூத்திரன் இருக்கின்றான் என்பதும்; சூத்திரன் அவனுக்குள்ள கடமையைச் செய்யாததால் பஞ்சமனாக வேண்டியதாகின்றதென்பதும்; தினமும் ஸ்நானம் செய்யாததால் தீண்டாதவர்களானார்கள் என்பதும்; தீண்டாதவர்கள் அப்படியேயிருக்க விரும்புவதுதான் உயர்குணமென்பதும்; சூத்திரர்கள் புராணங்கள் படித்து அதன்படி நடத்தலே அவர்கள் வேதம் படித்ததற்குச் சமானமென்பதும்; வேளாளர் நாயக்கர் முதலியவர்கள் எல்லாம் சூத்திரர்கள் என்பதும்—ஆகிய விஷயங்கள் வியக்தமாகவும் நன்றாகவும் பொருள்படும்படி பேசி இருக்கின்றார்கள்; இதற்கேற்ற தீர்மானங்களும் செய்திருக்கின்றார்கள்.

சைவமத சைவப் பெரியார் மகாநாடு தீண்டாதவர்களுக்குத் தனிக்கோவில் கட்டிக் கொடுப்பதின்மூலம் தீண்டாமையை நிலைநிறுத்தப் பாடுபடுகின்றது. வருணாசிரம மாநாடும் பிராமண மாநாடும் ஒரே அடியாய் இருக்கின்றபடியே இருக்கவேண்டும் என்று தீர்மானித்து விட்டன. இதிலிருந்து வாசகர்களை நாம் ஒன்று கேட்கின்றோம்.

அதாவது, மேற்கண்ட கொள்கைகளையுடைய இந்து மதமும் அதற்கேற்ற கடவுள் களும், சைவ மதமும் அதற்கேற்ற சிவனும் இருக்கவேண்டுமா, அல்லது அவற்றைக் குழி தோண்டிப் புதைக்க வேண்டுமா என்பதேயாகும். இதுவரை எந்த ஆஸ்திக சிகாமணியும் தேசிய வீரர்களும் மேற்கண்ட இந்துமத ஆதாரத்தையும் சைவ சமய ஆதாரத்தையும் மறுத்துப் பேசவோ, வேறு ஆதாரம் காட்டவோ சிறிதாவது முற்பட்டவரல்ல. ஆனால், இந்து மதத்தையும் வேதத்தையும் ஆகமத்தையும் புராணங்களையும் காப்பாற்ற மாத்திரம் வரிந்து கட்டிக்கொண்டு முன்வந்து இருக்கிறார்கள். சிலர் தங்களைச் சூத்திரன் என்று சொல்லிக்கொள்ளப் போவதாகவும் தாங்கள் உண்மையிலேயே சூத்திரர்கள்தான் என்றும், அதிலும் 'சூத்திரர்கள்' என்றும் சொல்லி ஆனந்தப்படுகிறார்களாம். பார்ப்பனச் செல்வாக்கும் அவர்களது பணமும் நமது மக்களை என்ன வேண்டுமானாலும் செய்யத்தக்க வலுவுடையதாக இருக்கின்றது என்பதை நாம் சுலபத்தில் மறுக்கமுடியாதவர்களாக இருக்கின்றோம். பார்ப்பனரல்லாத மக்கள் பலருக்குச் சுயமரியாதை மாநாடு விஷயமாய் இருக்கும் ஆத்திரத்தில், அதிருப்தியில் ஒரு பங்குகூட இந்த வருணாசிரம மாநாட்டிலும், பிராமண மாநாட்டிலும் ஏற்படாதிருப்பதற்கு நமக்குக் காரணமே விளங்கவில்லை. எப்படியான போதிலும் இந்த மாநாடுகளும் எதிர்ப் பிரச்சாரங்களும் நமது கொள்கைகளை யும் உத்தேசங்களையும் முயற்சிகளையும் உறுதிப்படுத்துகின்றனவே தவிர, சற்றாவது தளர்ச்சியாக்கவில்லை என்பதையும் நமது வாலிபர்கள் மேற்கண்ட கொள்கைகள் கொண்ட மதங்களையும் சாமிகளையும் ஒழிக்கத் தயாராயிருக்க வேண்டியதுதான் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

['குடி அரசு'-தலையங்கம்—14-4-1929]

## 6. நியாயம் வழங்கும் முறை

இந்திய அரசியல் பிழைப்புக்காரர்கள் பாமர மக்களை ஏமாற்றி, தாங்கள்தாம் இந்திய ஜனப்பிரதிநிதிகள் என்று காட்டிக்கொண்டு அரசாங்கத்தாரிடம் பதவி பட்டம்பெற, வரியைப் பற்றியும், வெளிநாட்டு வியாபாரத்தைப்பற்றியும், கள்ளைப்பற்றியுமே எடுத்துச் சொல்லி மக்களை ஏமாற்றி வருகிறார்கள். அறிவோடு கூடி நடுநிலைமையில் இருந்து ஒரு மனிதன் யோசித்துப் பார்த்தானேயானால், இவைகள் எல்லாவற்றையும் விட முக்கியமாய் இருக்கும் குறைகள் தாமாகவே புலப்படும்.

அதாவது, வக்கீல் தன்மைகளும் உத்தியோகத் தன்மைகளுமேயாகும். இவை இரண்டும் இந்த நாட்டில் பிறப்புத் தன்மையைக் காப்பாற்ற இருக்கின்றனவேயொழிய, நியாயத்தைச் சொல்லவோ, ஏழைகளைக் காப்பாற்றவோ இல்லவே இல்லை. அரசியல் துறையில் சம்பந்தப்பட்டதான வக்கீல் முறையும், உத்தியோக முறையும் இந்தியாவில் இம்மாதிரி இல்லாதிருந்திருக்குமானால் இந்த நாட்டில் இவ்வளவு ஒழுக்கக் குறைவும், நாணயக் குறைவும், தரித்திரமும், மக்களுக்குக் கஷ்டமும் அலைச்சலும் இருக்க முடியவே முடியாது என்பதோடு, இவ்வளவு தூரம் வித்தியாசப்படும்படியான ஏழைத் தன்மையும், பணக்காரத் தன்மையும்கூட இருக்க முடியாது.

ஏழைகளையும் மத்தியதரத்தாரையும் இந்த நாட்டில் தலை எடுக்க ஒட்டாமல் செய்து வருவது இந்த வக்கீல் முறையும் உத்தியோக முறையுமே தவிர, வேறு ஒன்றும் இல்லை.

சாதாரண மக்களுக்கு நீதி கிடைப்பதில்லை என்பதோடு, பணக்காரனாயிருப்பவன் தனது பணத்தின் மகிமையினால் 100-க்கு 90 விஷயங்களில் தன் இஷ்டப்படியே நியாயம் பெறுகின்றான். நியாயாதிபதிகள் என்பவர்களும் வக்கீல்களும் ஏழை மக்கள் நீதி பெறுவதற்கு இடையூறாகவும், பணக்காரர்கள் தங்கள் இஷ்டப்படி நீதி பெறுவதற்கு அனுகூலமுமாகவே இருக்கின்றார்கள்.

இன்றைய வக்கீல் முறையே மனித சமூகத்தின் ஒழுக்கத்திற்கும் நாணயத்திற்கும் சாந்திக்கும் ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கும் நேர் விரோதமானதாகும். அது மாத்திரமல்லாமல், தேசத்தின் ஒழுக்கமும், நாணயமும், சுயமரியாதையும் கெட்டுப்போனதற்கு வக்கீல்களே காரணஸ்தர்கள் என்று சொல்லுவது சிறிதும் மிகைப்படக் கூறுவதாகாது.

நமது நாட்டுப் பணக்காரர்களில் அனேகருக்கு அயோக்கியத்தனமும், ஆணவமும், நாணயக் குறைவும் ஏற்படவும்; அவர்கள் நாட்டின் நலனுக்குப் பொறுப்பற்ற தன்மையாய் நடந்துகொள்ளவும் காரணமே நமது வக்கீல்கள் ஆவார்கள்.

இந்த நாட்டு விவசாயக்காரர்கள் பெரிதும் கடன்காரர்களாக இருக்கவேண்டி ஏற்பட்டதற்குக் காரணமும் இந்த வக்கீல்களே! மக்களுக்கு விவகாரத்தில் அதிக நம்பிக்கையும் ஆசையும் ஏற்படுவதற்குக் காரணம் வக்கீல்கள்தாம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

அன்றியும், நாளுக்கு நாள் வழக்குகள் அதிகரித்துக்கொண்டு போவதற்கும் நியாய ஸ்தலங்கள் அதிகமாவதற்கும் வக்கீல்கள்தாம் காரணஸ்தர்களாவார்கள். இன்னும் உண்மையை ஒளிக்காமல் சொல்லவேண்டுமானால், தெளிவாய்ச் சொல்லவேண்டுமானால் மக்கள் அயோக்கியர்களாவதற்கும், நாணயக்குறைவாய் இருப்பதற்குங்கூட நமது வக்கீல்களே பெரிய பொறுப்பாளிகளாவார்கள்.

இதற்குக் காரணம் பிரிட்டிஷ் அரசாங்கமா? இந்திய மக்களா? என்று பார்ப்போமேயானால் இந்திய மக்களே அதிகப் பொறுப்பாளர்கள் ஆவார்கள்.

ஏனெனில், பிரிட்டிஷ் இந்திய ஆட்சியில் இந்திய மக்களுக்குச் சம்பந்தமும், பங்கும் இருக்கவேண்டும் என்று கேட்க ஆரம்பித்த காலத்திலேயே, இந்த வக்கீல் கூட்டங்களேதாம்

இந்திய மக்களின் பிரதிநிதிகளாய் இருந்து, வக்கீல் தொழில் விருத்தியாகி, வக்கீல்கள் தாராளமாய்ப் பிழைப்பதற்கு ஏற்றதான திட்டங்களையே இந்திய சுதந்திரத்திற்கும், அரசாட்சியில் பங்கும் சம்பந்தம் பெறுவதற்கும் அனுகூலமான கொள்கை என்று பாமர மக்களுக்குச் சொல்லி, நம்பச்செய்து, ஏமாற்றி, அரசாங்கத்தாரையும் ஒப்பச்செய்து அரசாங்கச் சீர்திருத்தம் மூலமாகவும் சட்டம் மூலமாகவும் அவைகளைப் பெற்றுக்கொண்டு, தங்கள் தொழிலில் மிக்க தாராளமாகவும் தைரியமாகவும் அயோக்கியத் தனங்களையும், நாணயக் குறைவுகளையும் உபயோகித்து வந்து, நாளுக்குநாள் அது முதிர்ந்து, இன்று நாட்டிற்கும் சமூகத்திற்கும் இந்தநிலை ஏற்பட்டுவிட்டது. இந்தமாதிரி வக்கீல் ஆதிக்க மானது இன்றைக்கும் நமது பாமர மக்களுக்கு யோக்கியமாகவும், நாணயமாகவும் இருக்க முடியாத வக்கீல்களின் பிரதிநிதித்துவம் தான் பிடிக்கச் செய்கின்றதேயொழிய—உண்மை யான பிரதிநிதித்துவம் ஏற்படுத்திக்கொள்ள யோக்கியதை இல்லாமல் செய்துவிட்டது.

அதுமாத்திரமல்லாமல், ஒழுக்கமும் நாணயமும் உள்ளவர்கள் வக்கீலுக்கும் உத்தி யோகத்திற்கும் அருகதையற்றவர்களாகி விட்டார்கள். குறிப்பாகச் சொல்ல வேண்டு மானால், சிவில் இலாக்கா என்று சொல்லப்படும், அதாவது சொத்துக்களின் உரிமைகளைப் பொறுத்த விவகார இலாக்காக்களை எடுத்துக்கொண்டால், கீழே இருந்து அதாவது ஒரு 'சம்மன் சர்வு' செய்யும் சேவகன் முதல் குமஸ்தா—இலாக்கா உட்பட உள்ள சிப்பந்திகள் வரை, அவர்களது ஒழுக்கமும், நாணயமும் யோக்கியப் பொறுப்பும் மிகமிக மோசமான தாகவே நடைபெற்றுவர வெகு காலமாய் அனுமதிக்கப்பட்டிருக்கின்றதென்றே சொல்ல வேண்டும். இவ்விலாக்காவில், இலஞ்சமும், மாமூலும் மோசமும், அய்க்கோர்ட் ஜட்ஜுகள், இலாக்காத் தலைவர்கள் என்பவர்கள் ஆகிய எல்லோருக்கும் தாராளமாய்த் தெரிந்து வேண்டுமென்றே அனுமதித்தக் கொண்டு இருக்கும் அளவை மனிதனால் சொல்லத் தர முடையவைகள் அல்ல. வக்கீல்கள் தொல்லைகளும், நீதிபதிகள் தொல்லைகளும் ஒரு பாகம் என்றால்—மேற்கண்ட சிப்பந்திகள், நடுத்தர உத்தியோகஸ்தர்கள் ஆகியவர்களின் தொல்லைகள் சகிக்கமுடியாதவையாகும். இந்தத் துறைகளில் சீர்திருத்தமோ ஒழுங்கோ செய்ய இன்றையதினம் இந்த நாட்டில் ஒரு அரசியல்வாதியாவது, ஒரு தேசியவாதியாவது கிடையவே கிடையாது. இதனால், வலுத்தவன் இளைத்தவனை நேருக்கு நேராய் உதைத்துத் தொல்லைப்படுத்தி அவனை ஒழிப்பதோ மிகவும் சுலபமானதும் சட்டபூர்வ மானதுமான காரியமாகவே இருந்துவருகின்றது.

ஆகவே, இந்த முறையானது பணக்காரர்களுக்கு மிகவும் அனுகூலமாய்ப் போய் விட்டதால், அவர்களும்—அதாவது, நம் நாட்டுப் பணக்காரர்களும் சந்தோஷமாகத் தங்கள் முழு பலத்தோடு ஆதரிக்க வேண்டியவர்களாகிவிட்டார்கள்.

உலகத்தார் எல்லோராலுமே ஒழுக்கமற்றதென்றும், நாணயமற்றதென்றும் வெளிப் படையாய்த் தெரியும்படியாக நடந்துகொள்ளும் ஈனத்தன்மையுடைய ஒரு தொழிலில் சட்ட பூர்வமாகவே இந்தப்படி கொள்ளை அடிக்க இடமிருந்தால்—இந்த அரசாங்கத்தின் வேறு எந்த வரியை, யார் செய்யும் காரியத்தை நாம் அக்கிரமம் என்று சொல்லுவது என்பது நமக்கு விளங்கவில்லை. இந்தத் தொழில்களில் இவ்வளவு அக்கிரமம் செய்வதற்கு இவர் களுக்கு எப்படி வழி கிடைத்தது என்று பார்ப்போமானால் :

1. வக்கீல்களும் நியாயாதிபதிகளும் ஒரே கூட்டத்தினராயிருப்பது. அதாவது, வக்கீலே நியாயாதிபதியாகவும், நியாயாதிபதி வக்கீலாவதும் ஆன முறை இருப்பது முதல் குற்றமாகும்.

2. சட்டமானது ஒரு வர்ஜாவர்ஜமில்லாமல் பத்ததி, நிர்ணயம் ஆகியவை இல்லாமல் ஒவ்வொரு மனிதனுடைய இஷ்டமும் ஒரு சட்டமாவதும்; ஒருவனுடைய இஷ்டத்தை மற்றொருவன் இஷ்டப்பட்டால் பின்பற்றலாம், இல்லாவிட்டால் பின்பற்றவேண்டியதில்லை

என்பதும்; மற்றும் தனக்கு இஷ்டமானவர்கள் அபிப்பிராயத்தைப் பின்பற்றலாம் என்பதும்; அவற்றை எல்லாம் விட்டுவிட்டுத் தன் இஷ்டப்படி நடக்கலாம் என்று இருப்பதுமான 'லா ரிப்போர்ட்டு'களை— அதாவது வேறுபல ஜட்ஜுகளின் அபிப்பிராயங்களைச் சட்டமாக ஏற்றுக்கொள்ள வசதி இருக்கும் முறைகளே, சட்ட உலகத்தில்-நீதி உலகத்தில் இவ்வளவு ஒழுக்க ஈனங்களைக் கற்பித்து, நீதிபதிகளையும் வக்கீல்களையும் இவ்வளவு ரூபாய்களைக் கொள்ளை அடிக்க வசதி செய்து கொடுத்து வருகின்றது.

நியாய உலகம் சீர்பட வேண்டுமானால், அதில் ஒழுக்கத்திற்கும் சிரமத்திற்கும் சிறிதாவது இடமிருக்க வேண்டுமானால் முக்கியமாக மேற்கண்ட இரண்டு முறைகளையும் ஒழித்துவிட வேண்டும்.

மேலும், ஏராளமாக வக்கீல்கள் உற்பத்தி செய்யப்படுவதையும் கணக்கில்லாமல் வக்கீல்களைத் தொழில் நடத்த அனுமதி கொடுக்கப்படுவதையும் நிறுத்திவிட வேண்டும்.

இந்தக் காரியங்கள்—அதாவது இந்தமாதிரி வக்கீல்கள் பெருகுவதான காரியங்கள், இந்த நாட்டின் நியாயத்தையும் ஒழுக்கத்தையும் சாந்தியையும் கெடுப்பதற்கு ஏற்பட்ட விஷக்கிருமிகளை வளர்ப்பதற்கே ஒப்பாகும்.

இனி விவகாரமுறையில் உள்ள அக்கிரமங்களைச் சொல்லவேண்டியதில்லை. ஒரு விவகாரம் கொடுத்து 20 வருஷங்களுக்கு மேலாகியும் இன்னமும் முடிவு பெறாத விவகாரங்கள் பல இருக்கின்றனவென்றால் விவகார முறையின் யோக்கியதையைச் சொல்ல வேண்டுமா?

['குடிஅரசு'-தலையங்கம்—10-5-1931]

## 7. ஆட்சி முறை

நமது நாட்டு அரசாங்கத்தாரைத் தனிப்பட்ட முறையில் பார்த்தோமானால் நமது நலத்தைப்பற்றிப் பொறுப்பு ஒரு சிறிதும் அற்றவர்கள் என்பதையும் அவர்கள்—தங்கள் சாதி, தங்கள் நாடு ஆகியவைகளின் நன்மையையே பெரிதும் கவனித்து, அதற்காகவே இந்திய நாட்டின் ஆட்சி நடத்தும் உரிமையை அடைந்து ஆட்சிபுரிந்து வருகின்றார்கள் என்பதையும் நாம் வெகுநாளாய் எடுத்துக்காட்டி வந்திருக்கின்றோம். அந்த ஆட்சியானது— அதாவது பிரிட்டிஷ் ஆட்சியானது, இந்தியாவில் அன்னிய ஆட்சிக்குமுன் வெகுகாலமாய் இருந்து வந்ததாகச் சரித்திரங்களில் காணப்படும் இந்திய மன்னர்களின் ஆட்சியைவிட— இந்திய 'தெய்வ அவதார' ஆட்சிகளைவிட எவ்வளவோ பங்கு மேலானதும் மனிதத் தன்மை பொருந்தியதுமாகும்.

மேலும், இந்தியாவில் இருந்ததாகச் சொல்லப்படும் யோக்கியமான ஆட்சிமுறைகள் என்பவைகள் எல்லாம் இன்றையதினம் நம்மால் சுட்டுப் பொசுக்கவேண்டும் என்று சொல்லப்படும்படியான மனுதர்ம ஆட்சிமுறையாகத்தான் இருந்து வந்ததாகக் காணப்படுகின்றனவே தவிர, 'மனிதத் தன்மை ஆட்சிமுறை'—சமதர்ம ஆட்சி முறை ஒரு நாளும் இருந்ததாக எங்கும் எதிலும் காணப்படவே இல்லை.

இன்னும் பார்க்கப்போனால், பழைய தர்மத்தை அனுசரித்து செய்யப்பட்டதாகச் சொல்லப்பட்டுவரும் இன்றைய இந்தியக் கிரிமினல் சட்டமும், 'இந்து சிவில் லா' சட்டமும் கூட மனுதர்ம (பார்ப்பன) சாஸ்திரத்தை அனுசரித்திருக்கின்றதையும்; அவை மனித தர்மத்தை—சம தர்மத்தைச் சிறிதும் இட்சியம் செய்யப்படாமல் இருந்து வருதையும் பார்த்தால், மேற்காட்டிய தத்துவம் யாவருக்கும் எளிதில் விளங்கும்.

வெள்ளைக்கார ஆட்சிகூட—வெள்ளைக்கார நாட்டில் இரண்டொன்று தவிர மற்றபடி அனேகமாய் மனித தர்மத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருந்தாலும், அவர்களால்

நடத்தப்படும் இந்திய ஆட்சியானது மனித தர்மத்தை அடிப்படையாகக் கொண்டதாயில்லை என்பதையும் நாம் சிறிதும் தயங்காமல் சொல்லுவோம். ஆனால், இந்தப்படியான ஆட்சிக் கொடுமை—அதாவது, மனித தர்மத்திற்கு விரோதமான–சமதர்மமற்ற ஆட்சிக் கொடுமைக்கு வெள்ளைக்காரர்களே பொறுப்பாளிகள் அல்ல வென்பதையும் நாம் எங்கும் தைரியமாய்ச் சொல்லத் தயாராயிருக்கின்றோம்.

ஏனெனில், வெள்ளைக்காரர்கள் இந்த நாட்டில் தங்களது ஆட்சி என்றும் நிலைத்திருக்கவும், இந்த நாட்டுச் செல்வத்தைத் தாராளமாய்த் தங்கள் நாட்டுக்குக் கொள்ளை கொண்டு செல்லவும் உத்தேசித்து இந்த நாட்டில் யாருடைய தயவு தங்களுக்கு இருந்தால் தங்களது மேற்படி எண்ணம் தாராளமாய் நிறைவேறுமோ அவர்களது தயவைப் பூரணமாய்ச் சம்பாதிக்கவேண்டியே, அவர்கள் மனித தர்ம ஆட்சி என்பதை அடியோடு மறந்து–முழுவதையும் கைவிட்டு 'மனு தர்மப்படி' ஆட்சி முறையை வகுத்து நடத்தவேண்டியவர்களானார்கள். இன்றைய தினமும் இந்த நாட்டின் ஆட்சிமுறை மனித தர்மப்படி நடக்க வேண்டுமானால், மனுதர்ம ஆட்சியை அடியோடு ஒழிப்பதற்கு இந்திய மக்கள் சம்மதப் பட்டால் ஒழிய ஒரு நாளும் இந்த நாட்டில் மனித தர்ம ஆட்சி சாத்தியப்படவே படாது.

இன்னும் தைரியமாயும் வெளிப்படையாயும் சொல்லவேண்டுமானால் இன்றைய வெள்ளைக்கார ஆட்சியோ ஆதிக்கமோ ஒழியவேண்டும் என்று சொல்லுகின்றவர்களில் திரு. காந்தி அவர்கள் உட்பட 100-க்கு 90 பேர்களின் உள் எண்ணமெல்லாம், மனித தர்ம ஆட்சியை இந்த நாட்டில் தலைகாட்டச் செய்யாமல் இருக்கச் செய்யவும், மனு தர்ம ஆட்சியை நிலைநிறுத்தவும் செய்யப்படும் முயற்சியில்தான் உள்ளது என்று சொல்ல வேண்டும். இதைப் பாமர மக்கள் சரிவர உணராமல் மோசம்போய்க் கொண்டிருப்பதனால் இந்த நிலை வளர்ந்துகொண்டேயிருக்கின்றது.

உதாரணமாக, மனுதர்மத்திற்கு எதிரானதாகக் கருதப்பட்ட இந்துமத பரிபாலன சட்டமும், தேவதாசிகள் ஒழிப்புச் சட்டமும், குழந்தை மணத் தடுப்புச்சட்டமும் செய்யப்பட்ட—புறப்பட்ட காலத்தில் அதற்கு எதிராய் ஏற்படுத்தப்பட்ட எதிர்ப்புகள் எல்லாம், 'இச் சட்டங்கள் செய்யப்படுவதே வெள்ளைக்கார ஆட்சியின் கொடுமை' என்பதாக மக்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டதும் மக்கள் அதை நம்பி அச் சட்டங்களுக்கு எதிராய் இருந்ததும் கடைசியாக, 'சர்க்கார் தாசர்கள்', 'தேசத் துரோகிகள்', அரசாங்கத்தார் ஆகியவர்கள் தயவில் இச் சட்டங்கள் நிறைவேற்ற முடிந்ததும், முடிந்த பிறகும் சரியானபடி அமுலில் இல்லாததுமே போதிய காரணங்களாகும்.

ஆகவே, இந்தியாவுக்கு ஏதாவது அரசியல் மாறுதல் ஏற்படுத்த வேண்டுமானால் அதில் மனுதர்மக் கொள்கைகள், வருணாசிரமக் கொள்கைகள், பார்ப்பன ஆதிக்கக் கொள்கைகள் ஆகியவைகள் இல்லாத ஆட்சி ஏதாவது ஏற்படக்கூடும் என்கின்ற நம்பிக்கை சிறிதாவது இருந்தால்தான் இந்த ஆட்சியை மாற்ற முயற்சிக்கலாமே ஒழிய, மற்றபடி செய்யும் அரசியல் முயற்சிகள் பாமர மக்களின் தற்கொலை முயற்சிகளேயாகும். இந்த இரகசியத்தை நமது மக்களில் பலர் அறிந்திருந்தும்கூட அவர்களில் பலரைத் தற்கால நிலைமையானது மனுதர்மத்தை ஸ்தாபிக்கும் அரசியல் முயற்சியில் கலந்துகொள்ளவே தூண்டுகிறது.

['குடிஅரசு'–தலையங்கம்—17-5-1931]

## 8. இந்திய சுதேச சமஸ்தானங்கள்

இவ்வாரம் சிம்லாவில் நடந்த இந்திய சட்டசபைக் கூட்டத்தில் இந்திய சுதேச சமஸ்தானங்களின் பாதுகாப்புக்காக என்று, 'இந்தியாவில் அரசர் பெருமானின் சர்வாதிகாரத்துக்கு உட்பட்ட சமஸ்தானங்களின் பாதுகாப்புச் சட்டம்' என்பதாக ஒரு புதிய சட்டம் அரசாங்கத்தாராலேயே கொண்டு வரப்பட்டிருக்கிறது.

இந்தச் சட்டம் இப்போது கொண்டுவருவதற்குள்ள அவசியத்தை இந்திய அரசாங்க ஹோம் மெம்பர் எடுத்துச் சொல்லும்போது, 'இந்தியாவில் அரசர்பெருமானின் சர்வாதிகாரத்திலுள்ள சமஸ்தானங்களின் நிர்வாகத்தைக் கவிழ்க்கவோ, அச் சமஸ்தானங்கள் விஷயமாய்ப் பிறர் துவேஷங்கொள்ளும்படி செய்யவோ செய்யப்படும் முயற்சிகளைத் தடுக்க இச்சட்டம் செய்யப்படுகின்றது' என்று சொல்லியிருக்கிறார்.

சுதேச சமஸ்தானங்கள் என்பவைகள் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவுக்கு வந்த காலம் முதற்கொண்டே இருந்துவருபவையாகும்; சில அதற்கு முன்பிருந்தே இருந்து வருவனவுமாகும். அப்படியிருக்க, இத்தனை காலம் பொறுத்து இப்பொழுது அவைகளைக் காப்பாற்ற என்பதாகப் புதிய சட்டம் ஒன்று ஏன் செய்யப்படவேண்டும் என்பதைக் கவனித்தால், அதில் ஏதோ ஒரு இரகசியம் இருக்கவேண்டுமென்பது விளங்காமல் போகாது. இதுபோலவேதான், சுமார் 5, 6 வருஷங்களுக்கு முன்னால், 'மதத் தலைவர்களைக் காப்பாற்ற' என்று ஒருசட்டம் செய்யப்பட்டது. மதங்களும், மதத் தலைவர்களும் ஏற்பட்டு ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஆகி இருக்கலாம். அப்படியிருக்க, 1927-ம் வருஷத்தில் மேற்கண்டபடி, 'மதத் தலைவர்கள்மீது துவேஷம் உண்டாகும்படியோ, ஒரு மதத்தைச் சேர்ந்தவர்களுக்கு மனவருத்தம் உண்டாகும்படியோ செய்யப்படும் காரியங்களைத் தடுக்க' என்பதாக ஒரு சட்டம் செய்துகொண்டார்கள். இது, சமஸ்தான ஆதிக்கங்களைக் காப்பது போலவே மத ஆதிக்கத்தைக் காப்பாற்றவே செய்யப்பட்டதாகும். ஆனால், அந்தக் காலத்திலேயே இதைப்பற்றி நாம், 'மதக் கொள்கைகள் அறிவுக்கும், மனிதனுடைய சுயேச்சைக்கும் விரோதமாய் இருக்குமானால் அதை ஆட்சேபிக்கவோ, கண்டிக்கவோ எவருக்கும் உரிமை இருக்கக்கூடாது என்று சட்டம் செய்வதானது பகுத்தறிவைத் தடுத்து மூடநம்பிக்கையையும், அடிமைத்தனத்தையும் வளரச்செய்வதாகும்' என்று சொல்லிப் பலமாக ஆட்சேபித்திருந்தோம். அதுசமயம் இந்தியா முழுவதிலுமே நம்மைத் தவிர வேறு யாரும் இவ்விதமான கொடுங்கோன்மை அடக்குமுறைச் சட்டத்தை ஆட்சேபித்ததாகத் தெரியவில்லை. இந்திய சட்டசபையிலுள்ள எல்லா அங்கத்தினர்களும் அச் சட்டத்தை ஆதரித்தார்கள் என்றாலும் நம் ஆட்சேபணையின் பயனாக ஏதோ சில மாறுதல்கள் மாத்திரமே செய்யப்பட்டது.

ஒருவரையொருவர் தூஷித்தால், ஒருவர்மேல் ஒருவருக்குத் துவேஷம் உண்டாகும்படி நடந்துகொண்டால் அதைத் தண்டிக்க ஏற்கனவே சட்டம் இருந்து வந்தும் திடீரென்று 'மதத் தலைவர் பாதுகாப்பு' சட்டத்தை உண்டாக்கி விட்டார்கள். அந்தப்படி ஒருசட்டம் செய்ய வேண்டுமென்று அந்தக் காலத்தில் சர்க்காருக்கு முதன்முதலில் யோசனை சொன்னவர் ஒரு சென்னை மாகாணத்துத் தமிழ்நாட்டுப் பார்ப்பனரேயாகும். சுயமரியாதை இயக்கத்தின் போக்கைப்பற்றி அனேக பார்ப்பனர்கள் அக் காலத்தில் பத்திரிக்கையில் ஓலமிட்டதைப் பார்த்தே ஒரு சட்டநிபுணப் பார்ப்பனர், 'ரங்கிலா ரசூல்' என்ற துண்டுப் பிரசுரத்தைச் சாக்காக வைத்து, இம் மாதிரி யோசனை சொன்னவுடன் அரசாங்கத்தார் இதே சாக்கென்று ஒரு வாரத்தில் சட்டம் கொண்டுவந்து எவ்வித எதிர்ப்புமின்றி நிறைவேற்றிக்கொண்டார்கள்.

போதாக்குறைக்கு இப்பொழுது இந்திய சுதேச சமஸ்தானங்களைப்பற்றி யாரும் அந்த சமஸ்தானங்கள் மீதோ, சமஸ்தானாதிபதிகள் மீதோ துவேஷம் உண்டாகும்படி பேசவும், எழுதவும் கூடாது என்பதாக ஒரு சட்டம் கொண்டுவந்திருக்கிறார்கள். இதை எந்தத் தேசியவாதிகளும் எதிர்த்துச் சரியாக ஆட்சேபிப்பதாகத் தெரியவில்லை.

ஒரு தேசத்தை, அல்லது ஒரு சமூகத்தை ஒருவர் ஆட்சி புரிவது என்பது அந்தத் தேசத்து மக்களின் நன்மைக்காகவே ஒழிய, ஆட்சிபுரிவோரின் நன்மைக்காக அல்லவென்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட நியாயமாகும். அப்படியிருக்க, ஒருவருடைய நன்மைக்காகச் செய்யப்படும் ஆட்சியில் உள்ள குறைகளைத் திருத்தவோ,

மாற்றவோ ஒரு தேச மக்களுக்கோ, ஒரு சமூக மக்களுக்கோ உரிமை இல்லை என்று சொல்வதானால் அந்த ஆட்சியை மனிதத்தன்மை கொண்ட ஆட்சி என்று எப்படிச் சொல்லிக்கொள்ள முடியும்? ஒரு ஆட்சியின் குறைகளை, கொடுமைகளை உண்மையாய் உள்ளபடி வன்மையாய் எடுத்துச் சொல்லும்போது குற்றமிருக்கிறவர்கள் மீது—அதாவது குறை ஏற்படும்படியான ஆட்சி செலுத்துபவர்கள்மீது யாருக்கும் அதிருப்தியோ, துவேஷமோ, வெறுப்போ உண்டாவது இயற்கையேயாகும். அப்படியிருக்க, ஒருவர்மீது துவேஷம் உண்டாகும்படி ஒருவர் பேசினால், அது குற்றமென்றால், யார் என்ன செய்தாலும், எப்படி ஆட்சியை நடத்தினாலும் பேசாமல் சகித்துக் கொண்டு அடங்கி இருக்க வேண்டுமென்பதுதான் அதன் கருத்தாகும். அனாவசியமாய், பொய்யாய் ஒருவர்மீது துவேஷம் உண்டாகும்படி ஒருவர் நடந்துகொண்டால் அதற்கு ஏற்கனவே சட்டமிருந்து வருகின்றது என்பதை மேலே காட்டி இருக்கிறோம். அது போதாது என்று இப்போது தனிச்சட்டம் செய்வதானது யோக்கியமான முறையல்லாமல், அடக்குமுறைமூலம் மக்களை அடக்கி ஆள சவுகரியம் செய்து கொள்வதேயல்லாமல் இதை நியாயமென்றோ, நல்ல அரசாட்சி முறையென்றோ சிறிதும் சொல்லமுடியாது.

இந்தியாவிலுள்ள பெரும்பான்மையான சுதேச சமஸ்தானங்களின் யோக்கியதையானது அனேக விஷயங்களில் பிரிட்டிஷ் இந்திய ஆட்சியைவிட அனேக மடங்கு மோசமானதென்று தைரியமாய்ச் சொல்லுவோம். தெளிவாய்ச் சொல்லவேண்டுமானால், அனேக சுதேச சமஸ்தானங்களின் ஆட்சியானது கொள்ளைக் கூட்டத்தாரின் காட்டு ராஜாங்க ஆட்சிபோல் நடந்து வருகிறது.

குடிகளுக்காக, குடிகளின் நன்மைக்காக நாம் ஆட்சி செலுத்துகின்றோம் என்கின்ற உணர்ச்சியே இல்லாமலும், உணர்ச்சி ஏற்படுவதற்கே இடமில்லாமலும் அனேக சமஸ்தானங்கள் இருந்து வருகின்றன.

இந்தியாவில் ஏறக்குறைய மூன்றிலொரு பங்கு விஸ்தீரணத்துக்கு மேலாகவே சுதேச சமஸ்தான ஆட்சிகளின்கீழ் இருந்து வருகின்றது. அதாவது, இந்தியாவின் மொத்தப் பரப்பு (விஸ்தீரணம்) 17,73,000 சதுர மைலாகும். இதில் 6,75,000 சதுர மைல் விஸ்தீரணமுள்ள தேசம் சுதேச சமஸ்தானங்களின் ஆட்சியின்கீழ் ஆளப்பட்டு வருகின்றது.

சுமார் 8,00,00,000 (எட்டுக்கோடி) இந்திய ஜனங்கள் அவ்வாட்சியில் இருந்து வருகின்றனர்.

மேற்கண்ட 6¾ இலட்சம் சதுர மைல் விஸ்தீரணத்தையும் 8 கோடி ஜனத்தொகையையும் கொண்டதான பரப்புகள் 562 இராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டு, அவை 562 சுதேச சமஸ்தானங்களாகி, 562 அரசர்களால் ஆளப்பட்டு வருகின்றன. இந்த இராஜ்யங்களில் எல்லாம் பெரியது ஹைதராபாத் இராஜ்யமாகும். இதற்கு விஸ்தீரணம் 82700 சதுர மைல். இதன் ஜனத்தொகை 1,25,00,000. இதன் மொத்த ரெவின்யூ வருமானம் 6,50,00,000 (ஆறரைக்கோடி) ரூபாயாகும். இதில் இராஜாவாகிய ஹைதராபாத் நவாப்பு தன் சொந்த செலவிற்காக எடுத்துக்கொள்ளும் தொகை 50,00,000 (அரைக்கோடி) ரூபாயாகும். இது தவிர அந்த நவாப்புக்கு 400 கோடி ரூபாயுள்ள சொந்த சொத்திலிருந்து வரும் வரும்படி வருஷம் ஒன்றுக்கு ஒரு கோடி ரூபாயாகும். ஆகவே, வருஷம் ஒன்றுக்கு ஒன்றரைக் கோடி ரூபாயை வரும்படியாக உள்ள ஒரு பெரிய முதலாளியால் (பூஷ்வாவால்) ஹைதராபாத் தேசம் ஆளப்பட்டு வருவதாகும்.

மற்ற சமஸ்தானங்களில் சுமார் 40 சமஸ்தானங்கள்தாம் வருஷம் ஒன்றுக்கு மொத்த ரெவின்யூ வருமானம் 10 இலட்ச ரூபாய்க்கு மேற்பட்டவைகளாகும்; மற்றவைகள் எல்லாம் அதைவிடக் குறைந்த வரும்படி உடையவைகளேயாகும். சுமார் 400 சமஸ்தானங்கள்

வருஷம் ஒன்றுக்கு ரெவின்யூ வருமானம் ஒரு இலட்ச ரூபாயைவிடக் குறைந்த வருமான முடையவைகளாகும். இன்னும் விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால், இவற்றுள் 15 சமஸ்தானங்கள் ஒரு மைல் விஸ்தீரணத்துக்குக்கூட குறைந்த பரப்பளவுள்ளவைகளாகும். மூன்று சமஸ்தானங்களில் ஒவ்வொன்றிலும் 100 பிரஜைகளைவிடக் குறைவாக இருக்கின்றார்கள். அய்ந்து சமஸ்தானங்களுக்கு ஒவ்வொன்றின் வருஷ வரும்படி ரூபாய் 100 வீதம் கூட இல்லாமல் இருக்கிறது.

உதாரணமாக, அவாச்சார் (Avachar) என்கின்ற சமஸ்தானம் 1 மைல் விஸ்தீரணமும், 32 பிரஜைகளும் 72 ரூபாய் வருஷ ரெவின்யூ வருமானமுடைய தேசமாகும்.

இப்படிப்பட்ட இராஜாக்கள் தங்கள் தேச ரெவின்யூ வரும்படியில் 12-ல் ஒரு பாகம் முதல், சரிபகுதி வரையில் தங்கள் சொந்த செலவுகளுக்கு எடுத்துக்கொண்டு, மீதியையும் தங்கள் இஷ்டத்திற்கு ஏற்றபடியே பிரஜைகளுக்கென்று செலவழித்துக்கொண்டு இருந்து வருகிறார்கள்.

ஒவ்வொரு சுதேச சமஸ்தான இராஜாக்களின் யோக்கியதைகளை, அதாவது இந்தூர், ஆள்வார், மிஸ்டர் 'A' முதலிய இராஜாக்களின் யோக்கியதையை நினைத்துப் பார்ப்போமேயானால், அவர்களது ஆட்சியின்கீழ் மக்கள் குடிகளாய் வாழ்வதைவிட மானங்கெட்ட வாழ்க்கை வேறு ஒன்றும் இல்லை என்றே தோன்றும். உலகில் உள்ள கூடா ஒழுக்கங்கள் எல்லாம் ஒருருவாய்த் திரண்டுவந்தது போன்ற அரசர்கள் எத்தனையோ பேர்கள் நமது சுதேச சமஸ்தானங்களில் இருந்து வருகிறார்கள் என்பது யாரும் அறியாததா?

இவர்களில் சில அரசர்கள் தங்கள் பெண்சாதிகளுக்குச் செலவிடும் அளவில் மூன்றில், நான்கில் ஒரு பாகம் தொகைகூட, தனது பிரஜைகளின் கல்விச் செலவு செய்யாதவர்களும்; தங்களது மோட்டார் கார்களுக்காகச் செலவு செய்யும் தொகையில் பகுதி அல்லது 3-ல் ஒரு பாகம்கூட தனது தேசப் பிரஜைகளின் சுகாதாரம், வைத்தியம் ஆகியவைகளுக்குச் செலவு செய்யாதவர்களுமாய் இருக்கிறார்கள் என்பதற்குத் தகுந்த ஆதாரங்கள் இருக்கின்றன. சுதேச சமஸ்தானப் பிரஜைகளுக்கு அவர்கள் தங்கள் தேச வரும்படியில் இத்தனையில் ஒரு பாகந்தான் தன் சொந்த செலவுக்கு எடுத்துக்கொள்ளலாம்; இத்தனை பெண்டாட்டிகள் தாம் கட்டிக்கொள்ளலாம் என்பதான நிர்ணயமே இல்லாதவர்களாய் இருக்கிறார்கள்.

'இந்திய சக்கரவர்த்தியின் சர்வாதிகாரத்துக்கு உட்பட்ட சமஸ்தானங்கள்' என்று வெகு பெருமையாய்ப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் சொல்லிக்கொள்ளுகிறார்களேயொழிய, அந்தச் சர்வாதிகாரத் தன்மையை ஒரு சிறிதாவது இந்திய சமஸ்தான அரசர்களின் ஒழுக்கத்துக்கோ, அவர்களது வாழ்க்கை நிலையின் தன்மைக்கோ, குடிகளின் க்ஷேமத்தைக் கவனிக்க வேண்டிய அவசியத்துக்கோ செலவழித்ததாகச் சொல்லுவதற்கு இடமே காண முடியாமல் இருந்துவருகின்றது. இந்திய சமஸ்தான அரசர்களில் பெரும்பான்மையானவர்களுடைய நடவடிக்கையும், யோக்கியதையும் அரசாட்சி முறையும் பார்த்த ஒருவன் எந்த விதத்தில் அவர்கள் நிலையை வெளியில் எடுத்துச் சொல்லாமல் இருக்கவோ அவர்களை ஒழிக்க முயற்சி செய்யாமலிருக்கவோ முடியுமென்பது நமக்கு விளங்கவில்லை. 562 பேர்களில் யாரோ ஒன்று இரண்டு சமஸ்தான அரசர்கள் ஒருசமயம் 'யோக்கியர்களாக' இருந்தாலும் இருக்கலாம்; அதுவும் 'கூரை வீட்டின்மீது இருந்துகொண்டு கொள்ளிக்கட்டையை எடுத்து விளையாடிக் கொண்டிருக்கின்றானே அவனே எல்லோரிலும் யோக்கியன்' என்று சொல்லுவது போன்ற யோக்கியமாய் இருந்தாலும் இருக்கலாம். இதற்காக அரசர் பெருமானின் சர்வாதிகாரத்துக்கு உட்பட்ட 562 'சமஸ்தான நிர்வாகத்தைப்பற்றித் துவேஷங் கொள்ளும்படி யாரும் செய்யக்கூடாது' என்று சட்டம் செய்வது என்றால், லார்டு வெல்லிங்டன்துரைமகனாரின் அடக்கு முறைச்சட்டம் என்பவைகளிலெல்லாம் இதுவே தலைசிறந்த உண்மையான அடக்குமுறைச் சட்டம் என்றே சொல்லவேண்டியிருக்கிறது. பிரிட்டிஷ்

இந்தியாவின் வரி, ஆள் ஒன்றுக்கு 6 ரூபாய் வீதம் ஆகின்றது என்றால் அனேக சுதேச சமஸ்தானங்களின் வரி ஆள் ஒன்றுக்கு 20 ரூபாய் வீதம் வசூலிக்கப்படுகின்றது. ஆள் ஒன்றுக்கு 6 ரூபாய் வீதம் வரிவசூலிக்கும் பிரிட்டிஷ் இந்தியாவில், படிப்புக்காக நபர் ஒன்றுக்கு 8 அணா வீதம் செலவழிக்கப்படுகின்றது என்றால், ஆள் ஒன்றுக்கு 20 ரூ. வீதம் வரி வசூலிக்கப்படும் சில சுதேச சமஸ்தானங்கள், படிப்பு விஷயத்தில் ஆள் ஒன்றுக்கு ஆறு அணா வீதமும் 3 அணா வீதமும்தான் செலவு செய்கின்றனர். இவர்கள் பெயரை வேண்டு மானாலும் பொது நலத்தை உத்தேசித்து வெளியிட நமக்கு ஆட்சேபணை இல்லை. ஆதலால் முறையே நவநகர், கட்சு முதலாகிய சமஸ்தானங்களாகும். இதுபோல் இன்னும் பல சமஸ்தானங்கள் இருந்து வருகின்றன.

தவிர, இந்திய சுதேச சமஸ்தானத்தில் உள்ள எல்லா இராஜாக்களுமே தங்கள் சொந்த செலவுக்கென்று எடுத்துக்கொள்ளும் தொகையானது, அய்ரோப்பிய அரசர்களும், சக்கரவர்த்திகளும் எடுத்துக்கொள்ளும் விகிதாச்சாரத்தைவிட 60 பங்கு, 70, 100, 200, 1000 பங்கு அதிகமாக எடுத்துக்கொள்ளுகிறார்கள். உதாரணமாக, அய்ரோப்பாக் கண்டத்தில் டென்மார்க் தேசத்து அரசருக்கு இருபத்தி மூன்றரைக்கோடி ரூபாய் வரி வருஷ வருமானம். நமது பிக்கானியர் சமஸ்தான அரசருக்கு வருஷம் 60 இலட்சம் ரூபாய் வரி வருமானம். ஆனால், டென்மார்க்கு தேச அரசர் வருஷம் 7 இலட்சம் ரூபாயே தனது சொந்த செலவுக்கு எடுத்துக்கொள்ளுகிறார். பிக்கானியர் தேசத்து அரசர் வருஷம் பதின்மூன்றரை (13½) இலட்ச ரூபாய் தனது சொந்த செலவுக்கு எடுத்துக்கொள்ளுகிறார். இதை விகிதாச்சாரம் பார்த்தால் டென்மார்க்கு அரசர் தனது தேச வருமானத்தில் 350-ல் ஒருபாகம் எடுத்துக் கொள்ளுகிறார்; பிக்கானியர் சமஸ்தான அரசர் தனது தேச வரும்படியில் 4-ல் ஒருபங்கு தனது சொந்தச் செலவுக்கு எடுத்துக்கொள்ளுகிறார் என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

பொதுவாகப் பார்க்கப்போனால், அய்ரோப்பிய அரசர்கள் தங்கள் வரும்படிக்கும், அவர்கள், தங்கள் சொந்தச் செலவுக்கு எடுத்துகொள்ளும் தொகைக்கும்; இந்திய சமஸ்தான அரசர்கள் வரும்படிக்கும் அவர்கள் தங்கள் சொந்தச் செலவுகளுக்கு எடுத்துக் கொள்ளும் தொகைக்கும் வித்தியாசத்தையும் மற்ற விஷயங்களையும் கணக்குப் பார்த்தால், இந்த சமஸ்தானங்களையும் சமஸ்தானாதிபதிகளையும் பாதுகாக்கச் சட்டம் வேண்டுமா அல்லது மாற்றவோ, கவிழ்க்கவோ சட்டம் வேண்டுமா என்பது நன்றாய் விளங்கும்.

அதற்காகவே சில புள்ளி விவரங்கள் கீழே தருகிறோம். இது சர்க்கார் கணக்கே யாகும். அதாவது :—

தனது தேச மொத்த வரும்படியில் இங்கிலாந்து தேச ஜார்ஜ் அரசர் 1600-ல் ஒரு பங்கும், பெல்ஜியம் அரசர் 1000-ல் ஒருபங்கும், நார்வே, அரசர் 700-ல் ஒருபங்கும், நெதர் லேண்டு அரசர் 600-ல் ஒருபங்கும், இட்டாலி அரசர் 500-ல் ஒருபங்கும், ஜப்பான் சக்கரவர்த்தி 400-ல் ஒருபங்குந்தான் தங்கள் சொந்தச் செலவுக்குப் பெறுகிறார்கள்.

ஆனால், இந்திய சமஸ்தானாதிபதிகளோ என்றால், தங்களது மொத்த ரெவின்யூ வரும்படியில் திருவாங்கூர் மகாராஜா 17-ல் ஒரு பாகமும், மைசூர் மகாராஜா 14-ல் ஒரு பாகமும், ஹைதராபாத் நவாப் 13-ல் ஒரு பாகமும், பரோடா மகாராஜா 12-ல் ஒரு பாகமும், காஷ்மீர் மகாராஜா 5-ல் ஒரு பாகமும், பிகானீர் மகாராஜா 4-ல் ஒரு பாகமும், இன்னும் சிலர் 3-ல் ஒரு பாகமும், சிலர் 2-ல் ஒரு பாகமும் தங்கள் சொந்தச் செலவுக்கு எடுத்துக் கொண்டு, அக்கிரமமான போக போக்கியங்களை அனுபவிக்கிறார்கள். ஆதலால், இந்திய சமஸ்தானாதிபதிகளின் ஆட்சிகளென்பவை ஒரு 'பக்கா' முதலாளித் தன்மை ஆட்சிகள் என்பதில் யாருக்குமே ஆட்சேபணை இருக்காது. இவர்களுக்கு ஏழை மக்கள், சரீரத்தால் கஷ்டப்பட்டு வாழும் தொழிலாளி மக்கள் ஆகியவர்களின் வாழ்க்கையைப்பற்றியோ அவர் களது மனிதத் தன்மையைப்பற்றியோ ஒரு சிறிது ஞாபகமாவது, கவலையாவது இருக்கவே இருக்காது; இருக்க இடமுமில்லை.

இந்த இராஜாக்கள் என்பவர்கள் ஒருவித சுகபோகங்களை அனுபவிக்கவே தோன்றியவர்கள் என்பதும், அவர்களது பிறப்பும், பதவியும் ஏதோ முன்ஜென்ம கர்ம வசத்தால், புண்ணியத்தால், பூஜாபலத்தால் கிடைத்தது என்பதும் தவிர—மற்றபடி அவர்களுக்கு ஆட்சியிலிருக்கும் பொறுப்பு என்ன? தங்கள் நடவடிக்கைகள் எப்படி இருக்க வேண்டும்? என்பனவாகியவைகள் தெரியவே தெரியாது. இந்த இலட்சணத்தில் இந்த சுதேச சமஸ்தானாதிபதிகளான இராஜாக்கள் தெய்வ அம்சம் பொருந்தியவர்களென்றும், விஷ்ணு அம்சமே உலகில் அரசனாய் அவதரிக்கின்றது என்றும் சொல்லப்படுவதோடு ஒவ்வொரு இராஜாங்கமும் ஒவ்வொரு கடவுளுக்குச் சொந்தமானதென்றும், அக் கடவுளின் பிரதிநிதிகளாகவோ தாசர்களாகவோ இருந்து இந்த இராஜ்யங்கள் அரசாளப்படுகின்றன என்றும் சொல்லிக்கொள்ளவும் படுகின்றன.

இந்தப்படியெல்லாம், ஊரார் உழைப்பில் வயிறு வளர்க்கும் சோம்பேறிக்கூட்டப் பார்ப்பனர்கள் கற்பித்து, பிறருக்கும் அந்தப்படி பிரச்சாரமும் செய்து எப்படிப்பட்ட கொடுங்கோன்மை ஆட்சியிலும் தாங்கள் மாத்திரம் நோகாமல், சரீரத்தால் எவ்வித பாடும் படாமல் சோம்பேறி வாழ்க்கையை நடத்திக்கொண்டு, அவ்வயோக்கிய அரசர்களுக்கு அடுத்த படியில் இருந்து ஆதிக்கம் செலுத்தி வருகிறார்கள்.

நமது தேச பக்தர்களுக்கோ, தேசியவாதிகளுக்கோ, தேசியத் தலைவர்களுக்கோ இவைகளை எல்லாம் பற்றி ஒரு சிறிதுகூடக் கவலையே கிடையாது. அவர்களுடைய கவலையெல்லாம் ‘அன்னியன் ஏன் நமது தேசத்தை ஆளுகிறான், வைசிராயிக்கு ஏன் இவ்வளவு சம்பளம், இவ்வளவு அதிகாரமேன்!’ என்கின்ற பல்லவியும் பேச்சுந்தான் தெரியுமே ஒழிய வேறு ஒன்றையும் பற்றிய விவரமும் தெரியாது; கவலையே கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். தேசியப் பத்திரிக்கைகளோ பெரிதும் இம் மாதிரி இராஜாக்களிடம் பணம் வாங்கிக்கொண்டு அவர்களையும், அவர்களது நிர்வாகத்தையும் புகழ்ந்து எழுதுவதும், பணம் கொடுக்காதவனை வைவதும் தவிர வேறு ஒரு கவலையுமில்லை.

மேற்கண்ட யோக்கியதை கொண்ட இராஜாக்கள் தங்கள் தங்கள் சமஸ்தானங்களைப் பாழாக்கி அந் நாட்டு மக்களை மிருகங்களாகப் பாவித்து அக்கிரம, அனியாய ஆட்சிபுரிவது உலகம் அறிந்திருந்தும், போதாக்குறைக்கு இந்த ‘தர்ம ராஜாக்களை’ பிரிட்டிஷ் இந்திய ஆட்சியிலும் கொண்டுவந்து கலக்கி—அதுவும் எப்படி என்றால் அவர்களைப்பற்றியும், அவர்கள் தேசத்தைப்பற்றியும், அவர்கள் நிர்வாகத்தைப்பற்றியும் பேச நமக்கு எவ்வித அதிகாரமில்லாமலும், நம் தேச ஆட்சியின் தலையில் அவர்கள் வந்து உட்கார்ந்துகொண்டு ஆதிக்கம் செலுத்தும்படியாகவும் கொள்கை கொண்ட சமஷ்டி (பிடரல்) ஆட்சியைக் காங்கிரசும், அதன் ஏக தலைவரான ‘மகாத்மா’க்களும் ஒப்புக்கொண்டு, அதைப்பற்றி ஆட்சேபிப்பதில்லை என்கின்ற நிபந்தனையின்மீது வட்டமேஜை மகாநாட்டில்போய் கலந்துகொண்டார்களென்றால், தேசியத்தின் அயோக்கியத்தனத்துக்கும், சூழ்ச்சிக்கும் வேறு என்ன அத்தாட்சி வேண்டும் என்பது நமக்குத் தோன்றவில்லை.

பழைய பழக்க வழக்கங்களையும், மதக் கொள்கைகளையும் வருணாசிரமத்தையும் காப்பாற்றும் விஷயத்தில் வெள்ளைக்கார அரசர்கள் அசார்சமாய் இருந்துவிடுவார்கள் என்கின்ற கருத்துக்கொண்டே காங்கிரசுக்காரர்கள் அம் மகாநாட்டுக்குச் சென்றார்கள் என்றும், நமது நாட்டுப் பார்ப்பனர்கள் இந்திய ஆட்சியில் கருப்பு சமஸ்தானாதிபதிகளையும் கொண்டுவந்து கலக்கினதுமான காரியங்கள் செய்தார்கள் என்றும் இந்திய ஏழை மக்கள், தொழிலாளி மக்கள் ஆகியவர்களின் கிளர்ச்சிகள் வலுத்துவிடுமேயானால் அதை அடக்க அதிகச் சிரமப்பட்டு நாம் ஏன் கெட்ட பேரை வாங்கிக்கொள்ள வேண்டும் என்று கருதி கருப்பு சமஸ்தானாதிபதிகள் மூலமே அடக்கச் செய்யலாம் என்கின்ற சூழ்ச்சி மீதே பிரிட்டிஷாரும் இந்தத் தந்திரம் செய்திருக்கிறார்கள் என்றுந்தான் நாம் நினைக்கவேண்டி இருக்கிறது.

எப்படி இருந்தபோதிலும், பிரிட்டிஷ் முதலாளித்தன்மை ஆட்சியும், அவர்களது ஏகாதிபத்திய ஆணவமும் ஒழிவதற்கு முன், இந்திய சமஸ்தான முதலாளித்தன்மை ஆட்சியும் அவர்களது பொறுப்பற்ற கொடுங்கோன்மை, கூடா ஒழுக்க ஆட்சியும் அழிந்து மறைந்து ஒழியவேண்டியது அவசரமும் அவசியமுமான காரியமாகும் என்பதே நமதுஅபிப்பிராயம். அப்படி இருக்க, இப்போது அவர்களையும் சமஸ்தானங்களையும் காப்பாற்றப் புதிதாக ஒரு சட்டம் செய்வது மிகமிகக் கொடுமையான காரியம் என்றே சொல்லுவதுடன், இச்சட்டம் அச் சமஸ்தானாதிபதிகளை, 'இன்னும் என்ன வேண்டு மானாலும் செய்யுங்கள்' என்று சொல்லி லைசென்சு அனுமதிச்சீட்டு கொடுத்தது போலவும் ஆகிறது என்பதே நமது அபிப்பிராயம்.

['குடிஅரசு'–தலையங்கம்—3-9-1933]

## 9. நமது வெற்றி

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

பிரிட்டனிலோ, பைபிளிலோ, இங்கிலாந்திலோ, அவர்கள் இராஜரீகத்திலோ பறையன், சூத்திரன், பிராமணன் இருக்கிறார்களா? இல்லையே. அப்படி இருக்க இங்கு சட்டம், நடப்பு, கோவில், குளம், உண்ணல், அருந்தல், கொடுத்தல், கொள்ளல், செல்வம், தொழில், கல்வி, கடவுள் எல்லாவற்றிலும்—பிராமணன், சூத்திரன், பறையன் இருக்கக் காரணமென்ன?

வெள்ளை ஆரியர் (பிரிட்டிஷார்), இந்தப் பேதத்தைக் காப்பாற்றிக் கொடுப்பதாக மஞ்சள் ஆரியர் (பார்ப்பனர்)களுக்கு வாக்குறுதி கொடுத்து, இங்கு தங்கள் சுரண்டலைப் பலப்படுத்திக்கொண்டார்கள். அதற்குக் குறைவில்லாத அளவும், அதிகமாகவும், நம்மை மேலும் சுரண்டிக்கொள்ள மஞ்சள் ஆரியருக்கு (பார்ப்பனருக்கு) வெள்ளையர் சன்னது–சட்டபூர்வமான அனுமதி கொடுத்துவிட்டார்கள். அதுதான் இந்துமதப் பிரச்சாரமும் இந்து வருணாசிரம தர்ம சட்டமும் காப்பும் கோவில்கள், மோசடி சடங்குகள் முதலியனவும் காப் பாற்றப்பட்டு வருவதாகும்.

ஆதலால், நாம் இன்றையக் கொடுமையான ஆட்சி என்பதை ஒழிக்கவேண்டுமானால் வெள்ளை ஆரியர்–மஞ்சள் ஆரியர் ஒப்பந்தத்தை உடைத்துச் சுக்கல் ஆக்கவேண்டும். ஜின்னா சாயபு வெள்ளையரை உணரச் செய்ததுபோல், நாமும் உணரச் செய்யவேண்டும்.

ஜின்னா சாயபு என்ன செய்தாரென்றால், 'ஓ, வெள்ளையனே! பார்ப்பான்தான் உனக்குத் தொல்லை கொடுப்பான் என்று கருதி அவனை சரிப்படுத்திக்கொண்ட தைரியத்தில் நீ மகாமஸ்தாய் இருந்துவிடாதே; (என்னாலும் (முஸ்லிம்களாலும்) உனக்குத் தொல்லை கொடுக்க முடியும். இந்தியாவில் மாத்திரமல்ல, வெளியிலுங்கூடத் தொல்லைப்படுத்த முடியும்' என்று சொன்னதால், அதற்கேற்றபடி முஸ்லிம்கள் ஒன்று சேர்ந்ததால், இதை வெள்ளையர் (பிரிட்டிஷார்) ஒப்புக்கொண்டது மாத்திரமல்லாமல்—மஞ்சள் ஆரியரும் வழிக்கு வந்து, 'உனக்கு வேண்டியதை எடுத்துக்கொள்; என்னை நம்பிய இரண்டொரு சாயபுகளிடம் என் மரியாதையைக் காப்பாற்று' என்ற அளவிற்கு வந்துவிட்டார்கள்.

அந்த நிலை நமக்கு ஏற்படவேண்டுமானால், நாம் என்ன செய்யவேண்டும்? அதைத் தெளிவாக்கத்தான் திராவிடர் கழகம் தொண்டாற்றுகிறது. நமக்கு இன்று நம் நாட்டில் இருந்துவரும் கஷ்டத்திற்குக் காரணம் நம் மக்கள் தங்கள் பிறவியையும், இனத்தையும் தங்களுக்கிருக்கவேண்டிய சுயமரியாதையையும் உணராத் தன்மையே ஆகும்.

இதனால்தான் நம்மில் அனேகர் பிறவி–இன–சுயமரியாதையைப்பற்றி இலட்சியம் இல்லாமல், சுயநலம் என்னும் பெயரால் தங்கள் மானத்தைவிட்டு அல்லது விற்றும்

பிழைப்பதைப் பெருமையாகக் கொண்டு வாழக் கருதுகிறார்கள். உலகத்தில் வேறு எந்த மக்களும் நம்மைப்போல் இழிவுக்கு ஆளாகி, அதைப்பற்றிக் கவலையற்று வாழவில்லை. நம்மில் இராஜாக்களையும், ஜமீன்தார்களையும், கோடீஸ்வரர்களையும், 'சர்'களையும் பாருங்கள்! யாருக்காவது இன உணர்ச்சி, இழிவுபற்றிய துடிப்பு இருக்கிறதா?

இவர்கள் எல்லோரும் இன இழிவுக்கு, பிறப்பு இழிவுக்கு ஆகவும், மனிதத் தன்மை-மானத்திற்குக் கேடு விளைவிக்கவும் நம் எதிரிகள் கற்பித்த சாதனமாகிய இந்து மதம் (கொள்கை) என்பதைத் தங்கள் மதம் (எங்களது கொள்கை) என்று சொல்ல வெட்கப்பட வில்லை; வீரம் பேசுகிறார்கள். அதைப் பின்பற்றி, எதிரிக்கு நல்ல பிள்ளையாகிப் பயன் பெறுகிறார்கள்.

மகாராஜாக்கள், பிரபுக்கள், கோடீஸ்வரர்கள், படித்தவர்கள் என்பவர்களே இப்படி இருந்தால் மற்றவர்களைப்பற்றி, அதுவும் வயிற்றுப் பிழைப்புக்கும், வாய் ருசிக்கும் எதையும் விற்றுப் பிழைப்பவர்களைப்பற்றிக் கேட்கவேண்டுமா என்று கேட்கிறேன்.

ஆதலால், நமது பிறப்பையும், இனத்தையும் ஞாபகமூட்டுவதே திராவிடர் கழகத்தின் முக்கிய வேலையாகும். 1. முஸ்லிம் மதம் (கொள்கை), 2. முஸ்லிம் சாதி, 3. முஸ்லிம் நாடு, 4. முஸ்லிம் மானத்தோடு வாழ்வதா? சாவதா? ஆகிய இவைகளை ஞாபகப்படுத்தி, இவைகளைக் குறிக்கோளாகக் கொண்டதாலேயே 40 கோடி மக்கள் உள்ள இந்திய நாட்டில், 10 கோடி மக்கள் கொண்ட முஸ்லிம்களுக்குச் சரிபங்கு உரிமை, 'தனி ஆட்சி நாடு' என்கின்ற வலியுறுத்தல், யாராலும் ஆட்சேபிக்க முடியாத—ஆட்சேபிக்கப் பயப்படும்படியான பிரச்சினையாக இருந்து வருகிறது.

அது போலவே, (1) இந்துமதம், அதாவது (ஆரியக் கொள்கை) மதம், (2) இந்து (ஆரிய) இனம், (3) இந்து (ஆரிய) ஸ்தானம் (4) இந்து (ஆரியராம) ராஜ்யம், (5) இந்து (பார்ப்பன) ஆதிக்கம் என்ற குறிச்சொல்லே ஆரியர்களுக்கு (பார்ப்பனர்களுக்கு) இவ்வளவு, அதாவது அவர்களது எண்ணிக்கை 100-க்கு 4, 5 ஆக இருந்தும் ஆதிக்கம் முழுவதும், நாடு முழுவதும், வளம்முழுவதும் அவர்களுடையதாகவும் மற்றவர்கள் அவர்களது 'வைப் பாட்டி மக்கள்,' சூத்திரர்கள், தீண்டப்படாதவர்கள் என்பதைத் தாங்களாகவே ஒப்புக் கொள்ளும்படியாகவும் செய்யப்பட்டுவிட்டது.

இதுபோன்ற உணர்ச்சியும், நிலையும் நமக்கும் ஏற்படவேண்டும். அதற்கேற்ற குறிச்சொல் நமக்கு வேண்டும் என்பதற்காகவே திராவிடர்கழகம் வேலை செய்கிறது. இந்தப் பெயர் பிடிக்காவிட்டால் வேறு எந்தப் பெயரைவைத்தாலும் சரி. இழிநிலையை வெட்டித்தள்ளும் புரட்சி உணர்ச்சி வரும்படியாக இருக்கவேண்டும். மற்ற எந்தப் பெயராலும் இதுவரை பயன் ஏற்படவில்லை. ஆதலால், இந்தப் பெயரைச் சொல்லுகிறேன். இதுவும் மறந்ததை நினைவுறுத்துவதே தவிர, புதிய கற்பனை அல்ல.

நாம் யாவரும் திராவிடர்; திராவிடர்யாவரும் ஒன்று. ஆரியருக்கும் ஆரியத்திற்கும் நாம் எந்த விதத்திலும், எந்தத் தன்மையிலும் சம்பந்தப்பட்டவர்கள் அல்லர் என்று கருதி (1) திராவிடநாடு, (2) திராவிட இனம், (3) திராவிட மானம், (4) திராவிடர் இருப்பதா—இறப்பதா என்ற உணர்ச்சி நமக்கு வந்துவிட்டால், திராவிடர்க்கு நிகர் இந்த நாட்டில் மாத்திரமல்ல—இந்தியா கண்டத்திலேயே யார் என்று கேட்கின்றேன்!

இன்னமும் சொல்லுவேன்: ஆரியஸ்தானுக்கும்—பாகிஸ்தானுக்கும் நம் நாட்டில் இடமில்லை. நமக்கு இரண்டு சம்பந்தமும் தேவையற்றதேயாகும். ஏன்? நமக்கும் முஸ்லிம் களுக்கும் நம் நாட்டில் சண்டை இல்லை. நாமும் அவர்களும் ஒரு இனம், ஒரு சாதிமத உணர்ச்சியில்—அதுவும் நாம் ஆரியமத உணர்ச்சி கொண்டதால் வேறுபட்டவர்களாகக் கருதிக் கொள்கிறோம்; அப்படியிருந்தும் நாம் உடன்பிறப்பாளர்களாக வாழ்கின்றோம்.

ஆரியம் நம்மைவிட்டொழிந்தால், மதத்திலும் பேதமிருக்காது; அங்குள்ள முஸ்லிம்கள் நம்மைவிட்டுப் பிரிந்துவாழுவோ, நம்மை இழிவுபடுத்தி வாழுவோ சிறிதும் நினையார்கள். ஆதலால், அவர்களுக்கும் நமக்கும் பேத உணர்ச்சி இல்லை; கண்டிப் பாய்ப் பேதம் வேண்டாததுமாகும்.

ஆதலால், திராவிடர் என்றதால் முகமதியர்களைப் பிரித்துக் காட்டுவதல்ல; பாகிஸ் தானை எதிர்ப்பதோ, இந்த நாட்டுக்குக் கூப்பிடுவதோ அல்ல. ஆனால், திராவிடர் என்றால் ஆரியர் வேறு என்பதைக் காட்டுகிறது. திராவிட நாடு என்பது ஆரியர்களின் சுரண்டலிலிருந்தும் ஆரிய ஆதிக்கத்திலிருந்தும் மீளவேண்டும் என்பதைக் காட்டுகிறது. ஆகவே, திராவிடர் ஒன்றுபடவேண்டும், ஒரு கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும். திராவிடக் கட்டுப்பாடும், ஒற்றுமையும் ஏற்படுவதற்குத் தடையாய் உள்ள எதுவும் தள்ளப்பட வேண்டும்.

இன்றைய அரசியலில் நமக்குப் பதவிப் பங்கு வேண்டியதில்லை. நம்மை வேவல் பிரபு கூப்பிடாததால் எனக்குச் சிறிதும் சங்கடமில்லை; கூப்பிட்டிருந்தால் அவர்தான் ஏமாற்றம் அடைந்திருப்பார். நம் கட்சியில் இடைக்காலப் பதவி ஏற்றுக்கொள்ளக் கூடாது என்று 1940ஆம் வருடத்திலேயே தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. பதவிக்காக—யோக்கியமான ஜஸ்டிஸ் கட்சி ஒருநாளும் ஆசைப்படுவதில்லை. அது மாத்திரமா? நான் தேர்தலைக்கூட பகிஷ்கரிக்கவேண்டும் என்று சொல்லி வருகிறேன். இப்படியிருக்க, வேவல் கூப்பிடவில்லை என்று நினைப்பேனா? ஆனால், வேவல் பிரபுவுக்குச் சரியான எச்சரிக்கை கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே, பதவி விஷயம் என்னை ஏய்த்து விடாது; ஏமாற்ற மடையவும் செய்யாது.

ஆனால், வேவல் திட்டத்தால், வேவல், ஜின்னா சாயபு, அம்பேத்கார், காங்கிரசார் நான் ஆகிய அய்ந்துபேரும் வெற்றி பெற்றுவிட்டோம்.

வேவலின் வெற்றி என்னவென்றால்–வேவல் பிரபு நல்லவர்; அவரால் குற்றமில்லை; சுயராஜ்யத்திற்கு வழிகாட்டினார்; நல்ல எண்ணத்தோடு வேலைசெய்தார் என்ற பெயரைக் காங்கிரசாரிடம் வாய்நிறையப் புகழ்ச்சி வாங்கிக் கொண்டதோடு, நாங்கள் இனி சட்டம் மீற மாட்டோம்; சண்டை முயற்சிக்கும் எதிர்ப்புச் செய்யமாட்டோம் என்ற உறுதி மொழியை யும் வாங்கிக்கொண்டார். இதை மெய்ப்பிக்க மவுலானா ஆசாத் அவர்கள், 'எனக்கும் வேவலுக்கும் நடந்த சங்கதி பரம இரகசியம்' என்று சொல்லிவிட்டதே போதுமானது. காங்கிரஸ் பத்திரிகைகளும் தலைவர்களும் இதை ஒப்புக்கொண்டதற்கு அடையாளமாக, வேவலைப் பாராட்டிவிட்டனர்.

ஜின்னாவின் வெற்றி என்னவென்றால்—முஸ்லிம்களுக்கு, இந்துக்களுக்கு உள்ளது போல், சம உரிமை பங்கில் உண்டு என்பதல்லாமல், முஸ்லிம்களுக்கு முஸ்லிம் லீக் தவிர வேறு யாரும் பிரதிநிதித்துவம் அல்ல என்பதை உறுதிப்படுத்திவிட்டார்.

அம்பேத்காருக்கு வெற்றி என்னவென்றால்—ஷெட்யூல்டு வகுப்புக்கும், தாழ்த்தப் பட்டவர்களுக்கும் அம்பேத்கார்தான் பிரதிநிதி என்பதோடு, காங்கிரஸ் பிரதிநிதித்துவம் கொண்டாடுவது சரியல்ல என்று செய்யப்பட்டுவிட்டது.

காங்கிரசாருக்கு என்ன வெற்றி என்றால்—முதலாவது தலைவர்கள் விடுதலை யானார்கள்; காங்கிரசை இயக்க, மேலால் பிரச்சார வேலை நடக்க இடம் செய்துகொண் டார்கள்; வேறு யாரும், எந்தக் கட்சியாரும் சுலபத்தில் நாட்டின் பேரால் பதவிக்கு வராதபடி பந்தோபஸ்து செய்துகொண்டார்கள்; காங்கிரஸ் ஆட்கள் காங்கிரசை விட்டு ஓடாமல் இருக்க வசதி செய்துகொண்டார்கள்; பிரிட்டிஷாரோடு போராடுவதை விட்டு விட்டதன் மூலம் பிரிட்டன் உதவிகொண்டு முஸ்லிம் லீகுடன் போர் தொடுக்க வசதி செய்து கொண்டார்கள்.

இனி, நமக்கு வெற்றி என்னவென்றால்—இனப்படி, மதப்படி, வகுப்புப்படி எந்த அரசியல் பிரதிநிதித்துவமும் இருக்கவேண்டும் என்று போராடினவர்கள் இந்நாட்டில் நாமேயாகும். வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்திற்காகவே, காஞ்சிபுரத்தில் காங்கிரஸ் மாநாட்டில் காங்கிரஸ் ஸ்தாபனத் தலைமையை உதறித் தள்ளிவிட்டு, நடு மாநாட்டில் நாலாயிரம் பேர் இடையில், 'காங்கிரஸ் இங்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை ஒப்புக் கொள்ளாததினால், நான் கவலைப்படவில்லை. இதற்காகவே வெளியேறி வேறு ஸ்தாபனம் ஆரம்பித்து, வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை ஒப்புக்கொள்ளச் செய்கிறேனா இல்லையா, பார்!' என்று பந்தயம் கூறி, மீசையை முறுக்கிக் காட்டிவிட்டு வந்த என் பந்தயப் பிரச்சினை, சிம்லா மாநாட்டில் ஏகமனதாய் ஒப்புக்கொண்டு கல்சாசனமாக்கப்பட்டுவிட்டது என்பதேயாகும்; அதுவும் நம் விகிதப்படி என்றால் இன்னும் மகிழ்ச்சி அல்லவா?

[சேலத்தில், 20-7-1945-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 28-7-1945; 'விடுதலை' 8-10-1972]

## 10. சுயராஜ்ய ஆட்சி எது?

தோழர்களே!

திராவிடர்கள் அத்தனை பேரும் இந்து மத வருணாசிரமப்படி சூத்திரர்களாக்கப் பட்டதுதான் அவர்கள் தொழிலாளிகளாயிருக்கக் காரணம் என்பதை நீங்கள் உணர்தல் வேண்டும். அதுதான் போகட்டும், இந்தத் தொழிலாளிகள் இழி மக்களாகக் கருதப்பட்டு வருவதற்குக் காரணம் இவர்கள் இந்து மத தர்மப்படி இழி மக்களாய் இருப்பதால்தான். சிலர், அறியாமை காரணமாக—'நாம் இழி தொழில் செய்கிறோம்; அதனால் இழிமக்களாக இருக்கிறோம்' என்று நினைத்து வருகிறார்கள். இது முற்றிலும் தவறாகும்.

எந்த ஒரு தொழிலும் மற்ற நாடுகளில் உள்ளதுபோல் ஒரு தனிக் கூட்டத்திற்கென்று ஒதுக்கப்படாமல் பொதுவாகவே கருதப்படுமானால், அந்தத் தொழிலுக்கு இழிவோ, பெருமையோ இருந்து வராது.

செருப்புத் தைக்கும் தொழில் ஒரு கூட்டத்திற்கே—அதுவும் இந்து மத தர்மப்படி 5-வது சாதிக்கே ஒதுக்கப்பட்டுவிட்டதால்தான் அது நம்நாட்டில் இழி தொழிலாகக் கருதப் பட்டுவருகிறதே ஒழிய, அத்தொழில் இழி தொழில் என்பதற்காக அல்ல. அதேபோல்தான் வீதி கூட்டும் தொழிலும், கக்கூஸ் கழுவும் தொழிலும். மணியடிக்கும் தொழிலுக்குப் பெருமை இருந்துவருவதற்கும் இதுதான் காரணம். அத்தொழில் உயர்சாதிப் பார்ப்பானுக் கென்றே ஒதுக்கப்பட்டு விட்டதால்தான் உயர்வாகக் கருதப்பட்டு வருகிறதே ஒழிய அத் தொழில் உயர்வானது என்பதற்காக அல்ல. ஆகவே, தொழில் காரணமாக இவர்கள் இழி மக்களாக இருக்கின்றார்கள் என்று யாரும் கூறிவிட முடியாது. இந்தத் தொழிலாளிகளுக்கு உணர்ச்சி வரவேண்டும். 'நாங்கள் மட்டும் ஏன் உடலுழைப்பு செய்தே வாழவேண்டும்? அப்படியிருந்தும் நாங்களேன் இழிசாதி மக்களாக வாழவேண்டும்?' என்று தொழிலாளிகள் கிளர்ச்சி செய்யவேண்டும். இன்றையத் தொழிலாளர்கள் கூலி உயர்வுக்காகக் கிளர்ச்சி செய்கிறார்களே ஒழிய, தமது இழிவு நீங்கக் கிளர்ச்சி செய்யக் காணோம். கூலி உயர்வால் பொருள் விலை ஏறுகிறது. விலை ஏற்றத்தைத் தொழிலாளிகள்தாம் சாமான் வாங்கும்போது கொடுக்க வேண்டியிருக்கிறது என்ற பொருளாதாரத்தை இவர்கள் உணரவில்லை; இவர்கள் தலைவர்களும் இவர்களுக்கு இதை உணர்த்துவதில்லை.

மேலும், இத்தொழிலாளிகளுக்கு மதப் பைத்தியமும், கடவுள் பைத்தியமும், முன் ஜென்ம, பின்ஜென்மப் பைத்தியமும், தலைவிதிப் பைத்தியமும் அதிகம் இருந்து வருகின்றன. இவற்றிலுள்ள நம்பிக்கைகள் அறவே ஒழியவேண்டும். ஊரார் உழைப்பால் உண்டு உடல் பெருத்து உருளுகிறான் ஒரு சோம்பேறிப் பார்ப்பான். அவனை, 'ஏனப்பா இப்படிச் சோம்பேறி வாழ்வு வாழ்கிறாய்?' என்று கேட்டால், 'நான் என்ன பண்ணட்டும்?

கடவுள் கொடுக்கிறார்; நான் உண்டு புரளுகிறேன். அதுதான் கொடுத்துவைத்தது!' என்கிறான் அவன், ஆணவமாக! அடுத்த வீட்டுக் குப்பனைப் பார்த்து, 'ஏனப்பா, ஒருநாள் முழுவதும் ஓயாமல் உழைத்தும் உனக்கு அரைவயிற்றுக் கஞ்சிக்குக்கூடப் போதிய ஊதியம் கிடைக்கவில்லை?' என்று கேட்டால்—அவனும், 'அது என் தலைவிதி; நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்; பகவான் செயலுக்கு நன்றி; என்ன பண்ணட்டும்? வஞ்சனையின்றி உழைக்கத்தான் என்னால் முடியும்?' என்கிறான், அழுகுரலோடு. நீங்கள் நினைக்கிறீர்களா, பகவான் செயலுக்கும் இதற்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமென்று? இல்லை, இல்லை!

இது, ஒரு சோம்பேறிக்கூட்டம் தம் சுகவாழ்வுக்காக ஏற்படுத்திக்கொண்ட ஒரு வஞ்சகத் திட்டம் என்றுதான் திராவிடர் கழகம் கூறுகிறது. இதற்கும் பகவான் செயலுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமானால், அந்தப் பகவான் பாடுபடும் பாட்டாளி மகனுக்கு முதலில் படியளக்கட்டும்; பிறகு மீதியிருந்தால் சோம்பேறிப் பார்ப்பானுக்கும் கொஞ்சம் அழுது தொலைக்கட்டும் என்றுதான் திராவிடர் கழகம் கூறுகிறது.

'தனியொருவனுக்கு உணவில்லையெனில் ஜெகத்தினை அழித்திடுவோம்' என்று தேசிய கீதம் பாடுகிறார்கள்—இன்றையத் தேசியத் தோழர்களும் பொதுவுடைமைத் தோழர்களும். இது பார்ப்பனப் பாரதி காட்டியவழி. ஜெகத்தை இவர்கள் எப்படி அழிக்கப் போகிறார்கள்! சமுத்திரத்தைப் பூமியின்மீது வெட்டிவிடப் போகிறார்களா? அல்லது, சூரியனை அடுப்பிலிட்டுக் கொளுத்திவிடப் போகிறார்களா? ஜெகத்தினை அழிப்ப தென்றால் தொழிலாளியும் அதனுடன் சேர்ந்துதானே மடிய வேண்டியதிருக்கும்! என்னே இவர்கள் மடமை!

இன்றையச் சமூக அமைப்பு, பொருளாதார அமைப்பு அத்தனையும் மாற்றி யமைக்கத் தொழிலாளர்களான திராவிடர்கள் அத்தனைபேரும் பாடுபடவேண்டும். மக்களை ஏய்ப்பவன் செல்வவான் ஆகின்ற இக் கொடியநிலை மாறியே ஆகவேண்டும்.

அரசாங்கம் வரிவசூல் செய்து ஏதோ நிர்வாகம் நடத்திவருகிறது என்பதுதான் நம் மக்களுக்குத் தெரியுமேயொழிய—அது யாருக்காக நிர்வாகம் நடத்திவருகிறது என்பதோ, அந் நிர்வாகத்திற்கான செலவு யாரிடமிருந்து வசூலிக்கப்படுகிறது என்பதோ இவர்களுக்குத் தெரியாது. தெரியாதது மட்டுமல்ல, இவர்களுக்குள்ள குறை; தெரிந்து கொள்வதற்கான ஆசைகூட இவர்களுக்கிருப்பதில்லை. தோழர்களே, சற்றுக் கவனமாகக் கேளுங்கள்.

நான் கூறுகிறேன், இன்றைய அரசாங்கம் பணக்காரர்களைக் காப்பாற்றத்தான் இருந்துவருகிறதென்று. அரசாங்கத்தின் போலீஸ் இலாக்காவும், கோர்ட்டும், ஜெயிலும், பட்டாளமும் ஏழைப் பாட்டாளி மக்களைக் காப்பாற்ற இருக்கின்றனவா அல்லது பணக்காரர் களைக் காப்பாற்றுவதற்காக இருக்கின்றனவா என்பதை நீங்கள் சற்றே சிந்தித்துப் பாருங்கள்.

பாடுபட்டுப் பட்டினி கிடக்கும் பாட்டாளி மகனிடம் ஏது பொருள், போலீஸ்காரனால் காப்பாற்றப்படுவதற்கு? ஒருவனுக்கு அதிகப்படியாக மற்றொருவன் பொருள் சேமித்து வைத்தில்லாவிட்டால்—நாட்டில் திருட்டு எப்படி இருக்க முடியும்? பணக்காரன்–ஏழை என்ற பாகுபாடு இல்லாவிட்டால்—நாட்டில் இத்தனை கோர்ட்டுகளுக்கு வேலை ஏது? முதலாளி–தொழிலாளி என்ற பாகுபாடு இல்லாவிட்டால்—நாட்டில் இத்தனை தொழிலாளர் கிளர்ச்சிக்கு இடமேது? இவற்றிற்கு இடமில்லையானால் நாட்டில் இத்தனை ஜெயில்கள் தான் இருக்கவேண்டிய அவசியமென்ன? மற்ற நாடுகளில் எல்லாம் ஜெயில் நிர்வாகத்தால் அரசாங்கத்திற்கு வருமானம் வருகிறதென்றால், நம் நாட்டில் அரசாங்கத்திற்கு அதனால் வருடா வருடம் நஷ்டமேற்பட்டு வருவதற்குக் காரணமென்ன? நாட்டு மக்களுக்கெல்லாம்

போர்முறைப் பயிற்சியளிக்கப்பட்டிருந்தால் நிரந்தரமாக ஒரு பெரிய பட்டாளம் இருக்க வேண்டிய அவசியம் இருக்காதல்லவா? ஒரு பட்டாளந்தான் இருக்கிறதென்றாலும் அதுவும் அரசாங்கத்தைக் காப்பாற்றத்தானே இருந்து வருகிறது. அரசாங்கமும் முதலாளி கையி லிருக்கும்போது—அப் பட்டாளம் தொழிலாளிகளின் உரிமைப் போராட்டத்தைத் தடுக்க அவ்வப்போது உபயோகப்படுத்தப்பட்டு வரும்போது—போலீஸ் இலாக்காவும் நீதி இலாக் காவும் அரசாங்கத்தால் தொழிலாளிகளை அடக்கப் பெரிதும் பயன்பட்டு வரும்போது, இன்றைய அரசாங்கம் முதலாளிகளைக் காப்பாற்றத்தான் இருந்து வருகிறது என்பதை யும்—தொழிலாளிகளையோ, ஏழைப் பாட்டாளிகளையோ காப்பாற்றுவதற்காக இருக்க வில்லை என்பதையும் யார்தான் மறுத்துக் கூறமுடியும்?

பணக்காரர்களைக் காப்பாற்றுவதற்காக இருந்துவரும் இந் நிர்வாகங்களுக்குண் டான வரிப்பணம் யாரிடமிருந்து வசூலிக்கப்படுகிறது? தேசியத் தோழர்கள் கூறுவார்கள், இவ்வரிகள் பணக்காரர்களிடமிருந்துதான் வசூலிக்கப்படுகின்றனவென்று. நான் கூறு கிறேன், இவ்வரிகள் ஏழைப் பாட்டாளி மக்களிடமிருந்துதான் வசூலிக்கப்படுகின்றன. வென்று. பணக்காரன் வரி கொடுக்கிறான் என்கிறாய் நீ; சரி, ஒப்புக்கொள்வோம். அப் பணம் அவனுக்கு எப்படி வந்தது? ஏழை மக்களை ஆனமட்டும் ஏய்த்துத் தான் அடித்த கொள்ளையின் ஒரு சில பகுதியைப் பணக்காரன் சேமித்து வைத்துக்கொள்ளவும் அதைக் காப்பாற்றிக்கொள்ளவும், தானும் தனது பெண்டு பிள்ளைகளும் போக போக் கியத்துடன் சுகமாக வாழவும் தரகாக அரசாங்கத்திற்குக் கொடுத்து வருவதைத்தானே நீ வரி என்று கூறுகிறாய்? அவன் செலுத்தும் வரிப்பணம் அவனுடைய கொல்லையில் தானாக விளைந்துவிடுவதில்லையே! நான் கூறினால் ஏதோ விடுகதை கூறுவது மாதிரி இருக்கும். உண்மையாகக் கேட்கிறேன்—அரசாங்கம் நடத்த வரி என்று ஒன்று இருப்பா னேன்? மடையர்கள் இராஜ்யத்தில் அன்றோ வரி இருக்கும்! அறிவாளிகள் இராஜ்யத்தில் வரி எப்படி இருக்கும்? வரி கொடுத்து வாழும் இராஜ்யத்திற்கா சுயராஜ்யம் என்று பெயர்? வாடகை கொடுத்து வாழும் வீட்டிற்கா சொந்த வீடென்று பெயர்! எந்த மடையன்தான் இதைச் சுயராஜ்யம் என்று ஒப்புக்கொள்வான்?

அரசாங்கம் நடத்த வரி வேண்டுமென்றால், அதை நேரிடையாகவே ஏழைகளிட மிருந்து வசூல் செய்துகொள்ளுங்களேன். அதற்கேன் மறைமுகமான திட்டம் போடு கிறீர்கள்? அதற்காக முதலாளி என்றொருவரை நியமித்து அவர்களை ஆனமட்டும் கொள்ளையடிக்கும்படி அனுமதித்துவிட்டு, அவர்கள் அடையும் இலாபத் தொகையில் ஒரு ரூபாய்க்கு ஒரு அணாவோ, இரண்டணாவோ பெற்று அரசாங்கம் நடப்பானேன்? உனக்கு வேண்டிய ஒரு அணாவுக்காக, ஏஜென்ட் அல்லது எஜமானனுக்கு ஏழை மகன் 15 அணாவா அழவேண்டும்? நீயே சகல நிர்வாகங்களையும் எடுத்துக்கொண்டு, அந் நிர்வாகத்திற்கான செலவை மட்டும் இலாபமாக வைத்து மக்களுக்கான வசதிகளை அளித்து வருவதற்கென்ன தடையிருக்க முடியும்? இன்று நாட்டில் ஒவ்வொரு வியாபாரியும் அடித்துவரும் கொள்ளைக்குக் கணக்கு வழக்கைக் காண முடியவில்லையே! ஒவ்வொரு முதலாளியும் கணக்குக் காட்டாமல் அடிக்கும் கொள்ளையே பல இலட்சக்கணக்கில் ஆகி விடுகிறதே!

ஒரு பிர்லா வருடந்தோறும் வரி இல்லாமல் 1½ கோடி ரூபாய் கொள்ளையடிப்பதாகக் கூறப்படுகிறதே! அவர் வீட்டிலேயே காந்தியார் போய்த் தங்குவாரானால் அவரை எப்படி அரசாங்க உத்தியோகஸ்தர் கணக்குக் கேட்க முடியும்? இவர்கள் யோக்கியமானவர்களா யிருந்தால் ஊரைக் கொள்ளையடிப்பவன் வீட்டிலா இவர்கள் போய்க் கூட்டம் போடுவார்கள்

இவர்களுடைய அரசாங்கம் யோக்கியமானதாயிருந்தால் முதல் நம்பர் முதலாளி யாகிய சண்முகம் செட்டியாரை நிதி மந்திரியாக வைத்திருப்பார்களா? கொள்ளை இலாபம் அடிக்கும் கொழுத்த வியாபாரியல்லவா அவர்? அப்படிப்பட்ட முதலாளிகள் இன்று ஆட்சி

செலுத்தி வரும்போது அவர்களுடைய ஆட்சியைப் பலப்படுத்த வேண்டும் என்று சமதர்மத் தோழர்களும், பொது உடைமைத் தோழர்களும் அன்றாடம் கூப்பாடு போட்டுவிட்டு, அந்த ஆட்சி யாருக்காக நடந்து வருகின்றதோ—அந்த ஆட்சி யாருடைய ஆதரவில் நடந்து வருகிறதோ—அவர்கள்மீது தொழிலாளிகளின் கவனத்தைத் திருப்பி வருவது எவ்வளவு போக்கிரித்தனம் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்! நாட்டில் சுயராஜ்ய ஆட்சியில் எத்தனை தொழிலாளர் கிளர்ச்சிகள் இதுவரை நடைபெற்றிருக்கின்றன? இவை தோல்வி அடையக் காரணமான சதிகாரர்கள் முதலாளிகளா? அல்லது, அவர்களின் கூலிகளான அரசாங்கத் தலைவர்களா? அல்லது, உங்கள் தலைவர்களா? சற்று சிந்தித்துப் பாருங்கள்!

உங்கள் தலைவர்கள்—ஒன்று, அறியாமையால் அல்லது தமது சுயநலத்தால் உங்களை முதலாளிகள்மீது ஏவி விடுகிறார்கள். நீங்களும் உண்மை உணராமல் மந்தை ஆடுகளைப்போல் தலைவர்களைப் பின்பற்றிக் கிளர்ச்சி செய்கிறீர்கள். அதனால் நீங்கள் காணும் பயன் என்ன? உங்கள் முதலாளிகளின் ஆதரவால் வாழும் அரசாங்கம் உங்கள் முதலாளிகளைக் காப்பாற்றுவதற்காக உங்கள்மீது தனது அடக்கு முறையைப் பிரயோகம் செய்கிறது; உங்களைத் தடியால் அடிக்கிறது; துப்பாக்கியால் சுடுகிறது; உங்கள் தலைவர்களை ஜெயிலில் அடைக்கிறது; ஒரு தலைவரை நாட்டை விட்டுக்கூட வெளியேற்றச் செய்தது; உங்களைப் பல நாட்கள் பட்டினி போட்டு வீதியில் பிச்சை எடுக்கச் செய்கிறது. அதோடு நிற்கிறதா? உங்களில் சிலரை உங்கள்மீது ஏவிவிட்டுக் கலகத்தை உண்டாக்குகிறது. அது மட்டுமா? உங்கள் வீடுகளைச் சோதனை போடுவதாகக்கூறி உங்கள் பெண்டு பிள்ளைகளை வேறு அவமானப்படுத்துகிறது. இத்தனையும் ஆன பிறகு கூட, உங்கள் கவனம் இன்னும் உங்கள் முதலாளிகள் மீதே செல்லுமானால்—உங்கள் தலைவர்கள் உங்களை இன்னும் அந்தப் பக்கமே திருப்ப முயற்சிப்பார்களானால், அவர்கள் முதலாளிகளுக்குக் கையாட்களாக, அரசாங்கத்தின் கையாட்களாக, சுயநலக்காரர்களாக இருக்கிறார்கள்; அல்லது, அவ்விதமே ஆக்கப்பட்டு விட்டார்கள் என்பதுதானே இதன் அர்த்தம்? அரசாங்கம் முதலாளிகளுக்கு அனுசரணையாக இல்லையானால், தொழிலாளிகள் சமூகத்தை எதிர்த்துத் தனிப்பட்ட முதலாளிகள் எத்தனை நாள் வாழமுடியும்?

இந் நாட்டில் முதலாளி என்றொரு வர்க்கம் இருந்துவரவும் அவ்வர்க்கம் அன்றாடம் தழைத்தோங்கவும் வழி செய்து கொடுப்பதும் இன்றைய ஆட்சிதான்.

ஆகவே, உங்கள் திரண்ட சக்தியை அரசாங்கத்தின்மீது திருப்புங்கள். அரசாங்கத்தைத் தொழிலாளர்களாகிய நீங்கள்—இந்த நாட்டிற்கு உரியவர்களாகிய நீங்கள்—இந்த நாட்டின் வளப்பத்திற்கு உழைப்பால் உரிமை பெற்றுள்ள நீங்கள் கைப்பற்றுங்கள்.

திராவிடர் கழகத்திற்குத் தொழிலாளரைப் பற்றிய திட்டமில்லை என்று சில சுயநலமிகள் துர்பிரசாரம் செய்து வருகிறார்கள். நாங்கள், உங்கள் கவனத்தை அரசாங்கத்தின் பக்கம் திருப்புங்கள் என்று கூறினால்–உங்கள் தலைவர்கள், நாங்கள் ஏதோ முதலாளிகளின் கையாட்களாகிவிட்டோம் என்று கூறி உங்களை ஏமாற்றப் பார்க்கிறார்கள். நீங்கள் இதை நம்பாதீர்கள். எங்கள் கட்சியில் ஒரு முதலாளிகூட இல்லை; அவர்கள் ஆதரவும் எங்களுக்குத் தேவையில்லை.

உங்களுடைய 1948 ஆம் வருடத் திட்டம் ஆட்சியைக் கைப்பற்றுவதாக இருக்கட்டும். பாடுபடாத சோம்பேறிகளின் ஆட்சியை இருக்கவிடாதீர்கள்.

ஒரு இராமசாமி ரெட்டியார் ஏன் முதன் மந்திரியாயிருக்கவேண்டும்? அவர் உழுதவரா? அல்லது, விதைத்தவரா? ஒரு டாக்டர் இராஜன் ஏன் உணவு மந்திரியாக இருக்க வேண்டும்? அவர் என்றாவது கலப்பையைத் தொட்டிருப்பாரா? உடலுழைப்பு வேலையென்றால் அது என்ன வென்றாவது அவருக்குத் தெரியுமா? அயலார் உழைப்பில் வாழும் அக்கிரமக்காரர்கள் ஏன் உங்களை ஆள வேண்டும்? கேவலம், கூலி உயர்வுக்காக நீங்கள்

உயிரை அர்ப்பணம் செய்வதைக் காட்டிலும்—உங்கள் ஆட்சியை ஏற்படுத்துவதில் அர்ப்பணம் செய்வது மேலல்லவா? ஆட்சி உங்கள் கைக்கு வராதவரை என்னதான் நேர்மையான ஒருவர் ஆட்சிக்கு வந்தாலும்கூட—ஏன், 'பர மண்டலத்திலிருந்து உங்கள் பிதாவே' வந்து ஆட்சி புரிந்தால்கூட உங்களுக்குச் சுக வாழ்வு கிட்டாது; உங்கள் இழிவு நீங்க வழிபிறக்காது.

['விடுதலை'–சொற்பொழிவு—20-1-1948]

## 11. சுயராஜ்யத்தின் தன்மை

தலைவரவர்களே! தோழர்களே!

காந்தியாரைக் கொன்றதேது? காந்தியாரைக் கொன்றவனைத் தூக்கிலிடுவதோ அல்லது அவனுடைய சாதியையே பகிஷ்காரம் செய்துவிடுவதோ அல்லது அதற்கு ஏற்பட்ட சதி ஸ்தாபனத்தை அடக்கிவிடுவதோ அதற்கேற்ற பரிகாரமாகிவிடாது. அத்தகைய ஒரு பெரியாரைக் கொல்வதற்கான மனிதனை,—சமுதாயத்தை, ஸ்தாபனத்தை ஏற்படுத்த வெறியையூட்டிய மதத்தை—அதனுடைய அடிப்படையை ஒழிப்பதுதான் சரியான அடிப்படையாகும்.

சாதாரண மக்கள்கூட காந்தியார் கொலைக்குக் காரணம் மதவெறிதான்; அதை ஒழிக்கவேண்டியதும் அவசியம்தான் என்பதை உணர ஆரம்பித்துவிட்டதும், வெறும் தர்க்கத்துக்காயினும்—ஆட்சியாளர்கள், 'இந்த இராஜ்யம் மத சம்பந்தமற்ற இராஜ்யமாக இருந்துவரும்' என்று கூறி வருவதும், ஒரு அளவு கொலைபாதகர்களைக் காப்பாற்ற என்று இருந்தாலும், மதம் ஒரு அளவுக்கு வெறுக்கப்படுகிறது. சர்க்கார் அரசாட்சி ஏற்படுத்தப்படுமென்பது முடியக்கூடிய காரியமா? மதம், மதஉணர்ச்சி ஆட்சி என்கின்ற இலட்சியமில்லாவிட்டால் மற்றபடி சர்க்கார் ஆட்சிக்கு ஒரு இலட்சியம் என்ன என்பது தெரியவேண்டாமா? மக்களை ஆள ஏதாவது ஒரு கொள்கை இருந்துதானே ஆகவேண்டும்? அந்தக் கொள்கை என்பது மதத்தை அடிப்படையாகக் கொண்டதாகத்தானே இங்கு இருக்க முடியும்?

நாட்டில் பல மதங்கள் இருக்கும்போது ஒவ்வொரு மதக்காரனுக்கும் ஆட்சி இடம் கொடுத்துத்தானே ஆகவேண்டும்? இந்து, மாடு அடிக்கக்கூடாது என்கிறான்; முஸ்லிம் பொது ரோட்டில் மேளம் அடிக்கக்கூடாது என்கிறான். கிறிஸ்தவன் ஞாயிற்றுக்கிழமை லீவு வேண்டுமென்கிறான்; மூன்றையும் அனுமதித்துத்தானே ஆகவேண்டும்? மதத்தின் பேரால் சொத்து நாசமாக்கப்பட்டுவருவதை அனுமதித்துத்தானே ஆகவேண்டும்? மதத்திற்காகக் கட்டப்பட்டிருக்கும் கோயில்கள், சர்ச்சுகள், பள்ளிவாசல்கள் ஆகியவை பொதுச் சொத்துதானே? அவைகள் நூற்றுக்கணக்கான கோடி பெறாதா? அவற்றுக்குப் பாதுகாப்பு வேண்டும்; மதபரிபாலன போர்ட் வேண்டும். இவை இல்லாத ஆட்சி என்றாலும், மதம் அற்ற ஆட்சி என்றாலும்—நாஸ்திக அரசு ஆட்சி என்று தானே ஆகிவிடும்? அப்படியிருக்க, ஆட்சியாளர்கள் ஒப்புக்கொண்டுதான் இப்படிச் சொல்லுகிறார்களா? மதத்திற்கும் ஆட்சிக்கும் சம்பந்தமில்லையானால் 'மதஉணர்ச்சி புண்படுத்தப்பட்டால்' என்ற செக்ஷனை நீக்கிவிடுவார்களா? சர்க்காரில் கிறிஸ்டியன் காலேஜ், இஸ்லாமிய காலேஜ், இந்து காலேஜ் போன்றவை ஏற்பட்டுவிடுமா? வகுப்புரிமை கோரும்போது மாத்திரம் 'வகுப்பு சங்கதிகளை சர்க்கார் கவனிக்காது' என்று நாகரிக பாஷையில் பதிலளித்துவிட்டு சட்டத்தில், சாஸ்திரத்தில், பழக்கத்தில் இருக்கும் வகுப்புத் தன்மையை எடுத்துவிடுவார்களா?

வகுப்புபற்றிக் கூறும் சாஸ்திரங்கள் ஏன் உங்கள் ஆட்சியில் இருக்க வேண்டும்? வகுப்பில்லையானால், எங்கள் மக்கள் ஏன் கோயிலில் மணி அடிக்க அனுமதிக்கப்படுவதில்லை? எங்கள் மக்கள் இன்னும் ஏன் சூத்திரர்களாகக் கருதப்பட்டு வருகிறார்கள்?

இவற்றையெல்லாம் ஒழிக்க முடியாதபோது, ஏன் மதம் அற்ற ஆட்சி நடத்தப்போவதாக ஜம்பம் அடிக்கிறீர்கள்? மதம் இன்றேல் இந்து ராஜ்யம் ஏது? முஸ்லிம் ராஜ்யம் ஏது? கிறிஸ்துவ இராஜ்யம் ஏது? மதம் இல்லை என்று கூறப்படுமானால், நீங்கள் ஒரு முசல்மானே இந்தியாவை ஆண்டுகொள்ளட்டும் என்று ஏன் விட்டிருக்கக்கூடாது? பெரும்பான்மை இந்துக்களைச் சிறுபாலரான முஸ்லிம்கள் ஆளுவதா என்பதுதானே இன்றைய காங்கிரஸ் கேள்வி? முஸ்லிம்கள் பெரும்பான்மையாயுள்ள இடங்களில் ஏன் சிறுபான்மை இந்துக்கள் ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்ற மனப்பான்மையால்தானே பாகிஸ்தான் பிரிய நேர்ந்தது? ஹைதராபாத், காஷ்மீர் பிரச்சினை எதை அடிப்படையாகக்கொண்டது? மதவெறியை ஒழிக்க வேண்டாமா? நம் நாட்டுத் தகராறும் அதுதானே? பெரும்பான்மையான திராவிட மக்களாகிய நம்மைச் சிறுபான்மை ஆரியர் ஏன் ஆளவேண்டும் என்றுதானே நாம் பிரிவினை கோரி வருகிறோம்.

மதத்தை அன்பாலும், சத்தியத்தாலும், அகிம்சையாலும் காப்பாற்றப் பாடுபட்டதற்காகக் காந்தியாருக்கு வெடிகுண்டும், 'ரிவால்வர்' வெடியுமா பரிசாகக் கிடைக்க வேண்டும்? மதவெறி காரணமாய் அவரது போதனைகள் பலனற்றுப் போனதைக் கண்டேனும், மேலால் இது நடவாமல் இருக்க இச் சந்தர்ப்பத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டு மதவெறியை ஒழிக்க வேண்டாமா? மதம் இன்றுவரை வெறியை ஊட்ட, வெறுப்பை ஊட்டப் பயன்பட்டு வந்திருக்கிறதே ஒழிய, யாரையும் சீர்திருத்தப் பயன்படவில்லையே! காந்தியார் போதித்த அன்பும் அகிம்சையும் கவைக்குதவாத சங்கதிகளாய்ப் போய்விட்டனவே! காந்தியார் வாக்குப்படி நடப்பதாயிருந்தால் அவரைக் கொன்ற கோட்சேயைச் சிறைப்படுத்தியிருக்கவேண்டியதில்லையே! அவர்தான், 'நான் கல்லடிபட்டோ, கத்திக்குத்துப் பட்டோ அல்லது வெடிகுண்டு போட்டோ, இறக்க நேரிட்டால் அதுவே பகவானுக்குச் சம்மதமாகத்தான் இருக்கும். ஆதலால், என்னைக் காப்பாற்ற மற்றவர் எவராலும் முடியாது' என்று தெளிவாகக் கூறியிருந்தும், அவரை, 'பகவான் தனது பொன்னடிக்கு அழைத்துக்கொண்டு விட்டார்' என்று யாரும் சும்மா இருந்துவிடவில்லை. கோட்சேயையும் அவனுடைய கூட்டத்தையும் சிறைபடுத்தத் தீவிர முயற்சிகள் எடுத்துக்கொண்டார்கள் அல்லவா? அப்படித் தீவிர முயற்சிகள் எடுத்துக்கொண்டபோதிலும் மதவெறி அழிந்துவிடக் காணோமே!

அதற்கு மாறாக, மதவெறிக்குப் பயந்தன்றோ இந்திய முதன்மந்திரியார்கூட முள்வேலி, பட்டாளம் இவற்றின் பாதுகாப்போடு வாழவேண்டி இருக்கிறது? வகுப்பு வெறியால், சென்னைப் பிரதமர் கவிழ்க்கப்பட சதிவேலைகள் நடக்கின்றன. மதவெறியால் விளைந்த கேடுதானே, காஷ்மீர்ப் போராட்டம்? மதவெறியால் நேரும் கேடுகளைத் தவிர்க்க சுமார் 1000 கோடிக்குமேல் படைக்காகச் செலவழிக்கத் திட்டம் போடப்பட்டு இருக்கிறதே! அங்கு தினம் 10, 15 இலட்ச ரூபாய் செலவாகிறதே; அதனால் ஏதாவது பயன் உண்டா?

இன்றைய மதத்தில் பித்தலாட்டக்காரர் பிழைக்க வழியேற்பட்டிருக்கிறதே ஒழிய உண்மையாக யாருக்காவது மதக் கொள்கைகள் பயன்பட்டுள்ளனவா? மதம் மட்டுமல்ல; இன்றையக் கடவுள் தன்மையும், மடாதிபதிகள் தன்மையும், சாஸ்திரங்கள் புராணங்கள் இவற்றின் தன்மையும், இவற்றின் உபதேசத் தன்மையும் இன்றைய மக்களுக்குச் சிறிதும் பயன்படவில்லை. இதைத்தான் காந்தியாரின் துர்மரணம் நமக்குத் தெளிவாக வலியுறுத்துகிறது. காந்தியார் எந்தக் கருத்துக்காகக் கொலைசெய்யப்பட்டாரோ, அந்தக் கருத்துக்கு ஆதாரமாயிருந்த மதத் தத்துவங்களால் மக்களுக்குப் பயன் ஏற்படவில்லை. தான் போதித்த சத்தியமும், அகிம்சையும் தனக்கே பிரயோசனப்படாமற் போய்விட்டன. அவற்றை மக்களால் கடைப்பிடிக்க முடியாமற் போய்விட்டது.

கடவுளும் மதமும் மனித சிருஷ்டியே; கடவுளும் மதமும் மக்களால் தோற்றுவிக்கப் பட்டனவே ஒழிய, தாமாகத் தோன்றியன அல்ல என்பதை நீங்கள் அறியவேண்டும்.

'கடவுள், கடவுள் என்று கூறுகிறாயே, உனக்கு எப்படியப்பா, அது இருப்பது தெரிந்தது?' என்று கேட்டால், தனக்கு, மற்றொருவர் கடவுள் இருப்பதாகக் கூறினார் என்று கூறுவாரே ஒழிய, கடவுள் நேரில் வந்து கூறியதாகவோ, தன் உள்ளம் கூறியதாகவோ கூறமாட்டார். 'இல்லை இல்லை, என்னுடைய உள்ளம்தான் கூறுகிறது கடவுள் இருப்பதாக' என்று ஒருவர், கூறுவாரானால் அதென்ன அவருடைய உள்ளம் மட்டும் நெய்யில் பொரிக்கப் பட்டது? நம்முடைய உள்ளம் மட்டும் என்ன கடலெண்ணெயில் பொரிக்கப்பட்டதா? என்று நாம் சிந்திக்கவேண்டும்.

நம்முடைய உள்ளம் அவ்வளவு விசாலமில்லையானால் நம் எல்லோருடைய உள்ளங் களைவிட விசாலமான ஒரு யானையினுடைய உள்ளம் ஏன் அப்படிக் கூறக்கூடாது என்று நீங்கள் சிந்திக்கவேண்டும். இன்றைய மதமும், கடவுளும் வேறு இறந்த எந்தக் காலத் துக்கோ தோற்றுவிக்கப்பட்டவை. அப்போது மக்கள் சக்கிமுக்கிக் காலத்தில் இருந்தனர். ஆகவேதான், அவை இன்றைய 'எலக்டிரிசிடி' காலத்திற்குப் பயன்படாமல் போய் விட்டன.

இன்றைய கடவுள் கருத்தும் மதக் கருத்தும்—ஆகாயத்தில் இரண்டு இராட்சதர்கள் சண்டையிட்டுக் கொள்வதால், பாணம் உராய்வதால் இடி ஏற்படுகிறது; மின்னல் ஏற்படு கிறது என்று நம்பிய காலத்தில் தோற்றுவிக்கப்பட்டனவாகும். எங்காவது இடி விழுமானால்—அங்கு யாரோ கெட்டுப்போனவர்கள் இருந்தார்கள்; அவர்களை அழிக்கத் தான் கடவுள் இடியை அங்கு விழும்படி செய்தார் என்று நம்பிய காலத்தில் தோற்றுவிக்கப் பட்டனவாகும். இன்று கோயில்கள்மீது இடிவிழுவதைப் பார்த்து எவனாவது இக் கருத்துக் களை நம்புவானா? அந்தக் காலத்திற்குத் தோற்றுவிக்கப்பட்ட மதமும் கடவுளும் அன்றையப் பாதுகாப்புக்குப் போதுமானதாய் இருந்தன. அந்தக் காலத்திய பாதுகாப்புக்கு இன்று யாரும் பயப்படுவதில்லை. அந்தக் காலத்தில் ஒரு 5 ரூபாய் நோட்டை வைத்து அதன்மீது ஒரு பளுவையும் வைத்து, நாலு பக்கங்களிலும், ஏசுநாதர், முகம்மது நபி, சிவன், மகாவிஷ்ணு என்று எழுதிவிட்டுப் போய்விட்டால் ஒருவன்கூட அதை எடுக்கத் துணியமாட்டான்; இன்றையக் காலத்திலோ அதை ஒருவன்கூட எடுக்காமல் இருக்க மாட்டான். அந்தக் காலத்தில் சாந்தி கழிக்க முச்சந்தியில் வைக்கப்பட்ட இடியாப்பத்தை எவனும் தொட அஞ்சுவான்; இன்றோ எவனும் அதைத் தாராளமாக எடுத்துத் தின்று விடுவான்—நானும் தின்று இருக்கிறேன். மனிதன் நிலை அவ்வளவு மாறிவிட்டது. அந்த மாறுதலுக்கேற்ப மற்றவைகளையும் மாற்றியமைக்க வேண்டியது அவசியம்.

அர்ச்சகன் பொறுக்கித் தின்ன மதம்; அதிகாரி பொறுக்கித் தின்ன இராஜ்யமா? காந்தியார் போனதுமல்லாமல், அதன்பயனாக நாட்டில் நாசவேலைகள், கொலைகள், கொள்ளைகள் அதிகம் நடைபெற ஆரம்பித்துவிட்டன. இதைத் தடுக்க ஆட்சியாளர்கள் சரியான நடவடிக்கை ஒன்றும் எடுத்துக்கொள்வதாகக் காணோம்; மாறாக, இதைத் தங்கள் கட்சிக்குப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். பாதுகாப்பற்ற மக்கள் சர்க்கார் கட்சிக்கு அடிமையாகி விடுகிறார்கள். ஆகவே, கடவுள் மதம் யாருக்கும் பயன்படாவிட்டாலும் சில சோம்பேறி அர்ச்சகர்கள் வயிற்றுப் பிழைப்பிற்காக எப்படிப் பயன்பட்டு வருகின்றனவோ அதேபோல்—இன்றைய இராஜ்யபாரமும் மக்களுக்குச் சிறிதும் பயனற்ற முறையில், அர்ச்சகர்களைப்போல்—சில அதிகாரிகள், கட்சியாளர்கள் பொறுக்கித் தின்னமட்டுமே பயன்பட்டு வருகிறது. மக்களை நல்லொழுக்கத்தில் நடத்திச் செல்லவென்பதாகச் சொல்லி ஏற்படுத்தப்பட்ட மடங்கள், எப்படி மடாதிபதிகளின் உல்லாச வாழ்க்கைக்காகவும் அவரு டைய பெருமைக்காகவும், அவர்களுக்கு இன்பமூட்டுபவருக்கும் பயன்படுத்தப்பட்டு வரு கின்றனவோ அதேபோல்—சர்க்கார் அமைப்பும் மந்திரிகள், அவர்கள் பிரியர்கள், அதி காரிகள் ஆகியவர்களது பெருமைக்காகப் பயன்படுத்தப்பட்டு வருகிறதே ஒழிய, மக்களை நல்ல முறையில் நடத்திச் செல்லப் பயன்படுத்தப்பட்டு வரவில்லை. கடவுளுக்குச் செய்யப்

படும் உற்சவமும் ஊர்வலமும் எப்படி நம் நல்வாழ்வுக்குப் பயன்படாமற் போனதோடு நமக்கு மேலும் மடமையையும் தொல்லையையும் விளைவிக்கப் பயன்பட்டு வருகின்றனவோ, அதேபோல்—சர்க்காருக்கு நாம் அழுதுவரும் வரிப்பணமும் நமக்குப் பயன்படாமற் போவதோடு நமக்கு மேலும் பல தொல்லைகள் கொடுப்பதற்காகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஒரு தொல்லைக்கும் போகாதவனுக்குக்கூட இன்றைய இராஜ்யத்தில் தொல்லை ஏற்பட்டு விடுகிறது.

இந்து-முஸ்லிம் கலவரமென்றால், யாதொரு பாவமும் அறியாமல், பீடிபிடித்துக் கொண்டே குதிரையை அதட்டிக்கொண்டு போகும் ஜட்கா வண்டிக்காரனுக்குக்கூடவா தொல்லை வர வேண்டும்? அவன் வீடும் வாசலுமா அக்கினிக்கு இரையாவது? காந்தியார் கொல்லப்பட்டார் என்பதால் சும்மா கிடக்கிற கிழவிகள்கூடவா—அரிசி பருப்பு இல்லாமல் தெருவில் திண்டாடவேண்டும்? ஆட்சியாளர்கள் இதைக் கவனித்தார்களா? அன்னியன் செய்த வழியால் ஏதோ உங்கள் இராஜ்யத்தில் சிக்கிக்கொண்டோம் என்றால்—எங்களை இப்படியா நீங்கள் வாட்டவேண்டும்? விடுதலை கிடைத்துவிட்டதென்றால், 'மோட்ச லோகமும்', 'பகவான் திருவடி நிழலும்' ஒரு முழத் தூரத்திற்கா வந்துவிட வேண்டும்? இன்றைய ஆட்சியில் யாருக்கேனும் பாதுகாப்பு உண்டா? முதன் மந்திரியாருக்கு முள்வேலியும், பட்டாளமும் பாதுகாப்பு! அவருடைய அடுத்த மந்திரியாருக்கு அவருடைய தந்திரமே பாதுகாப்பு. மற்றவர் நிலை என்ன ஆவது? மிருகங்கள் மாதிரி சண்டை யிட்டுக்கொண்டு மடியவா, நாம் மக்களாய்ப் பிறந்தோம்? இவ்வளவு திக்கற்ற நிலைக்கு நாம் வந்துசேர நமது உணர்ச்சிதானே காரணம்? இது ஒழிக்கப்படவேண்டுமென்று கூறுவதற்காகவா நாங்கள் விரோதிகள் ஆகவேண்டும்?

மற்ற நாடுகளில் நாகரிகம் வலுக்க வலுக்க, நம் நாட்டில் அநாகரிகம் வலுக்கிறதே! மற்ற நாடுகளில் அறிவு பெருகப் பெருக, தொழில் பெருகவும் செல்வம் பெருகவும் திட்டம் தீட்டப்படுகிறது. நம் நாட்டில் அறியாமை அப்படியே இருக்க—விரோதமும் துவேஷமும் வளர—பணக்காரன், பணக்காரனாகவே இருக்க—ஏழை ஏழையாகவே இருக்கத் திட்டம் தீட்டப்படுகிறது! 'எல்லா மாகாண மக்களுக்கும் அதிகாரம் இருக்குமானால் ஆட்சி சரிவர நடக்காது; ஆகையால் ஒரு மாகாணத்தில்—அதுவும் ஒரு சிலருக்குத்தான் அதிகாரம் இருக்கவேண்டும்; அதுவும் 2000 மைல் தூரமுள்ள டில்லியில்' என்று தைரிய மாகக் கூறப்படுகிறதே இன்று. இதுவா, சுயராஜ்யம்?

'இந்த நாட்டுத் தொழிற்சாலைகளை எல்லாம் சர்க்கார் எடுத்து நடத்தவேண்டும் என்று மக்கள் நினைப்பது தவறு; சர்க்கார் எடுத்து நடத்துமானால் நிர்வாகம் சரியாக இருக்காது; ஆகவே தனிப்பட்ட முதலாளிகளே தொழில் நடத்த அனுமதிக்கப்படுவார்கள்' என்று இன்றைய ஆட்சிபீடம் அதுவும் முதலாளி உருவாரம், தெரிவித்துவிட்டதே! சுய ராஜ்யம் வேண்டும், விடுதலை வேண்டும் என்று இதற்காகவா நாமெல்லோரும் கூப்பாடு போட்டோம்? சுயராஜ்யம் வந்ததும் எங்கள் நாட்டை ஆள எங்களுக்கு உரிமைவேண்டும் என்று கேட்டால் அதுவே இராஜ துரோகமாகக் கருதப்படும் என்று தைரியமாக 'கான்ஸ்டி டியூஷனில்' கூறப்படுகிறதே இன்று! வெள்ளையன் ஆண்டபோது எதை உரிமையோடு கூறலாமோ அதைக் கூறுவதற்கு இன்று உரிமையில்லாமற்போய்விட்டதே!

விடுதலை வந்தால் பிறவி இழிவு நீங்குமென்று நினைத்தோம். ஆனால், விடுதலை கிடைத்த பிறகு, அந்தப் பிறவி இழிவு நீங்க வேண்டுமென்று பேசக்கூட நமக்கு உரிமை யில்லாமற்போய்விட்டதே! அப்படிச் சொன்னதற்காகவே நான் சிறைப்படுத்தப்படப் போகிறேன். இதன் அர்த்தம் என்ன? 'இழிவு இருக்கலாம்; சூத்திரன் இருக்கலாம்; அதனால் ஏற்பட்ட தொல்லைபற்றி மட்டும் பேசக்கூடாது' என்றால் அதன் அர்த்தம் என்ன? அயல்நாடுகளிலெல்லாம், 'அடுத்த 50 ஆண்டில் நாம் எவ்வளவு முன்னேற்றமடைய வேண்டும்' என்றெல்லாம் திட்டம் தீட்டப்படுகிறது. நம் நாட்டில், 1900 ஆண்டில் நாம்

எப்படி இருந்தோம்? 1800, 1700, 1600 இவ்வாண்டுகளில் நாம் எப்படி இருந்தோம்? அப்போதைய நம் நிலை என்ன? அப்படி இருப்பதற்கு நாம் என்ன செய்யவேண்டும் என்று திட்டம் தீட்டப்படுகிறதே! அசோகர் காலத்திற்கு அழைத்துச் சென்றுவிட்டதே நம்மை!

அந்த அசோகனுக்கும் நமக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா? அவன் காற்று, மழைக்காவது இத் திராவிட நாட்டில் ஒண்டியிருப்பானா? மற்றவர்களெல்லாம் தேசிய முன்னேற்றத் திட்டம் வகுக்க, இவர்கள் தேசியப் பின்னேற்றத் திட்டம் வகுக்கிறார்களே! இப்படிப்பட்ட பரிதாபகரமான தன்மைக்கு நாம் வந்து கொண்டிருக்கிறோம்! பாமர மக்களை வைத்துக்கொண்டு விளையாட்டுத் தன்மையில் ஆட்சிபுரிகிறார்களே; சிந்திக்க வேண்டாமா?

பண்டைய நாகரிகமென்று கூறி பாமர மக்களை ஏய்த்து, பழமைக்குக் கொண்டு செல்கிறார்களே, நம்மை.

இந்த நிலையை மாற்ற அறிவுள்ள மக்களாவது சிந்திக்க வேண்டாமா? அதற்கான முயற்சிகளை கஷ்ட நஷ்டங்களுக்கு உட்பட்டேனும் செய்ய வேண்டாமா? யாருக்கும் பயன் படாதமுறையில் சில தந்திரசாலிகளால், தம் சுயநலத்திற்காக நடத்தப்பட்டு வரும் முறையில் நாம் இருப்பதா என்று சிந்தித்து இதை மாற்றியமைப்பதில், உங்கள் கவனமும், கவலையும் செல்ல வேண்டாமா? நீங்கள் எல்லோரும் ஒற்றுமையோடு இழிவு நீங்கப் பாடு படுங்கள். ஒரு குடும்பத்தினரைப்போல் ஒற்றுமையாக வாழப் பழகிக்கொள்ளுங்கள். பார்ப் பனரைப் பார்த்தேனும் ஒன்றுபடுங்கள். பிரகாசத்தை ஒழிக்க அரும்பாடுபட்ட பார்ப் பனர்கள் எல்லோரும் இன்று ஓமாந்தூராரைக் கவிழ்க்கப் பிரகாசம் பந்துவோடு கூடிக் குலாவ வில்லையா? இதை யாராவது தவறு என்று கூறுவார்களா? ஒரு சிறு பார்ப்பனக் குஞ்சுகூட இதைத் தவறு என்று நினைக்காதே!

அதுபோல், நீங்களும் உங்கள் கட்சி வேறுபாடுகளை மறந்து, திராவிடர்கள் யாவரும் பேதாபேதமற்று, பொருளாதார சமத்துவம் பெற்று, அன்னியன் சுரண்டலற்று இன்ப வாழ்வு வாழ வழி செய்துவரும் திராவிடர் கழகத்தையும் அதன் திட்டங்களையும் ஆதரியுங் கள்; அனைவரும், கறுஞ்சட்டை அணியுங்கள்.

[திருவல்லிக்கேணி கடற்கரையில், 7-3-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 11-3-1948]

## 12. யோக்கியமான ஆட்சி

அன்புள்ள பெரியோர்களே! தாய்மார்களே! தோழர்களே!

'நாதசுரக் குழாயாய் இருந்தால் ஊதியாக வேண்டும்; தவுலாயிருந்தால் அடிபட்டுத் தானாக வேண்டும்' என்பது போல்—எனக்குத் தொண்டை, குரல் உள்ள வரையில் பேசியாக வேண்டும்; பிரசங்கம் செய்தாக வேண்டும் என்ற எண்ணம் இருந்தாலும் இவ்வளவு பெரிய கூட்டத்தைக் காண்பதால் ஏற்பட்டுள்ள உள்பூரிப்பும் ஒரு தனியான அகம்பாவமும், என் உள்ளம் பூராவையும் கவர்ந்து நிற்கிறது. இருந்தாலும் முயற்சித்து ஏதோ சொல்கிறேன்.

சேலம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட சில புரட்சிகரமான தீர்மானங்களால் சர்க்கார் சம்பந்தம் நீங்கப்பெற்று, கழகத்தில் பெரும் மாற்றமடைந்து திராவிட நாடு பிரிவினையும் இலட்சியமாக்கப்பட்டதிலிருந்து நமது செல்வாக்கு அனுதினமும் பெருகிக்கொண்டே வருகிறது. இதைக் காணும் சில பொறாமைக்காரர்களும், மேதாவிகள் என்று தம்மை நினைத்துக்கொண்டிருக்கும் சில புத்திசாலிகளும் நம்மீது ஏதேதோ குற்றங் குறை கூறி வருகிறார்கள். நம் கழகத்தைப் பின்பற்றி நடந்துவருபவர்களை, இவர்கள் பைத்தியக் காரர்கள் என்றுகூடக் கருதிவருகிறார்கள். என்னைப் பொறுத்த வரையில் என்னைப்

பின்பற்றி நடந்துவருபவர்கள் புத்திசாலிகளாய் இருக்கவேண்டுமென்ற கவலை எனக்கு ஒரு சிறிதும் கிடையாது. தங்கள் அறிவை ஆற்றலை மறந்து, என் இலட்சியத்தை நிறை வேற்றிக் கொடுக்கக்கூடிய ஆட்கள்தாம் எனக்குத் தேவையே ஒழிய, அவர்கள் புத்தி சாலிகளா, முட்டாள்களா, பைத்தியக்காரர்களா, கெட்டிக்காரர்களா என்பதுபற்றி எனக்குக் கவலை இல்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் எனது மதிப்பிற்குரிய நண்பர் மாணிக்க நாயகர் அவர்கள் கூறியது எனது ஞாபகத்திற்கு வருகிறது. அவர் ஈரோட்டில் 'எக்ஸிகியூட்டிவ் என்ஜினீய ராய்' இருந்தபோது அவர் எங்கள் வீட்டில் குடியிருந்தார். மாடுகளுக்குச் சுலபமாய் இருக்கக்கூடிய பதுமாதிரியான கவலை ஒன்று செய்யத் தனக்கு இரண்டு கொல்லர்களைத் தருவித்துக்கொடுக்கும்படி சொன்னார். நான் யோசித்து இரண்டு கெட்டிக்காரக் கொல் லர்களின், அதாவது துப்பாக்கி செய்யக்கூடியவர்களின் பெயரைக் குறிப்பிட்டு, அவர் களை அழைத்துவரும்படி என் காரியஸ்தர்களுக்குக் கூறினேன். அப்போது அவர் சொன் னார், 'Brother, கெட்டிக்காரன் என்பவர்களை அனுப்பிவைப்பாயானால், அவர்கள் இருவருக்குள்ளும்—கெட்டிக்காரத்தனப் போட்டி வேலையைக் கெடுத்துவிடும். அவர்களே எனக்கு யோசனை சொல்ல முந்துவார்கள். என் திட்டம் ஆட்டம் கொடுத்து வேலை நடவாது. ஆகவே, நான் சொல்வதைப் புரிந்துகொண்டு, அதன்படி வேலை செய்யக் கூடிய ஒரு படிமானமுள்ள—சொன்னபடி நடக்கக்கூடிய, சம்மட்டியும் சுத்தியும் பிடித்துப் பழகிய இரண்டு ஆளை அனுப்பிவைத்தால் போதுமானது. அவர்கள் முட்டாள்களா யிருந்தாலும் சரி; அவர்களைக் கொண்டு சுலபத்தில் வேலையை முடித்துக்கொள்ளலாம்' என்று கூறினார். புத்திசாலிகள் சண்டையிட்டுக் கொள்வது எப்பொழுதுமே இயற்கை தான். ஆகவேதான், நான் நீடாமங்கலம் மாநாட்டின்போதே மிகத் தெளிவாகக் கூறி யிருக்கிறேன்: 'என்னைப் பின்பற்றுபவர்கள் தங்கள் சொந்தப் பகுத்தறிவைக்கூடக் கொஞ்சம் தியாகம் செய்யவேண்டும்' என்று. யாராவது ஒருவன்தான் 'நடத்தக்கூடியவ னாக' இருக்க முடியுமே தவிர, எல்லோருமே தலைவர்களாக இருக்க முடியாது. மற்றவர் கள், தலைவர் இட்ட கட்டளைப்படி நடக்க வேண்டியவர்கள்தாம். தோழர்களே! நான் இப்போது கூறுகிறேன்; நீடாமங்கலத்தைவிட ஒரு படி மேல் சொல்லுகிறேன்—கண்மூடிப் பின்பற்றுங்கள்!

நீங்கள் இந்த இயக்கத்தில் உள்ளவரை உங்கள் சொந்தப் பகுத்தறிவைமட்டுமல்ல, உங்கள் மனச்சாட்சி என்பதைக்கூட நீங்கள் கொஞ்சம் மூட்டைகட்டி வைத்துவிட வேண்டியதுதான். கழகத்தில் சேருமுன்பு உங்கள் பகுத்தறிவுகொண்டு, கழகக் கோட்பாடு களை எவ்வளவு வேண்டுமானாலும் ஆராய்ந்து பார்க்கலாம்; என்னுடன் வாதாடலாம்; உங்கள் மனச்சாட்சி என்ன கூறுகிறது என்று நீங்கள் எவ்வளவு காலத்திற்கு வேண்டு மானாலும் ஆற அமர இருந்து யோசித்துப் பார்க்கலாம். ஆனால், எப்போது உங்கள் மனச்சாட்சியும், பகுத்தறிவும் இடங்கொடுத்து—கழகத்தில் அங்கத்தினர்களாகச் சேர்ந்து விட்டீர்களோ அப்போதிலிருந்தே உங்கள் பகுத்தறிவையும் மனச்சாட்சியையும் ஒரு புறத்தில் ஒதுக்கிவைத்துவிட்டு, கழகக் கோட்பாடுகளைக் கண்மூடிப் பின்பற்றி நடக்க வேண்டியதுதான் முறை.

ஒரு எஜமான் வேலைக்காரனைப் பார்த்து 'அந்தப் பெட்டியைக் கொஞ்சம் எடப்பா' என்று கூறினால் 'என் மனச்சாட்சி என்னை அதற்கு அனுமதிக்கவில்லையே' என்று கூறினால்—அது முறையாகுமா? ஒரு டிஸ்டிரிக்ட் சூபரின்டென்டென்ட் 'சுடு!' என்று போலீஸ்காரனுக்கு உத்தரவுபோட, அவன், 'என் மனச்சாட்சி அதற்கு இடங்கொடுக்க வில்லையே' என்று கூறினால் அந்த சூபரின்டென்டென்ட் கதி என்ன ஆவது? கசாப்புக் கடையில் வேலைபார்க்க ஒப்புக்கொண்டவன், 'அந்த ஆட்டை வெட்டுடா' என்று எஜமான் உத்தரவிடும்போது, 'அய்யோ, என் மனச்சாட்சி மாட்டேன் என்கிறதே, நான் என்ன

செய்யட்டும்!" என்று கூறினால், 'ஏண்டா, மடப் பயலே முன்னாடியே உனக்கு இது தெரியாமற் போனதென்னடா? அப்போது உன் மனச்சாட்சி எங்கேயடா போயிருந்தது?' என்று கேட்பானா இல்லையா, அவன்? ஆகவே மனச்சாட்சியோ, சொந்தப் பகுத்தறிவோ, கழகக் கொள்கையை ஒப்புக்கொள்ள மறுக்குமானால் உடனே விலகிக்கொள்வதுதான் முறையே ஒழிய உள்ளிருந்துகொண்டே குதர்க்கம் பேசித்திரிவது என்பது விஷமத்தனமே ஆகும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

சிலருக்கு நான் ஏதோ சர்வாதிகாரம் நடத்த முற்படுகிறேன் என்று தோன்றலாம். இது ஓரளவுக்குச் சர்வாதிகாரம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் தோழர்களே! சிந்திக்கவேண்டும், இந்த சர்வாதிகாரம் எதற்குப் பயன்படுகிறது என்று. என்னுடைய சர்வாதிகாரத்தைக் கழக இலட்சியத்தின் வெற்றிக்காக, பொதுநன்மைக்காகப் பயன்படுத்துகிறேனே தவிர, எந்தச் சிறு அளவுக்கும் எனது சொந்தப் பெருமைக்காகவோ, ஒரு சிறு கடுகளவாவது சொந்த நன்மைக்காகவோ, பயன்படுத்திக் கொள்ளவில்லை என்பதை நீங்கள் ஆராய்ந்து பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டுகிறேன். என் சொந்த விளம்பரத்திற்காக, என் சொந்தப் பெருமைக்காக இதுபோன்ற மாநாடுகள் கூட்டப்படுகின்றன என்று சிலர் கருதுவதற்கொப்ப, இம்மேடையின்கண் பேசநேரும் தோழர்களும் என்னைப்பற்றிப் புகழ்ந்து பேசுவதிலேயே, தமது சொற்பொழிவுக்குக் கொடுக்கப்படும் நேரத்தின் பெரும்பகுதியைச் செலவுசெய்கிறார்கள். இதை நான் அறவே வெறுக்கின்றேன்; சிறிதும் விரும்பவில்லை. ஆகவே, சொற்பொழிவாளர்கள் என்னைப் பற்றிப் புகழ்ந்து பேசாமல் இருக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

சென்ற மாநாட்டிற்குப்பின் நடைபெற்ற முக்கிய நிகழ்ச்சிகளில் முதன்மையாகப் பேசப்படவேண்டியது காந்தியாரின் மறைவைக் குறித்தாகும். காந்தியார் உயிரோடிருந்த வரை அவருடைய போக்கைப் பெரும் அளவுக்குக் கண்டித்துவந்த எனக்கு காந்தியார் மறைவுக்குத் துக்கப்படவோ, அவரது மறைவுக்குப்பின் அவரைப் பற்றிப் புகழ்ந்து பேசவோ என்ன உரிமை உண்டென்று சிலர் கேட்கலாம். சிலர், காங்கிரஸ்காரரின் நல்லெண்ணத்தைச் சம்பாதித்துக்கொள்ளவே நான் இவ்விதம் சூழ்ச்சி செய்வதாகவும் கருதி இருக்கலாம். ஆனால், தோழர்களே! இவை உண்மையல்ல. காந்தியார் மறைவுக்காக எந்தக் காங்கிரஸ்காரர் துக்கப்பட்டார்? அழுதார்? வேதனைப்பட்டார்கள்? காங்கிரஸ்காரர்கள் பண்டிகை கொண்டாடினார்கள்; காங்கிரஸ் முக்கியஸ்தராக இருந்த பார்ப்பனர்கள் இனிப்பு வழங்கினார்கள். எனக்கு உண்மையிலேயே இப்பொழுதும் துக்கம் மேலிடுகிறது. காந்தியார் மறைவுக்கு அனுதாபப்பட, மற்றவர்களைக்காட்டிலும் அதிகத் துக்கப்பட வேறு பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக, காங்கிரஸ்காரர்கள் பலரும், பார்ப்பனர்களும் கருதி இருக்கிற காந்தியார் வேறு; இறந்த காந்தியார் வேறு என்று நான் கருதுகிறேன். 'இருந்த காந்தியார் ஆரியர் காந்தியார்; ஆரியரால் உண்டாக்கப்பட்ட காந்தியார்; நம் எதிரிகளின் காந்தியார். ஆனால் 'இறந்த காந்தியார்' நம் காந்தியார்; ஆரியம் அழிந்துவிடுமே எனப் பயந்து ஆரியரால் கொல்லப்பட்ட கொலையுண்ட காந்தியார். அதனால்தான், நாம் மற்றவர்களுக்கும் மேலாகத் துக்கப்படுகிறோம். அதனால்தான் மற்றவர்களைவிட நமக்குத்தான் அவர் மறைவுக்காகத் துக்கப்படவும் உரிமை உண்டு என்றும் கூறிக்கொள்கிறோம். ஒருவர் தம் மறைவு காலத்தில் எந்த நிலையில் இருக்கிறாரோ அதைப் பொறுத்துத்தான் அவருடைய மறைவுக்குத் துக்கப்படுபவர்களும், சந்தோஷப்படுபவர்களும் அமைவார்கள். உதாரணமாக நான்; 'காங்கிரஸ் இராமசாமி' யாக ஒரு காலத்திலும், 'சுயமரியாதை இராமசாமியாக' ஒரு காலத்திலும், 'திராவிடர் கழக இராமசாமியாக' தற்காலத்திலும் இருந்துவருகிறேன். காங்கிரஸ் இராமசாமியாக இருந்த காலத்தில் இறந்திருந்தால் 'சுதேசமித்திரன்' ஆசிரியர் உள்பட, 'இந்து' ஆசிரியர் உள்பட பல காங்கிரஸ்காரர்களும், அய்யர், அய்யங்காரர்களும் துக்கம் கொண்டாடியிருப்பார்கள். ஒரு சில சுயமரியாதைக்காரப் பார்ப்பனர் தவிர்த்து மற்ற பார்ப்பனர்கள்,

வைதீகர்கள் எல்லோரும் சந்தோஷப்பட்டபடி இருப்பார்கள். ஆனால், இன்று மறைய நேர்ந்தாலோ திராவிடர்கள் அனைவரும் துக்கம் கொண்டாடலாம் என்று கருதுகிறேன்.

இதேபோல், காந்தியாரும் தம் மறைவின்போது திராவிடர் கழகக் கொள்கைகளை ஒப்புக்கொண்ட காந்தியாராகத்தான் இறந்தாரே ஒழிய, ஆரியதர்மத்தை ஒப்புக்கொண்ட காந்தியாராக மறையவில்லை. இந்து மத தர்ம அநீதியைக் கண்டிக்கப் புகுந்ததால், அதற்கான பயனை அடைந்தார். 'சூத்திரன் தலையெடுத்தால் பார்ப்பானுக்கு ஆபத்து' என்ற மனுதர்ம விதிப்படி, அவர் பார்ப்பனனால் கொல்லப்பட்டார். இராமாயணக் கதையில் சம்புகன் அடைந்த கதியை அவர் அடைந்தார். சம்புகன் கொல்லப்பட்டதற்கு ஆரியப் பார்ப்பனர்கள் அகமகிழ்ந்ததாக—இறந்த பார்ப்பனர்களெல்லாம் உயிர்த்தெழுந்ததாகக் கதையில் காணப்படுகிறது. காந்தியார் கொல்லப்பட்டமைக்குப் பார்ப்பனர்கள் மிட்டாய் வழங்கியதை நாம் நேராகப் பார்த்தோம். காந்தியார் மறைவுக்குப் பார்ப்பனர்களே காரணம் என்று வடநாட்டில் பார்ப்பனர்களின் வீடுகள் சூறையாடப்பட்டதையும், பார்ப்பனத் தாய்மார்கள் அவமானப் படுத்தப்பட்டதையும், பார்ப்பனர்கள் தங்க இடம் இன்றி ஓடித் தவித்ததையும் நாம் பத்திரிக்கையில் பார்த்தோம். அதற்கு நஷ்டஈடாக பம்பாய் மாகாண சர்க்கார் ஒவ்வொரு பார்ப்பனனுக்கும் ரூ. 2000 இனாமாகவும் ரூ. 25,000/- வரை ரொக்கக் கடனும் கொடுத்துதவியதாகவும் நாம் பத்திரிக்கையில் பார்க்கிறோம். இங்கு பார்ப்பனர்களுக்கு அத்தகைய கேடு நேரவில்லை. இதற்கு நம் கழகம்தான் காரணமே யொழிய காந்தியார் மறைவுக்குத் துக்கப்படுபவர் இந்நாட்டில் இல்லாமல் போனதால் அல்ல.

இதை அறியாத பார்ப்பனர்கள் ஆணவத்தோடு அந்தணர் மாநாட்டைக் கூட்டி நமக்குச் சவால் விடுகிறார்கள். இந்தப் பார்ப்பனர்களை இன்றுமட்டுமல்ல, என்றுமே காப்பாற்றி வருபவர்கள் நாம்தாம். இந் நாட்டிலிருந்து பார்ப்பனர்களை அறவே ஒழித்துக் கட்ட வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்த (ஜஸ்டிஸ் கட்சியின் ஆட்சியில்) ஒரு காலத்தில் பார்ப்பனர்கள் தெருவில் வரக்கூடிய யோக்கியதையற்றுக் கிடந்தார்கள். அந்தக் காலத்தில் ஜஸ்டிஸ் கட்சியை இருந்த இடம் தெரியாமல் ஒழிக்க நான் தேசியத்திற்கு முதல் அடிமையானேன். தோழர் பி. வரதராஜுலு நாயுடு அடுத்த அடிமையானார். தோழர் கலியாணசுந்தர முதலியார் மூன்றாவது அடிமையானார். இராஜகோபாலாச்சாரியார், எஸ். சீனுவாசய்யங்கார், ரெங்கசாமி அய்யங்கார், சத்தியமூர்த்தி அய்யர் போன்றவர்களுக்கு மேடையில் இடம் வாங்கிக் கொடுத்தவர்களும், அவர்களுக்குத் தமிழ் பேசக் கற்றுக்கொடுத்தவர்களும் நாங்கள்தாம்.

அக் காலத்தில் தோழர் இராஜகோபாலாச்சாரியார் 'வீடு பிரித்துப்போட்டுக் கிடக்கு' என்று கூறுவார். சத்தியமூர்த்தி அய்யருக்கு—நேக்கு, நோக்கு, அம்மாஞ்சி, அம்மாமி, அவா இவா—இவை தவிர வேறு தமிழ் வார்த்தைகள் பேசத் தெரியாது. ரெங்கசாமி அய்யங்கார், டாக்டர் இராஜன், 'சுதேசமித்திரன்' ஆசிரியர்கள் ஒரு சிலர் தவிர்த்து அந்தக் காலத்தில் பார்ப்பனர்களில் தமிழ் பேச ஆள் கிடையாது. கூட்டத்தில் பார்ப்பனர்களுக்குப் பேச உரிமை வாங்கிக் கொடுத்தவர்களும் அவர்களுக்குத் தியாகம் செய்ய (ஜெயிலுக்குப்போக)க் கற்றுக்கொடுத்தவர்களும் நாங்கள்தாம். இராஜகோபாலாச்சாரியாரை வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள், இது உண்மையா, அல்லவா என்று! அவர் நாளை கவர்னர் ஜெனரலாகப் போகிறார்; என்னையும் காண்பார்; கண்டால் வெட்கப்படப்போகிறார். கட்டியழப் போகிறார். 'நான் இப்படியானேன்; நீ அப்படியே இருக்கிறாயே' என்று கேட்பார். நாங்கள் இல்லாதிருந்தால் இந்த நாட்டில் இராஜகோபாலாச்சாரி ஏது? கவர்னர் ஜெனரல் பதவிதான் ஏது? சர்வம் பார்ப்பனீய சுயராஜ்யம் ஏது? பெற்ற பதவியில் நான் பங்கு கேட்கவில்லை.

உங்களுக்குச் சுயராஜ்யம் வந்துவிட்டது; பதவி வகிக்கிறீர்கள் என்றால் எங்கள் குறைபாடுகளை எடுத்துச் சொல்லக்கூடவா எங்களுக்கு உரிமை இருக்கக்கூடாது? சுய

ராஜ்யம் வந்துவிட்டதென்றால் சுயராஜ்யத்தில் பதவி வகிக்க நேர்ந்த சுயராஜ்யப் புலிகள் மற்றவர்களை ஆடுகளைப்போல் கொன்று அழித்துத்தான் தீரவேண்டுமா? கொள்ளைக் காரர்களும் வஞ்சகர்களும், காலிகளும் எப்போதும்போல் சாதுக்களை, யோக்கியர்களை ஏழைகளை வஞ்சிக்கத்தான், கொள்ளை அடித்துத்தான் வாழ்ந்துவர வேண்டுமா? சுய ராஜ்ய சர்க்கார் இதைத் தடைசெய்ய வேண்டாமா? சுயராஜ்ய சர்க்காரில் ஏழைகள்தாம் அதிக வரி செலுத்தவேண்டுமா? சுயராஜ்யம் வந்து ஏழைகள் பட்டினி கிடக்கவேண்டுமா? சுயராஜ்யம் வந்துவிட்டதென்றால் ஒரு ஊரில் அரிசி ரூபாய்க்கு ¾ படியும், ஒரு ஊரில் அரிசி ரூபாய்க்கு 2¾ படியுமா விற்பது? உண்மையாகக் கூறுகிறேன், தோழர்களே உங்களுக்கும் கேட்க அதிசயமாயிருக்கும்.

நமது மாநாட்டிற்குத் தேவையான அரிசியை விலை சரசமாயுள்ள (அதாவது ரூபாய்க்கு 2¾ படி விலையுள்ள) தஞ்சை ஜில்லாவிலே வாங்கிக்கொள்ள அனுமதி தரவேண்டு மென்று மந்திரியாருக்கு விண்ணப்பித்துக் கொண்டோம். அதற்கு மந்திரியார் பதில் எழுதி யிருக்கிறார்: இந்த மாகாணத்தில் இந்த ஒரு ஜில்லாவில்தான் நெல் அதிகமாக விளைந்து விட்டது. ஆகவே, அந்த அரிசியை வாங்கிக்கொள்ள உங்களுக்கு அனுமதி கொடுக்க மாட்டோம்; வேறு எந்த ஜில்லாவில் வேண்டுமானாலும் 50 மூட்டை வரைக்கும் வாங்கிக் கொள்ளுங்கள்' என்று எழுதியிருக்கிறார். அதிகமாக விளைந்துள்ள ஊரில் நெல்லும் அரிசியும் மக்கிப் புழுக்கவேண்டுமாம்! பற்றாக்குறை ஜில்லாவில் மேலும் அரிசி வாங்கி, மேலும் அந்த ஊரில் பஞ்சத்தை அதிகமாக்க வேண்டுமா? சுயராஜ்ய சர்க்காரின் புத்தி சாலித்தனத்திற்கு இதை விடச் சான்று ஒன்று வேண்டுமா? எவ்வளவு கவலையற்ற முறையில், அறிவற்ற முறையில் சுயராஜ்ய ஆட்சி நடப்பது? சுயராஜ்ய ஆட்சியில் 'கள்ள மார்க்கெட்' கொள்ளைக்கும், இலஞ்சத்திற்கும் ஒரு அளவே காணோம்! பணத்திற்கு மிஞ்சிய மோகினியைக் காண முடியவில்லையே? எதையும் பணம் கொடுத்துச் சாதித்துக் கொள்ள முடிகிறதே! மந்திரிகளே பணக்காரன் காலடியில் வீழ்ந்துகிடக்கிறார்களே! பணக்கார முதலாளிகளுக்குச் சாதகமாக, தொழிலாளிகளுக்குக் கூடுமான அளவுக்குத் தொல்லை கொடுக்கிறார்களே! இந்தக் குறைபாடுகளை எடுத்துக் கூறுவதுகூட குற்றமாகக் கருதப்படுமானால், ஆட்சி என்று ஒன்று இருக்கவேண்டுமா? நேற்று முளைத்த காளான்கள் தானே நீங்கள்? அதன் தன்மையை நீங்கள் அறியாமற் போனதேனோ? காளான்கள் வெயிலில் கருகிப்போகும்; மழை பெய்தால் துளிர்க்கும். அதுபோல், இந்த சுயராஜ்ய காலம் உங்களுக்கு மழைக்காலமாயிருக்கிறது; நீங்கள் துள்ளிக் குதிக்கிறீர்கள். நாளை மக்கள் அறிவு பெற்றெழுவார்களானால் (வெயிற்காலம் வருமானால்) நீங்கள் காளான்களைப்போல் கருகவேண்டியவர்கள்தாமே? இதைச் சிந்திக்க வேண்டாமா, நீங்கள்? ஒரு காமராசரோ, ஒரு வைத்தியநாதய்யரோ, ஒரு டாக்டர் இராஜனோ எங்களைவிட எப்படி எந்தக் காரியத்தில் தகுதி பெற்றவர்கள்?

நாங்கள் நம்பிக்கைக் குறைவாக நடந்து கொண்டதாக ஒரு உதாரணமாவது உங்களால் காட்டமுடியுமா? உங்களிடம் பண்டிதர்களும், பி. ஏ.க்களும், எம். ஏ.க்களும் இருக்கிறார்கள் என்று வேண்டுமானால் பெருமையடித்துக் கொள்ளலாம். என்றாலும், நேற்றுப் பள்ளியைவிட்டு வந்து எங்கள் கழகத்தில் சேர்ந்து ஒரு 10 நாளைக்குக் கறுப்புச் சட்டை போட்டுக்கொண்டிருந்த மாணவர்களுள் ஒருவனுக்குப் பதில் சொல்லமுடிய வில்லையே உங்களால்! அவன் கூறுவானே பதில்—நீங்கள் என்ன கேள்வி கேட்டாலும்! உங்கள் பெரிய பெரிய தலைவர்கள் பேச வந்தால்கூட ஒரு 2, 3, ஆயிரம் பேரைக் கூட்ட முடியவில்லையே! எங்கள் கழக மாணவன் ஒருவன் பேசுவதாயினும்கூட ஆயிரக்கணக்கில் கூட்டம் சேர்ந்துவிடுகிறதே! ஒரு கறுப்புச் சட்டைக்காரனைத் தொலைவில் பார்த்தால்கூட உங்கள் தலைவர்கள் கூட்டத்தை முடித்துக்கொண்டு ஓடி விடுகிறார்களே! இதன் அர்த்தம் என்ன?

வரப்போகிற அரசியல் சட்டம் எப்படி இருக்கவேண்டுமென்று எடுத்துச் சொல்லக் கூடவா எங்களுக்கு உரிமை இருக்கக்கூடாது? எங்கள் உரிமையை எத்தனை நாள் மறுத்து வரமுடியும்? வெடிகுண்டை மூடிவைத்தால் அது எத்தனை நாளைக்கு வெடிக் காமல் இருக்கும்? நீங்கள் மூடிவைக்க மூடிவைக்க எங்களுக்கு எங்கிருந்தோ ஆதரவு வந்து கொண்டிருக்கிறதே! மராத்தி தேசத்திலிருந்து ஆதரவு வருகிறது; ஹைதராபாத்தி லிருந்து ஆதரவு வருகிறது; இன்னும் எங்கெங்கிருந்தெல்லாமோ ஆதரவு வந்துகொண்டி ருக்கிறதே! திராவிட நாட்டுப் பிரிவினைக்குத் தம் கழுத்தைக் கொடுக்க மக்கள் வரக் காத்திருக்கிறார்களே! இப்படி இருக்க, மக்கள் ஆதரவில்லையென்று எத்தனை நாளைக்கு எங்கள் கோரிக்கையைத் தட்டிக்கழித்துக்கொண்டிருக்கப் போகிறீர்கள்.

[தூத்துக்குடியில் 8, 9-5-1948-ல் நடந்த மாகாண மாநாட்டில் தலைமையுரை—'விடுதலை' 18–5–1948]

## 13. இது சுதந்திர நாடா?

தோழர்களே!

சுதந்திரம் பெற்றுள்ள எந்த நாட்டிலாவது—இன்று பார்ப்பான், பறையன் இருக்க நீங்கள் பார்க்கிறீர்களா? வரலாற்று ஏடுகளிலாவது கண்டிருக்கிறீர்களா? மேல்சாதி முறையும், கீழ்சாதி முறையும், மடையர்களும், முட்டாள்களும், மான ஈனமற்ற மக்களும், காட்டுமிராண்டிக் கால மக்களும், மிருகப் பிராய மக்களும் வாழும் நாடுகளிலன்றோ இவை இருக்கக் கடமைப்பட்டவை! அப்படி இருக்க, இந்த சுயராஜ்ய பூமியில், இந்தப் புண்ணிய பூமியில், இந்த ஞானபூமியில், பாரதமாதாவின் கை விலங்கும் கால் விலங்கும் அறுக்கப் பட்டு அவள் ஆனந்தக் கூத்தாடும் இந்தக் காலத்தில் என்னத்துக்காகப் பறையன் இன்னும் இருக்கின்றான்? என்னத்துக்காகப் பார்ப்பான் இருக்கின்றான்?

வெள்ளையன் ஒழிந்ததுபோல் வடநாட்டானும் ஒழியவேண்டாமா, இந்நாட்டை விட்டு? இந் நாட்டிற்குச் சுதந்திரம் வந்துள்ளது உண்மையாயின் எதற்காக ஒரு 'இமய மலைப் பார்ப்பான்'—ஒரு வடநாட்டவன் எங்கள் நாட்டிற்குப் பிரதம மந்திரியாயிருக்க வேண்டும்? எதற்காக வடநாட்டவர்கள் இங்கிருந்து நம்மைச் சுரண்டிவர வேண்டும்? கேட்பாரில்லையே இத் தமிழ் நாட்டில்! எதற்காக 23 ஜில்லாக்களையும் 1500 மைல் சமுத்திரக் கரையையும், ஏராளமான நன்செய், புன்செய்களையும் ஆறுகளையும், ஏரி குளங்கள் வாய்க்கால்களையும், எண்ணிறந்த சுரங்கங்களையும் கொண்ட நம் நாடு—அன்னிய, வடநாட்டவனுக்கு ஆட்பட்டிருக்க வேண்டும்? எதற்காக இந் நாட்டை வட நாட்டவன் ஆதிக்கத்திற்கு ஒப்படைத்துவிட்டு, இந் நாட்டவர்கள் அவர்களின் சிப்பந்தி களாக, ஏவலாட்களாகப் பணியாற்றிவர வேண்டும்? வேறு சுதந்திரம் பெற்ற நாடுகளைப் பார்த்தாயினும் உங்களுக்குப் புத்தி வரக்கூடாதா?

பர்மாவைப் பாருங்கள்! பர்மா நம் நாட்டைவிட எவ்வளவு சிறிய நாடு! அதற்குள்ள வசதிகள் நமக்குள்ள வசதிகளைவிட எவ்வளவு குறைந்தவை; அங்குள்ள மக்களின் அறிவு வசதிகூட, நம் மக்களின் அறிவு வசதியைவிட எவ்வளவோ குறைந்ததாயிற்றே! அப்படி யிருந்தும், அவர்கள் இன்று சுதந்திரமாக வாழவில்லையா? சுதந்திரம் வந்ததும் 'பர்மாக் காரன் அல்லாத மற்ற நாட்டவனுக்கு இங்கென்ன வேலை?' என்று அவர்கள் கேட்க ஆரம்பித்துவிடவில்லையா? பர்மாவில் ஏராளமான சொத்துக்கள், நிலபுலன்கள் வைத்திருந்த எத்தனையோ பணக்காரர்களின் தலைகளெல்லாம் பனங்காய்களைப் போல் உருளவில்லையா? 'தப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று சிலர் ஓடிவந்துவிட வில்லையா? இன்று 1000 ரூபாய் மாதச் சம்பளத்திற்குக்கூட ஆள் கிடைக்காமல் நம் செட்டிப் பிள்ளைகள் திணறவில்லையா? அந்நாட்டில் சுமார் 2 கோடி பெறுமான சொத்துள்ள இராஜா முத்தையா செட்டியார்—இன்று ஏஜெண்டாக அனுப்பிவைக்க ஆளில்லாமல் திணறுகிறாராமே: தலைகொடுக்கத் தயாராயிருந்தாலொழிய, அந்நாட்டிற்குச்

செல்லமுடியாது என்கின்ற நிலை இன்று ஏற்பட்டுவிடவில்லையா? 'பர்மா நாட்டுப்பூமி இன்று ஏன் வேறு நாட்டவனுக்குச் சொந்தமாயிருக்க வேண்டும்? உடனே பறிமுதல் செய்ய வேண்டும்' என்று பர்மா சர்க்கார் தீர்மானம் கொண்டு வரவில்லையா? சுதந்திரம் பெற்ற நாடுகளிலெல்லாம் அந்நாட்டு மக்களைத் தவிர்த்த அன்னியர்கள் துரத்தப்பட்டு வரும்போது—சுதந்திரம் பெற்றதாகக் கருதப்பட்டுவரும் திராவிட நாட்டில் மட்டும் அன்னிய ஆரியர்கள் கோலாகலமாகக் கும்மாளம் அடித்துவரவும், மேலும் மேலும் வடநாட்டவர்கள் குடியேறிக்கொண்டே வரவும் அனுமதிக்கப்பட்டு வருவானேன்?

சுயராஜ்யம் வந்தாலும் வந்தது—இந்நாட்டில், இதுவரை இல்லாதவர்களெல்லாம் வந்து புதிது புதிதாகக் குடியேறுகிறார்களே! மவுண்ட் ரோடிலுள்ள பெரிய பெரிய கட்டடங்களெல்லாம் வடநாட்டவர்களுடையதாக ஆகிவருகின்றனவே! வியாபாரம், கைத்தொழில் இவைகள்—யார் கையில்? இந்நாட்டு வியாபாரமும் கைத்தொழிலும் பெரும்பாலும் வடநாட்டவர்களின் கையில்தானே இன்று இருந்துவருகின்றன?

இன்னுங்கூட ஒன்று சொல்லலாம். அது வெட்கப்படத்தக்கதுதான் என்றாலும், உண்மையை மறைப்பானேன்? சில ஊர்களிலெல்லாம் விபசாரித்தனம் வடநாட்டவர் கைக்குச் சென்றுவிட்டதாமே! ஒரு முக்கிய நகரத்தில் மாலைக் கடைத்தெரு வழியே நான் போய்க்கொண்டிருந்தபோது வடநாட்டுடையணிந்த பெண்கள் கூட்டங் கூட்டமாக வரக் கண்டு —'இவர்கள் யார்?' என்று பக்கத்திலிருந்த அவ்வூர்த் தோழரைக் கேட்டேன். அவர், 'இவர்கள் வடநாட்டிலிருந்து வந்த அகதிகள்; இவர்கள்தான் இப்போது இவ்வூர் விபச்சாரத் தொழிலை ஏற்றுக்கொண்டுள்ளார்கள்' என்று தெரிவித்தார். கடைத்தெருவுக்கு வந்திருந்த அத்தனை பேர்களும் விபச்சாரிகளாக இருக்கமாட்டார்கள் என்பது உண்மை என்றாலும், இதற்காகவே அகதிகளாக வடநாட்டவர்கள் இந்நாட்டிற்கு வருவதென்றால் இது கேவலம் அல்லவா; வருந்தத்தக்கது அல்லவா?

இந் நாட்டுக் காப்பிக் கடைகளெல்லாம் சேட்டுகளுடையவை. இந் நாட்டுப் பத்திரிகைகள் எல்லாம் பெரும்பாலும் வடநாட்டவருடையவை. ஒரு கோயங்காவுக்கு மட்டும் இந்நாட்டில் 50 இலட்சம், 60 இலட்சம் ரூபாய் சொத்து; இரும்பு வேண்டுமானால் அவருக்குத்தான் கிடைக்கும்; 'நியூஸ் பிரிண்ட்' வேண்டுமானால் அவருக்குத்தான் கிடைக்கும் என்கின்ற நிலை; பத்திரிகைக்காரர்களின் பிரதிநிதியாக அவர் அமெரிக்கா சென்று அவ்விடத்து வியாபாரிகளிடம் 'கான்ட்ராக்ட்' பேசிக்கொண்டு வந்துவிட்டார். அவரது தேவைக்கு மேற்பட்ட பேப்பரை எல்லாம் பவுண்டு ஒன்றுக்கு இரண்டணா இலாபம்வைத்து விற்று வேண்டுமானாலும் சம்பாதிக்கட்டும். சம்பாதிக்கும் பணத்தை இந் நாட்டிலாவது விட்டுவைக்க வேண்டாமா? கோயங்கா சம்பாதிக்கும் பணம் இந்த நாட்டில் இருக்க இயலுமா? வடநாட்டிற்கன்றோ ஆண்டுதோறும் ஏற்றுமதியாகிவிடும்! இந்த நாட்டில் என்ன, செல்வவான்கள் இல்லையா, இந்தத் தொழிலை நடத்த! பர்மிட் கிடைத்தால்தானே, இந் நாட்டவர்களுக்கு?

பரம்பரை யோக்கியர்கள் மாதிரி—இந்த நாட்டுப் பார்ப்பனர்களும் காங்கிரஸ்காரர்களும்—வெள்ளையனை அயோக்கியன் என்று தூற்றினர். அவர்கள் அயோக்கியர்களா யிருந்தாலும் 'கான்ட்ராக்ட்' கொடுப்பதாயிருந்தாலும், பர்மிட்டோ, லைசென்சோ கொடுப்பதாயிருந்தாலும்—சட்டம் செய்யும் போது, அதில், எப்போதும் பரம்பரையாகத் தொழில் நடத்தி உரிமை பெற்றவர்களுக்குத்தான் பர்மிட் வழங்கப்படும் என்று ஒரு வரியும் சேர்த்து எழுதி விடுவான். அதனால், அவன் காலத்தில் கூடுமான அளவுக்குப் பரம்பரை வியாபாரிகளுக்குத்தான் புது லைசென்ஸ் கிடைத்து வந்தது. ஆனால், சுயராஜ்ய சர்க்காரிலோ, சர்க்காரில் செல்வாக்குள்ள எவனுக்கும்—சர்க்கார் உத்தியோகஸ்தர்களை வசப்படுத்தக்கூடிய சாமார்த்தியமுடைய எவனுக்கும்—லைசென்சும் பர்மிட்டும் வழங்கப்பட்டு வருகின்றன.

புதிதாக வழங்கப்படும் நூல் லைசென்சுகளில் 100-க்கு 25 விகிதமாவது காங்கிரஸ் காரர்களுக்கு ஒதுக்கித் தரப்படவேண்டும் என்று சுற்றறிக்கை விடப்பட்டுள்ளதாம். 'ஜவுளி லைசென்சு'கள் அந்த வட்டார சட்டசபை மெம்பர்களின் சிபாரிசுகளின் பேரிலேயே கொடுக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறதாம். உணவு நிலையை எடுத்துக் கொண்டாலோ, வெள்ளையன் காலத்தில் நமக்குக் கிடைத்தது 16 அவுன்ஸ், 12 அவுன்ஸ்; சுயராஜ்ய காலத்தில் கிடைப்பது 6 அவுன்ஸ். ஏனய்யா குறைந்து விட்டது? பூமியைத் தண்ணீர் கொண்டு போய் விட்டதா? அல்லது, ஜனத் தொகையாவது ஒன்றிரண்டு ஆகப் பெருகிவிட்டதா? என்றால், 'அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது—இத்தனை ஜனங்கள் இருக்கிறார்கள். இவ்வளவு தானியம் விளைகின்றது; எனவே இவ்வளவுதான் ஆளொன்றுக்குக் கொடுக்க முடியும்' என்கிறார்கள்.

உண்மையிலேயே இந்த அரசாங்கத்திற்கு மக்களைப் பற்றிய கவலை இருக்குமானால், இப்படி வாளாயிருக்குமா? எப்படி இந்தக் குறையைச் சரிக் கட்டுவது என்று யோசித்து ஏதாவது முடிவு செய்திருக்காதா? இக் குறைவு ஏற்பட நேர்ந்ததன் காரணம் கூட நாம் சொல்கிற வரையில், இந்த சர்க்காருக்குத் தெரியாமல் போய் விட்டதே! உணவு தானியங்களுக்கு சர்க்காரால் தீர்மானிக்கப்பட்ட விலை மிகக் குறைவாக இருந்ததால் குடியானவர்கள் நெல், கேழ்வரகு, போன்ற தானியங்களை விளைவிப்பதை விட்டு விட்டு, கரும்பும் புகையிலையும் கடலையும் உற்பத்தி செய்யத் துவங்கி விட்டார்கள். ஆகவே, நெல் சாகுபடி வெகுவாகக் குறைந்து விட்டது என்று நாங்கள்தான் காரணம் காட்டினோம். நெல்லுக்குப் பஞ்சம் ஏற்படவே ஆங்காங்குள்ள காங்கிரஸ்காரர்கள் 4000 மூட்டை, 5000 மூட்டை சேமித்து வைத்துக்கொண்டு கள்ள மார்க்கெட்டில் விற்று, ஏராளமான பொருள் சேர்த்துக்கொண்டனர். அப்படிப் பட்டவர்கள் மீது புகார் கிடைத்து, அவர்களை ரேஷன் உத்தியோகஸ்தர்கள் கையுங் களவுமாய்ப் பிடித்தாலும், அந்த உத்தியோகஸ்தர்களுக்குத் தான் ஊர் மாற்றம் கிடைக்குமே தவிர—கள்ள மார்க்கெட்கார காங்கிரஸ் பேர்வழி தண்டனைக்குள்ளாக்கப் படமாட்டார்.

இவ்வளவு நாதியற்ற முறையில் ஆட்சி நடை பெற்று வருகிறது. முன்பு நீதிக் கட்சியார் ஆட்சி செய்தபோது எங்காவது ஓரிருவர் நாமினேஷன் செய்யப்பட்டால், 'ஜனநாயகம் சாகடிக்கப்படுகிறது; கட்சியைப் பலப்படுத்திக்கொள்ள தம் அதிகாரத்தைப் பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள்' என்றெல்லாம் காங்கிரஸ்காரர்கள் கூச்சல் போட்டார்கள். இன்றோ ஆங்காங்குள்ள சட்டசபை மெம்பர்களே 'ஜில்லா போர்டு' மெம்பர்களாக வேலை பார்க்கலாம் என்று கூற முன்வந்து விட்டனர். இப்படியெல்லாம் படுமோசம், பித்தலாட்டம் செய்துவரும் காங்கிரஸ் கட்சியின் ஆட்சி, பார்ப்பன-பனியா-ஆரிய ஆட்சி, நமக்கு நன்மை செய்யாது என்பதால்தான், திராவிட மக்கள் யாவரும் இன உணர்ச்சி பெற்றுநெழுந்து எப்படியும் காங்கிரஸ் ஆட்சி ஒழிய, வடநாட்டான் ஆட்சி ஒழியப் பாடுபட வேண்டுமென்று நாம் கூறி வருகிறோம்.

நம் மக்களைப்பற்றிச் சிறிதும் கவலைப் படாத ஒரு ஆட்சியிலிருந்து நாம் பிரிந்து கொள்ள வேண்டுமானால் அது எப்படிப் பாவமாகிவிடும்? 'இந்தியாவைத் துண்டு போடலாமா?' என்றால்—'நாம் இந்தியாவுடன் இணைந்திருந்து, பட்டினியால் வாடிச் சாகலாமா?' என்றுதான் திருப்பிக் கேட்க வேண்டியிருக்கிறது. நமக்குப் போதிய அளவுக்குச் சோறுபோட வக்கில்லாத மந்திரிகள்—பொழுது விடிந்தால், பொழுது முடிந்தால் நம்முடைய முயற்சிக்குக் குந்தகம் விளைவிக்கும் முறைகளிலேயே பேசித் திரிகிறார்களே, ஏன்?

[சென்னை அயன்புரத்தில், 16-10-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 19-10-1948]

# 14. திராவிடரே ஒன்றுபடுவீர்!

பெரியோர்களே! தோழர்களே!

காங்கிரஸ் மிகவும் கெட்டுப்போய்விட்ட காரணத்தால்தான் திரு. வி. க. அவர்கள் தமக்கு எவ்வளவுதான் அதன்மீது பற்றுதல் இருந்தபோதிலும்—தாம் கண்ணீர்விட்டு வளர்த்த காங்கிரஸ் என்று பெருமையோடு கூறிக்கொண்டிருந்த போதிலும்—இன்னமும் கதரே கட்டிக்கொண்டிருக்கின்ற போதிலும் அந்தப் 'பாசிச'க் காங்கிரசை ஒழிப்பதே தமது பணியென்று கொண்டு, இன்று நம்மிடையில் இருக்கிறார்.

தாழ்த்தப்பட்ட சமுதாயத் தலைவர் டாக்டர். அம்பேத்கார், 'காங்கிரஸ் எரிந்து கொண்டிருக்கும் வீடுபோன்றது' என்றும், 'விரைவில் சாம்பலாகி அழிந்துபோகக் கூடியது' என்றும் குறிப்பிட்டுவிட்டுத் தம் தோழர்களை—'அதில் சேரவேண்டாம்' என்று கேட்டுக்கொண்டுள்ளார். அவர் முன்னைய அம்பேத்காராயிருந்து சொல்லியிருந்தாலும், அவர் வேண்டுமென்றே சொன்னதாக நாம் தள்ளிவிடலாம். ஆனால், காங்கிரஸ் தயவால் பதவியேற்று அதை வகித்துவரும் காலத்தில்தான் அவர் இம் மாதிரி சொல்லியிருக்கிறார். எனவே, நாட்டு மக்களின் நன்மையைக் கருதி, காங்கிரசின் பிற்போக்கையும் கொடுங் கோன்மையையும் எதிர்த்து நின்று பணியாற்றிவர நமது கழகம் ஒன்றுதான் கழகமாக இருந்து பணியாற்றி வருகிறது. இதை யான் சுயநலத்திற்காகவோ தற்பெருமைக் காகவோ சொல்லவில்லை என்பது, யோசித்துப் பார்க்கும் எவருக்கும் நன்கு தெரியவரும்.

நாங்கள் பதவிக்கு வரவேண்டுமென்று ஆசைப்பட்டிருந்தால் காங்கிரசிலிருந்து கொண்டே சுலபத்தில் பதவி பெற்றிருக்கலாம். பெற்றிருக்கமுடியாது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? நமது மாகாண பிரதமரை நான் சந்திக்க நேர்ந்தபோது அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'நீங்களெல்லாம் எங்களை இப்படிப் பரிதவிக்கவிட்டுப் போய் விட்டீர்களே!' என்றுதான் சொன்னார். 'போகாமல் என்ன செய்வது?' என்று திருப்பிச் சொன்னேன். 'நீங்கள் காங்கிரசில் இருந்திருந்தால் நீங்களல்லவோ இந்த ஸ்தானத்தில் இருந்திருக்கவேண்டியிருக்கும்' என்றார். 'இருக்கலாம்; ஆனால், இப்போது மக்களுக்குள் ஏற்பட்டிருக்கும் உணர்ச்சி ஏற்பட்டிருக்குமா? இப்போது கேட்பதுபோல் 'திராவிட நாடு' பிரிவினை கேட்க வாய்ப்பிருந்திருக்க முடியுமா, அப்போது?' என்றேன். 'இதில் இருந்துகொண்டேகூட அதைச் செய்திருக்கலாமே!' என்றார். 'நீங்கள் நினைக்கிறீர்களா அப்படி? அது ஒருபோதும் முடியாத காரியம். நீங்கள் மனத்தால் திராவிடர்க்குச் சாதக மாக ஏதேனும் செய்யவேண்டும் என்று நினைக்கும்போதே உங்களைக் கவிழ்க்கப் பார்த்துவிட்டார்களே! அப்புறம் நான் நினைக்கிறபடி செய்வதாயிருந்தால் என்ன ஆகி யிருக்கும்? நீங்களே யோசித்துப் பாருங்கள்' என்றேன். ஓமாந்தூரார் சுலபத்தில் ஏமாறக் கூடியவர் அல்லர்; பதவிப் பித்துப் பிடித்தவரல்லர் என்றாலும், குறிப்பிட்ட இலட்சியத்தை முன்வைத்துக்கொண்டு அதற்காக எதையும் தியாகம் செய்யக்கூடியவர் அல்லர் அவர்.

இம் மாநாட்டில் கறுப்புச்சட்டை போடாதவர்களும் கலந்து கொள்கிறார்களே என்று சிலர் கவலைப்பட்டு எனக்குப் பலர் கடிதங்கள் எழுதியிருக்கின்றனர். 'நான் நபர்களுக்குத் தகுந்தாற்போல் நடக்கிறேன்' என்று குறைகூறப்படுகின்றது. திரு. வி. க. அவர்கள் எனக்காக வேண்டி 22 வருடகாலமாக காங்கிரசுக்கு வெளியே இருந்துகொண்டு வருகிறார் என்பது உங்களுக்குத் தெரியவேண்டும். அவர் கூறியது போல், சர். சண்முகம் அவர்கள் முன்னிலையில்—'இனி இருவரும் கலந்துபேசி முடிவுசெய்து கொள்ளாமல் காங்கிரசில் சேருவதில்லை' என்று நாங்கள் ஒப்பந்தம் செய்துகொண்ட தினத்திலிருந்து இன்றுவரை—அதன்படியேதான் நடந்துவந்திருக்கிறார். 20 ஆண்டுகளுக்கு முன் கோவை ஜஸ்டிஸ் மாநாட்டின்போது காங்கிரசில் சேரவேண்டிய நிர்ப்பந்தம் வந்ததென்றாலும் நான் சேர ஒப்புக்கொள்ளவில்லை. சேரவேண்டும் என்று விரும்பியவர்களுக்கு மட்டும் அனுமதி அளித்தேன். அப்போது திரு. வி. க. அவர்கள், 'காங்கிரசில் சேருவது நலம்' என்றார்.

என்றாலும் நான் சேரவில்லை ; சிலர் சேர்ந்தார்கள் ; பிறகு விட்டுவிட்டார்கள். திரு. வி. க. அவர்கள் திராவிடர் கழகத்தின் உறுப்பினர் அல்லர்—கறுப்புச் சட்டை போடவேண்டும் என்று அவரை நிர்ப்பந்தப்படுத்த. அவர் நம்முடைய அழைப்பின்பேரில், அதுவும் பல நாள் வேண்டுகோளின்பேரில், தாம் செய்துகொள்ள வேண்டிய 'ஆபரேஷனையும்'—நமது மாநாட்டில் கலந்து கொள்வதற்காக வேண்டி ஒத்திவைத்துவிட்டு—என்னிடமும் திராவிட நாடு பிரிவினையினிடமும் உள்ள பற்றுதலால் இவண்வந்து கலந்துகொண்டார். எனவே, அவருக்குக் கறுப்புச்சட்டை இல்லையென்று எவரேனும் குற்றம் காண்பது விசித்திரமாகவே இருக்கிறது. நாம் அவ்வளவு அனுபவ சாத்தியமற்ற பைத்தியக்காரர்களல்லர், இம் மாதிரி சில அற்பக் காரணங்களுக்காகச் சிலருடைய ஒத்துழைப்பைக் கைவிட. அன்போடும், ஆர்வத்தோடும் நம்மோடு கலந்துகொள்ள விரும்புவர்களை நாம் நிபந்தனையின்றி நம்மோடு இருக்கச் செய்துகொள்ள வேண்டியதுதான்.

திராவிடர் கழகத்தில் இருப்பவர்கள் கறுப்புச் சட்டை போடாமல் இருப்பதுதான் கண்டிக்கத் தக்கதே ஒழிய, கழகத்தில் சேர்ந்திராதவர்களைப் போட்டுக்கொள்ளும்படி வற்புறுத்துவதென்பது விரும்பத்தகாத காரியமாகும். மேலும், பெரியார் திரு. வி. க. கலந்துகொள்ளுவதால் நமது மாநாட்டிற்குத்தான் பெருமை ஏற்படுமே ஒழிய, அவருக் கொன்றும் இதனால் பெரிய பயன் ஏற்பட்டுவிடப் போவதில்லை. நம்முடன் கலந்து கொள்வதாகக் காட்டி, ஆட்சியாளரை மிரட்டி, ஏதாயினும் சலுகைகள் பெறவேண்டிய அவசியங்கூட இல்லாதவர் அவர் ; பெண்டு பிள்ளை அற்றவர் ; சாதாரண வாழ்க்கையை மேற்கொண்டுள்ளவர். எனவே, எவ்வித ஆசையும் சுயநலமும் அற்றவர். அப்படிப் பட்டவர் நமக்கு ஆதரவு அளிக்கின்றார் என்றால், நமது இயக்கத்தின் உயர்ந்த தன்மையின் காரணமாகத்தானே ஒழிய, பேரும் பெருமையும் அடைய அல்ல என்பதைத் தோழர்கள் உணரவேண்டும்.

காங்கிரஸ் இந்நாட்டிற்குப் பெருங் கேட்டை விளைவித்துவிட்டது ; மக்களிடையே ஒழுக்கம், அன்பு, மனிதத் தன்மை இவை இருக்க இடமில்லாமல் வழி செய்துவிட்டது. அகிம்சை, அகிம்சை என்று காந்தியார் கூறி வந்தது—முடிவில் கலகத்தில், காலித்தனத் தில் கொண்டுவந்து சேர்த்துவிட்டது. அவரது இந்து–முஸ்லிம் ஒற்றுமை முயற்சி நிரந்தர வேற்றுமைக்கும், நாட்டுப் பிரிவினைக்கும் அடிப்படை போட்டுவிட்டது. அவரது தீண்டாமை ஒழிப்பு முயற்சி—பார்ப்பனர்களின் ஆணவத்தையே வளர்க்கப் பயன்பட்டுப் போய்விட்டது. காங்கிரசின் திட்டங்கள் யாவும் பெரும்பாலும் நேர்மாறான பயன்களையே அளித்துவிட்டன. ஏன் ? காங்கிரஸ்காரர்கள் அத் திட்டங்களை நிறைவேற்றி வைப்பதற்காக வகுத்துக்கொண்ட வழிகள் யாவும் குற்றமுடையனவாக அமைந்துபோய் விட்டமைதான்.

பொதுவாக 1920-லிருந்து 1948-வரை நாம் இந்நாட்டு அரசியல் சரித்திரத்தைத் தொடர்ந்து படித்துப் பார்த்தால், அரசியலில் ஈடுபட்ட தலைவர்களில் ஒருவரிடத்தாவது ஒழுக்கமோ, நாணயமோ இருந்திருக்க முடியாமல் செய்துவிட்டது என்பதைத் தீர்மான மாகக் கண்டு கொண்டு விடலாம்.

அருமைத் தோழர் இராஜகோபாலாச்சாரி முதல் குள்ளநரி வைத்தியநாதய்யர் வரை யாவரும் இந்தக் காங்கிரசில் நேர்மை, நாணயமற்றவர்களாக முறையே ஆக்கப்பட்டு விட்டார்கள். காங்கிரஸ்காரர் தவிர மற்றவர்கள் மட்டும் என்ன மகா யோக்கியர்களா என்று நீங்கள் கேட்கலாம். கேட்பது நியாயம் என்றாலும், நாணயக்காரர்கள் என்றோ ஒழுக்க முடையவர்கள் என்றோ வேஷம் போட்டுக்கொண்டு நம்முன் வரவில்லை. காங்கிரஸ்காரர்கள் தான் மகா மகா சத்தியசீலர்கள் என்றும் நீதியும், அகிம்சையும் கொண்டவர்களென்றும் நம்முன் கூறிக்கொண்டு அரசியலில் ஈடுபட்டார்கள். எப்படி பண்டார சன்னதிகள், 'அன்பே சிவம்' என்று கூறிக்கொண்டு அக்கிரமமாகப் பிறரை வஞ்சித்து வருகிறார்களோ, அதேபோல்—காங்கிரஸ்காரர்களும் சத்தியம், அகிம்சை என்கிற பேரால் நாட்டு மக்களைக்

கொள்ளைக்கும், வஞ்சகத்திற்கும், பித்தலாட்டத்திற்கும் ஆளாக்கிவிட்டனர். காட்டு மிராண்டிக் கால, கொள்ளைக்காரர் கால அறிவில், மக்களை வைத்துக்கொண்டு, அவர்களின் பிரதிநிதிகள் என்று விளம்பரப்படுத்திக்கொண்டு, காங்கிரஸ்காரர்கள் செய்துவரும் பித்த லாட்டங்களுக்கு அளவே காணமுடியவில்லை. காங்கிரஸ் திராவிடர்களோ—தாம், தம்மின எதிரிகளின் கூட்டத்தில் சேர்ந்திருக்கிறோம் என்பதைச் சிறிதும் உணராதவராய்த் தாம் விபீஷணர்களாவதன்மூலம் பெறக்கூடிய சிறு நன்மையோடு திருப்தி அடைந்து—ஆரிய ஆதிக்கத்திற்கு உற்ற தூண்களாக அமைந்திருக்கிறார்கள். ஒரு காங்கிரஸ் திராவிடனிடத் திலாவது, திராவிட இன உணர்ச்சி குடிகொண்டிருப்பதாக நம்மால் காணமுடியவில்லை.

தோழர் இராமசாமி ரெட்டியாரின் உடலில் ஒரு காலத்தில் திராவிட உணர்வுள்ள இரத்தம் ஓடிக்கொண்டிருந்ததென்றாலும், அது எப்படியோ தற்போது மாறிவிட்டது; அதில் ஏதோ விஷங்கலந்து விட்டது.

முதன் மந்திரி ரெட்டியார் ரமண ரிஷியின் சீடர்; அவர் பார்த்துச் சொல்கிறபடி இவர் ஆடுகிறாராம். அவர் மிக யோக்கியராக இருப்பதாக வைத்துக்கொள்வோம். அதில் சந்தேகம் வேண்டாம் என்றாலும், யோக்கியதை ஒன்று மட்டுமே பதவி வகிக்கப் போதுமா? திறமையும் அனுபவமும் கொஞ்சமாவது வேண்டாமா? கை சுத்தமாக இருந்தால் மட்டும் போதுமா? புத்தித் தெளிவும் அனுபவமும் கொஞ்சமாவது இருக்க வேண்டாமா? இவரும் தொலைந்தால் இவரைவிட மோசமான ஆள் வந்து விடப் போகிறான் என்றுதானே இவருடைய ஆட்சியை நாம் சகித்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது. நம்மைக் கொஞ்சமாவது மனிதர்கள் என்று நினைத்து ஆட்சி புரிகிறார்களா, இந்த மந்திரிகள்? உணவுக் குறைவு, உடைக் குறைவு, கல்வி வசதிக் குறைவு, பாதுகாப்புக் குறைவு—எல்லாம் குறைவு; நிறையுடையது ஒன்றுமே இல்லை. என்றாலும், இவை பற்றிச் சிந்திக்கிறார்களா, இம் மந்திரிகள்—சிந்திக்க நேரம் இருந்தால்தானே!

பார்ப்பனர்களின் ஈட்டிக்குப் பயந்து—அவர்கள் ஆட்டியபடியெல்லாம் ஆடிவரத் தானே இவர்களுக்கு நேரம் இருக்கிறது. எப்போதும் மந்திரிசபை ஆடிக்கொண்டே இருக்கிறதே! பார்ப்பனர்கள் எல்லோரும் ஒருமுகமாகச் சேர்ந்துகொண்டு ஒரு நல்ல காரியத்தைக்கூட நடக்க விடமாட்டேன் என்கிறார்களே! அந்தப் பார்ப்பனர்களுக்குப் பயந்துகொண்டு மந்திரிகள் எங்கு சென்றாலும் பார்ப்பனீயப் பிரச்சாரம் செய்துகொண்டு வருகிறார்களே! ரமண ரிஷி சீடர் இராமாயணப் பிரச்சாரம் செய்யத் துவங்கிவிட்டாரே!

நாம் எவை எவை இந் நாட்டு மக்களை நாசம் செய்யப் பயன்பட்டுவருகின்றன என்று கூறி வருகிறோமோ, அவற்றை வளர்ப்பதையே இவர்கள் கண்ணுங் கருத்துமாகக் கொண்டு திரிகிறார்களே! இராமாயணப் பிரச்சாரம் செய்வது அவசியம் என்று தோன்றி னால் மந்திரி பதவியை இராஜிநாமா செய்துவிட்டுத் தாராளமாய்ச் சுற்றிச் சுற்றிப் பிரச்சாரம் செய்யட்டுமே! மந்திரியாக இருந்து பல பொறுப்புகளைச் சுமந்துகொண்டு, இவ் வேலையைச் செய்துகொண்டிருப்பானேன்? இராமாயணத்தைக் கொளுத்த வேண்டும் என்று நாம் பிரச்சாரம் செய்துவரும்போது, இராமாயணத்தை ஆதரித்துப் பிரச்சாரம் செய்யும் ஒருவர் நமக்கு முதன்மந்திரியாக வாய்த்திருக்கிறார் என்றால், அதைவிடக் கெட்ட வாய்ப்பு வேறு நமக்கு என்ன வேண்டியிருக்கிறது?

இந் நாட்டுப் பத்திரிகைத் தொழில் பூராவும் 100-க்கு 3 பேராயுள்ள—ஒரு பொறுப் பற்ற, உழைக்காமலே பிறர் இரத்தத்தை உறிஞ்சி வாழ்ந்து வரக்கூடிய—ஒரு வஞ்சகக் கூட்டத்தினிடம் சிக்கிக் கொண்டுவிட்டது. ஆயிரமாயிரம் மக்கள் இறந்து கொண்டிருந் தாலும் கடுகளவாவது துயரமடைய வேண்டிய அவசியமில்லாதவர்களும், அதற்கு மாறாகப் 'பிறர் சாகச் சாகத் தம் வாழ்வு உயரும்' என்று மகிழ்ச்சி அடையக்கூடியவர்களுமான புரோகிதப் 'பைசாசக்' கூட்டங்களிடத்தே பத்திரிகைத் தொழில் சிக்கிக்கொண்டிருக்கிறது. எனவேதான், நமது சமுதாய வாழ்வு பாழடைந்து கொண்டே வருவது கண்டும் பார்ப்பனப்

பத்திரிகைகளும் பார்ப்பன ஆதிக்கக் காங்கிரசும் வாளாவிருந்து வருகின்றன. இதன் காரணமாகத்தான், நாமும் இக் காங்கிரஸ் ஸ்தாபனம் ஒழியவேண்டும் என்று கூறி வருகிறோம்.

எவை எவை நம் நன்முயற்சிக்கு, நமது முன்னேற்ற முயற்சிக்கு ஊறு செய்கின்றனவோ அவையெல்லாம் ஒழியவேண்டும் என்கிறோம். ஒழிக்கப்பட வேண்டியவைகள் தாமே அவைகளும்! நம்மைக் கடிக்க வரும் பாம்பை நம்மால் அடிக்காமல் இருக்கமுடியுமா? அல்லது, தேளைப்போலொரு துஷ்டப் பிராணியைக் கொல்லவேண்டாம் என்றுதான் நம்மால் கூறமுடியுமா? பாம்பைவிட, தேளைவிடப் பன்மடங்கு விஷம் பொருந்தியவைகளாயிற்றே பார்ப்பனப் பத்திரிகைகள்! நமக்குள் சண்டை போட்டுக் கொள்ளக்கூடாது; நாம் ஒருவரை ஒருவர் அடித்துக்கொள்ளக்கூடாது. அப்படி அடித்துக்கொண்டால் நாமே தோற்றவராவோம் என்றல்லவோ நாம் கூறுகிறோம்.

இராவணன் எப்படித் தோற்றதாக இராமாயணத்தில் கூறப்பட்டிருக்கிறது? படித்துப் பாருங்கள்; இவ்வுண்மை விளங்கும்! இராவணனுடைய சேனைகள் முடிவில் தமக்குள்ளாகவே மோதி முட்டிக்கொண்டு சண்டையிட்டு அழிந்து போனதுதான் இராமனுடைய வெற்றிக்குக் காரணம் என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, நமது கழகம் உயிரோடிருக்க வேண்டுமானால் நாம் எப்போதும் நமக்குள் சண்டையிட்டுக் கொள்ளக்கூடாது. அதாவது, திராவிடர்கள் தம்மில் ஒருவரை ஒருவர் எப்போதம் மோதிக்கொள்ளக் கூடாது. அப்படி மோதிக்கொண்டால் நாம் அழிந்துபோக நேரிடும் என்பதற்காகத்தான் காங்கிரஸ் திராவிடர்கள் நமக்கு என்னதான் துரோகம் செய்துகொண்டிருந்தாலும், என்னதான் நமது கூட்டத்தில் கல் போட்டுக்கொண்டிருந்தாலும் நீங்கள் அவர்களோடு சண்டைக்குப் போகாதீர்கள்; அவர்கள் அடித்தாலும் திருப்பி அடிக்காதீர்கள் என்று கூறிவருகிறேன். போலீஸ்காரன் அடித்தால்கூட அவனும் திராவிடன் என்கின்ற காரணத்தால் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்றுதான் கூறியிருக்கிறேன். போலீஸ்காரன்—ஆட்சியிலுள்ள காங்கிரஸ் சிப்பந்தி. எனவே, அவர்கள் உத்தரவுப்படித்தான் அவர் நம்மை அடிக்க முன்வருகிறாரே ஒழிய, தானாக நம்மிடம் போராட வருகின்றார் இல்லை. எனவே, பொறுத்துக்கொண்டு அவரை ஆட்டிப் படைக்கும் அந்த ஆட்சியை ஒழிக்க முற்படுங்கள் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தாய்மார்கள் யாவரும் இந்த ஆட்சியை எதிர்த்தே தீருவதென்று திடசங்கற்பம் செய்துகொள்ள வேண்டும். அன்பர் திரு. வி. க. அவர்கள் 'இன்பப் பெருக்கம்—இனப் பெருக்கம்' என்றார். நான் சொல்லுகிறேன்—'இன்பச் சுருக்கம் இனச் சுருக்கம்' என்று. அறிவுள்ள குழந்தைகளைப் பெறவேண்டும்; வீரர்களைப் பெறவேண்டும் என்று ஆசைப்பட வேண்டியதுதான். ஆனால், அதிகம் பெறவேண்டியதில்லை. அதற்காக நான் இன்பம் துய்ப்பதை விட்டுவிட வேண்டும் என்று கூறவில்லை. குழந்தைகளை அதிகமாகப் பெற்றுவிட்டால் இன்பம் அனுபவிக்க—இனத் தொண்டாற்றப் போதிய அவகாசம் இராது. இனியும், 'குழந்தைகளைக் கடவுள்தான் கொடுத்து வருகிறார்' என்று நினைத்துக் கொண்டிருப்பதும் சுத்த முட்டாள்தனமாகும். உண்மையாகக் கடவுளே கொடுப்பதாயிருந்தால் இவ்வளவு முட்டாள்தனமாக, தேவைக்கும் மேலாகக் குழந்தைகளைக் கொடுத்துக்கொண்டிருப்பாரா? இனிப் பிறக்கும் குழந்தைகள், சமுதாய முன்னேற்றத்திற்காகச் சண்டை போடும் குழந்தைகளாக—கூர்மையான பகுத்தறிவு நிறைந்த குழந்தைகளாக அமையவேண்டும்; உண்மைத் திராவிட இரத்தம் ஓடும் குழந்தைகளாய் அமையவேண்டும். அதற்கு நீங்கள் முதலில் உங்களிடமுள்ள ஆரியப் பண்புகளை விட்டுத் தொலைக்க வேண்டும்; ஆரிய மூட நம்பிக்கைகளைப் பொசுக்கிவிட வேண்டும்; விபூதி பூசுவதை நிறுத்திவிட வேண்டும்; நாமமிடுவதை வெறுக்க வேண்டும்; தீபாவளி போன்ற ஆரியப் பண்டிகைகளைக் கொண்டாடக்கூடாது; கழகத்தைச் சேர்ந்தவர்கள் ஏதாவது செய்வதா

யிருந்தால் காலையில் தங்கள் வீட்டில் ஏதோ 'பெரிய காரியம்' ஏற்பட்டிருப்பதுபோல் நினைத்துக்கொண்டு துக்கப்பட வேண்டும். பட்டாசு கொளுத்துவதற்குப் பதிலாக இராமாயணத்தையும், பாரதத்தையும், புராணங்களையும் கொளுத்தவேண்டும். இம் மாதிரி மாறுதலைப் புகுத்திக்கொண்டு வருவதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை.

பெரிய பெரிய உற்சவ காலத்தில் நாம் இம் மாதிரி மாநாடுகளைக் கூட்டவேண்டும். மக்களுக்கு உற்சாகம் ஊட்டக்கூடியதும், அறிவு ஊட்டக்கூடியதுமான பொருட்காட்சிகளுக்கும், நாடகங்களுக்கும் ஏற்பாடு செய்யவேண்டும். நமக்கும் இதுதான் வேலை. இனி ஜெயிலுக்குக் கொண்டுபோகப்படும் வரையிலும் அடிக்கடி இம் மாதிரி மாநாடுகள் நடந்து கொண்டுதானிருக்கும். நீங்களும் வசதி ஏற்படும்போதெல்லாம் வரவேண்டியதுதான். வெற்றிக்குக் காலம் நிர்ணயிப்பது என்பது என்னால் முடியாத காரியம். வெற்றி வருகிறபோது வரட்டும்—நாம் தொடர்ந்து, வெற்றியில் நம்பிக்கை வைத்து நமது காரியத்தைச் செய்துவருவோம்; நல்லறிவு பெறுவோம்.

பெரியார் திரு. வி. க. சொல்லுகிறார், 'இன்னும் 10 வருடத்தில் திராவிடம் கிடைத்து விடும்' என்று. வரட்டும் அது! அதற்குள் நமக்கு நல்லறிவு வரட்டும்; நமக்குள் ஒழுக்கம் ஏற்படட்டும்; பற்றுதலும் அன்பும் உண்டாகட்டும்; நம் மக்கள் மனிதத் தன்மையோடு வளரட்டும். இழிவுநீங்கப் பாடுபடட்டும். தாய்மார்கள் ஆண்களைப்போல் முன்னேற்றப் பாதையில் நடக்க முன்வரட்டும்; சமையல் வேலையைக்கூட புருஷனிடம் வேண்டுமானால் ஒப்படைத்துத் தொலையட்டும். நான்கு குடும்பங்கள் சேர்ந்து சமையல்காரனை வைத்துச் சமைத்துச் சாப்பிட்டுக்கொள்ளட்டும். எல்லோருடைய முயற்சியும் நாட்டுமக்களின் பொது நன்மைக்காகப் பயன்படட்டும். பெருமைதரும் உத்தியோகங்களுக்கும், பணிகளுக்கும் தம்மைத் தகுதியாக்கிக் கொள்ளட்டும்.

பெண்களைக் கூண்டுக் கிளிகளைப்போல் வீட்டில் அடைத்து வைக்கத் தாய் தந்தையர் முயற்சிக்காதீர்கள்! தாராளமாகப் பழகவிடுங்கள். பெண்களுக்கு 20 வயது வரை, கண்டிப்பாகத் திருமணம் செய்யாதீர்கள்.

உங்கள் பெண்மக்களிடம் 20 வயதிற்குப் பிறகு கேளுங்கள்—'திருமணம் செய்து கொள்ள இஷ்டமா? பொதுச்சேவை செய்ய இஷ்டமா?' என்று. 'திருமணத்தில் இஷ்டம்' என்றால்—நல்ல வரனைத் தேடிப்பிடிக்கும் வேலையை அவர்களுக்கே விட்டுவிடுங்கள்; வேண்டுமானால் ஆலோசனை மட்டுமே கூறுங்கள். 'பொதுச் சேவையில் பிரியம்' என்றால்—அதற்குத் தாராளமாக வசதி செய்துகொடுங்கள். பிறர் என்ன சொல்லுவார்களோ என்று கவலை கொள்ளாதீர்கள்; பெண் எங்கே கெட்டுப்போய் விடுவாளோ என்று அஞ்சாதீர்கள்! குழந்தைகளின் உற்பத்திப் பீடமாயுள்ள பெண்கள் திருந்தினாலொழிய அவர்களிடமிருந்து உற்பத்தியாகும் குழந்தைகளும் திருந்திய குழந்தைகளாயிருக்க முடியாது என்பதை மனத்தில் கொள்ளுங்கள். வளம் செய்யப்பட்ட மண்ணில் எப்படி நல்ல நெல் மணிகள் தோன்றுமோ, அதுபோலவே சீர்திருத்த மனம்படைத்த அறிவுள்ள பெண்களிடமிருந்துதான் சீர்திருத்த அறிவுள்ள செம்மல்கள் தோன்றக்கூடும் என்பதைத் தாய்மார்கள் உணர்ந்து, முதலில் தம்மைச் செம்மைப்படுத்திக் கொள்ளட்டும்! கோயிலுக்குப் போய் அனாவசியமாய்க் குழவிக் கல்லுக்குத் தெண்டனிடுவதால் பயனில்லை என்பதை உணர்ந்து கொள்ளட்டும். வெறும் சமையல்காரிகளாகவும், கட்டிலறைப் போகப் பொருள்களாகவும், காட்சிப்பொருள்களாகவும் மட்டுமே இருப்பதில் பயனில்லை என்பதைப் பெண்கள் உணர்ந்து கொள்ளட்டும்!

திராவிட நாட்டை விரைவில் காணக்கூடிய தகுதியும், திறமையும் தம்மிடத்துத்தான் இருக்கின்றனவென்பதையும் தாய்மார்கள் உணரட்டும். கவர்னர் ஜெனரல் இங்குவரும் போது, தாய்மார்களை, 'தலைமயிரை விரித்துவிட்டுத் தெருவில் படுத்துக்கொள்ளுங்கள்;

உங்கள் தலையின்மீது வேண்டுமானால் அவர் நடந்து செல்லட்டும்' என்று கூறினேன். அதனால் எங்களைச் சிறைபிடித்தார்கள் என்பது உங்களுக்கு ஞாபகமிருக்கட்டும். இனியும் நீங்கள் எதற்கும் தயாராயிருக்கவேண்டும். நாம் விடுதலை அடையவேண்டு மானால் பெண்கள் முதலில் மூடநம்பிக்கைகளிலிருந்து விடுதலை பெறவேண்டும். தாம் விதவைகளாயிருக்க தமது விதிப்பயன்தான் காரணம் என்பதை விதவைகள் விட்டொழிக்க வேண்டும். விதவைகளாயிருப்பவர்கள் சமூகத்தொண்டாற்ற முன் வரவேண்டும். நம் நாட்டுச் சரித்திரத்தில் பெண்களுக்கென்று தனி அத்தியாயம் எழுதப்படும் அளவுக்கு நீங்கள் விதவைப் போராட்டத்தில் பெரும் பங்கு கொள்ள வேண்டும். உங்கள் வாழ்வுக்கும், பெருமைக்கும், நலத்துக்கும் உழைத்து வருவது திராவிடர் கழகம் ஒன்றுதான் என்பதை யும், உங்கள் வாழ்வைக் கெடுத்துவருவது பார்ப்பனீயத்திடம் நீங்கள் வைத்துள்ள மூடப் பற்றுதல்தான் என்பதையும் நீங்கள் உணர்ந்து கொள்ளவேண்டும். இந்த மாநாட்டில் பெண்களுக்குப் பேசவோ, பாடவோ, சரியான வாய்ப்புக் கொடுக்கப்படவில்லை. போதிய கால வசதி கிடைக்குமானால் அடுத்த மாநாட்டைப் பெண்களிடமே சகல பொறுப்புக்களை யும் கொடுத்து நடத்த ஆசைப்படுகிறேன். அவ்வாசை உங்கள் ஒத்துழைப்பால் நிச்சயம் வெற்றி பெறும் என்றே நம்புகிறேன். வரவேற்புக் கமிட்டித் தலைவர், காரியதரிசி, மாநாட்டுத் தலைவர், கொடி ஏற்றுபவர் திறப்பாளர், தீர்மானங்கொண்டு வருபவர்கள், முன்மொழிபவர்கள் யாவரும் பெண்களாகவே இருக்கும்படி அம் மாநாட்டை நடத்த நினைக்கிறேன்.

அறிவுள்ள பெண்கள் சிலர் பதவி மோகங்கொண்டு அல்லலுறுகிறார்கள்; சிலர் தம் புருஷர்களிடம் மாட்டிக்கொண்டு அல்லல் படுகிறார்கள். விரைவில் இவற்றினின்று அறி வுள்ள பெண்கள் விடுதலை பெற்று, சமூகத் தொண்டாற்ற முன்வரவேண்டும். குழந்தைகள் போதுமென்றால் தாய்மார்கள் சிலர் கடைசிக் குழந்தைக்கு 'சாலம்மா' என்று பெயர் வைத்துவிட்டுப் பிறகு தமக்குக் குழந்தை பிறக்க வேண்டாமென்று நினைத்துக்கொண்டு விடுவார்கள். அதுபோல் தாய்மார்கள் இரண்டாவது, மூன்றாவது குழந்தைகளுக்கே—'போதுமம்மா', 'போதுமப்பா' என்று பெயர் வைத்துவிட்டுச் சமூகத் தொண்டாற்ற வந்துவிடவேண்டும்.

ஒவ்வொரு தாய்மாரும் இந்தக் கொடுங்கோல் ஆட்சியிலிருந்து திராவிடநாட்டை விடுவிப்பதையே முக்கிய வேலையாக—முதல் வேலையாகக் கொள்ள வேண்டும். உங்களின் பிற்காலச் சந்ததிகளின் வாழ்வை—உங்கள் சகோதர சகோதரிகளின் வாழ்வை நலம் செய்யத்தான் நாங்கள் உங்களை இத் தியாகத்திற்கு அழைக்கிறோம்! உங்கள் யாவரையும் ஒழுங்காக நடத்துவோம்; மரியாதையாக நடத்துவோம்; எங்களுக்குற்ற அருமைத் தலைவி களாக—விடுதலைப் போராட்டம் நடத்தவந்த வீராங்கனைகளாக மகிழ்வுடன் போற்றிப் புகழ்வோம்! எல்லோருமாகச் சிறைச்சாலை செல்ல இம் மாநாட்டிலேயே உறுதி எடுத்துக் கொள்வோமாக! அவரவருக்குள்ள சிறு தொல்லைகளிலிருந்து விடுதலை செய்துகொள் வார்களாக! தாம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் சகல காரியங்களும் ஒழுங்குறக் கவலை யற்று நடக்கும்படியான வகையில், ஏற்பாடுகளை முன்கூட்டியே செய்துவைத்துக் கொள்வார்களாக! எப்போதும்—நீண்ட சிறைவாசத்திற்கே ஆயினும் புறப்படத் தயாராக இருப்பார்களாக! ஒவ்வொருவரும் 'எப்போதும் தயாராக' (Ever-Ready) ஆகி இருப்பார்களாக!

எல்லோருமே இணங்கி வராவிட்டாலும், ஆதரவு கிடைத்தவரை போராட்டம் நடந்து கொண்டு வரும். ஆதரவே இல்லாது போயினும் என்னைப் பொறுத்தவரையில் நான் சிறிதும் வருத்தப்பட மாட்டேன். என் கடமையைச் செய்யத் தவறேன்; அடக்குமுறையை எதிர்த்தே தீருவேன்; விடுதலை பெற்று வெளிவரினும் மீண்டும் எனது வேலையைத் தொடர்ந்து செய்துகொண்டுதான் இருப்பேன். இன்றுள்ள ஆட்சியைத் தொடர்ந்து

எதிர்த்துப் போராட வேண்டிய அவசியத்தைச் சொல்லிவிட்டேன். போராட்டத்தின் தன்மையைச் சொன்னேன்; போராட்டத்தின் பலனையும் சொன்னேன்; போராட்டத்திலுள்ள கஷ்ட நஷ்டங்களையும் சொன்னேன். எனவே என்ன செய்வதென்பதை மனிதத் தன்மையில் விருப்பமுள்ள உங்களின் முடிவுக்கே விட்டு விடுகிறேன். கஷ்டம் அதிகந்தான்.

கஷ்டம் அதிகமாயிருக்கிறது என்று சிலருக்குத் தோன்றலாம் எனினும், என்ன செய்யமுடியும்? வந்துள்ள நோயின் தன்மையைப் பொறுத்துத்தானே மருந்தும் அமையக் கூடும்? கொடூரமான நோய்க்கு மிகக் கசப்பான மருந்தைத்தானே கொடுக்கவேண்டியிருக்கும். நோய் போகவேண்டுமென்று விருப்பப்படுபவர்கள் அம்மருந்தை உட்கொண்டு தானே ஆகவேண்டும்? 100-க்கு 80 தற்குறியாயுள்ள இந்த நாட்டில் இதைவிட நம்மால் வேறு என்ன செய்ய முடியும்? 'கல் குவியலில் அரிசி பொறுக்கும்' காலமன்றோ இது? எதிர்காலம் வேண்டுமானால்—'அரிசிக் குவியலில் கல் பொறுக்கும்' காலமாக இருக்கலாம்! அதுபோது, போராட்ட முறையும் வேறு விதமாக அமையலாம். இன்றைய நிலைக்கு இதுமாதிரிப் போராட்டத்தில் இறங்குவது தவிர வேறு வழியில்லை. எனவே, உதவியும் ஆதரவும் அளிக்கவல்ல தோழர்கள் விரும்பி அளியுங்கள்—உங்களால் ஆன உதவியை!

சட்டசபைக்குப் போகமாட்டோம் எனக் கருதிக் கொள்ளாதீர்கள். போனாலும் ஒன்றும் செய்யக்கூடாத நிலையில் சட்டசபை இருப்பதால்தான் நாம் ஒதுங்கியிருக்கிறோம்—என்பதை உணர்ந்து கொள்ளுங்கள். உங்களுக்குத் தேவையான நன்மைகளைச் செய்ய இயலாதே என்கின்ற காரணத்தால்—வெளியில் இருந்தால் அதிகம் செய்யலாம் என்ற எண்ணத்தால் ஒதுங்கியிருக்கிறோம் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள். எவனெவனோ சட்டசபையை அடைத்துக்கொண்டு கொள்ளையடிக்கிறானே என்றால்—நாமும் அவனுடன் சேர்ந்து கொண்டு கொள்ளையடிக்கலாமா? என் சதையைப் பிறர் அறுத்துத் தின்கிறார்களே என்று பொறாமை கொண்டு—நானும் கொஞ்சம் என் சதையைக் கடித்துக் கொள்வதா? நம் மக்கள்தாம் கொள்ளையடிக்கப்படுகிறார்கள் என்று அறிந்திருந்தும் நாமும் சேர்ந்து கொண்டு கொள்ளையடிக்க நினைக்கலாமா?

ஆத்திரப்படாமல் சிந்தித்துப் பாருங்கள்—பதவியிலுள்ளவர்களுக்கு உள்ள கெட்ட பேரை! அப்படிப்பட்ட கேவல பதவிகளையா நாம் விரும்புவது? முதலில் மக்களெல்லாம் அறிவு பெற்று விளங்க நாம் பாடுபடுவோம். அவர்கள் அறிவாளிகளாக ஆக்கப்பட்டதும்—பிறகு வேண்டுமானால் செல்லலாம், சட்டசபையை நோக்கி! நமக்கு நல்லது செய்ய வசதி இருந்தால் செல்லலாம்; மக்களும் உணருவார்கள்—நன்மை செய்யப்படுகிறதா, தீமை செய்யப்படுகிறதா என்று. இன்னும் ஒரு வருடம் இம் மாதிரி ஆட்சி நடைபெறுமானால் இம் மந்திரிகளெல்லாம் பர்மா மந்திரிகளைப் போல்தான் ஆகவேண்டி வரலாம். நாம் மட்டுமே இல்லை இந்த உலகத்தில் என்பது, உங்களுக்கு ஞாபகமிருக்கட்டும்! நம்மவர்களாயிற்றே என்று நாம்தான் சும்மாயிருக்கிறோம் என்றால், அகிம்சை, அன்பு என்று மக்களை நாம் அடக்கி வைத்திருக்கிறோம் என்றால்—இதர கம்யூனிஸ்டுகள், 'கோட்ஸே' கூட்டங்கள் இல்லையா? சோஷலிஸ்டுகள் இல்லையா? 'அனார்கிஸ்டு'கள் இல்லையா? அவர்கள் யோக்கியதை உங்களுக்குத் தெரியாதா? காந்தியாரையே ஒழித்தவர்கள், பார்த்துக்கொண்டிருப்பார்களா? அந்த நிலைக்கு மக்களைக் கருதவிடாமல்—தம்மை திருத்திக்கொள்ள வேண்டும் என்றுதான் ஆட்சியாளருக்கு நான் வணக்கத்தோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

[ஈரோட்டில் 23, 24-10-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 2-11-1948]

# 15. சமுதாயமும் அரசியலும்

**தோழர்களே!**

சமுதாயம் வேறு; அரசியல் வேறு என்று கூறுவது தவறாகும். சமுதாய அமைப்பைச் சரிவர நடத்துவதுதானே அரசாங்கத்தின் கடமை ஆகும்? சமுதாய அமைப்புக்கு வழிவகை அமைப்பதே மதத்தின் தத்துவமாகும். முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் தங்களது மதங்களை அவ்விதமே கையாண்டு வருகின்றனர். ஆனால், நமது மதம் இருக்கிறதே, அது நமது சமுதாய அமைப்பின் முன்னேற்றத்திற்கு முற்றிலும் மாறுபட்டதாய் இருக்கிறது. நம் அரசாங்கம் என்பதோ மக்களுக்காக அல்லாமல், அரசாங்கத்தாருக்காக மக்கள் வாழவேண்டிய தலைகீழ்த் தத்துவத்தில் நாம் உழன்று வருகின்றோம்.

எனவே, நாமும் நமது நாடும் முன்னேற வேண்டுமானால், சமுதாயத்துறையிலே பெரும் மாறுதலை உண்டாக்கவேண்டுவது அவசியமாகும். அதன் பின்னரே, நல்ல ஆட்சியும் ஏற்படுத்த முடியும் என்பது திண்ணம். அவ்வாறு இல்லாது, இன்றைய சமுதாய அமைப்பைக்கொண்டே, யார் ஆட்சி செய்தாலும் மக்களுக்கு ஏற்பட்டுள்ள தொல்லைகள் ஒருசிறிதும் நீங்குவதற்கு வழி இல்லை; வழிவகையும் இருக்க முடியாது.

[பொன்மலையில், 22-5-1949-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 28-5-1949]

**தோழர்களே!**

அரசியல் என்று தனியாக ஒருவிஷயம் இல்லை; அரசியல் என்பது மக்கள் வாழ்வில் சுமத்தப்பட்ட எல்லா விஷயங்களையும் சேர்த்துக் கூறுவதுதான் அரசியல். அதாவது, சமுதாயம், பொருளாதாரம், கல்வி, வியாபாரம், கைத்தொழில், பகுத்தறிவு இன்னும் மற்றும் அனேக காரியங்களைக் கொண்டதுதான் அரசியல். ஆனால், இன்றையதினம் மக்கள் என்ன கருதுகிறார்கள் என்றால், அரசியல் என்பது வேறு, சமுதாயம் வேறு என நினைத்துக் கொண்டு, தனித் தனியாகப் பிரித்துப் பேசுகிறார்கள்.

ஆகவே, சமுதாயம் வேறு, அரசியல் வேறு என்று நினைத்துக்கொண்டு பிரிப்பதின் காரணம் என்ன? அதாவது, அரசியல் விஷயமாகப் பேசுவதாய் இருந்தால் அது 'பொலிடிக்கல்' என்றும், சமுதாய விஷயமாக இருந்தால் அது 'சோஷியல்' என்றும் பிரித்து மக்களுடைய சமுதாயத்துறை சீர்படுவதற்கு இல்லாமல் செய்வதற்காகவே செய்த ஒரு தந்திரம் இது என்றுதான் சொல்லவேண்டும். இந்த நாட்டிலேதான் இப்படிச் சொல்லுகிறோமே தவிர, வேறு எந்த நாட்டிலும் இப்படித் தனியாகப் பிரித்துக் கையாளுவது கிடையாது.

ஏன் அப்படி அமைந்தது என்றால், இந்த நாட்டினுடைய சமுதாய அமைப்பு பெரும்பாலும் ஒரு சிறிய கூட்டத்தாருடைய பிழைப்புக்காகவே அமைக்கப்பட்டுவிட்டது. ஆகவே, சமுதாயத் துறையில் ஏதாவது மாறுதல் பண்ணவேண்டுமெனக் கருதினால்கூட அதனால் பிழைக்கிற கூட்டத்தார், 'இது தவறு, இதைத் தவிர வேறு ஏதாவது பேசு' என்று சொல்லித் தடுத்துக்கொண்டே வருகிறார்கள். அப்படி வந்ததாலேதான் இந் நாட்டில் வெள்ளைக்காரருடைய ஆட்சி ஏற்பட்டும்—அவர்கள் அரசியல் துறையில் சரியாக நடந்து வந்தும்–சமுதாயத்துறையில் கைவைப்பதற்குத் துணியவில்லை. அப்படியே துணிந்தாலும் அன்றையதினம் பெரிய எதிர்ப்பு இருந்துதான் வந்தது. வெள்ளைக்காரனுடைய ஆட்சியிலே ஒரு பெரும் நெருக்கடி ஏற்பட்டபோது, 'நாங்கள் அரசியல் துறையில் மாத்திரம் பிரவேசிக்கிறோமே தவிர, சமுதாயத் துறையில் எவ்விதமாகவும் பிரவேசிக்கவில்லை' என்று சொன்னார்கள். அதைத்தான் இப்பொழுது, 'பிரிட்டிஷார் கொடுத்த வாக்குறுதி' என்று சொல்லிக் கொள்வது. ஏதாவது ஒரு வார்த்தை பேசவந்தால், அதைப்பற்றி உடனடியாக 'சர்க்கார் சமுதாயத்துறையில் பிரவேசிக்கக் கூடாது' என்று சொல்லி இருக்கிறது. ஆகையால், ஒருவரும் சமுதாயத்துறையில் பிரவேசிக்கக்கூடாது' என்று சொல்லி விட்டார்கள். எங்களைப் பொறுத்த வரையில் நாங்கள் அதை வெவ்வேறாகப் பிரிப்பது இல்லை.

எங்களுடைய முக்கியமான சங்கதிகளெல்லாம் சமுதாயத்தைப்பற்றிய சங்கதிதான். இதற்காக நீண்ட நாட்களாக நாங்கள் பாடுபட்டு வருகிறோம். இந்த 25 ஆண்டுகளாக நாங்கள் செய்த வேலைகள் எல்லாம் சமுதாயத்திற்குப் பயன்படும் முறையில்தான் செய்து வருகிறோம். எங்களுடைய கொள்கைகள் எல்லாம் சமுதாய சம்பந்தமாகவேதான் இருக்கும்.

[பாண்டமங்கலத்தில், 10-10-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 14-10-1951]

## 16. அரசியல் நிர்ணய சபை

இன்றைய அரசியல் நிர்ணய சபை ஆரிய எதிர்ப்புக்காரர்களுக்குச் சிறிதுகூட இடமில்லாத சபையேயாகும். ஏனெனில், அரசியல் நிர்ணய சபையோரைத் தேர்ந்தெடுத்தவர்கள், அரசியல் நிர்ணய சபையின் வேலைத் திட்டம் இன்னது என்று தெரிந்த மக்கள் ஒருவர்கூட அல்லாதவர்கள். அரசியல் நிர்ணய சபையாரைத் தேர்ந்தெடுத்தவர்களைத் தெரிந்தெடுத்தவர்கள்—மொத்த ஜனத்தொகையில் 100-க்கு 10 பேர்களே. ஆனாலும், அந்தப் பத்துப் பேர்களும் அரசியல் நிர்ணய சபை கர்ப்பத்தில்கூட இல்லாத காலத்தில்—அப்படி ஒன்று ஏற்படும் என்று எவருமே அறிந்திருக்க முடியாத காலத்தில் வேறு எதையோ ஓட்டர்களுக்குச் சொல்லி ஓட்டுக் கொடுத்தவர்களாவார்கள்.

அதாவது, சில பொதுநல வாழ்வுக்காரர்கள், 'இது வரி குறைக்க எழுதப்பட்ட விண்ணப்பம்' என்று கூறிப் பொதுமக்களிடம் கையெழுத்து வாங்கி, அந்த விண்ணப்பத்தை கையெழுத்து வாங்கியவர்கள், 'வரி போடும்படி கேட்டுக்கொள்வதாக' திருத்திக் கொண்டதுபோல்—தங்கள் பொறுப்பை, கடமையை மாற்றிக்கொண்டதுபோல் மாற்றிக்கொண்டார்கள். அப்படிப்பட்ட அரசியல் நிர்ணய சபை இப்போது நாட்டு மக்களின் நிலைக்கேற்ற காரியத்தைச் செய்யாமல்—பார்ப்பனர்களும் அவர்கள் அடிமைகளான செல்வவான்களும் நிரந்தரமாய் மக்களைத் தங்களுக்குள் அடிமைப்படுத்தி வைத்திருக்கவும் சுரண்டவுமே 'சிமிண்ட் ஜல்லியால்' கட்டடம் கட்டிக்கொள்கிறது.

நாம் முன்னமே கூறியிருக்கிறோம்: 'இந்த அரசியல் நிர்ணய சபையால் செய்யப்படும் விதிகளில்—இனிமேல் சுதந்திர சமதர்ம இந்தியாவில் மக்கள் பிறவியில் பிராமணன், சூத்திரன், பஞ்சமன், அரிஜனன் என்பதான பிரிவுகள் இருக்கக்கூடாது; இப் பிரிவுகள் கொண்ட ஆதாரங்கள் இருக்கக்கூடாது; இருக்கப்படவுமாட்டாது; இல்லாமல் செய்யப்படும்' என்று ஒரு வாக்கியம் இருக்கவேண்டும் என்று.

அப்படிப்பட்ட வாக்கியத்தை, தன்னைப் பிராமணன் என்று சொல்லிக்கொள்ளும் பார்ப்பனர்கள்—நேரு, ஆச்சாரியார், முன்ஷி, சந்தானம், கோபாலசாமி அய்யங்கார், அனந்தசயனம், கிருஷ்ணமாச்சாரி முதலிய பார்ப்பனர்கள் பிரேரேபிக்காவிட்டாலும்—முனுசாமிப் பிள்ளை, சுப்பராயன், குமார ராஜா, பாரதி, இராமசாமி ரெட்டியார் போன்ற 4-வது, 5-வது வர்ணத்தைச் சார்ந்தவர்களாவது சேர்க்க முயற்சித்து இருக்கலாம். முயற்சிக்காத காரணம், தங்களுடைய கீழ்சாதி நிலை மாறவேண்டும் என்கின்ற ஆசை அவர்களுக்கு இல்லை என்று யாராவது கூற முடியுமா? ஒருநாளும் அப்படிச் சொல்லமுடியாது. பின் ஏன் அவர்கள் அங்கு இதைச் சொல்லவில்லை என்றால், 'சாதி இழிவைப்பற்றி நாங்கள் ஆட்சேபிக்க மாட்டோம்' என்பதாக வாக்குறுதி அல்லது நம்பிக்கை கொடுத்து அரசியல் நிர்ணய சபை மெம்பராகத் தங்களைச் சேர்த்துக் கொள்ளும்படி கெஞ்சிக் கேட்டுக் கொண்டவர்களாதலால்—அவர்களை அரசியல் நிர்ணய சபை மெம்பர்களாக ஆகும்படி பார்ப்பனர்கள் செய்திருக்கிறார்கள். ஆதலால், அவர்கள் சூத்திரப் பட்டத்தையும் அரசியல் நிர்ணய சபையில் காப்பாற்றி இருக்கிறார்கள்.

இது போலவேதான், அரசியல் நிர்ணய சபையில் இதுகாலம் வரையில் இந்தியா முழுமையிலும்—பஞ்சாப், லாகூர் முதல் திருநெல்வேலி வரையும்; கொச்சி முதல்

அஸ்ஸாம் வரையும் இருந்துவந்த வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ உரிமையை நிலைநிறுத்த ஆனில்லாமல் செய்யப்பட்டிருக்கிறது.

அதாவது, 'வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தைப் பற்றி ஒரு சென்னை மாகாண மெம்பர் ஒரு பிரேரணை கொண்டுவந்தார். இதனால் அபிப்பிராயபேதம் கடுமையாகி, கட்சிக் கட்டுப்பாடு, ஒழுங்குமுறை காரணமாக அத்தீர்மானம் நிறுத்தப்பட்டுவிட்டது' என்று காணப்படுகிறது. ஆகவே, அங்குள்ள கட்சிக் கட்டுப்பாடு எதுவும், மற்ற விஷயங்களில் தீர்மானம் கொண்டுவருவதும், பேசுவதும், வாதிப்பதும் தடுக்கப்படவே இல்லை.

எனவே, இன்றைய அரசியல் நிர்ணய சபை திராவிட சமுதாயத்தை இராமாயண காலம் முதல் இருந்துவந்த மனு முறைக்கு ஆளாக்கும் ஒரு 'பூதேவர்களின்' (ஆரியர்களின்) சபையே ஒழிய—இந்நாட்டு மக்களின் அரசியல் சபை அல்ல என்பதை விளக்கி, அந்த அரசியல் நிர்ணய சபை நடவடிக்கையால் உருவாக்கப்படும் நூல்—ஒரு மனுதர்ம நூலேயாகும் என்று கூறுகின்றோம்.

['விடுதலை'-தலையங்கம்—2-12-1948 ; 7-8-1950]

## 17. அரசியல் சட்டம் ஒழிக

தோழர்களே!

இந்திய அரசாங்கமானது அநியாயம் நிறைந்து விளங்கும் அரசியல் சட்டத்தைக் கொண்டிருக்கின்றது. மேலும் அரசியல் நிர்ணய சபையாவது ஒழுங்கானது என்று சொல்ல முடியுமா? உண்மையான முறையில் அதைப் பார்த்துச் சொல்லவேண்டுமானால்,

'நான்கு பார்ப்பனர்கள் சேர்ந்துகொண்டு எழுதிய மனுதர்ம சாஸ்திரம்' என்றுதான் சொல்லமுடியும். இன்னும் சொல்லப்போனால் நம்முடைய உரிமைகளை—அதிகாரங்களை—சுயதேவைகளை, ஆட்சி உரிமையைப் பறிப்பதற்காகத் திட்டம் போட்டுச் செய்யப்பட்டது தான் அரசியல் சட்டம் என்றுதான் கூறமுடியும். இது நம்முடைய நல்வாழ்வுக்காக அமைந்தது அல்ல என்று நான் முன்னாலேயே கூறிவிட்டேன்.

இன்றையதினம் உள்ள அந்தச் சட்டம் எப்படி இருக்கிறது? அது யாரால் செய்யப்பட்டது? அவர்கள் கணக்குப்படி இந்த நாடு சுதந்திரம் பெற்றுவிட்டது என்றும், குடிஅரசு ஆகிவிட்டது என்றும் கூறுகிறார்களே, அதன்படியாவது அமைந்ததா?

இந்த நாட்டுக்குச் சுதந்திரம் வந்துவிட்டது என்று அவர்கள் வாயில்தான் கூறுகிறார்களே தவிர, உண்மையில் இந்தச் சட்டம் மக்களால் அமைந்ததென்று சொல்ல முடியுமா? இந்த நாட்டின் மக்களுடைய பிரதிநிதிகளால் அமைக்கப்பட்டது என்றுதான் சொல்ல முடியுமா? இந்த நாட்டு மக்களுடைய பிரதிநிதிகள்தாம் என்று சர்க்கார் கூறுகிறதே, அதன் அர்த்தம் என்ன? 'இந்த நாட்டில் உள்ள 21 வயது நிரம்பிய எல்லோருக்கும் 'ஓட்டுரிமை கொடுத்துவிட்டோம்; ஆதலால், நாங்களும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் தான்' என்று சொல்கிறார்கள். மேலும் இதுதான் ஜனநாயக ஆட்சி எனவும் கூறுகிறார்கள்.

இது, உண்மையான குடியரசு நாடாய் இருந்தால்—உண்மையான ஜனநாயக நாடாய் இருந்தால்—உண்மையான சுதந்திரம் பெற்ற நாடாக இருந்தால், இவர்கள்தாம் இன்றையதினம் ஆட்சியில் இருக்கமுடியுமா? அல்லது, இவர்களாலே இவர்களின் மனத் திற்குத் தகுந்தபடி அரசியல் சட்டம் செய்துகொள்ள முடியுமா?

ஆகவே, இது வெறும் பித்தலாட்டமான சொல்; மக்களை ஏய்ப்பதற்கு உபயோகிக்கும் வார்த்தை. ஆகவே, இது குடிஅரசு நாடாய் இருந்து—அதன் மக்களால் செய்யப்பட்ட சட்டமாய் இருக்காமல், ஒரு சிலரால் செய்யப்பட்ட சட்டமாக இருக்கிறது. இந்தச் சட்டம்

ஏற்படுத்தப்பட்ட அரசியல் நிர்ணய சபையிலே இருக்கிற பிரதிநிதிகள் எல்லாம், பிரிட்டிஷ் அரசாங்கத்தினரால் எடுக்கப்பட்டவர்கள். இந்தியாவின் மக்களால் ஜனநாயக முறையில்—குடிஅரசு முறையில் அமையப்பெற்ற பிரதிநிதிகள் அல்லர். இவர்களுக்கு ஓட்டுக்கொடுத்து அனுப்பியவர்கள் பணக்காரர்களும், பார்ப்பனர்களும், படித்தவர்களும்தாம்; இவர்களுக்கு மட்டுமே அந்தக் காலத்தில் ஓட்டுரிமை கொடுத்திருந்தார்கள். ஆகையினாலே, மேற்கூறிய (ஓட்டுக்கொடுத்த) நபர்களைக் கவனிக்காமல் பொதுமக்களைக் கவனிக்க முடியுமா? ஆகவே, இவர்கள் பொதுமக்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் என்று சொல்லமுடியாது.

இவர்களின்மேல் நம்பிக்கையில்லாமல்—இன்றைய சர்க்கார் அந்த வெள்ளைக்காரன் காலத்திலே வைக்கப்பட்டவர்களைத் தங்கள் இஷ்டம்போல் நடக்கவும், தங்களுடைய வாக்கின்படி மாறுபடாமல் நடப்பதற்கும், தாங்கள் சொல்லியவற்றிற்குக் கைதூக்கும்படியும் இன்னும் ஒருசிலபேரை நம் சென்னை மாகாணத்திலிருந்து அனுப்பச் சொன்னார்கள். அதுவும் அவர்கள் கைவசப்படுத்தி வைத்திருக்கிறவர்களைக்கொண்டு தெரிந்து எடுக்கச் சொன்னார்கள். அந்த அளவிலாவது விடவில்லை. சென்னை (தமிழ்நாட்டு)க்கு மாத்திரம் 47 பேர்கள் அரசியல் நிர்ணய சபைக்குத் தெரிந்து எடுக்கப்படவேண்டும் என்று சொல்லி விட்டு—கூடவே, அந்த 47 பேர்களின் 'லிஸ்டும்' அனுப்பிவிட்டார்கள். அது மத்திய அரசாங்கத்திலிருந்து அனுப்பிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த 47 பேர்களையாவது இஷ்டம்போல் எடுத்து அனுப்பும்படியும் கூறவில்லை. அந்த 'லிஸ்டிலே'யே அந்த 47 பேர் களின் பெயர்களையும் எழுதி அனுப்பிவிட்டார்கள்.

அவர்கள் அத்தனைபேரும் அவர்களின் பாதவருடிகளாகத்தான் காட்சி அளித்தனர். அதுவும் தவறிப்போகாமல் இருப்பதற்காக, ஒரு நபர் ஒன்றுக்கு 3½ பேர்கள் வீதம் ஓட்டுச் செய்து அனுப்புங்கள் என்றும் கூறி அனுப்பிவிட்டார்கள். 'வேறு யாருக்காவது ஓட்டுச் செய்தால், உங்கள் பேரிலே நடவடிக்கையெடுக்கப்படும்' என்றும் சொன்னார்கள். ஆகவே, இந்தத் தீர்மானத்தின்படி எடுத்து அனுப்பியும்விட்டனர். ஆனால், இதில் ஒரு ஆள் தவறுதலாகப் போய்விட்டார். அவர்தான் திரு. N. சிவராஜ். இப்படித் தவறு நடந்த தால் இவர்களின்பேரில் நடவடிக்கைகூட எடுத்துவிட்டார்கள்.

இதன் பெயர்தான் தேர்தல்; இதன் பெயர்தான் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் என்பது; இதன் பெயர்தான் குடியரசின் மக்கள் பிரதிநிதிகள் என்பது. ஆகவே, அரசியல் நிர்ணய சபைக்குப் போனவர்களில் சுயநலக் கும்பல்களையும், பார்ப் பனர்களையும் தவிர மீதி அத்தனைபேரும், மடையர்கள்தாம். பார்ப்பனர்கள் மாத்திரம் தன் சாதிக்கு வேண்டிய நன்மைகள் எது வேண்டுமோ அவைகளையெல்லாம் செய்து கொண்டனர். இங்கிருந்து போனவர்களுக்கு மாதம் 250 ரூபாய் கிடைக்கிறது. இதுவே இவனுக்குப் போதும். ஆகவே, இவன் என்ன செய்யமுடியும்? இவனால் செய்ய முடிந்தது ஒரே ஒரு காரியம்தான். அதாவது, இவர்களுக்கு என்று ஒதுக்கிக் கொடுக்கின்ற அறையை இன்னொருவருக்குக் (பிரயாணம் வருகின்றவர்களுக்கு) கொடுத்துக் கூடுதல் பணம் வாங்கிக் கொள்வது. இதுதான் இவர்கள் முறை தவறாமல் நடத்திவந்தது. இது மிக மிகக் கேவலமானது என்று இப்பொழுதாவது புரிந்துகொள்ளாமல் இருக்கிறார்களே—அது தான் அதிசயம்.

ஆகவே, இங்கிருந்து போனவர்கள்—தலைவருடைய கண்ணைப் பார்த்துக்கொண்டு கை தூக்குவதுதான் இவர்களுடைய முழுக் கடமையாக முடிந்தது. ஆனால், பார்ப் பனர்கள் மாத்திரம் தங்கள் இஷ்டம்போல்—தங்களுக்கு வேண்டிய சலுகைகளைக் கவனிக்கும்பொருட்டு அதற்கான சட்டங்களை எல்லாம் எழுதி வைத்துக்கொண்டார்கள்.

இதன் பின்னர் ஒரு கமிட்டி அமைத்தார்கள். அதிலும் தெரிந்து எடுக்கப்பட் டவர்கள் முதலாவதாக நான்கு பேர்கள்; அத்தனை பேரும் பச்சைப் பார்ப்பனர்கள்.

டி. டி. கிருஷ்ணமாச்சாரியார், சர். அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், கே. எம். முன்ஷி, திருமலை ராவ். இன்னும் மேலே மூன்று பேர்கள் எடுத்தார்கள். அவர்களில் டாக்டர் அம்பேத்கார் ஒருவர். முஸ்லிம்களுக்காக சாயபு ஒருவர்; கிறிஸ்தவர்களுக்கு ஒருவர். ஆகவே டாக்டர் அம்பேத்காரைத் தவிர மீதி அத்தனை பேர்களும் தங்கள் தங்கள் இஷ்டம் போல் செய்து கொண்டனர்.

ஆனால், டாக்டர் அம்பேத்கார் மட்டும் ஏதோ ஆதித் திராவிடர்களுக்காகப் போராடினார். இவரிடம், ' உம் சங்கதிக்கு மட்டும் தடையில்லாமல் எதுவேண்டுமானாலும் சொல்—செய்கிறோம்; ஆனால், மற்றவர்கள் விஷயத்தைப் பற்றிப் பேசாதே' என்று கூறிவிட்டனர். அதன்படியே அம்பேத்காரும் தன் சமூகத்தாருக்கு வழிதேடிக் கொண்டார். ஆகவே, ஆதித் திராவிடர்களின் எண்ணிக்கைக்குத் தக்கபடி விகிதாச்சாரம் கொடுப்பதாகக் கூறிச் சட்டமும் செய்துவிட்டனர். அந்தச் சட்டத்திலே ஆதித் திராவிடர்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தபடி சகலவற்றிலும் பங்கு கொடுக்கவேண்டும் என்று டாக்டர் அம்பேத்கார் கேட்டபடி, மக்கள் தொகை விகிதாச்சாரத்தின்படி ஸ்தானங்கள் கொடுத்துவிட்டனர். ஆகவே, அவராவது அவ்வளவு பெற்றுவிட்டார். ஆனாலும், நம்மவர்களுக்காக (நான்காம் சாதி) எவனாவது இதுவரை ஏதும் கேட்டது கிடையாது. ஆதித் திராவிடர்களுக்கு இவ்வளவு ஒதுக்கிவிட்டு, நாம் விகிதாச்சாரம் கேட்பது தப்பு என்று சொல்லுகிறார்கள். ஆகவே, யாராவது இதைப்பற்றிக் கேட்டால், அவரை 'வகுப்புவாதி' என்று கூறிவிடுகிறார்கள்.

எனவே இந்த அரசியல் சட்டம் என்பது சட்டப்படி ஏற்பட்டதல்ல; காங்கிரஸ் காரர்கள் கொடுத்த வாக்குறுதிப்படி ஏற்பட்டதல்ல.

அதாவது, அவர்கள்—காங்கிரஸ்காரர்கள் 1946-லே தேர்தலுக்கு நின்றபோது விட்ட அறிக்கை என்ன? 'நாங்கள் தேர்தலில் நின்று வெற்றி பெறுவோமானால் ஒவ்வொரு மாகாணத்திற்கும் போதிய சுதந்திரம் கொடுக்கும்படியான அரசியல் சட்டம் அமைப்போம்; மேலும், அந்தச் சட்டமும் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளால் செய்யப் பட்டதாகத்தான் இருக்கும்' என்று கூறினார்கள். ஆனால், அப்படி நடந்தார்களா? அது தான் இல்லை.

ஒவ்வொரு காரியமும் நாட்டுக்குக் கேடுகளை விளைவிப்பதும், சொல்லுகின்ற ஒவ்வொரு காரியமும் பித்தலாட்டம் நிறைந்ததாகக் காணப்படுவதும்தான் இவர்களுடைய யோக்கியதையும் திறமையும்.

எனவே, இவர்களால் செய்யப்பட்ட அரசியல் சட்டம் நமக்குத் தேவையில்லை என்று நாம் கூறுவது மட்டும் போதாது; அதை ஒழித்துக்கட்ட—தோழர்கள் கேட்டபடி, ஒரு நாளை நாம் கைக்கொண்டு ஒழிக்கும் வழி தேடித்தான் ஆகவேண்டும்.

எனவே, நாம் என்ன செய்யவேண்டும்? அந்த அரசியல் சட்டம் நமக்குத் தேவை இல்லை; ஆகையால் அதன்கீழ் நாம் சட்டசபைக்குப் போவது சரியில்லை என்பதை உணர வேண்டும்.

ஆகவே, வருகின்ற தேர்தலில், எப்படியாவது, காங்கிரஸ் வெற்றிபெறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அதற்கு நாம் செய்வது எல்லாம் அவர்களுடைய ஓட்டுப் பெட்டியில் நம்முடைய ஓட்டைப் போடாமல், மண்ணைக்கொண்டு நிரப்பவேண்டும். நீங்கள் காங் கிரசுக்காரர்களுக்கு ஓட்டுப் போடுவீர்களானால்—அது உங்கள் பிள்ளைகளுக்கும், பெற்றோர்களுக்கும், உற்றோர்க்கும் செய்த பெரும் கேடாய்த்தான் முடியும்.

[திருச்சி டவுன் ஹாலில், 17-9-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 22-9-1951]

# 18. அரசியல் சட்டத்தை எரிப்போம்—ஏன்?

தாய்மார்களே! தோழர்களே!

வெள்ளைக்காரன் வருவதற்கு முன் இந்தியா ஒன்றாக இருந்தது என்று யாராவது சொல்லமுடியுமா? திராவிட நாட்டைத் திராவிடன் அல்லாமல் வேறு யாராவது ஆண்டதாகச் சொல்லமுடியுமா? வெள்ளையன் அவன் ஜெயித்த பல நாடுகளை அவனது ஆட்சி சவுகரியத்துக்காக ஒன்றாகக் கட்டினான். முஸ்லிம் வைத்த பெயரை அவன் பயன் படுத்திக்கொண்டான். அது எப்படியோ உண்மைக்கு வந்துவிட்டது என்றவுடன், எந்த விதத்திலும் உனக்குச் சம்பந்தமில்லாத இந்த இராஜ்யத்தை, நீ மொகலாயர்கள்—வெள்ளையர்கள் ஆகியவர்களைவிட மோசமாகச் சுரண்டி ஆதிக்கம் செலுத்தி ஆளுவது என்றால்—என்ன அர்த்தம்? அவர்கள் தங்கள் மொழியைப் புகுத்தியதுபோல் நீயும் புகுத்துகிறாய்

அரசியல் சட்டம் என்பதாக—மனுதர்ம சாஸ்திரம் போன்ற ஒரு அநாமதேய, 'ஆகா வழிச் சட்டத்தை' ஏற்பாடு செய்துகொண்டு அதன் பெயரால், நாங்கள் எது செய்தாலும் அடக்குவது, ஒடுக்குவது என்று ஆரம்பிக்கிறாய். அரசியல் சட்டத்தின்படி—வடநாட்டுச் சுரண்டல் தடுப்பு மறியல் செய்வது தவறு; நாடு பிரிவினை கேட்பது தவறு; வகுப்புவாரி உரிமை கேட்பது தவறு—இப்படியாக எங்கள் எல்லா முயற்சிகளையும், 'சட்டப்படி தவறு' என்கிறாய்.

நான் சொல்கிறேன், 'இந்த அரசியல் சட்டத்தை நாங்கள் ஏற்கமாட்டோம். இந்த அரசியல் சட்டம் எங்களுக்குத் தீங்கிழைப்பது ஆகும்; இது எங்கள் பிரதிநிதிகளால் செய்யப்பட்டதல்ல; இதை நெருப்பில் போட்டுப் பொசுக்குவோம்' என்று.

இந்த அரசியல் சட்டத்தை, நீ யார் சம்மதத்தின்பேரில்—யாரைக்கொண்டு செய்தாய்? வெள்ளைக்காரன் காலத்திலே—அவன் நலனுக்காக, அவன் வகுத்த தேர்தல் விதிகளின்படி, படித்தவனுக்கும் பணக்காரனுக்கும் ஓட்டு என்கிற அடிப்படையில் நடத்திய தேர்தலில் வந்தவர்களை வைத்துக்கொண்டு, அரசியல் சட்டத்தை நிறைவேற்றிவிட்டாய். வெள்ளையன் இந்தப் பிரதிநிதிகளைக் கொண்டு செய்த சட்டத்தை எதிர்த்து, நீயே சட்ட மறுப்புச் செய்திருக்கிறாய் என்பது—வடவனே, உனக்கு ஞாபகமிருக்கட்டும்!

100-க்கு இரண்டேமுக்கால் பார்ப்பானும், 100-க்கு 5 பணக்காரனும் அவர்கள் கூலி களும்தான் இந்த நாட்டின் பிரதிநிதிகளா? இந்த நாட்டின் பெருவாரியான மக்கள் சமுதாயத்தின்—ஏழைகளின் பிரதிநிதிகளைக் கொண்டா நீ அரசியல் சட்டம் செய்தாய்? 1946 தேர்தலின்போது, நீயே என்ன சொன்னாய்? '21 வயது வந்தவர்களுக்கு எல்லாம் வாக்குரிமை அளித்து, அந்தப்படி வாக்குரிமை அளிக்கப்பட்டு நடத்தப்பெறுகிற தேர்தலில் வந்த பிரதிநிதிகளைக்கொண்டு அரசியல் சட்டம் செய்யப்படும்' என்றுதானே சொன்னாய்? அந்தப்படி செய்தாயா?

ஏதோ வெள்ளைக்காரன் ஓடுகிற ஓட்டத்திலே உன்னிடத்திலே நாட்டைத் தூக்கி எறிந்துவிட்டுப் போய்விட்டான் என்பதனால், எதுவும் செய்யலாம் என்று கருதிச் செய்து கொண்டாய்! உன் ஆதிக்கத்திற்கான முறையில் எங்களை நிரந்தரமாய் அடிமைப்படுத்திச் சுரண்டிக்கொண்டிருக்கும் தன்மையில் அரசியல் சட்டம் செய்துகொண்டு, அதை எங்கள் தலையில் வலுக்கட்டாயமாகப் புகுத்துவது என்றால், நாங்கள் எப்படி ஒத்துக்கொள்ள முடியும்? இப்படி எங்களைக் கொலை பாதகம் செய்வதாகச் சொல்லியா, நீ வெள்ளைய ரிடம் அரசுரிமை பெற்றாய்?

எனவே, எப்படி இராமாயணம், பாரதம், கீதை, பிரபந்தம் போன்றவைகள் எல்லாம் நம்முடைய சமுதாய இயல்வாழ்வுக்கு ஏற்றதல்ல என்று கருதி அவைகளைக் கொளுத்தி னோமோ—கொளுத்துகிறோமோ, அதுபோலவே—இந்த நாட்டை அடிமைப்படுத்திச்



இரு இனத் தலைவர்கள்
சி. இராசகோபாலாச்சாரி அவர்களுடன் பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள்




1932-ல் அய்ரோப்பாவிலும், ரஷ்யாவிலுல் சுற்றுப்பயணம் செய்து
இலங்கை வழியாகத் திரும்பியபோது, கொழும்பில் பெரியார் ஈ. வெ. ரா. அவர்கட்கு
அளிக்கப்பட்ட வரவேற்பு நிகழ்ச்சி—'குடிஅரசு' 11-12-1932

சுரண்டி வாழ்வதற்கு என்றே ஆக்கப்பட்டிருக்கும் அரசியல் சட்டத்தைக் கொளுத்துவோம்—கொளுத்துவோம்—கொளுத்துவோம்! (பெரிய கைதட்டல்).

திராவிட நாடு திராவிடர்களுக்கு என்று இருந்தால்—இன்று நடைபெறுகிற அக்கிரமங்கள், அதாவது—எல்லாம் வடநாட்டுக்காரனுக்கும் பார்ப்பானுக்கும்தான்; அவன் கழித்துப் போட்டது 'நமக்கு' என்கிற இந்த நிலைமை இருக்குமா? திராவிட மக்கள் என்ன மரக் கட்டைகளா? அவர்களுக்கு உணர்ச்சி, உரிமை வேட்கை இல்லையா?

[சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில், 3-8-1952-ல் சொற்பொழிவு—'விடுதலை' 7-8-1952]

## 19. ஆச்சாரியாரும் நானும்

காங்கிரஸ் மந்திரிசபை அமைத்தாகிவிட்டது! அதை எதிர்த்து ஒழிக்கவேண்டியது அவசியம்! எதிர்ப்பு நிச்சயம்! ஆனால்—எதிர்ப்பு என்பது கூட்டு முயற்சியாலா, அல்லது, தனி முயற்சியாலா என்பதுதான் யோசிக்கப்படுகிறது.

சென்னை இராஜ்யத்தில் காங்கிரஸ் ஆட்சி மந்திரிசபை அமைக்கப்பட்டுவிட்டது.

இராஜ்ய மக்களில் மூன்றில் இரண்டு பங்கு மக்கள் காங்கிரஸ் ஆட்சியை வெறுத்து, எதிர்த்து ஓட்டுச் செய்திருக்கிறார்கள்.

இந்த நிலையைக்கொண்டு கிரமமாகப் பார்த்தால், தேர்தலில் தோல்வியுற்ற கட்சி மந்திரிசபை அமைத்திருக்கிறது. அதிலும் காங்கிரசுக்கு எதிராக நின்று காங்கிரஸ் எதிர்ப்பு ஓட்டுகள் பெற்று, வெற்றி பெற்ற கட்சியை இலஞ்சம் கொடுத்தும், காங்கிரஸ் ஒழுங்குமுறை விதிகளுக்கு விரோதமாகப் பதவி கொடுத்தும் தன்னுடன் சேர்த்துக்கொண்டு மந்திரிசபை அமைத்திருக்கிறதானது—மாபெரும் அரசியல் நாணயக் குறைவான காரியமாகும்.

இது, நான் எதிர்பார்த்ததற்கு விரோதமாக அல்ல; இப்படியெல்லாம் நடக்கும் என்று எதிர்பார்த்ததுதான். காங்கிரசுக்கு எதிர்ப்பாக என்று ஒரு மந்திரிசபை அமைப்பதில் எனக்கு இஷ்டமும் இல்லை; நம்பிக்கையும் இல்லை. ஏனெனில், நிலைமை அதற்கு ஏற்றதாக இல்லை. ஆனால், 'எதிர்ப்பு மந்திரிசபை' அமைக்கவேண்டுமென்றும், அமைக்கப் படலாம் என்றும் பேசிவந்தேன்.

அந்தப்படிப் பேசியது பெரிதும் காங்கிரசுக்கு எதிராக வெற்றிபெற்று வந்தவர்கள், காங்கிரஸ் வலையில் விழுந்துவிடக் கூடாது என்பதற்கும், பதவிக்கு ஆகவே யாராவது நின்று வெற்றிபெற்று வந்திருப்பார்களானால் அவர்கள் ஏமாற்றமடைந்து விட்டதாகக் கருதி வேறு யோசனை செய்யாமலிருப்பதற்கும் ஆகவே எதிர்ப்பு மந்திரிசபை பற்றிப் பேசிவந்தேன். எதிர்ப்பு மந்திரிசபை அமைப்பு எப்படி முடிவு பெற்றிருந்தாலும், இனி அதைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனெனில், அது சுலபத்தில் நடக்கப் போவதில்லை. ஏனெனில், இந்தக் காங்கிரஸ் மந்திரிசபை ஒழிந்தால்தானே அது முடியும்.

எனவே, இந்த மந்திரிசபை ஒழிக்கப்பட வேண்டுமென்பதற்கு நாம் சொல்லுகிற காரணங்கள் தவிர்த்து, வேறு பல காரணங்கள் சொல்லி காங்கிரசையும் காங்கிரஸ் மந்திரி சபையையும் எதிர்த்து வந்த, எதிர்க்க வேண்டும் என்று கருதுகிற மக்களின் முக்கியமான கடமையும் இந்த மந்திரி சபையை ஒழிக்கவேண்டியதேயாகும். ஆதலால், அந்தப்படியான மக்கள் கூட்டம் நாணயமான கூட்டமானால் அதனின் முழு ஆதரவும் ஒத்துழைப்பும் நமக்கு இருக்கலாம் என்பதில் எவ்வித ஆட்சேபமிருக்க முடியாது.

எதிர்ப்பு என்றால் கூட்டத்தில் பேசுவது, பத்திரிகையில் எழுதுவது, சொந்தப் பெயரில் அல்லது கட்சிப் பெயரில் அறிக்கை விடுவது ஆன காரியத்தோடு முடிந்துவிடுகிற காரியம் அல்ல என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டே, ஒவ்வொரு கட்சியும் தனிநபர்களும் எதிர்ப்பைப்பற்றிச் சிந்தித்து முடிவு செய்யவேண்டும்.

காங்கிரசை எதிர்த்தவர்களில் இரண்டுதரமான கட்சிகளும், மக்களும் இருந்திருக்கிறார்கள்.

ஒன்று: பல காரணங்கள் கொண்டு காங்கிரஸ் ஆட்சியின் கேடுகளையும் கொடுமைகளையும் நாணயக்குறைவான சுயநலக் காரியங்களையும், அதனால் மக்களுக்கு விளைந்த பயன்களையும் கொண்டு காங்கிரஸ் ஆதிக்கத்தை—அமைப்பை ஒழிக்க வேண்டும் என்ற கருத்துடைய கட்சிகள், கருத்துடைய மக்கள் ஆவார்கள்.

இரண்டு: பதவிகளுக்காக, பயனுக்காக அதாவது—'காமன் வீல்' கட்சி போன்ற தோழர். மாணிக்கவேலு நாயக்கர் (Type)போன்ற மக்கள்; இவற்றுள் தனது சுயநலத்துக்காக ஒரு தனி மனிதர் அல்லது ஒரு கோஷ்டி அமைத்துக்கொண்ட கட்சிகள் எதிர்ப்புக்குப் பயன்படா என்பது நமக்குத் தெரியும். அவர்கள், 'சுவர்மேல் பூனையாக' இருந்து வருவார்களே தவிர, எதிர்ப்பு வேலைக்குப் பயன்பட மாட்டார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு ஆச்சாரியார் வீசி இழுத்துக் கட்டியிருக்கும் வலை இன்னமும் சுருட்டப்படாமல் இருந்துவருகிறது.

ஆனால், முதலாவது தரத்தில் கூறப்பட்ட மக்களின் ஒத்துழைப்பு எதிர்ப்புக்கு இருக்கலாம் என்றாலும், அவர்கள் மேற்சொன்ன மாதிரி பேச்சு, எழுத்து அறிக்கையோடு மாத்திரம் நில்லாமலும், 'காங்கிரசில் சேருவதில்லை' என்கின்ற பிரதிக்கினையோடு மாத்திரம் இல்லாமலும் தீவிரமான கிளர்ச்சிக்கு—அதாவது நேரிடை நடவடிக்கை என்பதற்குத் தயாராய் இருக்கிறார்களா? அடி, உதை, கண்ணீர்ப் புகை, ஜெயில், துப்பாக்கிக் குண்டு ஆகியவைகள் பெறத் தயாராய் இருக்கிறார்களா? இருக்க முடியுமா? என்பவைகள் முன்கூட்டியே நன்றாய் ஆலோசித்து, தங்கள் நிலையையும் தாங்கள் எதற்காகப் பொதுநலக் காரியங்களில் ஈடுபட்டவர்கள்போல் இருந்து வருகிறார்கள் என்பதையும் சிந்தித்து முடிவுகட்ட வேண்டியவர்களாவார்கள்.

இந்தக் கிளர்ச்சியில் நமது கம்யூனிஸ்டுக் கட்சித் தோழர்கள், மந்திரிசபை எதிர்ப்புக்கு ஆன கொள்கைகளில் சிறிது மாறுதல் இருப்பதாய் இருந்தாலும்—எதிர்ப்புக் காரியத்திற்கு முழு ஆதரவும் ஒத்துழைப்பும் தரவேண்டியவர்களே ஆவார்கள். ஆனால், அவர்களது மேலிடம் எந்த விநாடியில், எந்த ஆக்கினை இடுகிறதோ அதைப்பொறுத்தே நடக்க வேண்டியவர்களானதால்—கிடைத்தவரையில் நல்ல வாய்ப்பு என்றுதான் கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன். ஏனெனில், கம்யூனிஸ்ட் கட்சியின் முடிவு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தென்னாட்டுத் தலைவர்கள் கையில் இல்லை என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். அதிலும், அந்தக் கட்சி மிகவும் கட்டுப்பாடான கட்டுத்திட்டங்களுக்கு அடங்கிய கட்சி என்பதையும் நான் சொல்லித்தான் மக்கள் உணரவேண்டும் என்பதும் இல்லை.

அடுத்தாற்போல் பிரகாசம் கட்சி. இது காங்கிரஸ் எதிர்ப்பில் எந்த அளவுக்குத் தீவிரக் கிளர்ச்சியில் ஒத்துழைக்கவோ, கலந்துகொள்ளவோ, ஆதரவளிக்கவோ முடியும் என்பதைக் காண்பது சிரமமான காரியமாக இருக்கிறது.

அதைப்பற்றி அதிகம் குறிப்பிடாமல் கிடைத்தவரை அனுகூலம் என்றுதான் கொள்கிறேன்.

காங்கிரஸ் மந்திரி சபைக்கு விரோதமாக இந்தி எதிர்ப்பை மூன்று முறை நடத்தினேன். வெற்றி பெற்றேனா, தோல்வியுற்றேனா என்பது ஒருபுறமிருந்தாலும்—அவற்றால் ஒரு அளவுக்கு அனுபவம் பெற்றிருப்பதோடு, கழகமும் பொது மக்களிடம் நம்பிக்கையும் செல்வாக்கும் பெற்றிருக்கிறது.

நமது கழகத் தோழர்களிடம் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஒரு நல்ல கிளர்ச்சிக்கு—தீவிர கிளர்ச்சிக்கு, இதற்கு மேலான நல்ல நிலைமை எதிர்பார்ப்பது அதிகமேயாகும்.

எப்படியிருந்தாலும் கிளர்ச்சி செய்தாக வேண்டியது அவசியம் என்கிற நிலையில்—நான் மாத்திரமல்லன்; திராவிடர் கழகம் மாத்திரமல்ல; நாடு முற்றும், மக்கள் முழுமையும் எதிர்பார்க்கிற—தங்கள் கடமை என்று எண்ணுகிற சமயம்; அதுவும் நெருக்கடியான சமயம். ஆனதால், கடைசிப்பட்சம் என்னையே எண்ணியாவது, கிளர்ச்சி துவக்க இருக்கிறேன். இதற்காக, மாநாடு கூட்டப்போகிறேன்; மக்கள் கருத்தை மேலும் அறியப் போகிறேன்; மக்களிடம் கையெழுத்து வாங்க முயற்சிக்கிறேன்; பல பெரியவர்களுடையவும், கட்சித் தலைவர்களுடையவும் கருத்தையும் அறிகிறேன்.

ஆச்சாரியார் நிர்வாகம், கிளர்ச்சியில் எப்படி நடந்து கொள்ளும் என்று நம்மால் முடிவு செய்யமுடியாது; விட்டுப்பிடித்தாலும் பிடிக்கும்; உடனடியாக அடக்குமுறை துவக்கினாலும் துவக்கும். நமக்கும், இரண்டும் ஒன்றுதான்.

என் விஷயத்தில் ஆச்சாரியார் தனது கொள்கையில் எந்த மாறுதலும் செய்து கொள்ளமாட்டார். அவர் கடமையை அவர் செய்துதான் தீருவார். அவர் என்ன செய்தாலும் அவர் கடமையை அவர் செய்கிறார், செய்தார்—என்றுதான் எண்ணுவேனே தவிர, நானும் வேறுவிதமாய் எண்ணமாட்டேன். அன்றியும், அவருங்கூட என் கடமையை நான் செய்கிறேன்; அதுவும் வேறு நிவர்த்தி இல்லாத நிலையில் செய்கிறேன்—என்றுதான் என்னைப்பற்றிக் கருதுவாரே தவிர, தனிப்பட்ட விருப்பு-வெறுப்பு காரணமாய் நடத்துகிறேன் என்று எண்ணமாட்டார்; எண்ணவுங்கூடாது என்றே தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டாவது, இந்தி எதிர்ப்பின்போது, ஓமந்தூர் ரெட்டியார் என்னை நேரில் அழைத்துக் கேட்டபோதும், நான் இதையே சொன்னேன்; அவரும் இதையே சொன்னார். அவரால் கூடியதைச் செய்தார்—நம் பிள்ளைகளின் கால், கை ஒடியும்படி மலபார் போலீசை விட்டு அடித்தார். அதன் பிறகு, அவர் நடத்தைகள் பலவற்றை மக்கள் சந்தேகப்படும் படியான அளவுக்கு நான் ஆதரித்தேன்; பலர் அவரிடம் காரியம் சாதிக்க என்னிடம் சிபாரிசுக் கடிதம் கேட்கும்படியான அளவுக்கு நான் ஆதரித்தேன்.

இப்போது மக்கள் பலர் என்னை நம்புவதில்லை. நான் ஆச்சாரியாருக்கு வேண்டியவன்; அவர் அன்புக்குப் பாத்திரமானவன் என்றெல்லாம் கருதி—நான் ஒன்றும் செய்ய மாட்டேன் என்று கருதுகிறார்கள்; எனக்கு அந்தப்படி சிலர் எழுதியுமிருக்கிறார்கள்; சிலர் நேரில் சொன்னார்கள். மணியம்மைகூட என்னை, 'நீங்கள் இருவரும் திருடர்கள்' என்று சொன்னார்கள் என்றால், மற்றவர்கள் என்ன சொல்லமாட்டார்கள்; நினைக்க மாட்டார்கள்?

உண்மையில் நான் ஆச்சாரியாருக்கு விரோதியல்லன்; அவரிடம் எனக்கு விரோதமோ குரோதமோ கிடையாது; அவருக்கும் இருக்காது; இருக்க நியாயமில்லை என்றுதான் கருதுகிறேன்.

நாணயத்தில், அவர் பார்ப்பனர் விஷயத்தில் தவிர, மற்ற காரியங்களிலும், நிர்வாகத்திலும் மற்ற காங்கிரஸ்காரர்களைவிட எவ்வளவோ மேலானவர்தான். ஆனால், அவர் பார்ப்பன சமுதாயத்திற்கு, 'தேவர்களுக்கு மகாவிஷ்ணு எப்படியோ' அப்படிப் போன்ற ஆபத்பாந்தவர்.

நான் பார்ப்பனரல்லாத திராவிட மக்களுக்கு அவரைப்போல் ஆபத்பாந்தவனாய் இல்லாவிட்டாலும், அவர்களுக்காகப் பாடுபடப் பார்ப்பனரல்லாதாரில் வேறு யாரையும் வெளிப்படையாகக் காணமுடியவில்லையே? பெரும்பாலான மக்கள் சுயநலமிகளாகவும், சமயசஞ்சீவிகளாயும் இருக்கிறார்களே என்று சரியாகவோ, தப்பாகவோ கருதிக்கொண்டு அல்லல்பட்டு, அவர்களுக்காக ஏதோ செய்யவேண்டுமே என்று கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறவன்.

எனக்கு இன்னும் எத்தனையோ துறைகளில் எவ்வளவோ வேலை இருக்கிறது; மற்றும் என் வேலையின் பயனைத் தனிப்பட்ட முறையில் அனுபவிக்க எதிரிக்கு உள் ஆளாக இருந்து கவிழ்க்கப் பார்க்கும் துரோகிகள் சிலர் 'நம்மிலேயே' இருந்து தொல்லை கொடுப்பதால் அவர்களோடு மாரடிக்க வேண்டிய வேலை இருந்தாலும்—இது முக்கியமென்றே கருதுகிறேன்.

ஆதலால், திராவிடத் தோழர்களே! இளைஞர்களே! மாணவர்களே! என் வாழ்வில் இது கடைசிப் போராட்டமாக இருந்தாலும் இருக்கலாம். அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள்! உங்கள் திராவிட சமுதாயம் உங்கள் கடமையைச் செய்ய அழைக்கிறது!

'திராவிட சமுதாயம் இனஉணர்ச்சி அற்ற துரோக சமுதாயம்' என்று கருத இடங் கொடுக்காமல் உங்கள் கடமையைச் செய்ய வாருங்கள்!

['விடுதலை'–தலையங்கம்—11-4-1952]

## 20. பெரியார் அறிக்கை

காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்டு 23 நாள் ஆகிவிட்டது. இந்த மந்திரிசபை இந் நாட்டிலிருப்பது இந் நாட்டு மக்களுக்கே பெருத்த அவமானமாகும். எந்தவிதத்திலும் இம் மந்திரிசபை அரசியல் தர்மத்துக்கோ, நாணயத்துக்கோ, ஒழுக்கத்துக்கோ கட்டுப்பட்ட மந்திரிசபை என்று சொல்ல முடியாததாகும். இது காங்கிரஸ் மந்திரிசபையாக இருக்கிற தென்று கருதியோ—அல்லது ஆச்சாரியார் மந்திரிசபையாக இருக்கிறதென்று கருதியோ நான் முக்கியமாக இதைக் குறைகூறவில்லை; ஒழிக்கப்படவேண்டும் என்று ஆசைப்பட வில்லை.

நமது அரசியல் சட்டமென்பதே மக்கள் பிரதிநிதித்துவமல்லாத தனிப்பட்ட சுயநலமி களாகிய பார்ப்பனர், பணக்காரர், வடநாட்டார் ஆகியவர்களுடைய பாதுகாப்புக்காக அவர் களாலேயே ஏற்படுத்தப்பட்டது என்பது ஒருபுறமிருந்தாலும்—இன்றைய மந்திரிசபை யானது, அந்த அரசியல் சட்டத்துக்குங்கூட ஏற்றதல்லாததாக இருக்கிறது. ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்றால், அரசியல் சட்டத்தைச் செய்தவர்கள் மக்கள் பிரதிநிதிகளல்லர்; மக்களில் ஒரு சாராராகிய படித்தவர்களுக்கும், வரி கொடுப்பவர்களுக்கும் மாத்திரம் பிரதி நிதிகளாவார்கள். அதனால்தான் அப்படிச் சொன்னேன். படித்தவர்களென்றால்—பார்ப் பனர் யாவரும்; வரி கொடுப்பவர்களென்றால்—செல்வமுடையவர்கள் யாவரும். இவர்கள் தாம் அரசியல் சட்டம் செய்தவர்களுக்கு 'வோட்' செய்திருக்கிறார்கள்.

அப்படியிருந்தும், அந்த அரசியல் சட்டப்படி அதற்குப் பின்னாலேற்பட்ட பொது ஜன வோட்டுரிமையின்கீழ் தேர்தல் நடந்திருக்கிறது. அந்தத் தேர்தலில் காங்கிரஸ் பெரு வாரியாகத் தோல்வியடைந்திருக்கிறது. அதாவது 375 ஸ்தானங்களில் காங்கிரஸ்காரர்கள் 371 ஸ்தானங்களுக்கு ஆட்களை நிறுத்தியும், 152 பேர்களே வெற்றி பெற்றிருக்கிறார்கள். காங்கிரசுக்கு எதிரானவர்கள் 223 பேர் வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்பதோடு, 'வோட்டு'ச் செய்த கணக்கும் காங்கிரசுக்கு 66,77,588 வோட்டுகளும், காங்கிரசுக்கு எதிர்ப்பாக 1,26,65,126 வோட்டுகளும் கிடைத்திருக்கின்றன.

இப்படியிருக்க, ஒரு மோசமான 'மைனாரிட்டி'க் கட்சியான காங்கிரஸ்தான் மந்திரி சபை அமைத்திருக்கிறது. இப்படி அமைத்திருப்பதில் காங்கிரஸ் கட்சி கவர்னருக்குக் கொடுத்த எண்ணிக்கையில் 156 பேர்களும், காங்கிரசுக்கு எதிர்ப்பானவர்கள் கொடுத்த எண்ணிக்கையில் 166 பேர்களும் இருந்திருக்க, கவர்னர் அவர்கள் குறைந்த எண்ணிக்கை யுடைய காங்கிரஸ்காரரையே மந்திரிசபை அமைக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டார். இப்படிச் செய்ததற்குக் கவர்னரவர்கள் சொல்லும் சமாதானம் என்னவென்றால், காங்கிரஸ்

ஒரே கட்சி என்றும் காங்கிரஸ் அல்லாதவர்கள் பல கட்சிக்காரர்கள் என்றும், 'ஆதலால், ஒரு கட்சிக்காரரையே மந்திரிசபை அமைக்கச் சொல்லிவிட்டேன்' என்றும் சொன்னதாகும்.

என்றாலும், இதுவும் நேர்மையான சமாதானமல்ல. ஏனெனில், காங்கிரஸ்காரர்களும் தங்கள் கட்சியோடு வேறு கட்சிக்காரர்களையும், கட்சியே இல்லாத தனிப்பட்ட நபர்களையும் சேர்த்துத்தான் மந்திரிசபை அமைத்திருக்கிறார்கள். அப்படி அமைத்திருப்பதிலும் நாணயமற்றவர்களையும், வோட்டர்களுக்குத் துரோகம் செய்தவர்களையும் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

சர்க்கார் தங்களுடைய அக்கிரமமான இந்தக் காரியத்துக்குத் துரோகிகளையும், சுயநலக்காரர்களையும் தங்களோடு சேர்த்துக்கொண்டு இந்த இராஜ்ய பாரம் செய்வதானது—அரசியல் துறையை மகா ஒழுக்கக்கேடானதாகவும், நாணயக்கேடானதாகவும் ஆக்குவதற்கு வழிகாட்டுவதேயாகும் என்பதோடு, பொது அரசியல் நாணயத்தை முன்னிட்டு இந்தக் காரியம் சிறிதும் மன்னிக்க முடியாததுமாகும்.

இதுதவிர, மந்திரிசபை அமைப்பதற்குக் காங்கிரஸ் சட்டசபைக் கட்சித் தலைவராக ஏற்படுத்தப்பட்ட தோழர் இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் அரசியல் சட்டத்திற்கேற்ப, அல்லது ஜனநாயக முறைக்கேற்ப எந்தவிதத்திலும் பொருத்தமில்லாதவரேயாவார். ஏனெனில், அவர் ஒரு 'வோட்டரா' என்பதே சந்தேகம்! அன்றியும் அவர் தேர்தலில் மக்கள் பிரதிநிதியாக வந்தவராக இல்லாமல், 'நாமினேஷனில்' காங்கிரஸ் சர்க்கார் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டவர். அந்த நியமனமும்கூடப் பொருத்தமற்றதும், நியமன சட்ட விரோதமுமான நியமனமாகும். இப்பொழுது இருந்துவரும் காங்கிரஸ் சர்க்கார் தலைமையானது மக்கள் பிரதிநிதித்துவமுள்ளவர்களுடைய தலைமையாக இல்லாமல்—நியமனக்காரர்களுடைய தலைமையிலிருப்பதாகும். மந்திரிசபையில் 15 மந்திரிகள் இருந்தாலும், ஆச்சாரியார் அவர்கள்தான் பொறுப்புடையவராயிருக்கிறார். மற்ற மந்திரிகள் ஆச்சாரியார் சொல்லுகிறபடி கேட்கிறவர்களே தவிர, சுதந்திரமுடையவர்களல்லர்.

இப்படிப்பட்ட ஒரு சட்ட விரோதமானதும், ஏதேச்சாதிக்காரத் தன்மையுடையதுமான ஒரு காரியம் நடைபெற சர்க்கார் ஏற்பாடு செய்வதானால், இந்த சர்க்கார் எலக்ஷனை எதற்காக நடத்தியிருக்க வேண்டும்? எலக்ஷன் நடந்ததில் சர்க்காருக்குச் சுமார் ஒரு கோடி ரூபாயாவது இந்த இராஜ்யத்தைப் பொறுத்தமட்டில் செலவாகியிருக்கும். பத்தாயிரக் கணக்கான சர்க்கார் சிப்பந்திகளுக்கும் வேலைத் தொந்தரவு ஏற்பட்டிருக்கும். விடுமுறை காரணத்தினால் அரசாங்கத்திற்கும் எவ்வளவோ வேலை நஷ்டமும் ஏற்பட்டிருக்கிறது.

இதைத் தவிர, மக்களுக்கும் இந்த எலக்ஷனால் இந்த இராஜ்யத்தைப் பொறுத்த மட்டில், சுமார் 2 கோடி ரூபாயாவது செலவாகியிருக்கலாமென்பதோடு, எவ்வளவோ மக்களுக்குத் தொல்லை, அலைச்சல், பலவிதங்களில் நஷ்டம் முதலியவை ஏற்பட்டிருக்கின்றன.

இவ்வளவு நடந்தும் 'மெஜாரிட்டி' அல்லாத, மக்கள் பிரதிநிதித்துவமல்லாத—ஏதேச்சாதிகார நியமன மெம்பரின் மந்திரி ஆட்சி இருக்கிறதென்றால் இதை என்ன ஆட்சி என்று சொல்லுவது? இந்த ஆட்சியை ஏற்றுக்கொண்டு, இதை ஒழிக்காமலிருப்பதென்பது இந்த இராஜ்ய மக்களுக்கு ஒரு பெரிய மானக்கேடான காரியமல்லவா? இதற்குத்தானா இந்த இராஜ்ய மக்கள் பிரிட்டிஷ் ஆட்சி ஒழியவேண்டுமென்றும், மக்களாட்சி ஏற்பட வேண்டுமென்றும் பாடுபட்டதும், பல்லாயிரக்கணக்கான மக்கள் பலதடவை சிறை சென்று கிளர்ச்சி செய்ததும்?

காங்கிரஸ் ஏதேச்சாதிகார சர்க்காரின் இந்தக் காரியமானது—இந்த நாட்டையும், காங்கிரசுக்கு எதிராக வோட்டுச் செய்த 1½ கோடி மக்களையும் அலட்சியமும் அவமானமும் இழிவும் செய்ததாகும் என்பதே எனது கருத்து.

அதனால், எக்காரணத்தினாலாவது இந்த 'மைனாரிட்டி—நியமன மந்திரி ஆட்சி' ஒழிக்கப்பட்டு மக்களின் உரிமையைக் காப்பாற்றவேண்டியது இந்த இராஜ்யத்தின் ஒவ்வொரு மனிதனுடையவும் கடமையாகும்.

இதற்காகச் செய்யப்படும் கிளர்ச்சிகளை இந்த அரசாங்கமோ, அல்லது அரசாங்கத் தலைமை மந்திரியான ஆச்சாரியாரவர்களோ, தனிப்பட்ட முறையில் விருப்பு வெறுப்புக் காரணமாகச் செய்யப்படும் கிளர்ச்சி என்று கருதுவது தவறான கருத்தாகும்.

இந்தக் கிளர்ச்சியை எப்படி நடத்துவது என்பது ஒரு பெரிய பிரச்சினைதான். என்றாலும், பயன்தரத்தக்க மாதிரியில் நடத்தப்பட்டாக வேண்டும். கிளர்ச்சி வெற்றி பெறுவதானாலும் தோல்வி அடைவதானாலும் சரி—கிளர்ச்சியில் எந்த உருவத்திலும் பலாத்காரம் இருக்கக்கூடாது என்பது எனது உறுதியான முடிவு.

இந்தக் கிளர்ச்சியானது அரசியல் ஒழுக்கத்தையும், நாட்டினுடைய-மக்களுடைய சுயமரியாதையையும் பொறுத்ததுமானதினால், இதற்கு இந்த நாட்டு மக்கள் எல்லோருமே ஆதரவளிக்க வேண்டியதும், கிளர்ச்சியில் கலந்துகொள்ள வேண்டியதும் மிகமிக முக்கிய மான கடமையாகும். கிளர்ச்சியின் முறையும் தன்மையும் சீக்கிரம் வெளியிடப்படும். ஓட்டர்கள், குறிப்பாக இளைஞர்கள், மாணவர்கள் தயாராய் இருக்கவேண்டும்!

['விடுதலை'-தலையங்கம்—4-5-1952]

## 21. என்னைப்பற்றி ஆச்சாரியார்

என்னைப்பற்றி மதிப்பிற்குரிய சி. ஆர். ஆச்சாரியார் அவர்கள் திருநெல்வேலியிலும், சென்னை சட்டசபையிலும் பேசின பேச்சைப்பற்றி நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை என்பதாகப் பல தோழர்கள் கவலைப்படுகிறார்கள்.

ஆச்சாரியார் அவர்கள் என்னைப்பற்றி, என் பெயரை உச்சரிக்கும்போது காட்டிய அன்புக்கும், மரியாதைக்கும் நான் நன்றி செலுத்துகிறேன். இது சம்பிரதாய நன்றியேயாகும்.

அவரது பதவித் துறையில், அவர் உணவுக் கட்டுப்பாட்டை—கண்ட்ரோலை—எடுத்துவிட்டதற்கு ஆக நான் நன்றி காட்டுகிறேன். இது பொதுநலத்தை முன்னிட்டு உண்மையாகக் காட்டும் நன்றியாகும்.

ஆச்சாரியாருக்கும், எனக்கும் அரசியல் துறையில் சில கருத்து வேற்றுமைகள் உண்டு. அவைகளில் ஒரு சிறியதையும் அவரும் விட்டுக்கொடுக்க மாட்டார்; நானும் விட்டுக்கொடுக்க மாட்டேன் என்றே கருதிக்கொண்டிருக்கிறேன். இப்படிச் சொல்லுவது கடவுளைப்பற்றியது அல்ல; அது எனக்கு மிகச் சிறிய விஷயம். ஏனெனில், நாங்கள் தனிப்பட்ட தங்கள் தங்கள் சுயநலத்திற்காகப் பொதுவாழ்வில் இறங்கியிருந்தால் சுய நலத்தை முன்னிட்டு விட்டுக்கொடுப்பது 'சகஜ'மாகும். இரண்டுபேருக்கும் சுயநல மில்லை—ஏன் விட்டுக்கொடுக்கவேண்டும்? பொதுநலத்திற்கு ஆக விட்டுக்கொடுக்க நேரிட்டால், அது விட்டுக்கொடுத்தது ஆகாது; சம்பாதிப்பமே ஆகும். ஆதலால், கருத்து வேற்றுமைக்குப் போராட்டம் நடக்கும் என்பதில் அய்யமில்லை.

என்னைச் சுற்றிலும் திராவிட மக்களிலேயே, என்னால் பலன் அடைந்தவர்களிலேயே துரோகிகளையும், சுயநல சமயசஞ்சீவிகளையும் வைத்துக்கொண்டிருக்கிற நான்—சில போராட்டங்களில் நல்ல யோக்கியர்கள், நம்பத் தகுந்தவர்கள் என்று கருதிய தோழர்கள் பலர் கழுத்தறுக்கும்படியான துரோகம் செய்துவிட்டுப்போன அனுபவத்தைக்கண்ட நான், அப்படிப்பட்ட துரோகிகளையும் பொதுமக்களும் இளைஞர்களும் ஆதரிப்பதையும் கண்டு கொண்டிருக்கிற நான், பெரும் போராட்டங்களைத் துவக்குவதானால் மிகவும் யோசிக்க வேண்டியதாகும்.

என்றாலும், துரோகம் எவ்வளவு பெரிதானாலும், துரோகிகளுக்கு எவ்வளவு ஆதரவாக இருந்தாலும், எனக்குப் பொதுமக்கள் ஆதரவு இருக்கிறது என்கின்ற நம்பிக்கை உண்டு என்பதோடு, என்னிடத்திலும் எனக்கு நம்பிக்கை உண்டு. உண்மையான நண்பர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதிலும், கஷ்ட நஷ்டங்களுக்கு உடன் இருந்து ஒத்துழைக்கச் சில பெரியவர்களும் பல இளைஞர்களும் இருக்கிறார்கள் என்பதிலும் எனக்கு நல்ல நம்பிக்கை இருக்கிறது. இதைக்கொண்டு எப்படிப்பட்ட போராட்டம் துவக்குவது என்பதுபற்றித்தான் யோசனை செய்துகொண்டிருக்கிறேன். ஆதலால், சிலர் நினைக்கிறபடி ஆச்சாரியாரை எதிர்க்கவோ, ஆச்சாரியாருக்கு எதிராகப் போராட்டம் துவக்கவோ பயமோ தாட்சணியமோ கொண்டிருக்கிறேன் என்று யார் கருதுவதும் அதர்மமேயாகும். அன்றியும், ஆச்சாரியாருக்குக் கறுப்புக்கொடி பிடிக்கவில்லையென்றும் மந்திரிகளுக்குக் கறுப்புக்கொடி பிடிக்கவில்லையென்றும் என் மீது சிலர் குறைகூறுகிறார்கள்.

ஒழிக்கப்பட்ட காங்கிரசை, ஒழிக்கப்பட்ட மந்திரிசபையை, ஒழியப்பட இருந்த ஆச்சாரியாரை நம்மவர்கள் என்கிற துரோகிகள் ஆதரித்து உயிர்கொடுத்தால், அதற்காக யாருக்குக் கொடி பிடிப்பது என்பது பற்றிச் சிந்திக்க வேண்டாமா? சிந்திப்பதோடு கறுப்புக்கொடி பிடிக்கவும் மக்கள் மதிக்கத் தகுந்த ஒரு நல்ல வாய்ப்பு ஏற்படுத்திக் கொள்ள வேண்டாமா?

நம் வீட்டுப் பெண், 'விபசாரத்தனம்' செய்து நம் எதிரிக்கு, 'வைப்பாட்டி'யாகப் போய் அமர்ந்து கொண்டால், அந்தப் பெண்ணை இழிவுபடுத்தாமல், அதற்காக அவளைப் பெற்ற நாம் வெட்கப்படாமல், வைப்பாட்டியாகக் கொண்டவன்மீது கோபங்கொண்டு, அவர்களுக்குப் பிறந்த குழந்தையை வெறுப்பது என்றால், அது எப்படி மானமுள்ள காரியமாகும்? முதலாவது, அந்தப் பெண்ணை இழிவுபடுத்தி வீட்டைவிட்டுத் துரத்தவேண்டாமா? ஆதலால், வேறு குற்றம் காண்கிறபோது அதைக் காட்டிக் கறுப்புக்கொடி பிடிக்கலாம். 'நம்மவர்கள்' செய்த துரோகத்தை, அதுவும் கும்பல் கும்பலாகச் செய்த துரோகத்தைப் பார்க்கும்போது 'எதிரிக்கு'க் கறுப்புக் கொடி பிடிப்பது சாதாரண காரியமாகிவிட்டது.

நாளைக்கு, பஸ்கட்டண வரி சட்டசபையில் நிறைவேறப்போகிறதென்றால், அதற்கு ஆச்சாரியார் என்ன செய்வார்? காங்கிரஸ்காரர்கள் என்ன செய்வார்கள்? பஸ்கட்டண வரி நிறைவேறினால் காங்கிரசுக்கு எதிராகப் பொதுமக்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களில் சில அயோக்கியர்கள் கொடுக்கும் ஆதரவு காரணமாகுமே என்பது தவிர, ஆச்சாரியாரும் அவரது மந்திரிசபையுமே எப்படிக் காரணமாகும்? அல்லது காங்கிரசே எப்படிக் காரணமாகும்?

இதை ஏன் எழுதுகிறேன் என்றால், நாம் நம்பிய—நாம் பிடித்து வைத்த ஆட்களே நமக்குத் துரோகம் செய்கிறமாதிரியாக நமது அரசியல் வாழ்வு இருந்து வருமானால், இதற்குப் பரிகாரம் செய்யாமல் காங்கிரசைக் குறைசொல்லிக்கொண்டே வீண் உழைப்பு உழைப்பதால் மாத்திரம் என்ன பயன் ஏற்படக்கூடும்?

இந்த எலக்ஷனில் நான் பட்டபாடு எவ்வளவு? அனுபவித்த கஷ்டம் எவ்வளவு? ஏற்பட இருந்த ஆபத்து எவ்வளவு? இதற்கெல்லாம் பரிகாரம் இந்தத் துரோகச் செயல்தான் என்றால்—இந்த இழிசெயல்கள் இனிமேலாவது ஏற்படாமல் இருக்கும்படி நாம் ஏதாவது செய்யத் தகுதியுடையவர்களாக இல்லாவிட்டால், இனியும் இப்படிப்பட்ட அரசியலைப் பற்றிக் கவலைகொள்வது பயனுடையதாகுமா? வேறு நாடுகளில் இப்படிப்பட்ட துரோகிகள் என்ன பலன் அடைகிறார்கள் என்பது யாருக்குத் தெரியாது?

துரோகம் செய்தவர்களில் பலர், 'திராவிடநாடு பிரிவினை'க்கு ஆதரவாளர்களாக இருக்க எழுத்துமூலம் வாக்களித்தவர்கள் என்று கருதும்போது—அந்தப் பிரச்சினையைக் கூட விற்றுத் தின்னும்படியான அவ்வளவு துணிவுள்ள மக்களாக 'நம்மவர்கள்' ஆகிவிட்டார்களே என்று வெட்கப்பட வேண்டியிருக்கிறது.

துரோகிகளின் நடத்தையை, அவர்கள் தேர்தலில் நாம் அவர்களுக்கு ஆதரவளிப்பதைப்பற்றி அவர்கள் யோக்கியர்களாக நடந்து கொள்ளவேண்டும் என்று கருதும்படியான உரிமை இல்லாவிட்டாலும், அவர்கள் ஓட்டர்களுக்கும் நமக்கும் கொடுத்த வாக்குறுதிப்படி நடக்காத அயோக்கியத்தனத்தைக் கண்டிக்கிற உரிமை இல்லை என்று யார் சொல்லமுடியும்? 'சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம்' என்ற சொல்லை, இதைவிட வேறு எந்த விதமான அயோக்கியத்தனத்திற்குப் பயன்படுத்த முடியும்?

இனி ஸ்தல ஸ்தாபனத் தேர்தலும் பக்கத்தில் வரப்போகிறது. இதுபோன்ற துரோகிகளும்—மூன்றாந்தர, நாலாந்தர மக்களும் வாயில் தண்ணீர் ஊற்றெடுத்துத் திரிகின்றனர். நம் ஆதரவால்—நம் பேரால் பதவிக்குப் போனவர்களில் யார் யோக்கியர்களாக, நன்றி விசுவாசமுள்ளவர்களாக, நாணயமுள்ளவர்களாக நடந்து கொண்டார்கள் என்று பார்த்தால், இந்த விஷயங்களில் காங்கிரஸ்காரர்களிலேயே—பார்ப்பனர்களிலேயே நம்மவர்களில் உள்ளவர்களைவிட அதிகமான யோக்கியர்கள் உண்டு என்று கருதலாம்போல் தோன்றுகிறது. ஒரே 'ஸ்டாக்கிலி'ருந்து—சுயநலவசதி ஒன்றேயே கருதி, காங்கிரசுக்காரர்களாகவும் காங்கிரஸ் எதிர்ப்பாளர்களாகவும் மக்கள் பிரிகிறதனால், காங்கிரஸ்காரர்களைவிட—எதிர்ப்பாளர்கள் சுபாவத்தில் யோக்கியர்களாக, நாணயஸ்தர்களாக இருக்கமுடியும் என்று எதைக் கொண்டு கருதமுடியும்?

எனவே, இந்த யோக்கியர்களால் நாட்டில் காங்கிரஸ் எதிர்ப்புக்கு நல்ல அளவுக்கு இருந்த சக்தி இப்போது மிகவும் குறைந்திருக்கிறது என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது.

இந்த இலட்சணத்தில் மாணிக்கவேலு நாயகரின் துரோகத்தை எடுத்துச் சொன்னால் வன்னியகுல க்ஷத்திரிய சாதிக்குக் கோபம்வந்து, அவர்கள் நம்மை வைவதும், இரத்தினத்தின் துரோகத்தையும் அவர் போன்றோரின் துரோகத்தையும் எடுத்துக் கூறினால் அந்த சமூகத்துக்குக் கோபத்தை உண்டாக்கி, அவர்கள் நம்மைக் குறைகூறுவதும் என்று ஆகி, முடிவில் இப்படிப்பட்ட பெரும் ஜனத்தொகை கொண்ட சமுதாயங்களின் தன்மை இப்படி ஆகிவிட நேருமானால் மற்ற சிறுபான்மை ஜனத்தொகை கொண்ட மக்களுக்கு இந்த நாட்டில் அரசியல் நல்வாழ்வோ, பாதுகாப்போ எப்படி இருக்கமுடியும்?

தோழர்களே! இப்பொழுது ஆச்சாரியாரை, ஆச்சாரியார் மந்திரி சபையை, ஆச்சாரியார் ஆதிக்கத்தை ஒழிக்க முடியுமா? முடிந்தாலும் அதை ஒழிப்பது பயன்படுமா? ஒழித்த பிறகு என்ன? அப்போது இந்தத் துரோகிகள் எங்கு போய்விடுவார்கள், என்ன செய்வார்கள் என்பதைப்பற்றி முன் யோசனையோடு யோசித்துப் பாருங்கள்.

எனது போராட்டம் இந்திய யூனியன் ஆட்சியையே ஒழித்துக்கட்டி, சென்னை இராஜ்யத்தை விடுவித்து சுதந்திர நாடாக்க வேண்டியதற்காக நடத்தப்படும் போராட்டமானதால்—ஆச்சாரியார் ஆட்சியை, காங்கிரஸ் ஆட்சியை ஒழித்துக்கட்ட வேண்டும் என்கிற காரியம் இந்தத் துரோகிகள் செயலால் சிறிதும் தடைப்பட்டு விடாது என்பது மாத்திரமல்லாமல், ஆச்சாரியாருக்கு நான் நண்பனாக இருந்தாலும் எனக்கு ஆச்சாரியார் நண்பனாக இருந்தாலுங்கூடப் போராட்டம் எந்த அளவுக்கும் தடைப்பட்டுவிடாது. ஏனெனில், எங்கள் போராட்டம் தனிப்பட்டவர்கள் போராட்டம் அல்ல என்பதை மேலேயே கூறிவிட்டேன்.

['விடுதலை'–தலையங்கம்—9-7-1952]

## 22. அரசியலில் ஒழுக்கக் கேடு

மனித சமுதாயத்தில் இன்று ஒழுக்கம் மிகமிகக் குறைந்துவிட்டது; சுமார் 50, 60 வருஷங்களுக்கு முன்பு இருந்த ஒழுக்கம் இன்று இல்லை.

காந்தி காங்கிரஸ் ஏற்படுவதற்குமுன் (1920-ஆம் ஆண்டிற்குமுன்) இருந்த ஒழுக்கம் இன்றில்லை. அன்று மோசமும் வஞ்சகமும் துரோகமுமே கொண்ட வியாபாரி, வக்கீல், வேசி (தேவடியாள்) ஆகியவர்களுக்குள்ளாக நல்ல யோக்கியர்கள்—ஒழுக்க சீலர்கள் என்பவர்கள் இருந்தார்கள். மற்றும் பொதுமக்களிலும், பக்திமான்கள் என்பவர்களிலும், மதத்துறையிலும், அதிகாரிகள் என்பவர்களிலும், அரசியல் துறையிலும் நல்ல யோக்கியர்கள்—ஒழுக்க சீலர்கள் என்பவர்கள் இருந்தார்கள்.

ஏதோ தொழில் முறைக்காக—ஒழுக்க ஈனமாக யோக்கியமற்ற தன்மையாக நடந்து கொள்வது என்பதல்லாமல், அது தவிர்த்த மற்ற துறைகளில் யோக்கியர்களாக அனேகம் பேர் இருந்தார்கள். சொல்லப்போனால் ஏழைகளில்—கஷ்ட ஜீவனக்காரர்களில் பெரும் பாலோர் யோக்கியர்களாகவே இருந்தார்கள்.

இப்படி இருந்ததற்குக் காரணம் என்னவென்றால், அயோக்கியத்தனங்களை—நாணயமற்ற தன்மைகளை, ஒழுக்க ஈனமான காரியங்களை மக்கள் வெறுத்தார்கள். அயோக்கியர்கள், சமூகத்தில்—சமுதாயத்தில் வெறுக்கப்படுவார்கள். எந்தக் கூட்டத்திலும் யோக்கியன், நாணயஸ்தன் என்று கருதப்பட்டவன்தான் மதிக்கப்படுவான்; அவன்தான் முதலில் பேசத்தொடங்குவான். மற்றவன் பின் அணியில் இருப்பான்—அயோக்கியர்கள் சமூக பகிஷ்காரம் செய்யப்பட்ட (குலப்பெண்)—விபசாரிபோல் தலைமறைவாக இருக்கவே ஆசைப்படுவார்கள்.

ஆனால், இன்று அந்த நிலை இல்லை. காங்கிரசுக்கு செல்வாக்கு, ஆதிக்கம் ஏற்பட்ட வுடன் அயோக்கியர்களே பெரிய மனித ஸ்தானத்தையும், பிரதிநிதித்துவ ஸ்தானத்தையும் அடைந்துவிட்டார்கள். நாணயத் தவறுதலையும், ஒழுக்க ஈனமான நடத்தைகளையும், நம்பிக்கைத் துரோகங்களையும்—'சாமர்த்தியம்' என்பதாகக் கருதத் தலைப்பட்டு விட்டார்கள். இப்படிப்பட்டவர்களைப் பொதுமக்கள் வெறுப்பது இல்லை.

இதற்கு முக்கிய காரணம், பத்திரிகைக்காரர்கள் இமாலய அயோக்கியர்களாக ஆகி விட்டார்கள். அயோக்கியர்கள் சுலபமாகப் பிழைப்பதற்குப் பத்திரிகைத் தொழில் நல்ல வாய்ப்பாக ஆகிவிட்டது. இதனாலும், வகுப்பு உணர்ச்சி ஏற்பட்டு, மேல் வகுப்பார் என்ப வர்களுடைய நிலைமைக்குச் சிறிது கேடு ஆரம்பமானவுடன் அவர்கள் செய்கிற அயோக் கியத்தனங்களாலும், நாணயக் குறைவான காரியங்களாலும்—அயோக்கியர்கள், காலிகள், கீழ்மக்கள் ஆகியவர்களுடைய ஆதரவினாலும் கூட்டுறவினாலும் வாழவேண்டிய அவசியம் ஏற்பட்டவுடன், அவர்கள் (பத்திரிகைக்காரர்கள்) அயோக்கியர்களுக்கும் கீழ்மக்களுக்கும் விளம்பரம் கொடுத்துவர, அவர்களைத் தூக்கிவிடத் துவங்கியவுடன்—'யோக்கியனாக இருக்கவேண்டும்' என்கிற ஆசையே, பின் சந்ததிக்கும்—பெரிய மனுஷன் ஆகவேண்டும் என்று எண்ணுகிற மக்களுக்கும் தேவை இல்லாமல் போய்விட்டது. உண்மையில் யோக்கியர்களாகவும் நாணயஸ்தர்களாகவும் இருந்துவந்த மக்கள் சமயத்திற்கு ஏற்றபடி மாற்றிக்கொள்ள முடியாமல் மறைந்துகொள்ள வேண்டியவர்களாக ஆகிவிட்டார்கள்; புதிதாக முன்னுக்கு வரும் அயோக்கியத்தனத்தில், துரோகத்தில் பயிற்சிபெற்றே வர வேண்டியவர்களாக ஆகிவிட்டார்கள்.

இந்தமாதிரி நிலை மனித சமுதாயத்தில் சகஜமாக ஏற்பட்ட பிறகும்—அதாவது, எவ்வளவு அயோக்கியனும் துரோகியும் வஞ்சகனும் மோசக்காரனும் மக்களால் வெறுக்கப் படாமல் இருக்கவும்; எவ்வளவு ஈனத்தனமான காரியம் செய்து துரோகியாக ஆகிவிட்டவ னானாலும் அவனுக்குச் சமுதாயத்தில் மரியாதையும் பதவியும் பெருமையும் ஏற்பட்ட பிறகும்—இனி எவன்தான், எதற்காகத்தான் மனிதன் யோக்கியனாக இருக்கவேண்டும் என்று எண்ண வேண்டியவனாவான்.

சாதாரணமாக, மதத் துறையை, கடவுள் துறையை விட்டுவிடுவோம்; அவை இரண்டின் அஸ்திவாரமே புரட்டும், மடமையும் கொண்டதாகும்.

அவற்றை விட்டுவிட்டு, அரசியல் துறையை எடுத்துக்கொள்ளுவோம். அது உண்மையிலேயே இருந்தாகவேண்டும்; சமுதாய அமைப்பு இருக்கிறவரையில் அரசியல் அமைப்பும் இருந்தாக வேண்டும்.

வளர்ச்சியின் காரணமாக ஏற்பட்ட மாறுதலில் அரசர்கள் ஒழியப்படவேண்டியவரானார்கள். அதற்குப் பதிலாக சமுதாய வாழ்க்கை மக்களே அந்த இடத்திற்கு வரவேண்டியவர்களாக ஆனார்கள். அந்த மக்கள் தரமானது, மேலே சொன்ன வகுப்பு உணர்ச்சி காரணமாகப் பிரதிநிதித்துவத்தைப் பெரிதும் அயோக்கியர்களே பெறவேண்டியவர்களாக ஆகிவிட்டார்கள். இந்தப்படியான அயோக்கியர்களுக்குத் துரோகமே, நாணயக் குறைவே, ஒழுக்கக் குறைவே 'வெல்வெட்டு' மெத்தைமீது நடத்தும்படியான அவ்வளவு சுலபமான வழியாக ஆகிவிட்டது. ஒவ்வொரு பிரதிநிதியும் இந்த வழியில் பயனடையவே முயற்சிக்கிறானே ஒழிய, அதுவும் அவனவன், அவனவனுக்கு, அவனவனுடைய வாழ்வுக்குப் பிரதிநிதியாக வந்ததாகக் கருதுகிறானே ஒழிய—அவனவன் தந்திர சாமர்த்தியத்தால் பதவி பெற்றதாகக் கருதுகிறானே ஒழிய, 'இந்தப் பதவிக்கு மக்களின் ஓட்டுகளையோ, மற்றவர்கள் ஆதரவையோ பெற்று வந்தோம்' என்று 100-க்கு 5 பேர் கூடக் கருதாமல், எவ்வளவோ கீழ்த்தரமான காரியத்திற்கும், கொலை பாதகத்திற்கும் போட்டி போடத் தயாராக இருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட அரசியல் மூலம் மக்களுக்கு என்ன பலன், என்ன பாதுகாப்பு ஏற்பட முடியும் என்பதுதான் நமது கவலை.

இந்த அயோக்கியர்கள் மறுபடியும் தேர்தலுக்கு நின்றால் பதவி பெற முடியாது என்கின்ற நிலையாவது இல்லையானால்—அரசர் இல்லாத அரசியலானது அயோக்கியர்கள் ஆட்சியாக முடியுமே அல்லாமல், சமுதாயத்திற்குப் பயன்படக்கூடிய அரசியலாக ஏற்பட முடியுமா என்பதை மக்கள் சிந்திக்க வேண்டும்.

மக்கள் இப்போது செய்ய வேண்டியதெல்லாம் ஒரே ஒரு காரியம்தான். அதாவது, அயோக்கியர்களை, துரோகிகளை, நாணயம், ஒழுக்கம் கெட்ட கீழ்மக்களை வெறுக்க வேண்டும். எந்தத் துறையில் அயோக்கியர்களானாலும் துரோகிகளானாலும் பொது வாழ்வில் பிரதிநிதித்துவத்தில் கண்டிப்பாக வெறுக்கவேண்டும். மக்களிடம் இந்தக் குணம் இல்லாததாலேயே அயோக்கியர்களும், கீழ்மக்களும் சமுதாயத்தில் தலைநீட்டவும் பிரதிநிதித்துவம் பெற முன்வரவும் துணிகிறார்கள்.

அயோக்கியர்கள் எப்படியோ பணம் சம்பாதிக்கட்டும். 'குடும்ப விபச்சார வியாபாரத்தில்' மக்கள் பணம் சம்பாதிக்க நம் சமுதாயத்தில் வாய்ப்பு அனுமதிக்கப்பட்டிருப்பதால், பணம் சம்பாதிப்பதில் நமக்கு இன்று கவலை வேண்டியதில்லை. ஆனால், மக்கள் பிரதிநிதிகள் ஆவதற்கு மக்களுக்குத் தரம் வேண்டாமா?

அயோக்கியர்களையும், மக்களைக் காலித்தனத்தினால் மிரட்டி வயிறு வளர்க்கிறவர்களையும், மான ஈனம் சிறிதுமில்லாமல் சமயம்போல் எதையும் விட்டுக்கொடுக்கத் தயாராயிருப்பவர்களையும் பொதுமக்கள் வெறுக்காவிட்டால், மற்ற துறைகள் எப்படியோ போனாலும்—அரசியல்துறை, அதாவது ஆட்சித்துறை சிறிதும் சீர்படமுடியாது; கண்டிப்பாய்ச் சீர்படமுடியாது.

அரசியல் துறை—ஆட்சித்துறை எவ்வளவு கீழ் நிலைக்கு, ஈனநிலைக்குப் போக வேண்டுமோ அந்த நிலைக்கு இப்போது போய்விட்டது. இதில் எந்த மதமும், எந்தக் கடவுள் பக்தியும், எந்தச் சாதியும், எந்தத் துறையும் பின்வாங்கி இருக்கவில்லை.

மனித சமுதாயத்தில் ஒழுக்கமும் நல்ல அரசியலும் ஏற்படவேண்டுமானால், அயோக்கியத் துரோகிகளை, மானஈனமற்ற இழிமக்களை, நாணயம், ஒழுக்கம் அற்ற ஈனமக்களைப் பொதுவாழ்வில் தலைகாட்டாமல் அடித்து விரட்டி வீழ்த்துவதேதான் சரியான வழியாகும்.

வேறு வழியிருந்தால் சொல்லுங்கள்!

['விடுதலை'-தலையங்கம்—7-7-1952]

யோக்கியர்களே அரசியல் பொது வாழ்வுக்கு வரும்படியான நிலையை இன்னமும் நம்முடைய நாடு எய்தவில்லை. பணக்காரனுக்குப் போனதுபோக மீதி தான் பணக்காரன் அல்லாதவர்களுக்குக் கிடைக்கிறது. அப்படி மற்றவர்களுக்குக் கிடைக்கும் ஸ்தானங்களும் பணக்காரத் தன்மைக்கு எவ்வளவு அயோக்கியத்தனம், நாணயக் குறைவு, துரோக புத்தி வேண்டி இருக்கிறதோ அவ்வளவும், அதற்கு மேலும் உள்ளவர்களுக்குத்தான் பெரிதும் கிடைக்கிற மாதிரியில் இருக்கிறது. ஏதோ ஒரு சிலர் யோக்கியர்களும் இருக்க நேரலாம்; என்றாலும், அவர்கள் யோக்கியமாய் நடந்துகொள்ள முடியாத சூழ்நிலையும், யோக்கியமாய் நடந்துகொண்டாலும் பயன் ஏற்படாத சூழ்நிலையும், இருந்துவருவதால் யோக்கியமாய் நடந்துகொள்வது முட்டாள்தனம் என்று அவர்கள் கருதும்படியாக நேரிட்டுவிடுகிறது.

['விடுதலை' 23-7-1952]

## 23. புதிய சகாப்தம் காண வாரீர்!

தமிழகமாகிய—'திராவிடநாடு' தனி அரசு நாடாக, அதாவது தமிழகத்தான் அல்லாத வேறு எந்த நாட்டானது சுரண்டலும் ஆதிக்கமும் இல்லாத, முழு உரிமை நாடாக ஆக்கப்பட வேண்டும் என்பது நமது—அதாவது, திராவிடர் கழகத்தினது (ஜஸ்டிஸ் கட்சி என்பதனது) 15 ஆண்டுக்கு முற்பட்டிருந்தே செய்துவருகிற முயற்சி ஆகும். இம் முயற்சி துவக்கத்தில் தமிழக மக்களுக்குச் சற்றுப் புரியாததாகவும், அதிசயமாகவும் இருந்துவந்த போதிலும், இன்று தமிழகத்தில் காங்கிரஸ் தவிர்த்த மற்ற யாருடைய எதிர்ப்பும் இல்லாததாகவும், யாவருடையவும் சம்மதம் பெற்றதாகவும் இருந்துவருகிறது. காங்கிரஸ்காரர்களிடையிலும் 100-க்கு 75 வீதமுள்ள மக்கள் உள்ளத்தில் தமிழகம் தனி அரசு பெற வேண்டியதுதான் என்கின்ற கருத்துத் தோன்றி வளர்ந்து வருகிறது.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால்,

தமிழகம் தனித்தியங்கி தனியரசு நாடாக இருக்கக் கூடாது—இருக்கவே கூடாது என்று கருதிக்கொண்டு, தமிழகத்தை—திராவிட நாட்டை வடவன் ஆட்சிக்கு உட்படுத்தி, அதை டெல்லியின் ஏகபோக சர்வாதிகார ஆட்சியாக்கினது நமது நாட்டுப் பார்ப்பனர்களே யாவர். இந்தப் பார்ப்பன மக்கள் தமிழகத்திற்கும், தமிழர் இனத்திற்கும் அய்ந்தாம் படையாக இல்லாதிருப்பார்களேயானால், தமிழகம் இந்த அளவுக்கு வடவர்களுக்கும் டெல்லிக்கும் இவ்வளவு அடிமைப்பட்ட நாடாகவும், அடிமைச் சமுதாயமாகவும் ஆக்கப்பட்டிருக்க முடியவே முடியாது எனபதாகும்.

ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்றால், காங்கிரஸ்காரர்களிடம் வெள்ளையர், 'பிரிட்டிஷ் இந்தியா'வின் ஆட்சியை ஒப்படைக்கும்போது,

'இந்தியாவில் உள்ள சகல கட்சிகளுடைய முக்கிய கோரிக்கைகளையும் திருப்திப் படுத்தும் வண்ணம் நியாயமான ஒரு திட்டமாக இந்தியாவுக்குப் பலமும், காரியசாத்திய மானதுமான அரசியல் அமைப்பை ஏற்படுத்தித் தருவதாக இருப்பதற்கு நாங்கள் ஒரு திட்டத்தை உங்களுக்கு ஒப்படை செய்கிறோம். அதாவது, பிரிட்டிஷ் இந்தியாவையும், சமஸ்தானங்களையும் அய்க்கியமாய்க் கொண்டதாகவும் அது வெளிநாட்டு விவகாரம்,

1686—104

பாதுகாப்பு, போக்குவரத்து இவைகளை மாத்திரம் கவனித்துக்கொள்ளக் கூடியதான ஒரு யூனியனாகவும் இருக்கவேண்டும்.'

'மேற்படி விஷயங்கள் தவிர்த்த இதர விஷயங்களும், மற்றும் எல்லா அதிகாரங்களும் மாகாணங்களிடையே இருக்கவேண்டும்.'

'இதுவும்—இந்த அமைப்பும், 10 ஆண்டுக்கு ஒருமுறை அந்தந்த மாகாண மக்கள் சம்மதம் பெறவேண்டும்' என்று குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

இதைக் காங்கிரசார் அப்படியே ஏற்றுக்கொண்டதற்கு அறிகுறியாகவே 1946-47-ம் ஆண்டில் நடந்த சட்டசபைத் தேர்தலின்போது ஓட்டர் மக்களுக்கு அளித்த வாக்குறுதியில், 'இந்தத் தேர்தலில் நாங்கள் வெற்றிபெற்றால், இராஜ்யங்களுக்கு ஏராளமான அதிகாரங்களைக் கொடுத்து—அப்படிப்பட்ட இராஜ்யங்களின் கூட்டுள்ள ஒரு யூனியன் என்னும் படியான அரசியலை, அந்தந்த இராஜ்யத்தில் வயதுவந்த எல்லா மக்களுக்கும் ஓட்டுக் கொடுத்து, அந்த ஓட்டின்மீது தெரிந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக்கொண்ட சட்டசபைமூலம் அமைப்போம். அதன் பின்தான் அரசியல் சட்டம் செய்யப்படும்' என்பதாகவே வெளியிடப்பட்டது.

ஆனால், காரியத்தில் காங்கிரசார் என்ன செய்தார்கள் என்றால், இந்தப்படி வாக்குறுதி கொடுத்துத் தேர்தலில் வெற்றிபெற்று வந்ததுடன், வாக்குறுதியைக் காற்றில் பறக்க விட்டு விட்டு, உடனே அரசியல் சட்டம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். அந்த நிலையிலாவது காங்கிரசார் யோக்கியமாக நடந்துகொண்டார்களா என்றால், அப்போதுதான் மகா மகா அயோக்கியத்தனமாக நடந்துகொண்டார்கள்.

என்னவென்றால், அந்தத் தேர்தலில் வந்த மக்களிடத்தில் இவர்களுக்கு நம்பிக்கை இல்லாததாலும், இவர்களுக்கு ஏற்ற சூழ்ச்சி தந்திர அறிவுள்ள மக்கள் அதில் இல்லாததாலும் ஒரு தந்திரம் செய்து, அதாவது—'இந்த சட்டசபை அங்கத்தினர்கள் எண்ணிக்கை போதியதாக இல்லை; இன்னும் பலபேர் சேர்க்கப்பட்டால்தான் எண்ணிக்கை விகிதம் சரியாக இருக்கமுடியும்' என்று சொல்லி, நமது மாகாணத்திற்கு இனியும் 47 பேர்கள் வேண்டியதாக இருக்கிறது என்று சொல்லி, அந்த 47 பேரையும் மாகாண சட்டசபை அங்கத்தினர்கள் தெரிந்தெடுத்து அனுப்பவேண்டும் என்று திட்டம் செய்து, அந்த தெரிந்தெடுக்கப்படவேண்டிய 47 பேரும் இன்னின்னார்தான் என்ற உத்தரவையும்—ஜாபிதாவையும் காங்கிரஸ் மேலிடம் மாகாண சட்டசபை மெம்பர்களுக்கு அனுப்பிவிட்டது.

பொதுவாகவே மாகாண சட்டசபையில் அப்போது காங்கிரஸ்காரர்களே 100-க்கு 75-க்கு மேலான 'மெஜாரிட்டி'யாக இருந்தார்கள். என்றாலும், அவர்களையும் நம்பாமல் தங்களுக்கு வேண்டிய ஆட்களைக் குறிப்பிட்டே, தாக்கீது அனுப்பிவிட்டார்கள். மாகாண சட்டசபை என்பது அந்த மேலிடத்தார் கொடுத்த 'ஜாப்தா'வின்படிக்குள்ள ஆட்களையே தெரிந்தெடுக்கப்பட்டதாகச் சடங்கு செய்து, 'லிஸ்ட்' அனுப்பிவிட்டார்கள்.

இந்த மாதிரியான ஆட்களை வைத்துக்கொண்டு இவர்கள், அதாவது—காங்கிரஸ்காரர்கள், பார்ப்பனர்கள், வடவர்கள் சர்வாதிகாரமாக அரசியல் சட்டத்தைச் செய்து கொண்டார்கள்.

இப்படிப்பட்ட அரசியல் சட்டம் பொது மக்களால் செய்யப்பட்ட அரசியல் சட்டம் ஆகுமா? இதை நமது அரசியல் சட்டம் என்பதாக நாம் ஏற்றுக்கொள்ள முடியுமா? அதுவும், இந்த அரசியல் சட்டத்தின்படி இந்த 3–4 ஆண்டுகளாக நடந்த ஆட்சித் தன்மையைப் பார்த்த பிறகும்கூட, என்றுதான் கேட்கிறேன்.

இதைப் பார்க்கிறபோது, இந்தச் சூழ்ச்சிக்கு அஸ்திவாரம் படையாய் இருந்த பார்ப்பனர்கள், ஒன்று, இந்த நாட்டை விட்டு வெளியேறவேண்டும். அல்லது, அவர்கள்

இந்தச் சூழ்ச்சி செய்ததற்கு வருந்தி, இந்த அரசியல் சட்டத்தை நெய்யாகக் கொண்டு ஓமம் வளர்க்கவேண்டும்.

பார்ப்பனர்கள் சரித்திரம் ஒரு காலத்திலாவது யோக்கியமானதாக இருந்திருக்க வில்லை. அவர்களது சமய சம்பந்தமான கடவுள், சாஸ்திர, புராண, இதிகாசம் என்பவற்றில் எதிலும் நாணயமோ, யோக்கியமோ காணப்படவில்லை என்பதோடு, அவர்களால் இந்த நாட்டுக்கு, நாட்டு மக்களுக்கு எந்தக் காலத்திலும் எதிலும் தீமையே அல்லாமல், சிறு நன்மையும் ஏற்பட்டதாக இல்லை.

இவைகளை யெல்லாம்விட, பார்ப்பனர்கள் இந்தக் காரியத்தில் நடந்துகொண்டது, நமது பிற்கால சந்ததிகளைப் பல தலைமுறைகளுக்குப் பழி வாங்கும் எண்ணம் கொண்டதாக இல்லாமற் போகாது என்றே கருதுகிறேன்.

ஏன்? இப்படிப்பட்ட அருமையான ஒரு நாட்டை வடநாட்டு மலைவாசி ஆதிக்கத் திற்கு அடிமைப்படுத்திய கொலை பாதகத் தனத்தை நினைத்தால்—என் வயிற்றை எரிப்பதால், என் இரத்தத்தைக் கொதிக்கச் செய்வதால், மனம் குமுறிச் சொல்கிறேன்.

இன்று தமிழகம் மாத்திரமல்லாமல், 'இந்தியா'வையே உத்திரப் பிரதேசமும் (நேரு நாடும்) பீகார் (பிரசாது நாடும்) நாடுந்தானே ஆளுகின்றன! மற்றவர்களுக்கு இதைப் பற்றிக் கவலை இல்லாவிட்டாலும், தமிழகத்தானுக்கு—திராவிடனுக்கு இதைப் பற்றி மானம், வெட்கம், உரிமை சிறிதும் இல்லாமற் போகுமா?

பார்ப்பனர்களை மன்னிப்போம்! மன்னிப்போம்! மன்னிப்போம்!

எப்போது? நம்மை மாட்டி வைத்த இடுக்கில் இருந்து நம்மை விடுவித்து விட்டால் அப்போது.

அதுவரை—வடநாடும், வடவரும் போலவேதான் நம் பார்ப்பனர்களும்—நமக்கு என்பேன்.

நம் பார்ப்பனர் நம் நாட்டை, 'நம் நாடு' என்று—அதாவது தங்கள் நாடு என்று சொல்லிக்கொண்டே, சர்வத்தையும் அன்னிய மயமாக்கி நம்மையும் கீழாக்கியதோடல் லாமல் நம்மையும் நம் நாட்டையும் அன்னியனுக்குக் காட்டிக்கொடுத்து, நம்மை அடிமை யாக்குவதென்றால், இதை யார் பொறுக்கமுடியும்?

நம்மை, நம் தமிழகத்தை வடவனுக்கு அடிமையாக்கி மாட்டிவைத்ததை, இந்தப் பார்ப்பனர்—தாங்கள் அல்லர் என்று சொல்லமுடியுமா என்பதாகக் கேட்கிறேன்.

பார்ப்பனரிடம் அன்பாய் இருக்க எனக்கு வெகு வெகு ஆசை. ஆனால், சுதந்திர மற்று, அன்னியனுக்கு அடிமையாக, என் நாட்டை அன்னியன் சூறையாடிக் கொள்ளை யடிக்க இசைந்து அன்பு காட்ட முடியுமா? பார்ப்பனத் தோழர்களே! இளைஞர்களே! சிந்தியுங்கள்!

போதும்! போதும்! உலகம் உங்களை நகைக்கிறது; வடநாட்டானும் உங்களை வெறுக்கத் தொடங்கிவிட்டான்; டெல்லிக்குப் போய்வந்த நண்பர் ஒருவர் சொன்னார்—என்னவென்றால், டெல்லியில் 'சவுத் இண்டியன்', 'சென்னையான்' என்றால் எவனுக் கும் முகம், துர்வாடையைக் கண்டால் சுளிப்பதுபோல் சுளிக்கிறதாம்.

இது அவர்களின் 'வினையின் பயன்' என்றுதான் சொல்லவேண்டும். ஆகவே, இந்த அரசியலைக் கொளுத்த, அழிக்க ஆதரவாக இருங்கள், ஒத்துழையுங்கள்.

இருவர் நலத்திற்கே சொல்லுகிறேன். மற்ற தோழர்களையும் அழைக்கிறேன்; யாவற்றையும் மறந்துவிடலாம்.

எனக்கு யார் செய்த தீமைகளையும் மறந்துவிடும் சுபாவம் அதிகம் உண்டு. நன்மையை மறக்கவே மாட்டேன். புதிய சகாப்தத்தை உண்டாக்கலாம்.

['விடுதலை'-தலையங்கம்—10-8-1952]

## 24. காமராாசர் ஆதரிப்பு ஏன்?

பேரன்புமிக்க தலைவர் அவர்களே! படைத் தலைவர் அவர்களே! தளபதி அவர்களே! படை வீரர்களே! பெரியோர்களே! தோழர்களே!

இந்தக் கூட்டம் ஆச்சாரியார் கல்வித் திட்ட எதிர்ப்புப் படையை வரவேற்கும் கூட்டமாகும். (படைத் தலைவரையும், தளபதியையும், படை வீரர்களையும் தந்தை பெரியார் அவர்கள் மேடைக்கு முன் நிறுத்தி கூட்டத்தினருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்கள்.)

இந்தப் படையினர் சென்ற மாதம் 29 ஆம் தேதி புறப்பட்டவர்கள். கால் நடையாகவே ஏறக்குறைய 600 மைல் நடந்து சுற்றி இங்கே வந்தார்கள். வந்ததும் இங்கு வெற்றி கிடைக்கும் என்று கருதி வந்தவர்கள் அல்லர். 'இங்கே வந்ததும் சிறைக்கூடம் திறந்திருக்கும்; நாம் போய் 'ஜம்' மென்று உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொள்ளலாம்' என்று வந்தவர்கள். எப்படியோ இவர்கள் ஏமாந்துபோகும்படியான நிகழ்ச்சி நடைபெற்று எல்லோரும் மகிழும்படியாக ஆகிவிட்டது. அடுத்தாற் போல் காமராசர் மந்திரிசபை பாராட்டப்படவேண்டியது.

உங்களுக்குத் தெரியும்—நண்பர் ஆச்சாரியார் பதவிக்கு வந்ததும் நான் அவரைப் பாராட்டினேன்; மற்றவர்களைவிட ஆச்சாரியார் எவ்வளவோ மேல் என்று பேசினேன். கம்யூனிஸ்டுக்காரர்களைவிட, பிரகாசத்தைவிட, ஆச்சாரியார் பரவாயில்லை என்று துணிந்து எழுதினேன்; அவரை ஆதரித்தேன். அப்படி அவரை நான் ஆதரித்தேன் என்ற கோபத்தில் தோழர் ஜீவானந்தமும், தோழர் இராமமூர்த்தியும் அவர்களுடைய தோழர்களும் தாங்கள் போகுமிடங்களிலெல்லாம் மக்களிடம், 'இப்போது ஆச்சாரியார் மட்டுமல்ல நாட்டை ஆளுவது; ஆச்சாரியாரும், இராமசாமியும் பேசிக்கொண்டு இந்த நாட்டை ஆளுகின்றார்கள்' என்று பேசினார்கள். நானும் அதை மறுக்கவில்லை. அவர் வந்ததும் கண்ட்ரோலை எடுத்தார், நான் அதைப் பாராட்டினேன். மக்களிடம் ஓட்டுக்குச் சென்றபோது கண்ட்ரோலை எடுக்கவேண்டும் என்பதாக நாம் பேசினோம்; அப்படிப்பட்ட நல்ல காரியத்தை அவர் செய்தாரே என்று அவரைப் பாராட்டினேன். ஏனென்றால், அப்படிப்பட்ட நல்ல காரியம் செய்தால் பாராட்டி மேலும் பல நன்மைகளை நம் மக்களுக்குப் பெறல் வேண்டும் என்கின்ற எண்ணத்தில் பாராட்டினேன். அடுத்தாற்போல், அவர் கைத்தறியாளர் பிரச்சினையில் அவர்களுக்காகப் பாடுபட்டார்; அதையும் நான் ஆதரித்தேன். பிறகு தஞ்சைக்கு பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வந்தார்; அதையும் ஆதரித்தேன்.

நாம் எல்லாவற்றையும் எதிர்க்கவேண்டியதில்லை. திராவிடர் கழகத்தைப் பொறுத்த வரை சட்டசபைக்குப் போவதில்லை; மந்திரியாக முயல்வதில்லை; தேர்தலில் நிற்பதில்லை என்பது அனைவருக்கும் தெரியும். 'இதெல்லாம் இல்லாமல் உன்னால் என்ன முடியும்?' என்றார்கள். அதற்குப் பதில் சொன்னேன்—'யார் வந்தாலும் நமக்கான காரியங்களைச் செய்யும்படி பார்த்துக்கொண்டாலே போதும்' என்று. ஆச்சாரியார் இந்தக் கல்வித் திட்டம் குறித்து மிகவும் பிடிவாதமாக இருந்தார். அதனால்தான் நானும் மிக உண்மையாகக் கண்டித்தேன் நானே வருந்தும்படியாக, அவர் பதவியை விட்டுப் போகும்படியான நிலைமை ஏற்பட்டுவிட்டது.

இன்றைக்குக் காமராசர் இந் நாட்டின் முதலமைச்சராக வந்துள்ளார். இனிப் பலரும் சொல்லப்போகின்றார்கள், 'காமராசரும், பெரியாரும் ஏதோ ஒரு ஒப்பந்தம் ஏற்படுத்திக்

கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் அடிக்கடி இரகசியமாகச் சந்தித்துப் பேசுகிறார்கள்' என்றெல்லாம் கூறுவார்கள். இன்றைய தினம் இக் கல்வித் திட்டம் எடுபடும்படியான செய்தி வந்தது குறித்து நாம் பெருமைப்பட வேண்டியதுதான். நாடு முழுவதும் பாராட்டுக் கூட்டம் போடவேண்டியுள்ளது. பெரும்பாலும் அந்தப் புகழ் எல்லாம் காமராசருக்கே போகும்.

நாமும் இந்தத் திட்டத்தை எதிர்த்தோம்; மற்ற எல்லாக் கட்சிக்காரர்களும் இத் திட்டத்தை எதிர்த்தார்கள்; இது குறித்துக் காமராசரும் எதிர்த்துச் சொல்லியிருக்கிறார். அப்படிச் சொல்லிய அதே காமராசர், தான் பதவிக்கு வந்ததும் அதை எடுக்காமல் இருப்பாரானால் என்ன ஆகியிருக்கும்? அவரும் இந்த சுப்பிரமணியம், பக்தவத்சலம் முதலியவர்களுடன் சேர்ந்துகொண்டு கல்வித் திட்டத்தை ஆதரித்துக்கொண்டு இருந்தால், என்ன ஆகியிருக்குமோ, என்னால் சொல்லவே முடியாது. இதற்குள் அடுத்த முதன் மந்திரிப் பதவிக்கு யாராவது முயன்றுகொண்டிருப்பார்கள் என்றால் ஒன்றும் ஆச்சரியப் படுவதற்கு இல்லாத மாதிரி நிலைமை இருந்திருக்கும்.

நமக்கு மகிழ்ச்சிக்குக் காரணம் திராவிடன் முதல் மந்திரியாக வந்ததாகும். காமராசர் வந்ததும் ஆச்சாரியாரின் சீடர்களுக்கு எப்படியோ இருக்கும். அதோடு, இந்த நாட்டில் இருக்கிற பார்ப்பனப் பத்திரிகைகளுக்கும், பார்ப்பனக் கூலிகளுக்கும் எப்படியோ இருக்கும். அவர்களுக்கெல்லாம் இந்த மந்திரி சபையே பிடிக்காது. ஆகவே, நாம் காமராசர் மந்திரி சபையை ஆதரித்துத்தான் தீரவேண்டும். எப்போதுமே ஆதரிக்க வேண்டியதுதானா என்பதுபற்றி இப்போது ஒன்றும் யோசிக்கவேண்டியதில்லை.

நான் எப்போதுமே சொல்லிக்கொண்டிருக்கிறேன்: 'இது சுயராஜ்யமல்ல; பார்ப்பன ராஜ்யம்' என்று; 'இது ஜனநாயகமல்ல; பார்ப்பன நாயகம்' என்று. எப்படியோ நாம் இந்த ஜனநாயகத்தின் யோக்யதையைக் கண்டுகொண்டோம். இந்த ஜனநாயகத்தின் யோக்கியதையைப் பற்றிப் பல இடங்களில் சொல்லியிருக்கின்றேன். இலண்டனில், பெர்னார்ட் ஷா என்ற அறிஞரிடம் பலர் சென்று ஜனநாயகம் என்பதற்கு விளக்கம் தரும்படி கேட்டார்கள். அவர் அதற்குக் அழகான விளக்கம் தந்தார். என்ன விளக்கம் தந்தார் என்றால்—'ஜனநாயகம் என்பது முட்டாள்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்ற அயோக்கியர்கள் ஆளும் ஆட்சி' என்பதாக விளக்கிக் கூறினார். அது ஏறக்குறைய (கிட்டத்தட்ட) நம் நாட்டுக்கு ஏற்ற மாதிரியில் அமைந்துபோய்விட்டது. ஒருவர் கூறினார், 'இரண்டு உழக்குப் பொரிக்கு ஓட்டு வாங்கினார்கள்' என்று. ஜனங்கள் என்ன முட்டாள்களா, இல்லையா? இல்லவே இல்லை. ஜனங்களை அந்தப் பக்குவத்தில் வைத்துக்கொண்டு ஜனநாயகத்தை ஆரம்பித்தார்கள்—ஜனநாயகம் என்றால் என்ன என்பதைப்பற்றிக் கவலைப்படாமல்.

திடீரென்று அதிகாரம் செய்கின்றார்கள். ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படுவதுதான் ஜனநாயக ஆட்சி என்றால், ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்தானா ஆட்சி செய்தார்? இந்தக் கல்வித்திட்டத்தை நீக்குவதற்கு ஒரு மந்திரி சபையே மாறவேண்டுமா? இந்தக் கல்வித் திட்டத்தை எல்லா எம். எல். ஏ.க்களும் எதிர்த்தார்கள்; ஜில்லா போர்டுகள் எதிர்த்தன; நகரசபைகள் எதிர்த்தன; இந்த ஊரில் நடைபெற்ற பஞ்சாயத்து மாநாட்டில் வந்திருந்த 4500-க்கு மேற்பட்ட பஞ்சாயத்துக்காரர்கள் எதிர்த்தார்கள். அந்த மாநாட்டில் இந்தக் கல்வித் திட்டத்தை ஆதரித்துப் பேச வந்தவரை, 'போ, வெளியே!' என்று சொல்லித் துரத்தினார்களே! அதற்குத் தலைமை வகித்த சுப்பராயன் என்ன சொல்லியும், அவரைப் பேசவிடவேயில்லையே! இவ்வளவுக்கும் மதிப்புத் தராமல், 'நீங்களாக இந்தக் கருத்தைச் சொல்லவில்லை. இதை அந்த இராமசாமி சொல்லி நீங்கள் சொல்கின்றீர்கள்' என்றல்லவா சொல்லித் தட்டிக் கழித்தார்.

இன்றைக்கு இந்த மந்திரி சபையினரும் நடுங்கிக்கொண்டேயல்லவா சொல்லியிருக்கின்றார்கள். இன்றே இந்த அரசாங்கம் இந்தத் திட்டம் ஒழிந்தது என்று சொல்ல வேண்டாமா? பத்திரிகைக்காரர்கள் எல்லாம் இதை ஒரு சிபாரிசு என்றே கூறுகிறார்கள். இந்தக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர் முதன் மந்திரி. அங்கேயே இருந்தவர் கல்வி மந்திரி. அப்புறம் என்ன? யாருக்கு இவர்கள் சிபாரிசு செய்கிறார்கள்? இதை அந்தக் கூட்டத்தில்தான் ஒப்புக்கொள்ளவில்லையென்றால் இவர்கள் எல்லாம் மனிதர்களா என்கிறேன். முதலிலேயே ஏழுபேர் கொண்ட கமிட்டியில் ஆறுபேர் ஆதரித்துள்ளார்கள். பிறகு கல்வி மந்திரி சகல கட்சித் தலைவர்களையும் கூட்டியதில், அதிலேயும் இத் திட்டத்தை எடுக்கவேண்டும் என்று சொல்லியாயிற்று. இப்படி எல்லோரும் ஒப்புக்கொண்டபின் இன்னும் தாமதத்திற்குக் காரணம் விளங்கவில்லை. இத் திட்டம் நீடித்திருந்தால் நமக்கு நல்ல வேட்டைதான். இந்தத் திட்டத்தினால்தான் நாம் ஓராண்டு வேறெதிலும் கவனம் செலுத்தாமல் இருக்கவேண்டியதாகிவிட்டது.

ஆச்சாரியார் அவர்கள் இந்தத் திட்டத்தின் மூலமாக மட்டுமல்லாமல், வேறு பல வகையிலும் தீங்குகள் செய்ய இருந்தார். இந்தச் சுயமரியாதைத் திருமணம் பற்றி அவர் பெரிய தீங்கிழைக்க இருந்தார். அவருக்குச் சுயமரியாதைத் திருமணம் பிடிக்காது என்பதல்ல; பார்ப்பானுக்கு வரும் வரும்படி போய்விடுமோ என்பதில்தான் அவருக்குக் கவலை.

அடுத்தது, கல்லூரியில் நம் மாணவர்களைச் சேர்ப்பதில் கைவைத்தார். நம் மாணவர்களுக்கு குமாரசாமி ராஜா காலத்தில் கொஞ்சம் வசதியிருந்தது. பிறகு, இந்தக் கல்லூரியில் சேர்ப்பதில் எவ்வளவு கெடுதல் உண்டுபண்ண முடியுமோ அவ்வளவும் செய்தாகிவிட்டது. இது பற்றிக் காமராசரிடம் யாரோ சொன்னபோது அவர், 'நானும் தமிழன்தான்' என்று சொன்னாராம். ஆச்சாரியார் ஆட்சிக் காலத்தில் பார்ப்பானில் இருந்த கூன், குருடு, நொண்டி, முடம் எல்லோருக்கும் பதவி கொடுத்துவிட்டார். பார்ப்பானில் வேலைக்கு ஆள் கிடைக்காத மாதிரி எல்லாப் பார்ப்பனர்களும் பதவியில் நிரம்பிவிட்டார்கள். நாடு நம்முடைய நாடு—இதில் பார்ப்பனர்களுக்கா பதவி? சட்டத்திற்குப் பெரிய மதிப்புக் கொடுத்தவன் நான்தான். இனி அதற்கு மரியாதை கொடுத்துப் பயனில்லை என்று கருதும்படியாக ஆய்விட்டதே! அதனால்தான், 'குத்து, வெட்டு, தீ வை!' என்று சொன்னேன். அதற்கு எல்லா ஏற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன. என்பேரில் நடவடிக்கை எடுக்க ஏற்பாடு நடைபெற்று வருகின்றது. அரசாங்கத்தார் சும்மா இருக்க மாட்டார்கள்; பார்ப்பனர்களும் சும்மா இருக்க மாட்டார்கள். ஆனால், நாம்தான் கட்டாயம் வெற்றிபெறுவோம் என்கின்ற உறுதியில் இருக்கின்றோம். அதற்கெல்லாம் வேண்டிய சாதனம் இருக்கின்றது. நீங்கள் இதற்கெல்லாம் ஆதரவு தரவேண்டுமென்று விரும்புகிறேன். ஆதரவு என்றால்—நீங்களெல்லாம் நெருப்புப் பெட்டி, தீப் பந்தம் முதலியவற்றுடன் வரவேண்டும் என்பதல்ல; எங்களோடு சாதாரணமாக ஒத்துழைத்தால் அதுவே போதும்.

நீங்கள் ஒன்று நினையுங்கள்! பார்ப்பான் எவ்வளவு அக்கிரமம் பண்ணியும், கொடுமை செய்தும் எல்லாவற்றிலும் வெற்றிபெற்றே வருகின்றான். எதனால் அப்படி வெற்றி பெறுகின்றான்? அவர்கள் எல்லோரும் ஒரே மனதாக ஒற்றுமையாக இருந்து வருகின்றார்கள். அவர்களோடு போராடுவது மிகவும் கடினந்தான். திராவிடர் கழகம் தவிர, 'பார்ப்பான் ஒழியணும்' என்று எவனும் சொல்லமாட்டேன் என்கிறானே! பார்ப்பான் ஒழியணும் என்று சொல்ல நடுங்குகின்றார்களே! 'பார்ப்பானே! நாட்டை விட்டுப் போ!' என்றால்—அவன், 'எங்கே போவது?' என்று கேட்கிறான். அதற்கு, 'நீ எங்கே யாவது போ!' என்று சொல்கிறோம் நாம். 'நான் இங்கேயிருந்து எங்கே போவது?' என்றால், 'நீ எதுக்கப்பா இங்கே இருக்கவேண்டும்?' என்று கேட்கிறேன். இந்த நாட்டில் கக்கூசு எடுக்கிறவன் இருக்கணும்; சலவை செய்பவன் இருக்கணும்; ஆனால் நீ எதுக்கப்பா இருக்கணும்? இதை, 2000 ஆண்டுகளாகப் பார்த்துவிட்டுத்தானே சொல்கிறோம்?

உள்ளபடியே இந்தக் கல்வித் திட்டத்தைப்பற்றி, நேற்று வந்திருந்த தீர்ப்பு வராமல், வேறுவிதமாக வந்திருந்தால் நடப்பே வேறுவிதமாக அல்லவா நடந்திருக்கும் ! ஒரு பத்துப் பார்ப்பனர் தலை விழுந்திருக்கும்! அப்படி விழுந்தால் நம்மவரில் ஒரு அய்ம்பது பேரைச் சுடுவான். ஆனால், நம் பிணம் சுடுகாடு சேருவதற்குள் எல்லாப் பார்ப்பானும் ஓடி விடுவானே !

இந்த இராஜ்யம் நல்ல இராஜ்யமாக இருந்தால் என்ன ஆகணும் ? நேற்று நடந்த தீர்ப்புக்குக் கல்வி மந்திரி இராஜிநாமா கொடுத்தாகணும். அவர் அப்படி இராஜிநாமா கொடுத்தால் என்ன ஆவார் ? பழைய கவுண்டர்தான் ; முக்காடு போட்டுக்கொண்டு போக வேண்டியதுதான். இன்னொருவர் சொன்னாராம், 'இந்தக் கல்வித் திட்டத்தை எடுக்கா விட்டால், ஜில்லா போர்டு தேர்தலில் நமக்கு நாமம்தான்' என்று. இப்படி இந்தத் திட்டத்தை எடுத்ததற்குக் காரணம் நம்முள் இருக்கும் ஒற்றுமைதான்.

இவ்வளவோடு இல்லை, நம்முடைய முயற்சி. நாமும் இந்த மந்திரிசபையைக் கூடுமான அளவு ஆதரிக்கலாம். நாம் ஏதோ நமக்குச் சொந்தக் காரியத்திற்காக ஏதாவது கேட்கிறோமா ? இன்னும் கொஞ்ச நாளைக்காவது அவர்கள் இருக்கவேண்டும் என்றால், நாட்டு மக்களது எண்ணங்களுக்கு மதிப்பு அளிக்கவேண்டும்.

1924 முதல் 1954 வரை ஒரு தமிழன்கூட முதன் மந்திரியாக வர முடியவில்லை. சுப்பராயன், சுப்பராயலு ரெட்டியார், பிரகாசம், ஓமாந்தூர் ரெட்டியார், இராசகோபாலாச் சாரியார்—இந்த மாதிரியாக பார்ப்பானும், ஆந்திராக்காரனும் தான் இருந்திருக்கின்றார்கள். அப்படிக்கில்லாமல் முதன் முதலாகத் தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட தமிழன் முதலமைச்சராக வந்திருக்கின்றார். இவர் மந்திரி சபையும் 15 நாளில் தீர்ந்து போகாத மாதிரி—இவர் வாய்தா பூராவும் இருக்கிற மாதிரி இருக்கவேண்டும்.

இரண்டாவது, முதன்முறையாகப் பார்ப்பானே இல்லாத மந்திரிசபை இது. இந்தக் காரியம் மிகமிகப் பெருமையானது. இன்றைக்கே அக்கிரகாரம் பேசுகிறது, 'நம்முடைய ஆச்சாரியார் எங்கே ? இந்தச் சாதாரண காமராசர் எங்கே ?' என்று. நான் சொல்லுகிறேன் —போய்ப் பாரேன் ; இப்போது எங்கே உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள் என்று ! 'காமராசர் இந்தத் திட்டத்தை எடுத்தால் அவரை எதிர்ப்போம்' என்று சில காங்கிரஸ் காரர்கள் பேசினார்களாம் ! நாளைக்கு அவர்கள் யாரை எதிர்க்கின்றார்களோ பார்க்கலாம். சட்டசபையில் இப்போதுள்ள 'திராவிடப் பார்லிமென்டரி கட்சி'யில் 23 பேர் இருக்கின்றார்கள். நாளைக்கு அவர்கள்தாம் எதிர்க்கட்சியாய் இயங்கப் போகின்றார்கள். காமராசர் ஆட்சி இந்தக் கம்யூனிஸ்டுகளுக்குத்தான் பெரிய மண்டைக் குடைச்சல் ! இந்தக் கம்யூ னிஸ்டுகள் ஆச்சாரியாரிடம் நல்ல முறையில் பல பலன்களை அடைந்துவந்தார்கள். இந்தக் கம்யூனிஸ்டுகள் இந்த மந்திரி சபை மாற்றத்தைப்பற்றிச் சொன்னார்களாம், 'குடுமி போய், கிராப் வந்திருக்கிறது' என்று. 'இதனால் என்ன இலாபம் ?' என்றார்களாம். இவர்களும்தானே இந்தக் கல்வித் திட்டத்தை எதிர்ப்பதுபோல் காட்டிக்கொண்டார்கள் ? இப்போது, குடுமி போய் கிராப் வந்தால் என்ன செய்யும் என்று தெரிகிறதா ?

ஆச்சாரியார் இப்போது அடிக்கடி எங்களை எதிர்ப்பதாகக் காட்டிக்கொள்வதன் அர்த்தம்—அவர் இந்து மகா சபைக்கு அனுகூலமாக இருக்கிறார் ; அது வடநாட்டில் தற்போது சற்று வளர்ந்து வருகின்றது. அதன் மூலம் ஏதாவது பதவி அடைய முயற்சிக் கிறார். வடநாட்டில் ஏற்படப்போகும் மாறுதலுக்கு—தனக்கு ஒரு 'சான்ஸ்' கிடைக்க வேண்டும் என்பதற்காக இப்படிப் பேசுகிறார்.

இந்த நாட்டில் இருக்கும் பத்திரிகைக்காரர்களுக்குப் பெரிய வேதனை. எப்படி இந்தப் பார்ப்பான் இல்லாத மந்திரி சபையைக் கவிழ்ப்பது என்றுதான் யோசித்து வரு கிறார்கள். 'தினமணி' இன்னும் ஒரு மாதத்தில் எதிர்க்கும் ; 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'

எதிர்க்கும். எல்லாவற்றிற்கும் பிறகு மெதுவாக 'இந்து' எதிர்க்கும் என்பதாகக் கூறி, படையினருக்குப் பாராட்டுகள் சொல்லி முடித்துக்கொள்கிறேன்.

[திருவல்லிக்கேணி கடற்கரையில் சொற்பொழிவு—'விடுதலை' 15-5-1954]

தோழர்களே!

இந்த மாநாடு நல்ல, குறிப்பிடத்தகுந்த நேரத்தில் மக்கள் உள்ளத்தில் மிக்க மகிழ்ச்சி நிறைந்திருக்கும்போது நடைபெறுகிறது. முதலாவது, இந்த மாநாடு அய்ந்து வருடத்திற்கு அசைக்கமுடியாதபடி இருந்த ஆச்சாரியாரின் ஆட்சி ஒழிந்த சந்தர்ப்பத்தில் நடைபெறுகிறது. இரண்டாவது, ஒரு தமிழரது மந்திரிசபை ஏற்பட்ட சந்தர்ப்பத்தில் நடைபெறுகிறது.

கடந்த 34 வருடத்தில் இல்லாத மாதிரி இப்போதுதான் மந்திரிசபை ஏற்பட்டிருக்கிறது. இதற்கு முன் இருந்த மந்திரிகளெல்லாம் பார்ப்பனர்களாக, ஆந்திரர்களாகத்தான் இருந்தார்கள். தமிழ் நாட்டில் ஒரு பச்சைத் தமிழனுடைய மந்திரிசபை ஏற்பட்டிருப்பது நமக்கு ஒரு பெருமை! என்னைக்கூடக் கேட்டார்கள், 'நீ ஒரு கன்னடியன்; எப்படித் தமிழனுக்குத் தலைவனாக இருக்கலாம்?' என்று. அதற்கு நான் சொன்னேன், 'தமிழனுக்கு, எவனுக்கும் யோக்கியதை இல்லையப்பா' என்றேன். இதற்குக் காரணம், ஒரு தமிழன், இன்னொரு தமிழன் உயர்ந்தவனாக இருப்பதைப் பார்த்துச் சகித்துக் கொண்டிருக்கவே மாட்டான். இன்னொரு அதிசயம்—இது பார்ப்பானே இல்லாத மந்திரி சபை. 1937-ல் ஆச்சாரியாருடைய மந்திரிசபையில் பாதிப்பேர் பார்ப்பனர்களாகவே இருந்தார்கள். அதற்குப் பிறகு ஏற்பட்ட மந்திரிசபைகளிலேயும் 2, 3 பார்ப்பனர்கள் இருந்தார்கள். இப்பொழுதுதான் முதன்முதலாகப் பார்ப்பனர்களே இல்லாத மந்திரிசபை ஏற்பட்டிருக்கிறது. இன்னொரு அதிசயம், எந்த ஆச்சாரியாருக்குத் தாங்கள் நல்ல அடிமைகள் என்பதாகக் காட்டிக்கொண்டிருந்தார்களோ, அதே ஆட்களை காமராசர் தன்னுடைய அடிமையாக ஆக்கிக்கொண்டார். ஆச்சாரியாருடைய ஆட்களைக்கொண்டே அவரது கண்ணைக் குத்த ஏற்பாடு செய்துவிட்டார். இந்தக் கல்வித் திட்டத்தை யார் கொண்டுவந்தார்களோ, அவர்களது வாயாலேயே சொல்லி எடுக்கவைத்தார்.

இது நமக்குப் பெரிய வெற்றி. இந்த மகிழ்ச்சியினால், நாம் இந்த மந்திரிசபையைக் காப்பாற்றுவோம் என்று கருதுகின்றேன். இதைப் பார்த்துச் சிலர், எனக்குக் கொள்கையே இல்லை என்று சொல்லுகிறார்கள். இதைப் பத்திரிகையிலும் மொச்சைக்கொட்டை அளவு எழுத்துக்களில் போடுகிறார்கள்; இப்போது ஒரு பத்திரிகை—இப் பந்திப் பத்திரிகை—அதற்குப் பெயர் 'தினத் தந்தி'—அது நல்ல நாட்டிலிருந்தால் அதை சாக்கடைப் பத்திரிகை என்றுதான் எல்லோரும் சொல்லுவார்கள்; அந்தப் பத்திரிகை நம்மை அடிக்கடி கேலிசெய்து, மக்களை வேறு கருத்தில் திருப்புவதில் ஈடுபட்டுள்ளது. எந்தச் செய்தியிலேயும் நமக்குச் சம்பந்தமே இல்லாத மூன்றாவது ஆளையும் இழுத்துப் போட்டுத் தப்புப் பிரச்சாரம் செய்கிறது.

இந்த மந்திரி சபையைப் பற்றிப் பெரியகுளம் மாநாட்டில் அறிக்கைவிட இருந்தேன். அன்று வந்த செய்தியில் பல மந்திரிகள் பழைய மந்திரிகளாகவும், ஆச்சாரியார் மந்திரி சபையில் இருந்தவர்களே இருப்பதையும் கண்டு நிறுத்திக்கொண்டேன். ஏன் என்றால், இந்தக் காமராசர், அவர் வெளியில் சொன்னதையெல்லாம் செய்யமுடியுமோ என்று நான் கருதியதாகும். அதனால்தான், இந்த மந்திரிசபையைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது, 'இது, புதிய மொந்தையில் பழைய கள்?' என்று சொன்னேன். ஆனால் காமராசர், நல்ல முறையில் இவர்களைச் சமாளிப்பேன் என்கிற மாதிரி, கல்வித் திட்டத்தை எடுத்துள்ளார்.

எங்களுக்கு இரண்டொரு காரியம் செய்தாலே போதும். அது என்னவென்றால், கல்வித்திட்டம் கேடுபயப்பது என்று பலரும் பலவிதத்தில் ஒப்புக்கொண்ட காரியத்தை—

உடனே கவனிக்க வேண்டும் என்பது. இரண்டாவது காரியம், ஜஸ்டிஸ் கட்சியில் இருந்து வந்த வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தை—சட்டப்படி இருந்ததை—அல்லாடி கெடுத்து விட்டார். அதைப்பற்றிப் பெரிய கிளர்ச்சி செய்தோம். அதைக்கண்டு அப்போதிருந்த மந்திரிகள் நடுங்கி, அதற்காக அரசியல் சட்டத்தையே திருத்தும்படியாக ஆகிவிட்டது. அதன்படி ஏதோ ஒரு அளவுக்கு நம்முடைய மக்களுக்கு விகிதாச்சாரம் கிடைக்கும் வசதி ஓரளவுக்கு இருந்தது. அதை மீண்டும் இராஜகோபாலச்சாரியார் நன்கு கெடுத்துவிட்டார். அதை மீண்டும் மாற்றவேண்டுமென்று சொன்னேன். அதற்கு, காமராசரிடமிருந்து என்னிடம் வந்தவர், தனக்கும் அதில் அக்கறை இருப்பதாகவும், தனக்காகவே அதைக் கவனிப்பதாகவும் சொன்னார்கள். அதனால் இதை ஆதரிக்கவேண்டும்.

இப்பொழுது இதை ஆதரிக்க இன்னொரு காரணமும் சேர்ந்துகொண்டது. இது தமிழன் மந்திரி சபை; பார்ப்பானே இல்லாத மந்திரி சபை. திராவிடர் கழகத்தைப் பொறுத்தவரை அது ஒரு கட்சி அல்ல என்று வெகுநாட்களாகவே சொல்லி வருகிறேன். அந்தக் கொள்கையை யார் ஆதரித்தாலும் அவர்களை நம்முடைய ஆட்களாகவே கருத வேண்டும் என்று சொல்லிவந்திருக்கிறேன். என்னைப் பொறுத்தவரையிலும் நான் என்றும் 'கட்சிக்காரனாக' இல்லவே இல்லை. எப்பொழுதும் நான் 'கொள்கைக்காரனாக'வே இருந்தேன்.

காங்கிரசிலிருந்தபோதே நான் இந்த ஜில்லா போர்டு, சட்டசபை முதலியவற்றுக்கு நிற்கக்கூடாது என்று சொன்னேன். ஆனால், சத்தியமூர்த்தி அய்யரும், சீனிவாசய்யங்காரும்—'இது நல்ல சந்தர்ப்பம்' என்று கூறி, அதைப் பயன்படுத்திக்கொண்டு, தேர்தலில் நிற்க ஆரம்பித்தார்கள். நான் அப்போது கோயம்புத்தூரில் பேசுகையில், 'காங்கிரசுக்கு ஓட்டுப் போடாதே!' என்று சொன்னேன். அதற்கு என்பேரில் யாரும் நடவடிக்கை எடுக்கவில்லை. மற்றபடி, இன்றுகூடப் பலர், வ. வே. சு. அய்யரைப்பற்றிக் காங்கிரஸ்காரர்கள்—'அவர் பெரிய தேசபக்தர்' என்பார்கள். ஆனால், அவரைப்போல பெரிய வகுப்புவெறி பிடித்தவன் எவனுமே இல்லை. காங்கிரசில் இருந்துகொண்டே நான் அவரது வகுப்பு வெறியை எதிர்த்தேன். மற்றும், இந்த பாரதியைப்பற்றி அளப்பார்கள். இந்த ஆளும் பெரிய வகுப்புவெறி பிடித்தவர்; எதை எடுத்தாலும் 'ஆரியர்!' என்றே பாடி இருக்கிறார்.

இவர்களையெல்லாம் காங்கிரசில் இருந்துகொண்டே எதிர்த்தேன். பிறகு வகுப்புவாரி பிரதிநிதித்துவத்திற்காகப் பாடுபட்டேன். அதில் ஓட்டு எடுத்திருந்தால் 100-க்கு 75 பேர் என் பக்கம் இருந்திருப்பார்கள். அதை, திரு. வி. க. விடம் சொல்லி ஏமாற்றிவிட்டார்கள். அந்தத் தீர்மானத்தை திரு. எஸ். இராமநாதன்தான் கொண்டுவந்தார்; நான் அதை ஆதரித்தேன். அதை நிர்வாகக் கமிட்டியில் விடாவிட்டாலும், பொதுக் கூட்டத்திலாவது விடுங்கள் என்றேன்; சரி என்றார்கள். அப்படி அனுமதிப்பதற்கு 30 பேருடைய கையெழுத்துத் தேவை என்றார்கள்; உடனே இராமநாதன் 50 பேருடைய கையெழுத்தை வாங்கி வந்துவிட்டார். அதை எப்படிச் சமாளிப்பது என்று விழித்தார்கள். திரு. வி. க.வுக்கு என் முன்னிலையில் அந்தத் தீர்மானத்தை நிராகரிக்க முடியவில்லை. நான் தண்ணீர் குடிக்கப்போனபோது இந்த திரு. வி. க. அதை நிராகரிப்பதாகச் சொல்லிவிட்டார். நான் வந்ததும் மக்கள் சிரித்தார்கள்; ஏன் என்று கேட்டேன். 'இப்படி—நீ கொண்டுவந்த தீர்மானத்தை நீ இல்லாதபோது நிராகரித்துவிட்டார்கள்' என்று சொன்னார்கள். உடனே நான் சத்தம் போட்டேன். பிறகு அங்கிருந்து வெளியேறினேன்.

அதே மாதிரி, நான் காங்கிரசிலிருந்தபோது ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் கொண்டுவந்தார்கள். யாரையும் கலந்துகொள்ளாமலும், கேட்காமலும், திடீரென்று அதைக் காங்கிரஸ் பார்ப்பனர்களான சத்தியமூர்த்தி அய்யர், சீனிவாச அய்யங்கார் முதலியவர்கள் எதிர்த்து எழுத ஆரம்பித்துவிட்டார்கள். உடனே, நான் பதறி,

இந்தப் பார்ப்பனர்களின் செயலை எதிர்க்க வேண்டுமென்று தீர்மானித்தேன். உடனே நானும் வரதராஜுலுவும், திரு. வி. கவும், இராமநாதனும் சேர்ந்து யோசித்து, ஒரு அறிக்கை எழுதினோம். அப்பொழுது அதை வெளியிட எங்களுக்குச் சாதகமாக எந்தப் பத்திரிகையும் கிடையாது. ஆகவே, அப்போதிருந்த 'நவசக்தி' என்கிற பத்திரிகையில் மட்டும்தான் அதை வெளியிட்டோம். அதைக் கண்டதும் இராசகோபாலாச்சாரியார் ஓடிவந்து, 'இந்த மாதிரி அறிக்கைவிடுவது கூடாது' என்றார். அதற்கு நான், 'சத்தியமூர்த்தியும், சீனிவாசய்யங்காரும் செய்தது சரியா?' என்று கேட்டேன். பிறகு இருவருக்கும் அமைதி ஏற்படுகின்ற தன்மையில் அவர் சமாதானம் செய்து ஒரு அறிக்கை விட்டார். அதன் பிறகு தான் அந்தப் போராட்டம் நின்றது.

மற்றபடி, சமீபத்தில் அறநிலையப் பாதுகாப்புச் சட்டத்தை ஓமாந்தூரார் கொண்டு வந்த போது அதை ஆதரித்தோம். காங்கிரஸ்காரர்கள் போட்ட கூட்டத்தில் நாங்கள் பேசினோம்; எங்களுடைய கூட்டத்தில் அவர்கள் பேசினார்கள். உடனே, 'இந்த இராமசாமி—கறுப்புச் சட்டை போடாத இராமசாமி' என்று சொல்லி ஒழித்துக்கட்டினார்கள்.

பிறகு, தேர்தலில் கம்யூனிஸ்டுகளை ஆதரித்தோம்; நாம் படாத பாடுபட்டு, கஷ்டப்பட்டு உழைத்து வெற்றி தேடித் தந்தோம். அவர்கள் வெற்றி கிடைத்ததும் நம்மைப்பற்றி எந்தவிதமான கவலையும் படாமல், ஆந்திரப் பார்ப்பனர் பிரகாசத்திடம் போய்க் கெஞ்சினார்கள். இது கூடாது என்று நான் எண்ணினேன். இந்தச் சமயத்தில் எழுதினேன் தைரியமாக—கம்யூனிஸ்ட் மூலம் பிரகாசம் வருவதைவிட, காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த ஆச்சாரியார் வருவது நல்லது என்றேன். ஆச்சாரியாருக்கு என் ஆதரவு முழுவதும் கிடைக்குமென்றேன். மற்றவர்கள் திட்டும் பொழுதுகூட, அவரை நான் ஆதரித்தேன்; அவர் இலஞ்சத்துக்கு வழிவிட மாட்டார் என்றேன்; இந்த எம். எல். ஏ. க்களை வாலாட்ட விடமாட்டார் என்றேன்.

உடனே அவரும் கண்ட்ரோலை எடுத்தார். அதனால், எது இல்லையென்றாலும் நாட்டிலே பொது ஒழுக்கம் குறைந்து வந்ததாவது நிறுத்தப்பட வசதியாயிற்று என்று புகழ்ந்தேன். அதனால்தான், அவருக்கு நம்பேரில் சந்தோஷம் ஏற்பட்டது. அவரும் நம் பத்திரிகையைப் பார்த்துத்தான், 'தஞ்சை ஜில்லா பண்ணையாள் பாதுகாப்புச் சட்டத்தை'க் கொண்டுவந்தார். நம்முடைய சேலம் மாநாட்டுத் தீர்மானத்தை அப்படியே எடுத்துக் கொண்டு, நெசவாளருக்கு நன்மைகள் செய்தார். அதைப் பார்த்து இந்த ஜீவானந்தமும், இராமமூர்த்தியும், 'இந்த நாட்டை இராசகோபாலாச்சாரியார் ஆளவில்லை; இந்த ஈரோடு இராமசாமிதான் ஆளுகிறார்' என்றார்கள்.

இதற்கும், நான் ஆச்சாரியாரை ஆதரிப்பதில் என்ன தப்பு என்று கூறிக் கொண்டு தான் போய்க்கொண்டிருந்தேன்.

இந்தியா மந்திரி பட்டேல் சென்னைக்கு வந்தார். அப்போது, எல்லா இந்தியா மந்திரிகளுக்கும் நாம் கறுப்புக்கொடி பிடித்துக் கொண்டிருந்த நேரம். நான் அப்போது, 'பட்டேலுக்குக் கறுப்புக்கொடி பிடிக்காதே!' என்றேன். அப்போது சிலர்கூட—நான் ஏதோ பணம் வாங்கிக்கொண்டு அப்படிச் செய்ததாகச் சொன்னார்கள். நான் ஏன் அப்படிச் செய்தேன் என்றால், பட்டேல், 'தென்னாட்டில் இருக்கும் பார்ப்பனர் அல்லாதார் இயக்கம் நியாயமானது' என்கின்ற கருத்தைக் கொண்டிருப்பவர். இது அவர் ஓமாந்தூராரிடம் சொன்ன செய்தியாகும். அதை ஓமாந்தூரார் ஒரு ஆளிடம் சொல்லி அனுப்ப, அவர் அதை என்னிடம் சொன்னார். இப்படி நம்முடைய வாழ்க்கையில், நம்முடைய சமுதாயத்திற்கு அனுகூலமானதை எல்லாம் ஆதரிப்பதில் என்ன தப்பு?

காமராசரை என்ன கடைசி வரைக்குமா ஆதரிக்கப் போகிறேன்? அது என்னவாக முடியும்? ஆச்சாரியாரை ஆதரித்த நானே—ஆச்சாரியார் ஒழியவேண்டும் என்றதோடு, ஆச்சாரியார் சாதியே ஒழியவேண்டும் என்றல்லவா சொல்லிவிட்டேன்!

நம்மைப் பொறுத்தவரையில் இலட்சியம்தான் முக்கியம். யாருடைய போக்கும் எங்களுக்கு நன்கு தெரியும். எந்தெந்தக் காரியத்தில் காமராசருக்கு உற்சாகம் கொடுக்க வேண்டுமோ அதிலெல்லாம் அவருக்கு உற்சாகம் கொடுப்பதாக இருக்கிறேன்.

[சிதம்பரம் மாநாட்டில், 22-5-1954-ல் சொற்பொழிவு—'விடுதலை' 1-6-1954]

## 25. மந்திரிமார்களுக்கு வேண்டுகோள்

என்னுடைய வாழ்நாளில் அரசாங்க மந்திரிகளில் பொப்பிலி அரசரைத் தவிர இன்று வரை எந்த மந்திரிகளிடமும் நேரில் சென்றோ, எழுத்து மூலமாகவோ என் கழகத்துக் காவது, பொது நலத்திற்காவது எந்த விதமான வேண்டுகோளும் செய்துகொண்டது இல்லை.

திருவாளர்கள் முத்தையா முதலியார், டாக்டர் சுப்பராயன் ஆகியவர்கள் மந்திரி களாய் இருந்த காலத்தில், அதாவது சுமார் 1928-'29 ஆம் ஆண்டுகளில் அவர்களிடம் பொது விஷயங்களைப் பற்றி ஏதாவது கேட்டுக்கொண்டிருப்பேன். அவர்களும் 100-க்கு 90-க்கு மேற்பட்ட வேண்டுகோள்களை மதித்திருப்பார்கள். மற்றபடி, இதுவரை எந்த மந்திரிகளிடமும் என் சொந்த விஷயம் உள்பட எந்தக் காரியத்திற்கும் நெருங்கினது இருக்காது.

இப்பொழுது நான் மந்திரிகளுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்துக்கொள்ள வேண்டிய வனாய் இருக்கிறேன். அதாவது, தமிழ்நாட்டிலே பாமர மக்கள் மொழியாகிய தமிழ் மொழியை அரசியல், சமுதாயஇயல் காரியங்களில் அரசாங்கம் சிறிதும் இலட்சியம் செய்வ தில்லை. இது தவிர, இந்தியை நுழைத்துப் பள்ளிக்கூடங்களிலும், பரீட்சைகளுக்கும் பாடமாக ஏற்பாடு செய்து, படிக்கும் பிள்ளைகளுக்குக் கொடுக்கும் தொல்லைகள் ஒருபுற மிருக்க, உத்தியோகத் தகுதியைக் கொண்டுவந்து புகுத்திப் பெரும்பாலான தமிழ் மக்களை உத்தியோகத் தகுதி அற்றவர்களாக ஆக்குவது மற்றொருபுறமிருக்க, இவையெல்லாம் போதாது என்று கருதியோ என்னமோ, தமிழ் எழுதப் படிக்கப் பேசத் தெரியாத மலை யாளிகளையும், கன்னடியர் (மங்களூர்க்காரர்) களையும் தமிழ் நாட்டிலே மாகாணத் தலைமை உத்தியோகம், ஜில்லாத் தலைமை உத்தியோகம், மற்றும் கெஜட் பதிவு அதி காரிகள், கெஜட் பதிவு இல்லாத அதிகாரிகள், கமிஷனர்கள் முதலிய உத்தியோகங்களில் நியமிப்பது என்பது சர்வசாதாரண காரியமாக இருந்துவருகிறது. ஜனநாயக நாடு, சுதந்திர நாடு, மக்கள் ஆட்சி என்கின்ற அலங்காரப் பெயர்களைச் சொல்லிக்கொண்டு நடை பெறுகிற ஆட்சியில் 100-க்கு 80 பேர்களுக்கு மேற்பட்டுக் கல்வியறிவில்லாத பாமரமக்கள் நிறைந்திருக்கும் நாடு இது என்பதைச் சிறிதும் உணராமல், மேற்கண்ட மாதிரியான— நாட்டுமொழி தெரியாத அன்னிய மொழியாளர்களை அதிகாரிகளாக நியமிப்பதென்றால் குடிமக்கள் அதிகாரிகளிடம் எப்படிப் பேசமுடியும்? அதிகாரிகளுக்குக் குடிமக்கள் எந்த மொழியில் விண்ணப்பங்களையும் வேண்டுகோள்களையும் எழுத முடியும்? பெயரளவிலே, 'நாட்டில், நாட்டு மொழியை வளர்க்கிறோம்; வளர்க்கிறோம்' என்று சொல்லிக்கொண்டு அகராதி, கலைக் களஞ்சியம், பள்ளிப் பாடப்புத்தகங்கள் முதலியவைகளின் பேரால் தமிழை நாசப்படுத்தினது மாத்திரமல்லாமல் தமிழ் தெரியாத அதிகாரிகளைக் கொண்டுவந்து வைத்து, அவர்களிடம் நீதி, நிர்வாக அதிகாரங்களைக் கொடுத்து நிர்வாகம் செய்யச் செய்வது என்றால், எந்த விதத்தில் இந்த நாட்டில் இந்த நாட்டு மொழியை அரசாங்கம் ஆதரிக்கிறது என்று சொல்ல முடியும்? இங்கு, கன்னடியர்களுக்கு கன்னட ஜில்லா ஒன்று இருக்கிறது; மலையாளிகளுக்கு மலையாள ஜில்லா ஒன்று இருக்கிறது. ஆதலால், அவர்கள் எண்ணிக்கைக்குத் தகுந்த அளவில் உத்தியோகங்கள் கொடுத்து அவர்களை அந்தந்த ஜில்லாக்களில் உத்தியோகங்களில் போடுவதில் ஆட்சேபணை இல்லை. இப்படியிருக்க,

இந்தக் கன்னடியர்களையும், மலையாளிகளையும் தமிழ்நாட்டிலே கொண்டுவந்து ஏராளமாகப் புகுத்துவதற்கு என்ன காரணம்?

வெள்ளைக்காரன் ஆட்சியிலும், பார்ப்பனர்கள் ஆட்சியிலும் இதற்குக் காரணங்கள் இருக்கலாம். என்னவென்றால், பார்ப்பனர்களுடைய ஏகபோக ஆதிக்க நலத்திற்காகத் தங்களுக்குக் கிடைத்த உத்தியோகங்களைத் தவிர மீதி உத்தியோகங்களுக்குத் தமிழ், தமிழன் (திராவிட இன) உணர்ச்சி இல்லாதவர்களைப் போட்டால் தங்கள் நலனுக்கு எவ்விதக் குறைபாடும் ஏற்படாது என்று கருதி, அவர்கள் பெரிதும் தங்கட்குக் கிடைக்காத இடங்களுக்கெல்லாம் கிறிஸ்தவரையாவது, முஸ்லிம்களையாவது, அதுவும் முடியாவிட்டால் மலையாளிகளையாவது, கன்னடியர்களையாவது நியமிக்கச் செய்துவந்தார்கள். இவர்களுக்குத் தமிழர் (திராவிட) இன உணர்ச்சி ஏற்படுவதற்கு அவசியம் இல்லை; நியாயமும் இல்லை. ஆதலால், அந்தக் காலத்திற்கு அது அவர்களுக்கு நியாயமாகவும் சாத்தியமாகவும் இருக்கலாம். இப்பொழுது சென்னை அரசாங்க மந்திரி சபையில் ஒரே ஒரு கன்னட மந்திரியைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் தமிழர்களாக—அதுவும் ஒரு ரெட்டி, ஒரு நாயடு, ஒரு செட்டிகூட இல்லாத தனித் தமிழர்களாக இருக்கும்போது, இத்தனை மலையாளிகளும் இத்தனை கன்னடியர்களும் இந்த நாட்டில் எப்படி வரமுடிந்தது என்பது மிகவும் யோசிக்கத் தகுந்ததும் கண்டிக்கத் தகுந்ததும் ஆகும்.

முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும், பார்ப்பனர்களும் மந்திரி சபையில் இல்லை என்றாலும் அதனால் அவர்களுக்கு ஒன்றும் முழுகிப் போகவில்லை. ஏனென்றால், இவர்கள் எல்லோரும் தங்கள் விகிதத்திற்கு மேல் அதிகமான அளவு—அதுவும் கிறிஸ்தவர்களை எடுத்துக்கொண்டால் தங்கள் விகிதத்துக்கு மேல் 2, 3 பங்கு அதிகமான அளவிலும்; பார்ப்பனர்களை எடுத்துக் கொண்டால் தங்கள் விகிதத்துக்கு மேல் 5, 6 பங்கு அதிகமாகவும் பதவி முதலிய சலுகைகள் அனுபவிக்கிறார்கள். இவர்களுக்கு மந்திரி பதவி இல்லை என்றால் அது தனிப்பட்டவர்களுக்கு ஏமாற்றமாய் இருக்கலாமே தவிர, அந்த மதத்தார்க்கு எந்த விதத்திலும் குறைவில்லை. தமிழர்களுக்கு மந்திரி பதவி மாத்திரம் தாராளமாக இருந்தும், அவர்கள் இனத்துக்கு இவர்களால் நியாயம் செய்யப்பட்டது என்று சொல்லுவதற்கு இடமில்லாமல் இருக்கிறது.

நாட்டிலே இவ்வளவு தூரம் இன எழுச்சியும், நாட்டு எழுச்சியும், மொழி எழுச்சியும் ஏற்பட்ட காலத்திலும் இந்த மந்திரிகள் இவ்வளவு அலட்சியமாக இருந்துகொண்டு, தங்கள் வாழ்வின் வளப்பத்தையும் பெருமையையும் மாத்திரம் கவனித்துக்கொண்டு, தங்களுக்குச் சொந்தத்தில் வேண்டியவர்களுக்கு மாத்திரம் ஏதோ ஒருசில பதவியை அளித்துக்கொண்டு, காலம் தாழ்த்தி வருகிறார்கள் என்றால்—தமிழர் இனத்துக்கே இது அவமானமும் கேடும் ஆன காரியமாகும் அல்லவா? தமிழை வளர்க்கிற சர்க்கார், தமிழுக்கு நல்லது செய்யாவிட்டாலும் தமிழர்களுக்கு மொழித் துறையில் தொல்லையாவது கொடுக்காமல் இருக்க வேண்டாமா?

சிற்சில ஜில்லாக்களுக்கு, ஆட்சியில் தமிழை ஆட்சி மொழியாக ஆக்குவது என்று பரீட்சை பார்ப்பது என்று அனுமதித்து உத்தியோகங்களுக்குக்கூட—ஜில்லாக்களில்கூட மலையாளிகளையும், கன்னடியர்களையும் உத்தியோகங்களில் நியமிப்பதென்றால், இதைக் 'கவலை ஈனம்' என்று சொல்லுவதா. அல்லது 'சுயநல தாட்சண்யம்' என்று சொல்லுவதா என்று புரியவில்லை. தமிழ்நாட்டில் தமிழன் பதவி வகிக்கவேண்டும் என்று கேட்பது ஒரு பெரிய காரியமாய் இருந்தால், எந்த விதத்தில் தமிழ் இராஜ்யம், 'தமிழர் ஆட்சியாய்' இருக்கிறது என்று சொல்ல முடியும்?

உயர்திரு காமராசர் அவர்களை முதல்வராகக் கொண்ட சென்னை இராஜ்ய மந்திரி சபை இனியாவது இது விஷயத்தில் கவலை கொள்ளுவது பெருமைக்குரியதாகும். இது

விஷயம் பற்றி எனது பிறந்தநாள் விழா அறிக்கையின்போது குறிப்பிட்டிருந்தேன். அது முதல் இதுவரையிலும் முன்னிருந்த நிலைமை வளர்ந்ததே தவிர, சிறிதாவது கவனித்த தாகக்கூடத் தெரியவில்லை.

குறிப்பு :—கொச்சி இராஜ்யத்திற்கு திரு ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களை திவானாகப்போட்ட காலத்தில் கொச்சியில் உள்ள மலையாளிகள் எல்லோரும் ஒன்றுகூடி எதிர்த்தார்கள். அதே கொச்சி இராஜ்யத்தில் அனேக பார்ப்பனர்கள் திவான்களாய் இருந்த காலத்தில் யாதொரு பேச்சுமூச்சும் இல்லாமல் ஏற்றுப் பெருமை அடைவதாகக் காட்டிவந்தார்கள் என்பது யாவரும் அறிந்த விஷயம்.

[' விடுதலை '—அறிக்கை—22-4-1955]

## 26. காங்கிரசில் சேர ஆலோசனை

திராவிடர் கழகச் சார்புடையவர்களானாலும் சரி; தி. க. ஆதரவாளர்களானாலும் சரி; அவர்கள் காங்கிரசில் சேர்ந்து தொண்டாற்ற ஆசைப்படுவார்களேயானால் தாராள மாய் அவர்கள் இஷ்டப்படி நடந்துகொள்ளலாம்.

இன்றையத் தமிழ்நாடு காங்கிரஸ் ஆட்சியை இந் நாட்டிற்கு, மக்களுக்கு நல்வாழ்வு ஏற்படப் பாடுபடும் ஆட்சி என்று சொல்லலாம். என் அனுபவத்தில், தமிழ்நாட்டு மக்களுக்கு—இந்த, அதாவது இன்றைய அளவிற்காவது நலம் ஏற்படும்படியான ஆட்சி இதற்குமுன் எப்போதுமே இருந்ததில்லை; எந்த ஆட்சியாலும் இவ்வளவு பலன் கிடைத் ததும் இல்லை; ஜஸ்டிஸ் கட்சி ஆட்சியினால் செய்ய முடியாத பல நலன்கள் நாட்டிற்கும்—குறிப்பாக நம் சமுதாயத்திற்கும் செய்யப்பட்டு வருகின்றன.

ஜஸ்டிஸ் கட்சி ஆட்சி தமிழர் சமுதாயத்திற்கு அனுகூலமாக இருந்தது என்பதற்கு உதாரணம்—இந் நாட்டுப் பார்ப்பன சமுதாயம் அத்தனையும் ஜஸ்டிஸ் கட்சிக்கு எதிர்ப்பாய் இருந்து, அந்த ஆட்சியைக் கவிழ்த்து, அதைத் தங்கள் சுவாதீனப்படுத்திக்கொள்ள வேண்டும் என்று முயற்சி செய்துவந்ததையே உதாரணமாகக் கூறலாம்.

அதுபோலவே, இன்றையத் தமிழ்நாடு காங்கிரஸ் ஆட்சியும், தமிழர் சமுதாயநலனைக் கருத்தில் வைத்துத் தமிழர் சமுதாயத்திற்கு இதுவரை ஏற்பட்டில்லாத நலன்களைக் கவனித்துச் செய்துவருகிறது என்பதற்கு உதாரணம்—பார்ப்பன சமுதாயம் முழுவதுமே தமிழ்நாடு காங்கிரசை ஒழித்துக்கட்டி—கவிழ்த்து, மறுபடியும் தங்கள் ஆதிக்கத்தின்கீழ் அதைக் கொண்டுவரவேண்டும் என்று பாடுபடுவதே போதுமானதாகும்.

ஆனதனாலேயே, இன்றையக் காங்கிரஸ் ஆட்சியைப் பார்ப்பனர் கைக்குச் செல்ல விடாமல் காப்பது, இன்று ஒவ்வொரு தமிழனின் கடமையும் முயற்சியுமாகும்; செய்ய வேண்டிய தொண்டுமாகும்.

ஆதலாலேயே நான் கூறுகிறேன்: 'எந்தத் தமிழர் வேண்டுமானாலும்—அவர் காங்கிரசில் சேர்ந்தால் தமிழர்களுக்குத் தொண்டுசெய்ய வாய்ப்புக் கிடைக்கும் என்று கருது வாரானால் தாராளமாய்க் காங்கிரசில் சேரலாம்' என்று.

பதவிக்காகவே காங்கிரசில் சேருவதும், பதவி கிடைக்கவில்லை யென்று ஏமாற்ற மடைந்தால் காங்கிரசை வெறுப்பதுமான தன்மையுள்ள தி. க. ஆதரவாளர்கள் எவரும் அதில் சேராமலிருப்பது நலமும் மானமுடையதுமான காரியமாகும்.

இன்று தமிழர் சமுதாய நலன் உணர்ச்சியுள்ள எந்தத் தமிழருக்கும் காங்கிரசை ஆதரித்து, காங்கிரஸ் ஆட்சியை வலுவோடு அமரச்செய்வதே சமுதாயக் கடமை என்று கூறுகிறேன்.

காங்கிரசுக்கும் நமக்கும் கொள்கையின் கருத்து வேற்றுமையிருந்தாலும், அதன் இன்றையச் செயல் முறையில் கருத்து வேற்றுமைக்குப் பெரிதும் இடமில்லை என்று கருதியே இப்படிக் கூறுகிறேன். நான் காங்கிரசை எதிர்த்துவந்ததற்கு முக்கிய காரணங்கள்—முதலாவது, நாம் பதவியில், உத்தியோகத்தில், நிர்வாகத்தில் மிகமிக மானக் கேடான தன்மையில் புறக்கணிக்கப்பட்டுத் தகுதி, திறமையற்றவர்கள் என்று கூறப்பட்டு, ஒதுக்கப்பட்டு வந்தோம்; வருகிறோம் என்பதேயாகும். மேலும், காங்கிரஸ் ஆட்சியில் தமிழர் 'சிறை பிடிக்கப்பட்ட அடிமை' போலவே நடத்தப்பட்டு வருகிறார்களே என்ற கவலையாலும் வெட்கத்தாலும், கல்வித் துறையில் நாம் ஒதுக்கப்பட்டு வந்த தன்மை யாலுமேயாகும்.

இந்த இழிவுகளும் குறைபாடுகளும் ஒழிக்கப்படும் வழியில் நம் நாட்டுக் காங்கிரஸ் ஆட்சி திரும்பி இருக்கிறது. ஆதலால், தமிழர் எவரும் இந்தத் திருப்பத்திற்கு முட்டுக் கட்டை போடாமல் தோள்கொடுத்து ஆதரிக்கவேண்டும்.

தமிழ்நாடு காங்கிரசும் தன்னை மேலும்மேலும் பரிசுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும்.

தி. மு. கட்சித் தலைவர்கள்போல் நடந்துகொள்ளாமலும், 'ஆதரவாளர்கள்' என்னும் பேரால் தி.மு.க. ஆதரவாளர்களைக் சட்டிப் பிடித்துக்கொண்டிருக்காமலும்—கட்டுப்பாடும் ஆதிக்கமும் இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். இனியும் காங்கிரஸ் ஒரு கோஷ்டிக்கு குடும்பச் சொத்தாகவும், சிலருக்குப் பரம்பரை மான்யமாகவும் இல்லாமல், அது பாரபட்சமற்ற—கட்டுப்பாட்டிற்கு அடங்கிய பொதுச் சொத்தாக ஆக்கப்படவேண்டும்.

புது நபர்களைச் சேர்க்கவேண்டும்; புது நபர்கட்குப் பதவி கொடுப்பதில் தாராளம் காட்டவேண்டும். தலைவரை (லீடரை)த்தவிர, மற்றவர்கள் இரண்டு முறை—மிக அவசிய மானால் 3 முறை மட்டும் பதவி வகித்தால் போதாதா? இப்படிக்கு இல்லாமல், ஒரு சிலரே 'சிரஞ்சீவிகளாக இருந்து வருவது என்றால் அதுவே ஸ்தாபனத்திற்கு நாளுக்குநாள் பலவீனத்தை உண்டாக்கி விடுகிறது. அன்றியும், அது எப்படி ஜனநாயகமாக முடியும்? கொள்கையை எதிர்க்காமல், செயல்முறைக்கு ஒத்துவருபவர்களை, அவர்கள் மனமொப்பி வந்தால் ஏற்றுக்கொள்வது நலமாகும்.

பதவி இல்லாததாலேயே பலர் எதிரிகளாக இருக்கிறார்கள்; எதிரிகளாக ஆகிறார்கள். அப்படிப்பட்டவர்கள்—'வேண்டாம்' என்று வாயால்தான் சொல்லலாம்; காரியத்தில் 100-க்கு 75 பேர் அப்படிப்பட்டவர்கள்தாம் இருக்கிறார்கள். இது சாதாரண மனித சுபாவம். இதை யறிந்து, தலைவர் நடந்து கொள்வது நலம். 'ஜெயிலுக்குப் போனதே ஒரு யோக்கிய தாம்சம்' என்றால் அது மூன்றாந்தர மக்கள் யோக்கியதாம்சமாகும்.

ஜெயில் என்பது ஒரு பூச்சாண்டி. ஜெயிலுக்குப் போன பலர் தங்கள் தரத்துக்குமேல் வாழ்வும் சுகமும் அனுபவித்தவர்களாகவே இருப்பார்கள். நான் ஜெயிலுக்குப் போன சுமார் 19 முறைகளில் 4 தரம் A, B கிளாஸ் ஏற்படாத—'C' கிளாஸ் கைதியாக மண்சட்டியிலே கஞ்சியும், சோற்று மொத்தையும் வாங்கி, கல்லையும் புழுவையும் பொறுக்கி எறிந்துவிட்டுச் சாப்பிட்டவன். இன்று காங்கிரசில் அப்படிப்பட்டவர் ஒருவர்கூட இல்லை.

இராஜாஜி அவர்களின் பக்கத்து அறையில்—நான் கம்யூனிஸ்ட் பிரச்சாரம் செய்த தற்காக சுயமரியாதைக் கைதியாக இருக்கும்போது, அங்கிருந்த காங்கிரஸ் தோழர்கள் தாங்கள் உள்ளே இருக்கிறோமே என்று கருதி மனக் குறை பட்டிருப்பார்களே யொழிய, மற்றபடி வீடு போன்ற சகல வசதிகளுடன்—ஒரு நாளைக்குப் பொங்கல், ஒரு நாளைக்கு ததியோதனம், அக்காரவடிசல் (சர்க்கரைப் பொங்கல்), பாயசம், பலகாரம் முதலிய நல்ல உணவுடன்தான் இருந்தார்கள்; எனக்குக்கூட அதில் நல்ல பங்கு கிடைத்தது. ஜெயிலுக்குப் போனதற்காகவே—காங்கிரசில் ஒருவர்கூடச் சாகவில்லை. என் இயக்கத்தில் 10, 15 பேர்

செத்தார்கள்! ஆகையால், ஜெயிலுக்குப் போனதே யோக்கியதாம்சம் என்றால்—அது மூன்றாந்தர யோக்கியதாம்சமென்று மறுபடியும் சொல்கிறேன். ஜெயிலுக்குப் போகாத பார்ப்பனர்—காங்கிரசையும் காந்தியாரையும் ஆபாசமாய் வைத பார்ப்பனர்கள் எத்தனை பேர் காங்கிரஸ் ஆட்சியில் பதவி வகிக்கிறார்கள்? காங்கிரசை வைததோடு இல்லாமல், நேருவையே ஒழிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு கட்சி நடத்தும் பார்ப்பனருக்கு—கவர்னர் விருந்து கொடுக்கிறார்; இந்திய பிரசிடெண்ட் போய் அவரிடம் இரகசியம் பேசுகிறார் என்றால், மற்றவர்களுக்குக் கட்டுப்பாடு என்பது சந்தைக்கடைக் கட்டுப்பாடுதானே?

ஆகையால், இந்தச் சமயத்தில் கூடுமானவரை வெளியாட்களை இழுத்துக் கொள்வது எதிர் காலத்துக்கு நலனாகும்.

என்னைப் பொறுத்தவரை நான் காங்கிரசுக்கு எதிரியாய் இருந்தபோது எனக்கு இருந்த 'பெருமை' இப்போது எனக்கு இல்லை. கழகத்தில் கோஷ்டியும் உட்பூசலும் சதி காரியங்களும் மலிந்து வருகின்றன.

என் ஆயுள் வளருவதை ஆசைப்படுபவர்களைவிட, குறுகுவதை எதிர்பார்க்கிறவர்கள் அதிகமாகிறார்கள். முன்னைய அனுபவங்களைக் கொண்டு, இதை இயற்கை என்றே கருதி என் இஷ்டப்படி நடத்துகிறேன்.

தமிழ்நாடு காங்கிரசின் இன்றைய நிலைமையும் போக்கையும் பாதுகாக்க வேண்டும் என்கின்ற ஆசையாலேயே இதை எழுதுகிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—18-8-1961]

வரப்போகும் சட்டசபைத் தேர்தல்களில் திராவிடர் கழகத்தின் நிலை என்ன என்பது பற்றி முக்கியமாக நம் தோழர்களுக்கும், மற்றும் காங்கிரஸ் மாற்றுக்கட்சித் தோழர்களுக்கும் பொதுமக்களுக்கும் விளக்கவேண்டியது இச் சமயத்தில் அவசியம் என்று கருதுகிறேன்.

கொஞ்ச நாட்களுக்கு முன்பு, 'திராவிடர் கழக ஆதரவாளர்களும், திராவிடர் கழகச் சார்புடையவர்களும் தங்களுக்கு அவசியம் என்றோ, சரியென்றோ பட்டால் அவர்கள் காங்கிரசில் சேர்ந்துகொள்ளுவதில் நமக்கு ஆட்சேபணையில்லை' என்று எழுதியிருந்தேன். அதைச் சில பத்திரிகைகள் சரியானபடி புரிந்துகொள்ளாமலோ, அல்லது வேண்டுமென்றே விஷமத்தனமாகவோ, 'திராவிடர் கழகத்தினர் காங்கிரசில் சேர்ந்துகொள்ளலாம்' என்று பொருள் கொள்ளுகிற முறையில் தங்கள் பத்திரிகைகளில் வெளியிட்டுக் கொண்டார்கள். அதைப்பார்த்துப் பொதுமக்களில் சிலர் குழப்பமடைந்தார்கள் என்பது ஒருபுறம் இருந்தாலும், கழகத்திலுள்ள ஒரு கோஷ்டியார் தவறுதலாக மக்களிடையில் பேச ஆரம்பித்து விட்டார்கள்.

நான், இதைப்பற்றி மக்களுக்கு உடனடியாக விளக்கம் கொடுக்க வேண்டுமென்று கருதவில்லை. ஏனெனில், கழகத்தார்கள் சேர்ந்துகொள்ளலாம் என்று நான் கருதியிருந்தால்—தெளிவாக, விளக்கமாக, சந்தேகத்திற்கிடமில்லாமல் 'கழகத்தார் இஷ்டப்பட்டவர்கள் சேர்ந்துகொள்ளலாம்' என்று எழுதியிருப்பேன். அந்தப்படி நான் எழுதாமல், 'கழகத்தின் ஆதரவாளர்களும், சார்புடையவர்களும் சேர்ந்துகொள்ளலாம்' என்று எழுதியிருக்கிறபோது கழகத்தாரோ, மற்றவர்களோ அதைப்பற்றிச் சந்தேகப்படுகிறார்கள் என்றால்—போதிய அளவு அறியும் தன்மைஇல்லை; அல்லது, வேண்டுமென்றே விஷமத்தனம் குறியாய் இருக்கவேண்டும் என்று அப்பொழுதே நான் நினைத்துப் பொதுக் கூட்டங்களில் இதைக் கண்டித்து விளக்கமும் சொல்லிவிட்டேன்.

நான், 'ஆதரவாளர்களையும், சார்புடையவர்களையும் இஷ்டப்பட்டால் காங்கிரசில் சேர்ந்துகொள்ளலாம்' என்று எழுதியதற்குக் காரணம், வரப்போகும் தேர்தலில் நல்ல அளவுக்கு பலத்தோடு காங்கிரஸ் வெற்றிபெற வேண்டும் என்கிற ஆவலால்தான் எழுதியதாகும்.

உள்ளபடியே, இப்போதைய வரப்போகும் தேர்தலாகிய பொதுத்தேர்தலில் காங்கிரஸ் சார்பாக மக்களுக்கு விளக்கமாகப் பிரச்சாரம் செய்ய காங்கிரசில் போதிய ஆட்கள் இல்லை. மாற்றுக்கட்சிக்காரர்களுக்குச் சரியானபடி பதிலுக்குப் பதில் எடுத்துச் சொல்லவோ, அவர்களது குற்றச்சாட்டுகளுக்குத் தக்க சமாதானங்கள் சொல்லவோ, காங்கிரஸ்காரர்களில் சிலரைத்தவிர மற்றவர்களுக்குப் போதிய சக்தியும், வசதியும் இல்லாமல் இருக்கிறது. இதற்குப் பல காரணங்கள் இருக்கலாம் என்றாலும், இந்த நிலை காங்கிரசுக்கு பலக் குறைவாகக்கூடும்; இந்த நிலையில் கழக ஆதரவாளர்களும் சார்புடையவர்களும் காங்கிரசில் சேர்ந்தால் நல்லபடி விளக்கம் கொடுக்கலாம்; காங்கிரசிற்கும் பலவிதத்தில் உதவிகள் செய்யலாம்; அவர்கள் எப்பொழுது வேண்டுமானாலும் விலகிக்கொள்ளலாம் என்று கருதி காங்கிரஸ் நன்மைக்காகவேதான் இதைச் சொன்னேன்.

நம் கழகத் தோழர்கள் கழகச் சார்பிலேயே நல்லபடி விளக்கம் கூறலாம். ஆனதனாலே, அவர்கள் இதற்காகக் காங்கிரசுக்குப் போகவேண்டும் என்கிற அவசியம் இல்லை. தவிரவும், கழக ஆதரவாளர்கள், சார்புடையவர்கள் என்றால் ஒரு அளவுக்காவது சுயநலமில்லாதவர்கள் என்றேதான் குறிப்பிடவேண்டும்.

நிற்க, தேர்தலில் கழகத்தின் நிலைமை என்னவென்றால், வரப்போகும் தேர்தலிலேயே கண்ணை மூடிக்கொண்டு காங்கிரசை ஆதரிப்பதுதான் இன்றையக் கழக நிலை.

காங்கிரசில் எலெக்ஷனுக்காகக் காங்கிரசார் யார் யாரை நிறுத்துவது என்பது பற்றியோ, யார் யாரை நிறுத்துகிறார்கள் என்பதுபற்றியோ கழகத்திற்குச் சிறிதும் கவலையோ, இலட்சியமோ அடியோடு கிடையாது. அந்தப் பொறுப்பு 100-க்கு 100 காங்கிரசையே சேர்ந்ததாகும். அவர்கள் அதில் அனுபவசாலிகள்; மக்களைப் பற்றிக் கூடுமானவரை விசாரித்த உணரக்கூடியவர்கள்; உணர்ந்திருப்பார்கள்; நல்ல அளவுக்குப் பொறுப்பும் உடையவர்கள். இத்துறைகளில் அவர்களுக்குமேல், எவரைப்பற்றியும்— தெரிந்தவர்கள் என்றோ, பொறுப்புடையவர்கள் என்றோ சொல்லிக்கொள்ள முடியாது.

மற்றும் தெரிந்தெடுக்கப்பட்ட நபர்கள்மீது ஆதிக்கம் செலுத்த அவர்களுக்கே (காங்கிரசுக்காரர்களுக்கே) முழு உரிமையும் இருக்கவேண்டும். அதன் பலன் 100-க்கு 100 அவர்களையே சேர்ந்ததாய் இருக்கவேண்டும். ஆகவேதான், காங்கிரஸ்காரர்கள் 'களி மண்ணையோ', 'மரக் கட்டையையோ' நிறுத்தினாலும் நபரைப்பற்றிச் சிறிதும் சிந்தியாமல், நமக்காக நாம் வேலை செய்வதுபோலவே பாடுபட வேண்டியவர்களாவோம். நாம், எப்படிப்பட்ட நபர்களானாலும் ஒருவரைப்பற்றிச் சிபாரிசு செய்வது என்பது பொறுப்பற்ற தன்மையும், வேண்டாத (அதிகப் பிரசங்கித்) தன்மையுமேயாகும். நிறுத்தப்பட்ட ஆட்களால் ஏற்படும் நன்மை, தீமைகளுக்குக் காங்கிரஸ்காரரையே பொறுப்பாக்குவதால் தான் தேர்தலுக்குப் பிறகு நமக்கு ஒரு நிம்மதி ஏற்பட முடியும்.

பொதுவாகவே, அரசியல் உலகம் எப்படிப்பட்டது என்பது நமக்கு நன்றாய்த் தெரியும். மக்கள் யாராய் இருந்தாலும் அரசியலில் சுயநலமற்று, நேர்மையாய், நாணயமாய் நடந்துகொள்ளுவார்கள் என்பது இயற்கைக்கு விரோதமான காரியமாகும். மனித சுபாவத்தைப் பொறுத்தே நான் சொல்லுகிறேன். பெரிய பெரிய 'தலைவர்களையும்', 'மகான்கள்', 'மகாத்மாக்கள்' என்பவர்களையும் குறிப்பில் வைத்துக்கொண்டுதான் இந்தக் கருத்தைச் சொல்லுகிறேனே தவிர, சாதாரண இரண்டாந்தர, மூன்றாந்தர மக்களையே மனதில் வைத்துக்கொண்டு சொல்லும் கருத்தல்ல இது. அரசியலில் யாவருக்கும் பதவிதான் இலட்சியம். இது, 'பெரிய ஆட்கள்' என்பவர்களுக்கு; மற்றபடி, 'சின்ன ஆட்கள்' என்பவர்களுக்குப் பணமும், பிழைப்பு வசதியும்தான் இலட்சியம். இதற்கு இலக்காகாதவர்கள் யார் என்பது என் கண்ணுக்குப் பூதக் கண்ணாடி வைத்துப் பார்த்தும்கூடத் தென்படவில்லை.

சாதாரணமாக காமராசர் என்னைப் பார்த்து, 'உன் கழகத்திலிருந்து இரண்டு ஆட்களைக் கொடு' என்று கேட்டாலும் யாரைக் கொடுப்பது என்பதில் அனேகமாய் யாரிடமும் எனக்கே நம்பிக்கை வரமாட்டேன் என்கிறது. சிலரிடம் நம்பிக்கை வரலாமென்றால் அவர்கள் என் பேச்சை மீறவாவது துணிவார்களேயொழிய ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்க மாட்டார்கள்.

இப்படிப்பட்ட நிலையில், நாம் ஏன் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்வது? நமக்கு என்ன அவசியம்? எந்த அளவில் எந்தக் காரியங்களை நாம் மதிக்கிறோம் என்று கருதுவதுதான் இன்று நமது கவலை. சாதாரண மக்கள் என்னைக் கேட்கலாம்: 'காமராசரிடம் மாத்திரம் எப்படி நம்பிக்கை வைத்துக் கண்மூடி ஆதரிக்கலாம்?' என்று. 'காமராசரின் இயற்கை வாய்ப்பு—என்னுடைய திட்டப்படி மனித சுபாவத்தில் 100-க்கு 90 பங்கு சுயநல நலத்துக்கு மாறுபட்டவர்கள்' என்பதாகும். மக்கள் யாவருக்கும் சுயநலம் இயற்கையே என்றாலும்—அந்தச் சுயநலம்— தேவையை, அவரவர் வாழ்க்கை நிலையைப் பெரிதும் பொறுத்தது. ஆனதால், 'காமராசர் சுயநலம்' அதிகத் தேவையையோ, சூழ்நிலையையோ, வாழ்க்கைத் திட்டத் தன்மையையோ பொறுத்திருக்க வேண்டியதில்லை என்கிற காரணம்தான்.

சாதாரண மனிதனுடைய நாணயம், ஒழுக்கம், நேர்மை என்பதெல்லாம் நூற்றுக்குத் தொண்ணூறு அவனவனுடைய இலட்சியத்தையும், தேவையையுமே பொறுத்ததாகும். காமராசரின் இலட்சியம் இப்போது இருக்கும் நிலைமைக்கு மேல் போக முடியாது; அவரது தேவை இப்போதிருக்கும் வாய்ப்புக்குமேல் ஏற்பட அவசியமே இல்லை. இந்த நிலையில், அவரது சுயநலம்—ஒழுக்கம், நேர்மை, நாணயம் இவைகளைக் கடக்கவேண்டிய அவசியமே இல்லை என்று கருதுகிறேன்.

ஒரு மடாதிபதி எப்படிக் குடும்பம் இல்லாதவனாய், கலியாணமில்லாதவனாய், பெண்டு பிள்ளைகள் இல்லாதவனாய், சொந்த வீடு, வாசல், சொத்து தேவை இல்லாதவனாய் இருக்கவேண்டும் என்று சாதாரணமாய்க் கருதப்படுகிறதோ, அதுபோல—அதிலும் சற்று மேலான நிலைமையில்—இப்படிப்பட்ட ஜனநாயகத் தன்மைக்கு ஆளைப் பொறுக்க வேண்டியது அவசியமாகும். இந்த எண்ணம், அறிவு—ஆட்சிக்காக ஆளைப் பொறுக்குபவர்களுக்கு 100-க்கு 99 பேருக்கு இருப்பதில்லை. அதனால்தான் ஜனநாயகத்தை, 'அறிவில்லாதவர்களால் பொறுக்கப்படும் சுயநலக்காரர்கள் ஆட்சி' என்று சொல்லுகிறோம்.

ஜனங்களுக்கும் அறிவிருந்து, சுயநலத்துக்கு அவசியமில்லாதவர்களாயும் பார்த்துத் தேர்ந்தெடுக்கும் தன்மை கொண்டதானால்தான் அதை நாம் ஓரளவுக்கு ஜனநாயகம் என்று சொல்லலாம். காமராசர் விஷயத்திலும் இப்படிப்பட்ட அறிவுகொண்டவர்களாக பெரும்பாலோர் இல்லாததனால், 'இருக்கிறதிலே இது தேவலாம்' என்றுதான் சொல்ல முடிகிறது. இந்த நிலையிலும் காமராசர் முழு பலத்தோடு—சாதாரணத்தில் அசைக்க முடியாத தன்மையோடு ஆட்சியில் அமரநேர்ந்தால், நாம் அடையமுடியாத பெரும்பேற்றை அடைந்தோம் என்று நன்றாகச் சொல்லலாம். அப்பொழுதும் ஜனநாயகம் என்கிற பேரால் ஒரு சர்வாதிகாரியைத் தெரிந்தெடுத்தோம் என்று மகிழ்ச்சியடையலாம்.

ஆட்சிக்கு எப்போதும் இப்படிப்பட்ட சர்வாதிகாரிகள் வேண்டும். அவர் ஜனநாயகத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் தனக்கு ஏற்படும் பலத்தின் காரணமாக சாதாரணமாகவே சர்வாதிகாரி ஆகிவிடலாம். ஆனதினாலேதான், நம்மால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் சர்வாதிகாரித்தன்மைக்கு வரக்கூடிய ஒரு சுயநலமுள்ள நபராக இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறோம்.

இப்போது வரும்தேர்தல் இதுவரையிலும் நடந்த தேர்தல்போல அல்லாமல், ஒரு குறிப்பிடத் தகுந்த முக்கியமான தேர்தல் ஆகும். இதில் வெற்றிபெற்றால் வாழ்வோம்; தோல்விபுற்றால் வீழ்வோம் என்பதைத் தவிர இடையில் வேறு ராஜிக்கு இடமேயில்லை.

ஆகவேதான், காமராசரையே நம்பி—எல்லாப் பொறுப்புக்களையும் அவர்மீதே போட்டு—அவரால் நிறுத்தப்படுகிற ஆட்களில் 100-க்கு 90 பேருக்குக் குறையாமலாவது வெற்றி பெறும்படி செய்யவேண்டியது நம்முடைய கடமை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

['விடுதலை'-அறிக்கை—17-11-1961]

## 27. இராஜாஜி உண்மையைக் கக்கிவிட்டார்

இந்தியாவிற்குச் சுதந்திரம் கிடைத்ததற்கு 'காங்கிரசின் கிளர்ச்சியும் தியாகமும் காந்தியின் ஆத்ம சக்தியும் காரணம்' என்றும், சுதந்திரம் வாங்கிக்கொடுத்தவர் காந்தியாரென்றும் பார்ப்பனர் பித்தலாட்டமும் பிரச்சாரமும் மக்களை நம்பச் செய்துவிட்டது.

இந்த எண்ணம் தவறு என்றும், சுதந்திரத்திற்கும், காங்கிரசுக்கும் அதன் போராட்டத்திற்கும் 'தியாகத்திற்கும்' சம்பந்தமில்லை என்றும், வெள்ளையன் தானாகவே வீசி எறிந்து விட்டுப்போன சுதந்திரத்தை எடுத்துக்கொள்ள இந்தியாவில் கட்டுப்பாடான வேறு கட்சிகள் இல்லாமல் காங்கிரசும், முஸ்லிம் லீகும் மாத்திரம் இருந்ததால் முஸ்லிம் லீகுக்குப் பயந்து இணங்கி, ஆளுக்குக் கொஞ்சமாகப் பங்குபோட்டுக் கொண்டார்கள். அதாவது அனாதியாய்க் கிடந்ததைப் பங்கு போட்டுக்கொண்டார்கள். இதுதான் சுதந்திரத்தின் சரித்திரம். இதை நான் ஆயிரக்கணக்கான தடவை சொல்லிவந்திருக்கிறேன். சர். ஆர். கே. சண்முகமும் சொன்னார். ஆனால், மக்கள் அதை ஏற்கவில்லையென்றாலும், அதை மறுக்க இதுவரை யாரும் முன்வரவில்லை என்பதோடு, இந்த விஷயம் வெளியில் மக்களுக்குத் தெரியும்படி எந்தப் பத்திரிகையும் வெளியிடவில்லை.

இன்று சுதந்திரம் பார்ப்பனர் கைவிட்டு தமிழரிடம் வந்ததும், பார்ப்பனர் இப்போது உண்மையை ஒப்புக்கொண்டதோடு வெளியிலும் தெரியும்படி கக்கிவிட்டார்கள்.

அதாவது இராஜாஜி அவர்கள் 8-ந்தேதி கோகலே ஹாலில் பேசும்போது உண்மையைக் கக்கி (வெளியிட்டு) விட்டார்.

'காங்கிரஸ் போராட்டத்தாலும், நம் போராட்டத்தாலும் இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்தது என்று நாமெல்லாம் நினைத்துக்கொண்டிருக்கிறோம். சுதந்திரம் கிடைத்ததற்கு வேறு காரணம் இருக்கிறது. அது என்னவென்றால், வெள்ளைக்காரர்கள் உலக யுத்தம் காரணமாய் அவரவர் கைவசமிருந்த எல்லா அன்னிய நாடுகளுக்கும் சுதந்திரம் அவர்களாகவே கொடுத்துவிட்டார்கள். அதனால் நமது நாட்டுக்கும் சுதந்திரம் வந்து விட்டது' என்று சொல்லி இருக்கிறார்.

ஆகவே, காங்கிரசினால், தியாகத்தால் காங்கிரஸ்காரர்களுக்குப் பதவி கிடைத்து, பதவி உரிமையாகிவிட்டது என்பது உண்மை. சுதந்திரம் கிடைத்தது என்பது உண்மை அல்ல. இதை வெளியிட்டுச் சொன்னதற்கு இராஜாஜிக்கு நன்றி.

['விடுதலை'-தலையங்கம்—16 2-1965]

## 28. டாஷ்கண்ட் ஒப்பந்தம்

டாஷ்கண்ட் சமரச முடிவினால் இந்தியாவுக்கு ஓரளவு தொல்லை நீங்குகிறது; பாகிஸ்தானுக்குத் தோல்வி நீங்கிற்று. கோசிஜினுக்கு உலகப் பிரசித்தியான பெருமை கிடைத்தது.

['விடுதலை'-அறிக்கை—11-1-1966]

## 29. சிந்தியுங்கள்

தோழர்களே!

உலகிலேயே தான்பிறந்த இனத்தை அன்னிய இனத்தானுக்குக் காட்டிக்கொடுத்து உயிர் வாழ்கின்ற மக்கள் நம் இனத்தில்தான் இருக்கிறோம்.

நம்மில் பலருக்கு இன உணர்ச்சி என்பதே கிடையாது.

இன உணர்ச்சியினால் பார்ப்பான் வெகு சிறுஇனமாக இருந்தாலும் அவன் மேல் மகனாய் வாழ்ந்தான்; வாழ்கிறான்; வாழ்ந்து வருகின்றான். இனத்தைக் காட்டிக் கொடுத்து வாழும் பார்ப்பான் உலகில் எங்குமே இல்லை.

'மனைவியை அயலானுடன் கூட்டி அனுப்பியாவது உன் இனத்தைக் காப்பாற்றிக் கொள்' என்று பார்ப்பனருக்கு அறிவுரை கூறுவதுதான் இராமாயண புராணம்.

சங்கராச்சாரியார் அவர்களே பார்ப்பனருக்கு அறிவுரை கூறுகையில், 'நமக்கு எப்படிப்பட்ட கஷ்டம் வந்தாலும்—இராமாயணக் கதையை எடுத்து, அப்படிப்பட்ட கஷ்டம் வந்த காலத்தில் இராமன் எப்படி நடந்துகொண்டான் என்று பார்த்தோமானால், எப்படிப் பட்ட கஷ்டத்திலிருந்தும் மீளுவதற்கு மார்க்கம் கிடைக்கும்' என்று கூறியிருக்கிறார்.

ஆனால், நாமோ, நமக்குக் கஷ்டம் வந்திருக்க வேண்டியதே இல்லை; வயிற்றுப் பிழைப்புக்கு இராமாயணக் கதைப்படி நடந்துகொள்கிறோம்.

இதற்குக் காரணம் 'மனுதர்மம்' என்று சிலர் சொல்லலாம். ஆனால் நாம் இன்று மனித தர்மம் வரப்போகிற, வளருகிற காலத்தில் இராமாயணக் கதையை வழிகாட்டியாய்க் கொள்ளுகிறோமே, நம் இனத்தின் பெருமைதான் என்ன?

புத்தர் காலத்திற்குப் பின்பு இப்போதுதான் காமராசர் காலம் வந்திருக்கிறது. புத்தன் கையில் ஆட்சி இருந்தும் புத்தன் பிரச்சாரத்தினாலேயேதான் சில காரியங்களைச் சாதித்தான். ஆனால், காமராசர் தன்கையில் சர்வாதிகார ஆட்சி இல்லாதிருந்தும், ஆட்சியினாலேயே காரியம் சாதிக்கத் திட்டமிட்டு, மனித தர்மம் செழிக்கக் காரியம் செய்து வருகிறார்.

இதற்கு எதிர்ப்பு என்ன? எங்கிருந்து வருகிறது? என்றால் நம் இனத்தவர்களாலேயே செய்யப்படும் இனத் துரோகக் காரியமாகத்தானே இருந்துவருகிறது? இப்படிப் பட்ட இனத் துரோக ஆட்களுக்கு நம் இனத்தவர்களிலேயே சிலர் ஆதரவளிப்பது என்றால் அவர்கள் நம் மனிதர்கள்தானா? கலப்பற்ற இனந்தானா? என்று சிந்திக்க வேண்டாமா?

இத்தருணம் தவறினால் மறுதருணம் நமக்கு எப்போது வரும்? இனி வரும் தருணம் உயிரைக் கொடுக்கவேண்டிய 'பலி ஈடு' தருணந்தானே வரமுடியும்?

அதற்குள் தமிழனைப் பற்றி மற்றொரு இராமாயணம் எழுதவேண்டிய நிலை ஏற்பட்டு விடுமே!

சிந்திக்க வேண்டாமா?

தமிழா சிந்தி! சிந்தி! சிந்தி!

['விடுதலை'-தலையங்கம்—15-10-1966]

## 30. இன்று நடப்பது 1857-ன் சிப்பாய்க் கலகமே

இன்று இந்தியாவில் நடப்பது 1857-ல் இந்தியாவில் நடந்த 'சிப்பாய்க் கலகம்' போன்றதேயாகும்.

சிப்பாய்க் கலகமென்பது, வெள்ளையர்களால் செய்யப்பட்ட சீர்திருத்தங்கள் காரணமாக 'வைதிக வெறியர்' (பார்ப்பனர்)களால் பாமர மக்களைத் தூண்டிவிட்டு நடத்திய 'சீர்திருத்த விரோதக் (குழப்பமே) கலகமே'யாகும்.

அக் கலகக் காரணங்களில் அரசியல் (பொலிடிகல்) சம்பந்தமான வாசனைகூடக் கிடையாது என்றே சொல்லலாம். இன்றையக் கலகத்திற்கு, அதாவது 'அரசியல் கிளர்ச்சி'க்கு எப்படிப் பார்ப்பனனும், பணக்காரனும், முஸ்லிம்களும் காரணமாய்—பின்னால் தாங்குபவர்களாய் இருக்கிறார்களோ அதுபோலவேதான், அன்றையக் கலகக் காரணங்களுக்கும் பார்ப்பானும், வைதிக மனப்பான்மைகொண்ட சுயநல மராட்டிய சிற்றரசர்களும், ஜமீன்தாரர்களும், முஸ்லிம்களும் காரணமாய் இருந்திருக்கின்றார்கள். இன்றையக் காங்கிரஸ் எப்படி ஜமீன்தாரர்களை ஒழித்து, சிற்றரசர்களை ஒழித்து வந்து, சமுதாயத் துறையில் தீவிரமான சீர்திருத்தம் செய்து வருகிறதோ, அதேபோல்தான் 1857 ஆம் ஆண்டு வாக்கில் ஆங்கிலேய ஆட்சி ஜமீன்களைப் பெரும்பகுதியை அரசாங்க ஆதிக்கத்திற்குக் கொண்டுவந்து விட்டதுடன், சிற்றரசர்களையும், சிறிது சிறிதாக அரசாங்க ஆதிக்கத்திற்குக் கொண்டு வருவதாய் இருந்ததுடன்—தீவிரமான சமுதாய சீர்திருத்தக் காரியங்களையும் செய்யத் தொடங்கி சில காரியங்களை அமுலுக்கும் கொண்டுவந்து விட்டது.

இந்த உண்மைகளை இன்று அரசாங்கச் சார்பில் பதிப்பிக்கப்பட்ட இந்திய வரலாறு (சரித்திர) நூல்களைப் பார்த்தால் நன்கு விளங்கும்.

இந்திய வரலாறுகள் பெரிதும் பார்ப்பனர்களாலேயே எழுதப்படுவதால், அவர்கள் தங்களுக்கு எதிரான உண்மைகளை மறைத்தும், தங்கள் நலனுக்கு ஏற்றபடி உண்மையல்லாத விஷயங்களைப் புகுத்தியும், தப்பும் தவறுமாகக் கற்பனை செய்தும் எழுதி வந்ததால், இதுவரை இந்திய மக்களுக்கு இந்திய வரலாற்று உண்மைகளை அறிய முடியாமலே போய்விட்டது.

மற்றும், அக் காலப் பார்ப்பனர்களால் எழுதிக்கொள்ளப்பட்ட சமய சம்பந்தான விஷயங்கள்கூட, இன்றுவரை 100-க்கு 100 பார்ப்பனர்களே மொழிபெயர்ப்பாளர்களாய் ஆகிவிட்டதால்—சமய நூல்களில் வேதம், சாஸ்திரம், புராணம், இதிகாசங்கள் முழுவதும் அவைகளில் உள்ள ஆபாசங்கள், காட்டுமிராண்டித்தனங்கள் முதலியவற்றை விட்டும், திருத்தியும், கற்பிதம் செய்தும் 'மொழிபெயர்த்து'ப் பிரசுரித்து வெளியாக்கிவிடுகின்றார்கள்.

நம் புலவர்கள் அப்படிப்பட்ட விஷயங்களைத்தான் நம் மக்கள் இடையில் பரப்பி, அவைகளை நம்பி மதிக்கும்படி செய்துவிடுகிறார்கள் என்றாலும், நம் மக்கள் உண்மை அறியவேண்டுமென்ற ஆவலால், இப்போது நான் சிறப்புக் கட்டுரை எழுதுவதற்கு ஆதாரமாகப் பயன்படுத்திக்கொள்ளும் நூல், இன்று நடைபெறும் 1966-ம் ஆண்டில் பதிப்பித்து, நமது முதலமைச்சர் பக்தவத்சலம் அவர்களுடைய அணிந்துரைபெற்று தமிழ்நாடு அரசாங்கத்தால் வெளியிடப்பட்ட 'இந்தியாவின் சிறப்பு வரலாறு' (An Advanced History of India) என்னும் 11 ரூபாய் விலைபோட்ட 600 பக்கமுள்ள புத்தகத்தில் உள்ள விஷயங்களாகும்.

இதை ஆங்கிலத்தில் எழுதியவர்கள் 1. டாக்கா பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. ஆர். சி. மஜூம்தார் எம். ஏ; பி. எச். டி., 2. திரு. எச். சி. ராய் சவுதிரி எம். ஏ; பி. எச். டி., வரலாற்றுத் துறைப் பேராசிரியர், கல்கத்தா பல்கலைக் கழகம்; 3. திரு. கே. தத்தர். எம். ஏ; பி. எச். டி., ஆவார்கள். இதைத் தமிழில் மொழி பெயர்த்தவர். திரு. ஏ. பாண்டுரங்கன் எம். ஏ., ஈரோடு மகாஜன கல்லூரி வரலாற்று விரிவுரையாளர். வெளியிட்டது தமிழ்நாடு அரசாங்கம்.

இப்படிப்பட்ட இந்த நூலில் காணப்படும் விஷயங்களையே, ஆதாரமாய் வைத்து எழுதுகிறேன். நம் நாட்டு 'அரசியல்' பார்ப்பனர்களும், அவர்களது கூலிகளும் பார்ப்பனப் பத்திரிகைகளும் இந்த 1857ஆம் ஆண்டு நடந்த சிப்பாய்க் கலகத்தை, 'இந்தியாவின் முதலாவது அரசியல் போராட்டம்' என்று பேசியும் எழுதியும் பிரச்சாரம் செய்தும் வருவதால், அதன் உண்மை மக்களுக்கு விளங்க வேண்டுமென்பதற்கு ஆகவும், அதே கூட்டம்

இன்று இந்த நாட்டில் நடந்துவரும் குழப்பங்களையும், கலகங்களையும், நாச வேலைகளையும், 'அரசியல் கிளர்ச்சி' என்று பேசியும் எழுதியும் பிரச்சாரம் செய்து வருவதால் பொதுமக்களுக்கு விளக்க ஆசைப்பட்டு எழுதுகிறேன்.

அதாவது, மேலே குறிப்பிட்ட 'இந்தியச் சிறப்பு வரலாறு' என்னும் புத்தகத்தில், 'இந்தியப் பெருங் கலகம்' என்னும் தலைப்பில் 1-வது பாராவாக, 'கலகத்தின் முன்குறிகள்' என்ற தலைப்பில் 1816 முதல் 1855 வரை நடந்த சிறு கலவரங்களைக் குறிப்பிட்டுவிட்டு, 2-வது பாராவில் 'கலகத்தின் காரணங்கள்' என்ற தலைப்பில் அன்றைய அரசாங்கத்தின் நாடு இணைப்புக் கொள்கையாலும், வாரிசு அற்ற சொத்துக்களை, நாடுகளை அரசாங்கத்துடன் சேர்த்துக்கொண்டதாலும்-மராட்டியர் மனதிலும், முஸ்லிம்கள் மனதிலும் அதிருப்தி ஏற்பட்டது காரணம் என்று காட்டிவிட்டு,

196-ம் பக்கத்தில் 2-வது வாக்கியமாக, 'பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பாதியிலும் இந்தியாவில் மிக வேகமாகப் பரவிய மேற்கு நாடுகளின் நாகரிகத்தைக் கண்டு, இந்தியாவிலிருந்த பழமைப் பற்றாளர்கள் (Conservatives) மிக அச்சமடைந்தார்கள். இரயில் தந்தி போன்ற புதியன புனைதல்(Inventions), மேற்கத்திய கல்வியைப் பரப்புதல், சதி, சிசுக் கொலை ஆகிய வழக்கங்களை ஒழித்தல், இந்துமதத்தைவிட்டு விலகியவர்களின் சிவில் உரிமையைப் பாதுகாப்பதற்காக 1856-ஆம் ஆண்டில் உண்டாக்கப்பட்ட 'சமயக் குறைபாடுகளை நீக்கும் சட்டம் (Religious Disabilities Removal Act of 1856)', விதவைகள் மறுமணம் செய்துகொள்வதைச் சட்டபூர்வமாக ஆதரித்து 'இந்து விதவைகள் மறுமணச் சட்டம் 1856 (Hindu Widows Remarriage Act of 1856), சில கிறிஸ்தவ மிஷனரிகள் நேர்மையற்ற விதத்தில் வலியத் தலையிடும் போக்கு ஆகியவைகளினால் அரசாங்கம் இந்தியர்களுடைய சமூக அமைப்பை அழிக்கவும், இந்த நாட்டில் பல காலமாக இருந்துவரும் பழக்கங்களையும் முறைகளையும் மாற்றி, மேற்கத்திய முறைகளை புகுத்தவும், இந்திய மக்களைக் கிறிஸ்தவ மதத்திற்கு மாற்றவும் முயற்சிக்கிறது என அவர்கள் எண்ணினார்கள். வஹாபி மதப்பிரிவின் (Wahabi sect) நடவடிக்கைகள், முஸ்லிம்களின் உணர்ச்சிகளைக் கொழுந்துவிட்டு எரியுமாறு செய்தன.

'வங்காளப்படை என்ற படையில் உயர் சாதியினர் அதிகமாகச் சேர்க்கப்பட்டதால், அவர்கள் சமூக உரிமைகளைப் பெரிதாக நினைத்ததால் அவர்கள் ஒழுங்கு முறைக்கு அடங்கி நடக்கவில்லை.

'அரசாங்கம் மேற்கத்தியக் கொள்கைகளைப் (மக்களிடம்) புகுத்துகிறது என்று அவர்கள் நம்பினார்கள்.'

இப்படியாகவும், மற்றும், 'இந்தியப் படைகளை இந்தியாவிற்கு வெளியில் செல்லும்படியும் அரசாங்கம் கட்டளை இட்டது; இதனால் படைக்கு அதிருப்தி அதிகமாயிற்று' என்பதாகவும் கண்டிருக்கிறது.

குறிப்பு : மனுதர்மத்தில் பார்ப்பனர் கப்பல் ஏறுவது (கடல் தாண்டுவது) கூடாத காரியம் ஆதலால் அதிருப்தி ஏற்பட்டது.

மற்றும், அதில் காணப்படுவது என்னவென்றால், 'இராணுவத்தில் இந்தியர்கள் அதிகமாக 2,33,000 பேராகவும், ஐரோப்பியர் 45,322 பேராகவும் இருந்ததால் இந்திய அரசாங்கம் இந்திய சிப்பாய்கள் தயவில்தான் இருக்கிறது' என்கின்ற எண்ணம் இந்திய சிப்பாய்கள் கொண்டு விட்டார்கள்.

இந்த நிலையில் துப்பாக்கித் தோட்டாக்களில் மிருகக் கொழுப்பு பூசப்பட்டிருக்கிறதென்ற உண்மையற்ற கதை, காய்ந்த சருகில் விழுந்த நெருப்புப் பொறிபோல் ஆகிவிட்டது என்பதாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இதனால் சிப்பாய்கள் சிறைச்சாலைகளுக்குள் புகுந்து சிறைகளை நீக்கி கைதிகளை விடுவித்துப் பல அய்ரோப்பியர்களைக் கொன்று, அவர்களது வீடுகளையும் கொளுத்தினார்கள் என்பதாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1857 ஆம் ஆண்டு கலகத்திற்குக் காரணங்கள் இவையே போதுமென்று கருதுகிறேன். மற்றும் பல, இந்திய சரித்திரங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

ஆனாலும், இன்று இந்தியாவில் நடைபெறும் கிளர்ச்சி என்னும் குழப்பத்திற்குக் காரணங்கள் என்ன? அதுவும் இந்தியாவின் ஆட்சிப்போக்கு, ஆட்சிக்கொள்கை, சமதர்மம், சோஷலிசக் கொள்கையேயாகும் என்று பிரகடனமானவுடன்—ஜெயில் உடைபடுவது, அதிகாரிகள் கொல்லப்படுவது, அரசாங்க காரியாலயக் கட்டடங்கள் கொளுத்தப்படுவது. பஸ்கள் கொள்ளையிடப்படுவது, மந்திரிகளும், அதிகாரிகளும் அய்க்கோர்ட் ஜட்ஜுகளும் ஆட்சிக்கு, ஆட்சிக் கொள்கைகளுக்கு விரோதமான கருத்துக் கொள்வது, காரியங்கள் செய்வது—முதலிய காரியங்களின் தத்துவம் என்ன? 1857 ஆம் ஆண்டு சிப்பாய்க் கலகத்தை விடப் பலமடங்கு அதிகமாக, அதே காரியத்திற்காக, உயர் சாதிக்காரர்களால்—வைதிக வெறியர்களால் செய்யப்படும் யுத்தம் அல்லவா? என்று கேட்கிறேன்.

ஆனால், அன்று வெள்ளையன் துணிச்சலுடன் எதிர்த்து நின்று வெற்றிபெற்றான்.

இன்று சேனாதிபதி இருக்கிறாரேயொழிய, விஸ்வாசமுள்ள சேனை இல்லையே? சிப்பாய்க் கலக நாளில் இருந்த சிப்பாய்கள் போல்—பல துரோக மந்திரிகளும், துரோக உணர்ச்சி உள்ள அதிகாரிகளுந்தான் மிதந்து காணப்படுகிறார்கள்.

சிப்பாய்க் கலகத்தின்போது சிப்பாய்கள் பேரால் ஒரு கிழட்டுத் துலுக்கனை சிம்மாசனம் ஏற்றியமாதிரி, இன்றையச் சிப்பாய்கள் மிகமிகக் கீழ்த்தரமான மக்களை சிம்மாசன மேற்றப் பார்க்கிறார்கள்.

முடிவில் வெற்றி நமதே என்றாலும், பல தொல்லைகளுக்கு நாம் ஆளாகவேண்டி இருக்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு உறுதியுடனிருக்க, தோழர்களுக்கு நினைவூட்டுகிறேன்.

['விடுதலை' 16-10-1966]

## 31. தேர்தல் படிப்பினை

1. பார்ப்பனர்கள் வெற்றி பெற்றுவிட்டனர்; பார்ப்பனர் ஆதரவில் பணக்காரரும் வெற்றி பெற்றுவிட்டனர்.

2. சோஷ்யலிஸம், சமதர்மம் பற்றி நம் மக்கள் கவலையற்றவர்களாக நடந்து கொண்டார்கள்.

3. எதிரிகளும் பொய்யும், புரட்டையும் ஆயுதமாகக்கொண்டு போராடினார்கள்.

இவைகளுக்குத் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் ஆட்சி தெரிந்தோ, தெரியாமலோ நல்ல ஆதரவளித்து வந்திருக்கிறது. தங்கள் தங்களை முக்கியப்படுத்திக்கொண்டு, காங்கிரஸ் வெற்றி பெறவேண்டும் என்பது பற்றி காங்கிரஸ்காரர்களில் மிகப் பெரும்பாலானவர்களுக்கு வேலையில்லாமலேயே இருந்துவந்தது.

பொதுவாக, காமராசர் தோல்வியைத் தவிர, மற்ற தோல்வி எதுவும் எனக்கு அவ்வளவாகக் கவலை தரவில்லை. நமது மக்கள் ஜனநாயக உரிமைக்குத் தகுதியற்றவர்கள் என்பது எனது வெகுநாளைய கருத்து. இப்போதைய வெற்றியை மாற்றவேண்டும் என்பதில், இந்த வெற்றியை அளித்த மக்களின் யோக்கியதையைச் சரிவர நிர்ணயிப்போமானால், நாம் ஒன்றும் தனி முயற்சி எடுத்துப் பாடுபட வேண்டியதில்லை.



17–9–1967-ல் திருச்சியில் நடைபெற்ற பெரியார் ஈ. வெ. ரா. சிலை திறப்பு விழாவில்
பேருரையாற்றிய முதலமைச்சர் C. N. அண்ணாதுரை அவர்களுடன் பெரியார் ஈ. வெ. ரா.

மற்றும், நம் உயிர் போன்ற கொள்கைகளுக்கு இந்த ஆட்சியில் கேடு நேராதவரை, ஆட்சியின் போக்கைப்பற்றி நாம் கவலைப் படவேண்டிய அவசியமில்லை என்றே கருது கிறோம். பொதுவாக, இதுபோன்ற பார்ப்பனர் வெற்றி (பார்ப்பனரல்லாதார் தோல்வி)பற்றி எனக்கு இதற்குமுன் மூன்று அனுபவங்கள் உண்டு. மூன்றிலும் பார்ப்பனர் வெற்றி நிலைத்தபாடில்லை. ஆதலால், இன்றையப் 'பார்ப்பனர் வெற்றி' பற்றியும் ஒன்றும் மூழ்கிப் போய்விடவில்லை என்றே நம் மக்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நானும் அதிகக் கவலைப்படவில்லை.

பார்ப்பனரின் வெற்றியான இந்த வெற்றி நமக்குக் கேடாக அமையுமாதலால், அதை மாற்றுவதற்கு நம் மக்கள் இயற்கையாக. நமக்குக் கிடைக்கப்போகும் ஆதரவுகளை எதிர்பார்த்துச் சற்றுப் பொறுமையாக இருக்கவேண்டும் என்றே கேட்டுக்கொள்ளுகிறேன்.

பொதுவாக, நம் நாட்டுக்கு இப்படிப்பட்ட ஓர் நிலை வரக்கூடும் என்று கருதியே, 1963-லேயே காமராசர் தமிழ்நாட்டின் முதல் மந்திரி பதவியை விட்டு, அகில இந்தியக் கட்சிப் பணிக்குச் செல்ல முடிவு செய்தபோதே, நான் பத்திரிகையில் எழுதி இருப்பவை அல்லாமல் காமராசருக்கே ஒரு தந்தி கொடுத்திருக்கிறேன். அந்தத் தந்திக் குறிப்பு :

'Either of your own accord or on the advice of others, your resignation of Chief-ministership will be suicidal to Tamilians, Tamilnadu and yourself!'

'தாங்களாகவோ, பிறர் ஆலோசனையின் பேரிலோ தமிழ்நாட்டின் முதலமைச்சர் பதவியைத் தாங்கள் ராஜினாமா செய்வதானது தமிழர்களுக்கும், தமிழ்நாட்டிற்கும், தங்களுக்கும் தற்கொலைக் கொப்பானதாகும்!' என்பதாக, பதவி விலகுவதற்கு முன்னதாகவே கொடுத்திருக்கிறேன்.

அவர் விலகியதின் பயனாகத் தமிழ்நாட்டில் பார்ப்பன ஆதிக்கத்திற்கு அனுகூலமான ஆட்சி ஏற்படுவதுடன், பொறுப்புள்ள ஆட்சி அமைவதற்கில்லாமலேயே போய்விட்டது. வடநாட்டிலும் பொறாமை, துவேஷம், கோஷ்டி ஏற்பட இடம் ஏற்பட்டுவிட்டது.

காமராசர் தோல்வியைப்பற்றிப் பலர் என்னிடம் வந்து துக்கம் விசாரிக்கும் தன்மை போல தங்கள் வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டார்கள். அவர்களுக்கு நான் அளித்த ஆறுதல் 'பிப்ரவரி 23-ந்தேதி தோல்விச் செய்தியைப்பற்றிக் கவலைப் படுவதைவிட 1966 நவம்பர் 7-ந்தேதி டெல்லியில் நடைபெற்ற கொலை முயற்சியில் அவர் உயிர் தப்பினதை நினைத்து மகிழ்ச்சி கொள்ளுங்கள்' என்று சொல்லி அனுப்பினேன். நானும் அப்படியே நினைத்துத்தான் சரிப்படுத்திக்கொண்டேன்.

இனி, நமது வேலை நமது கொள்கைகளைத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்யவேண்டியதும், அதனால் ஏற்படும் பலாபலன்களுக்கு நாம் தயாராக இருக்க வேண்டியதுமே நமது கடமையாகும்.

['விடுதலை'-தலையங்கம்—27-2-1967

## 32. என் ஆதரவு

இன்றைய தி.மு.க. மந்திரிசபை ஆட்சிக்கு நான் (சு.ம.-தி.க.) 'எதிர்ப்பு தெரிவிக்க மாட்டேன்' என்றால், 'வம்புச் சண்டைக்குப் போக மாட்டேன்' என்பதுதான் கருத்து. இந்தக் கருத்து எனது அறிக்கையிலேயே புதைந்து இருக்கிறது. தி.மு.க. வெற்றி பெற்றவுடன் என்னைக் காணவந்த எல்லோரிடத்திலும், நமது கழகத் தோழர்களிடமும் இதைத் தெரிவித்து இருக்கிறேன்.

உண்மையாகச் சொல்லுகிறேன், காமராசரைத் தவிர்த்து காங்கிரசில் இருக்கும் எவரையும்விட தி.மு.க.வின் தலைவர் தரத்தில் இருக்கும் எல்லோரிடமும் எனக்குக் கவர்ச்சி இருக்கிறது. அவர்கள் (தி.மு.க.) என்னிடம் துவக்கம் முதல் இன்றுவரை தாட்சண்யமாக (நாகரிகமாக) நடந்து வந்திருக்கிறார்கள். நான் அவர்களை (ரிசர்வேஷன்) மீதி இல்லாமல் எவ்வளவு கண்டித்து சடும், குறைவான வார்த்தைகள் பயன்படுத்திய காலத்தும் இவர்களில் (தி.மு.க. தலைவர்கள்) ஒருவர்கூட என்னைக் கடிந்தோ, குறைகூறியோ, எந்தவிதமான குற்றம் சாட்டியோ, தரக் குறைவாகவோ ஒரு வார்த்தைகூடச் சொன்னது கிடையாது. இதை நாங்கள் அடிக்கடி பேசிக்கொண்டிருக்கிறோம். அவர்களில் (தி.மு.க.) சிலர் அதிகமாக சந்திக்கப்பட நேரவில்லை என்றாலும், நேர்ந்தபோது பழைய முறையிலேயே நடந்து கொண்டிருக்கிறார்கள். இன்றைய மந்திரிகளில் யாரும் திருவாளர் பக்தவத்சலத்தைவிடக் கேடாகவும், மோசமாகவும் நடந்துகொள்ள மாட்டார்கள் என்றே தோன்றுகிறது.

எனது கொள்கை—சாதி ஒழிப்பு, பகுத்தறிவு ஜாதி ஒழிப்பு பூரணமாக ஏற்படும் வரை வகுப்புவாரி உரிமை. இவற்றிற்குக் காங்கிரஸ் ஆட்சி எனக்குக் கூடிய உதவிகூடச் செய்யவில்லை என்பதோடு, ஆட்சியில் காங்கிரஸ் குழுவில் பலர் எதிரியாகவும் இருந்தார்கள்.

இவர்கள் (தி.மு.க.) உதவி செய்வார்களா என்றால், இன்றுவரையில் இவர்கள் இந்தக் கொள்கைக்கு மாறாகப் பேசியதாகக் காணவில்லை. இனியும் உதவி செய்யா விட்டாலும் எதிப்பார்கள் என்று நான் நினைக்கவில்லை.

இப்படியே (தி.மு.க.) இருப்பார்களேயானால் நான் ஏன் அவர்களோடு மோதிக் கொள்ள வேண்டும்?

தி.மு.க.வைச் சேர்ந்த தலைவர் தரத்தில்லாதவர்களில் ஆங்காங்குள்ள சிலர் தரக்குறைவாய் நடந்து கொள்ளலாம். அதைப்பற்றி நம்மவர்கள் இலட்சியம் செய்யாமல் நமது பிரச்சாரத்தை நடத்தவேண்டும். இந்தக் காரியம் செய்யமுடியாமல் எதிர்ப்பு வரும் போது பார்த்துக்கொள்ளலாம்.

ஏனென்றால், தி.மு.க. தலைவர்கள் எல்லோரும் பகுத்தறிவுவாதிகள். எல்லோருமே தமிழர்கள் (பார்ப்பனரல்லாதார்). இவர்கள் எளிதில் நம் கொள்கை விஷயத்தில் நம்மை எதிர்க்கவோ, தொல்லை கொடுக்கவோ வரமுடியாது.

நாம் காங்கிரசைக் கொள்கைக்காகத்தான் ஆதரித்தோம்; ஆதரிக்கிறோம்; ஆதரிக்கப் போகிறோம் என்பது பெரும் அளவுக்கு உண்மையானால், இன்றைய (தி. மு. க.) ஆட்சியையும், நம் கொள்கைக்கு மாற்றம் இல்லாதவரை, எதிர்ப்பு இல்லாதவரை அவசரப் பட்டு (ஆதரிக்காவிட்டாலும்) எதிர்க்காமலாவது இருக்கவேண்டியது நம் கடமையா, அல்லவா, என்று நம் கழகத் தோழர்களைச் சிந்திக்கவேண்டுகிறேன்.

மற்றும், சமதர்மத்திற்கு—சோஷ்யலிசத்திற்கு எதிராக தி.மு.க.வினர் பேசமாட்டார்கள்; பேசமுடியாது. பேசினால், அவர்களே எதிர்ப்புக்கு இடம் கொடுக்கிறார்கள் என்பதுதானே அதன் முடிவாகும். ஆகவே, தி.மு.க. வெற்றிபெற்று ஆட்சிக்கு வந்தது பார்ப்பனருக்கு ஒரு பெரிய நெருக்கடியும், தர்ம சங்கடமுமான நிலையாகும் என்பதோடு, தி.மு.க.வுக்கும் ஒரு பெரிய சோதனைக் காலம் என்றுதான் சொல்லவேண்டும்.

காங்கிரஸ்காரர்கள் இந்த நிலையில் எப்படி நடந்து கொள்வார்களோ நமக்குத் தெரியாது. பொதுவாக காங்கிரசில், காங்கிரஸ் ஸ்தாபனத்திலும், கொள்கையிலும் உண்மைப் பற்றுள்ளவர்கள்—ஒரு சிலர் (வெகு சிலரைத்) தவிர மற்றபடி தலைமைத் தரத்திலாகட்டும், மந்திரி தரத்திலாகட்டும், முக்கிய பணியாளர் தரத்திலாகட்டும் யார் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. ஒரு சமயம் காமராசர் கண்களுக்குப் பலர் தென்படலாம். அதைப்பற்றி இப்போது இதில் நான் ஒன்றும் சொல்ல இஷ்டப்படவில்லை.

பொதுவாகச் சொல்லுகிறேன். இன்றைய மந்திரிகளுக்குப் பார்ப்பனர்களால்தான் நெருக்கடியும், கெட்ட பெயரும், காலாவதியும் வந்தால் வரலாமே தவிர நம்மால்—மக்களால் வராதென்றே கருதுகிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—6-3-1967]

## 33. மந்திரிகள் சிந்தனைக்கு

புதிய மந்திரிகள் அனுபவமில்லாதவர்கள்; அவசரப்படுபவர்கள்; எதையாவது சொல்லி மக்களை ஏய்க்கப் பார்ப்பவர்கள் என்பதைப் பதவிக்கு வந்த நான்கைந்து நாட்களுக்குள் காட்டிக்கொண்டார்கள்.

அரிசி விஷயத்தில், நிலவரி விஷயத்தில், லெவி விஷயத்தில் இவர்கள் வாக்குறுதிகளுக்குப் பத்திரிகைக்காரர்கள் ஆதரவில் தப்பிப் பிழைக்க வேண்டியவர்கள் ஆகிவிட்டார்கள்.

இது மாத்திரமல்லாமல், 'ஏற்கனவே இந்தப் பிரச்சினைகளில் பொறுப்பு வகித்திருந்தவர்களையும் கலந்து பேசி, பலதரப்பட்ட ஆலோசனைகளையும் பரிசீலனை செய்யும் முன் அவர்கள் அவசரப்பட்டு எதுவும் சொல்ல விரும்பவில்லை' என்று ஜாடையாக மந்திரிகளுக்கு அறிவுறுத்தி இருக்கிறது 'தினமணி' [10-3-1967]

தேர்தல் காலத்தில் வாக்குறுதிகள் கொடுப்பது என்பது எப்படி இருந்த போதிலும், நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட நிலையில் மேலும் பல புது வாக்குறுதிகளைத் தாராளமாகத் தருவது புத்திசாலித்தனமான காரியமாகுமா?

தி. மு. க. மந்திரிகள் வாக்களித்து மக்களுக்கு ஆசைகாட்டிய, வண்டி வண்டியான வாக்குறுதிகளில் இதுவரை ஒன்றைக்கூட நிறைவேற்ற முடியாமல் தத்தளிப்பதுடன், 'பதவிக்கு வந்தவுடன் மறுநாளே செய்வோம்' என்று வாக்களித்தவற்றில் எல்லா விஷயங்கள் பற்றியும் பேசி இருப்பதில் ஒன்றைக்கூட நிறைவேற்றியதாகவோ, நிறைவேற்றுவதாகச் சொன்னவைகளில் புத்திசாலித்தனமாகவோ சொன்னதாகவும் இல்லை.

அரிசி விஷயத்தில், மலையாளம் போகும் அரிசியைத் தடுப்போம் என்றார்கள். பிறகு 'தினமணி' அதற்குச் சொன்ன வியாக்கியானத்தில் 'இந்த அரசாங்கத்தால் அதைத் தடுக்க முடியாது; அரிசியை வெளி மாகாணங்களுக்கு அனுப்புவதும், தடுப்பதும் மாகாண அரசாங்கத்தின் கையில் இல்லை; இது மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்தது' என்று பளிச்சென்று எடுத்துக்காட்டிவிட்டது.

மற்றும், நெல் (லெவி) கொள்முதல் விஷயம் பெரிய குழப்பத்திற்குள்ளானது என்று காட்டப்பட்டுவிட்டது. பூமியை-உற்பத்தியைத் தரம்பிரிப்பது மிகமிகக் கடினம் என்று காட்டப்பட்டுவிட்டது. கிராமாதிகாரிகளையும் கீழ்ப்பட்ட ரெவின்யூ அதிகாரிகளையும் நம்பி ஆகவேண்டும். இவர்கள் மாமூல் பரம்பரையினராவார்கள். ஏனெனில், இவர்கள் சம்பளம் ஒரு பியூன் சம்பளத்தைவிடக் குறைவானது. வாழ்க்கையோ தாசில்தார் வாழ்க்கைக்கு இளைக்காதது! இவர்களுக்கு மேலதிகாரிகளுக்கு சப்ளை முதலிய தொல்லைகளுமிருக்கின்றன. இதையெல்லாம் விட மந்திரிகளுக்கு இந்த விஷயங்களில் ஏ, பி, சி கூடத் தெரியாது. 'லெவி'யில் என்ன சீர்திருத்தம் செய்தாலும் சிப்பந்திகளுக்கு வழியாகுமே தவிர, பிள்ளை பிழைக்காது என்றுதான் சொல்லி ஆகவேண்டும்.

பூமிகளுக்கு நிலவரி முறையிலும் பெரும் குழப்பத்திற்கு உள்ளான காரியமாகும்.

கிரமப்படி பொறுப்புள்ள, நாணயமான அரசாங்கமானால் நிலவரியை உயர்த்த வேண்டும்.

நான்கு, அய்ந்து ஏக்கராக்களுக்கு உட்பட்ட நிலமுடையவர்களுக்கு வரிகூடாது என்று சொன்ன காலம் ஒரு ரூபாய்க்கு 6 படி, 5 படி விற்றகாலம். ஒரு கலம் $1\frac{1}{2}$ ரூபாய், 2 ரூபாய் விற்ற காலம்! போலீசாருக்கு 7 ரூபாய் சம்பளமும், பியூனுக்கு 6–7 ரூபாய் சம்பளமும், டிப்டி கலெக்டருக்கு 250 ரூபாய் சம்பளமும் இருந்த காலம். இன்று ஒருபடி $1\frac{1}{2}$ ரூபாய்க்கு விற்கிறது. அது, பூமி விலைகளும் ஒரு ஏக்ரா புஞ்சை ரூ. 250, நஞ்சை ரூபாய் 3000 வரை இருந்த காலம். இன்று புஞ்சை ரூ. 1000, நஞ்சை 10,000 ரூபாய் வரை-சில இடங்களில் நஞ்சை ஏக்கர் 20,000 ரூபாய்க்கு விற்கும்போது, எதற்காக நிலவரியைக் குறைக்கவேண்டும்? ஓட்டு வாங்கவைக்குமே யல்லாமல் இதில் அறிவுடைமையோ நாணயமோ என்ன இருக்கின்றது?

கிராமத்திற்கு ரீசெட்டில்மெண்ட் வைத்து, நில வரும்படியைக் கணக்குப் பார்த்து, வரி நிர்ணயிக்கவேண்டும். இதையெல்லாம்விட, உச்சவரம்பைத் திட்டப்படுத்தி அதில் கண்டிப்பாய், உஷாராய் இருந்து திட்டப்படுத்தினால் வரி விஷயத்தில் நாம் தலையிட வேண்டிய அவசியமே இராது. மந்திரிகள் நிர்வாகத்தில் புத்தி செலுத்தாமல், இன்னமும் மக்களை எப்படி ஏய்க்கிறது என்பதிலேயே முழுக் கவலையும் செலுத்திவந்தால் இந்த பத்திரிக்கைகாரன்கள் திடீரென்று கவிழ்த்து விடுவான்கள்.

மற்றும், அண்ணாதுரை சொன்னார் என்று 'தினமணி' ஒரு வாக்கியம் குறிப்பிட்டிருக்கிறது. அது என்னவென்றால், 'ஏற்கனவே (பழைய மந்திரிகளை—இந்த நிர்வாகத்தில் இருந்தவர்களை) இந்தப் பிரச்சினைகளில் பொறுப்பை நிர்வகித்தவர்களையும் கலந்து பேசி பலதரப்பட்ட ஆலோசனைகளையும் பரிசீலனை செய்யும்முன் அவசரப்பட்டு அவர் (அண்ணாதுரை) எதுவும் செய்ய விரும்பவில்லை' என்று குறிப்பிட்டு இருக்கிறது. இதன் கருத்தென்ன? இந்த நிலையில் இருந்துகொண்டு வீரம் பேசுவதில் பயன் என்ன? இவர்கள் எந்தக் காரியத்திலும் பழைய ஆட்சியை, கொள்கையைப் பொறுத்தோ, பெரிதும் திட்டத்தைப் பொறுத்தோ எளிதில் குற்றம் சொல்லிவிடவோ, மாற்றி நடந்துவிடவோ முடியாது; கண்டிப்பாய் முடியாது.

ஆனால், உத்தியோகம், பதவி வசதி அளிப்பதில் பக்தவத்சலம் நடந்துகொண்ட முறைதான் அவரைக் கவிழ்த்தது. தன்னைக் காப்பாற்றிக் கொள்ள அவர் காங்கிரசைத் தோல்வி அடையச் செய்தார்.

புது மந்திரிகளின் இந்த 'அதைச் செய்வோம், இதைச் செய்வோம்' என்கின்ற மாபெரும் வாக்குறுதிப் பேச்சுகள் ஒன்றும் பயன்தரப்போவதில்லை. ஏன் என்றால், அதன் பயன் 8 நாளையில் விளங்கிவிடும். இந்த நாட்டு மக்களுக்கு இவர்கள் என்ன பங்கு அளிக்கப்போகிறார்கள் என்பதைத்தான் பொறுத்திருக்கிறது இவர்கள் பிற்காலம். இன்றைக்குத் தங்களுக்கு வரும் கூட்டத்தையும் நடைபெறும் ஆரவாரத்தையும் நம்பி ஏமாந்துவிடக்கூடாது.

சரித்திரத்தை—புராணத்தை எடுத்துக்கொண்டால் பார்ப்பனர்கள் எவனையும் வாழ வைத்ததாக ஆதாரமே இல்லை. மனிதனுக்கு எவ்வளவுதான் பேராசை இருந்தாலும் ஆசை, நிராசையானால் பின் விளைவு என்ன என்பதைப்பற்றிய கவலை இருக்கவேண்டும்.

ஒவ்வொரு பதவி வழங்குதலிலும், நியமனத்திலும், ஒவ்வொரு மந்திரிக்கும் நாட்டு மக்கள் நிலைமையைப் பற்றிய கவலை இருக்கவேண்டும். எல்லா இன மக்களையும், ஒன்று போல் பாவித்துப் பாரபட்சமில்லாமல் நடுநிலைமை சிந்தனையுடன் நடந்துகொள்ள வேண்டும். இதைத்தான் பெரும்பாலான பொதுமக்கள் எதிர்பார்ப்பார்கள்.

'அரிசி' 'வரி' முதலிய பிரச்சினைகள் இன்றைய நிலையில் இயற்கைப் பிரச்சினைகள் அல்ல; செயற்கைப் பிரச்சினைகளேயாகும். இதை நம்பியே நாம் நம் வெற்றி



திருச்சியில் 17–9–1967–ல், பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் சிலையைத் திறந்து வைத்த
கு. காமராசர் அவர்களுடன் மேடையில் பெரியார் ஈ. வெ. ரா.

யைக் கணித்துக் கொள்ளக்கூடாது என்றே சொல்லுவேன். விபூதி வீரமுத்துசாமிக்கு ஒரு காலத்தில் இருந்த மரியாதை, பெருமை யாரும் அறியாததல்ல. இன்று கிருபானந்தவாரியார் ஸ்வாமிக்கு இருக்கும் பெருமை யாரும் அறியாததல்ல. சங்கராச்சாரிகளுக்கு இன்றுள்ள பெருமை யாரும் அறியாததல்ல.

அதுபோல்தான் மந்திரிகளுக்கு இன்றுள்ள பெருமைகளும் என்பது எனது கருத்து.

அரிசிப் 'பஞ்சம்' (பஞ்சமல்ல—கஷ்டம்) காரணமாக வந்த வெற்றிக்கு எவ்வளவு பலம் இருக்கக்கூடும்? இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும், அதற்கு மந்திரிகளால் என்ன பரிகாரம் (சொன்னபடி) செய்ய முடிந்தது? முடிகிறது? தலையை மொட்டை அடித்து விடுவதானால், ஆள் பாரம் (எடை) குறைந்துவிடுமா?

போக்குவரத்து மந்திரி 'பஸ் சார்ஜ்' குறைக்கப் போவதாக, அதுவும் சிந்திக்கப் போவதாகச் சொல்லுகிறார்! குறைத்தால் பெரும் நஷ்டம்தான் வரும். பஸ் புதுச் சாமான்கள் திருட்டுப் போவதற்கும், டயர்கள் மாற்றப்படும் நஷ்டத்திற்கும் சரிக்கட்டவே வருமானம் திண்டாட்டமாகிவிடும். மற்ற தனிப்பட்ட பஸ் முதலாளிகளுக்கும்கூட 'உங்கள் பஸ் சார்ஜ் சத்தத்தை குறைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லி இருக்கிறேன். அவர்களும் குறைத்துக்கொள்ளத்தான் போகிறார்கள். காரணம், வருமானவரி விகிதம் குறையலாம் என்பது. ஆனால், அரசாங்கத்தார் அடிக்கடி 'நன்கொடை' கேட்பார்களே—அதற்கு என்ன செய்வது? என்று கேட்கிறார்கள்' என்கிறார்.

அரசாங்க பஸ் கட்டணம் குறைவதால் ஒரு சிலருக்குப் பயன் ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

எதிர்காலம் மந்திரிகளுக்குப் பெரிய சங்கடகாலமாகும். பழைய மந்திரிகளின் ஏற்பாட்டின்படி, வருஷந்தோறும் ஒரு இலட்சம் அல்லது 50 ஆயிரத்துக்குக் குறையாது படித்துத் தேர்வில் வெற்றிபெற்று வேலைக்கு அலையும் மக்கள் வெளிவரலாம். இவர்கள் சர்க்காரில் வந்துதான் முட்டிக்கொள்ளுவார்கள். ஏராளமான சிபாரிசுகள் வரலாம். தள்ள முடியாத சிபாரிசுகளும் வரலாம்.

இவற்றையெல்லாம் 'அரிசிப் பிரச்சினை வெற்றியே' தீர்வு கண்டுவிட முடியாது. அல்லது, பார்ப்பனர் ஆதரவே தீர்வு கண்டு கொடுத்து விடாது.

மந்திரிகள் குறைந்த அளவு தங்கள்மீது தவறில்லை என்றாவது காட்டிக்கொள்ள முன் வரவேண்டும்.

மற்றும், இந்த மந்திரிகள் வந்தவுடன் அதிகாரத்தில் பெரும்பான்மையாய் இருக்கும் வகுப்பாருக்கு லஞ்சம் வாங்குவதில் (இப்போதே துணிவு அதிகம்) பெரும் துணிவு வந்துவிடும். இதற்குத் தள்ளமுடியாத சிபாரிசுகள் வரும். இப்படிப் பல ஏற்படலாம். இதற்கெல்லாம் மருந்து தாங்கள் நேர்மையாய் நடந்து கொள்ளுகிறோம் என்று பெரும்பாலான மக்களுக்குக் காட்டிக்கொள்வதுதான்.

ஆகவே, அவசரப்பட்டுத் தடபுடலான வாக்குறுதிகள் கொடுத்து, பிறகு பார்ப்பனர் தயவை எதிர்பார்த்தாகவேண்டிய நிலைமைக்கு ஆளாகாமல், அறிவாளிகளாக மந்திரிகள் சிந்திக்க வேண்டும்!

['விடுதலை'—தலையங்கம்—10-3-1967]

## 34. ஜனநாயகம்

ஜனநாயகம் என்பது மக்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களால் நடத்தப்படும் ஆட்சி என்பதுதான் பொருள்.

மக்கள் அதற்குத் தகுதி உடையவர்களா என்கின்ற பிரச்சினை இதில் எழுவதில்லை.

அது மாத்திரமல்லாமல், நாட்டின் அமைப்பு அதற்கு ஏற்றதா என்கிற பிரச்சினை பற்றிய சிந்திப்பும் அதில் எழுவதில்லை. இவ்விரண்டு சிந்தனையும் இல்லாமல் பொதுவாக ஜனநாயகம் என்கின்ற சொல்லைக்கொண்டே மக்கள் ஜனநாயகத்திற்குப் பலி ஆகி விடுகிறார்கள்.

நமதுநாடு இன்றைக்கும் சாதி அமைப்பின்கீழ் இருந்து வருகிறது.

அதுபோலவே, நமதுநாடு இன்றும் மதஅமைப்பின்கீழ் இருந்துவருகிறது.

அதுபோலவே, நமதுநாடு இன்றும் பொருளாதார பேத அமைப்பிலேயே இருந்து வருகிறது.

இவற்றையெல்லாம்விட மோசம், மிகமிகக் கீழ்த்தரமான மூடநம்பிக்கை அமைப் பிலேயே நம்நாடு இருந்துவருகிறது.

இந்த நிலையில், மக்களுக்குப் போதிய கல்வி இல்லாத அமைப்பில், கல்வியிலும் பேதநிலை உள்ள கல்வி அமைப்பில் நமதுநாடு இருந்து வருகிறது.

இவ்வளவு பேதநிலை அமைப்பு உள்ள நாட்டில்—ஜனநாயகம் என்றால் இதன் பொருள் என்ன?

நாட்டில் ஒரு பெரும் சூதாட்டம் நடந்துவருகிறது. சூதில் வலுத்தவன் ஆட்சியாக நடந்துவருகிறது என்பதாகத்தானே கொள்ளவேண்டும்?

இந்த நாட்டிற்கு ஜனநாயகம் வந்து இன்றைக்கு 16 ஆண்டு ஆகிறது. நான்கு (அய்ந்தாண்டு) தேர்தல் நடந்துவிட்டது. மூன்று (அய்ந்தாண்டு) ஆட்சி நடந்துவிட்டது, ஆனால் இன்னமும்,

பார்ப்பான்—பறையன் இருக்கிறான்!

இந்து-முஸ்லிம்-கிறிஸ்தவன் இருக்கிறான்!

இன்றைக்கும் பணக்காரன்—ஏழை இருந்துவருகிறான்!

இன்றைக்கும் கடவுளுக்குச் சோறூட்டி, கலியாணம் செய்துவைப்பவனும் பார்ப் பான் காலில் விழுந்து கும்பிட்டு ஆசீர்வாதம் பெறுபவனுமாகப் படித்த மேதாவியும், படிக் காத முட்டாளும் இருந்துவருகிற இந்த நிலையில், இது எப்படி உண்மையான யோக்கிய மான, நாணயமான ஜனநாயகம் ஆகும்?

அதுமாத்திரமா? இன்று இந்நாட்டில் உள்ள 50 கோடி மக்களில் ஒருவர்கூட இது எப்படி ஜனநாயகமாகும் என்கின்ற பிரச்சினையை கிளப்ப முன்வரவில்லையே!

மேலும், இதில் உள்ள பெரும் மடமை என்னவென்றால், ஜனநாயகத் தேர்தலில் அபேட்சகராய் நின்ற அபேட்சகர்களுக்கு நபர் ஒன்றுக்கு 5 இலட்சம் ரூபாய் முதல் சிலருக்கு 50 ஆயிரம் ரூபாய்வரை செலவாகி இருக்கிறது என்று எல்லோருமே—50 கோடிப் பேர்களுமே பேசிக்கொள்ளுகிறார்கள். மற்றும், பெரிய குறிப்பு தேர்தலில் ஒரு மனிதன் 10,000 ரூபாய்வரை செலவு செய்யலாம் என்கின்ற அனுமதியளிக்கப்பட்டிருக்கிறது.

ஆனால், இந்த நாட்டில் ஒரு வாரத்திற்குமேல் சாப்பாட்டிற்கு இல்லாத மக்கள் 25 கோடிக்குக் குறையாமல் இருக்கிறார்கள். ஒரு மாதத்திற்குமேல் சாப்பாட்டிற்கு இல்லாத மக்கள் 37½ கோடிக்குக் குறையாமல் இருக்கிறார்கள். ஒரு வருஷத்திற்குமேல் சாப்பாட்டிற்கு இல்லாத மக்கள் 35 கோடிக்குக் குறையாமல் இருப்பார்கள். இப்படிப்பட்ட இந்நாட்டில்,

ஒரு மனிதன் தேர்தலுக்கு நிற்பதானால் ரூ. 250, ரூ. 500 டெபாசிட் கட்டிவிட்டு அபேட்சைப் பத்திரம் தாக்கல் செய்யவேண்டும் என்ற நிபந்தனைக்கும் ஆளாகவேண்டும்.

இந்த அளவுக்கே எடுத்துக்கொண்டு மற்றதையெல்லாம் தள்ளிவைத்துவிட்டு இப்போது சொல்லுங்கள். இன்று நடப்பது ஜனநாயகமா? அல்லது, மேல்சாதிக்காரன்—பணக்காரன்—பித்தலாட்டக்காரன் நாயகமா? என்று.

இது ஒருபுறம் இருக்கட்டும். இப்படிப்பட்ட ஜனநாயக இராஜ்யத்தில் இந்த ஆட்சிக்கும் ஆட்சி முறைக்கும் கட்டுப்பட்டு யோக்கியன், நாணயஸ்தன் என்ற பெயரை வாங்கிக் கொண்டு,

1. சாதியை ஒழிக்கவேண்டும்;

2. மூடநம்பிக்கையை ஒழிக்கவேண்டும்;

3. பணக்காரனை ஒழிக்கவேண்டும்;

4. ஆட்சியில், பதவியில், சேவையில், கல்வியில் எல்லா சாதி வகுப்பாரும் விகிதாசார சம உரிமை ஏற்படச் செய்யவேண்டும்.

என்று பாடுபடுவது என்றால், பாடுபடுபவனுக்கு நல்லபேர் கிடைக்குமா? அவனுக்கு அரசாங்க ஆதரவோ மக்களின் ஆதரவோ இருக்கமுடியுமா? அவன் எதைத் தியாகம் செய்தால்தான் ஏதாவது பலன் ஏற்படமுடியுமா?

இது ஒருபுறமிருக்கட்டும். இன்று இந்த ஜனநாயகம் ஏற்பட்ட இந்த 16 ஆண்டுக் காலத்தில் மக்களிடத்தில், அதிகாரிகளிடத்தில், சிப்பந்திகளிடத்தில் ஏற்பட்ட குணங்கள் ஜனநாயகத்திற்கு முன்பு இருந்ததைவிட உயர்ந்திருக்கிறதா? என்றுபார்த்தால் நமக்கு எது தென்படுகிறது?

எல்லாத் துறையிலும் எல்லாத்தர மக்களிடத்திலும் பொய், புரட்டு, நாணயக் குறைவு, ஒழுக்கக் குறைவு, பலாத்காரம், நாசவேலை, கொள்ளை, மானவெட்கத்தைச் சிறிதுகூட லட்சியம் செய்யாமல் எல்லாவித அயோக்கியத்தனத்திற்கும் மக்கள் துணிவது ஆகிய காரியங்கள் நாளுக்கு நாள் வளர்ந்த வண்ணமாகத்தானே இருந்து வருகிறது! இந்த நிலையில் நமதுநாட்டை நாம் ஜனநாயக நாடு என்று சொல்லிக்கொள்ள (தத்துவத்தில்) வெட்கப்படவேண்டியதாகத்தானே இருக்கிறது?

நிற்க, லவுகீய முறைப்படி பேசிக்கொண்டால், இன்றைய ஆட்சி மற்றவர்களுக்கு எப்படி இருந்தாலும், நம்மைப்பொறுத்தவரை நன்மை இல்லாவிட்டாலும் கேடு ஏற்படாத ஆட்சியாக இருக்கலாம் என்றே கருதுகிறேன்.

நேற்று ஒரு பார்ப்பனப் பத்திரிகையில் ஒரு செய்தி பார்த்தேன். அதாவது:—

மந்திரிகள் பிரமாணம் எடுத்துக்கொண்டதில் முஸ்லிம் மந்திரி உட்பட, பைபிளும் குரானும் கீதையும் இராமாயணமும் பக்கத்தில் இருந்தும் அவற்றைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் கடவுள் பெயரையும் உச்சரிக்காமல் 'எங்கள் மனப் பூர்வாக' என்ற பதத்தையே பயன்படுத்திப் பிரமாணம் எடுத்துக்கொண்டார்கள் என்றும், குறிப்பாய் இந்துமத பரிபாலனத் துறை மந்திரிகூட கடவுள் பெயரை உச்சரிக்கவில்லை என்றும் ஆத்திரப்பட்டு எழுதி இருக்கின்றதைப் பார்த்தேன். திரு. அண்ணாதுரையும் மற்ற மந்திரிகளும் பிரமாணம் எடுத்த வாசகங்கள் பின்வருமாறு:

'சி. என். அண்ணாதுரை என்னும் நான் சட்டவிதிகளுக்கு இணங்க அமைக்கப் பட்ட, இந்திய அரசியல் அமைப்பில் நான் உண்மையான நம்பிக்கையும் விசுவாசமும் கொண்டிருக்கிறேன் என்றும், இந்தியநாட்டின் முழு முதல் ஆட்சியையும் ஒருமைப்பாட்டையும் என்றும் நிலைநிறுத்துவேன் என்றும், தமிழ்நாட்டு அரசாங்கத்தின் அமைச்சராக என் கடமைகளை உண்மையாகவும் உளச்சான்றின்படியும் நிறைவேற்றுவேன் என்றும்,

அரசியல் அமைப்புக்கும், சட்டவிதிகளுக்கும் இணங்க அச்சமும் ஒரு வழிப்பற்றும் இன்றி காய்தலும், உவத்தலும் அகற்றி, பல்வேறான மக்கள் அனைவருக்கும் நியாயம் வழங்குவேன் என்றும் உளமாற உறுதி கூறுகிறேன்'.

இதன் தத்துவம் எப்படி இருந்தாலும், இராஜாஜி இவர்களை (இந்த மந்திரிகளை)ப் பற்றிப் பார்ப்பனருக்கு அறிமுகப்படுத்துகிற நிலையில் 'இவர்கள் (தி.மு.க) தி.க. விலிருந்து, இராமசாமி நாயக்கரிடமிருந்து வந்தவர்கள் ஆனாலும் அந்த தி. க. வாசனையை அடியோடு விட்டுவிட்டு, பெருங்காயம் இருந்த டப்பாவில் அந்த வாசனை இருக்கும் என்பார்களே அதுகூட இல்லாமல், சுத்தமாகத் தேய்த்துக் கழுவிவிட்டு வந்திருக்கிறார்கள். தி. க. வாசனையே இவர்களிடமிருக்காது. நம்புங்கள்' என்று அறிமுகப்படுத்தினார்.

அப்படி இருந்தும், அந்த தி. க. வாசனை—ஏன், சு. ம. இயக்க வாசனை உலகமெல்லாம் அள்ளி வீசும்படி 15 நாள் காலத்திலேயே காட்டிவிட்டார்களே! இதைப் பார்த்தாலே தெரியவில்லையா, நம் இயக்கக் கொள்கைகளுக்கு இவர்களால் கேடு ஏற்பட முடியாது என்று கருதலாம் என்பதற்கு?

இதைவிட என்ன ஆதாரம் வேண்டும்?

மற்றும், அந்தப் பார்ப்பனப் பத்திரிகையிலேயே இராஜாஜியின் உத்திரவாதத்தை நினைத்துக் கொண்டு மற்றொரு பார்ப்பனர் தி. மு. க.வை கேட்கிறார். என்னவென்றால்,

நீங்கள்தாம் திராவிடர் கழகத்தை விட்டுவிட்டு, சுத்தமாக கழுவிக்கொட்டி விட்டு வந்தவர்களாயிற்றே; உங்கள் கழகத்திற்கு ஏன் இன்னமும் 'திராவிட முன்னேற்ற கழகம்' என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?

'திராவிடர்' என்ற சொல்லை எடுத்துவிட்டு, அந்தச் சொல்லுக்குப் பதிலாக, 'தர்மம்' என்ற சொல்லைப் பயன்படுத்தி 'தர்ம பாதுகாப்பு முன்னேற்ற சங்கம்' என்ற பெயர் தொனிக்கும்படி D. M. K. என்று ஆங்கிலத்திலும் 'அற வளர்ச்சிக் கழகம்' அ. மு. க. என்று தமிழிலும் போட்டுக் கொள்ளுங்கள் என்று உபதேசம் செய்திருக்கிறார்.

மற்றொரு பார்ப்பனர்,

அது மாத்திரமல்லாமல், தி. மு. க. கொடியில் உள்ள இரண்டு நிறத்தில் கருப்புநிறம் இருப்பதை எடுத்துவிட்டு, கருப்பு சிவப்பு என்கிற பேதமே இல்லாமல், ஒரே நிறமாக ஆக்கி விடுங்கள். அப்போதுதான் உங்களுக்குப் பேத உணர்ச்சி இல்லை என்கின்ற கருத்து நிஜமாகும் என்ற கருத்து ஏற்படும்படி எழுதி இருக்கிறார்!

இவற்றிலிருந்து தி. மு. க. காரர்களைப் பார்ப்பனர் எவ்வளவு தூரம் பயன்படுத்தலாம் என்று இருந்தார்கள் என்பதையும், இவர்கள் (தி. மு. க) அவர்களை எந்த அளவுக்கு ஏமாற்றமடையச் செய்து வருகிறார்கள் என்பதையும் பொதுமக்கள் இதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

எனவே, பொதுமக்கள் எந்தக் கட்சியாரானாலும் தி. மு. க. சிறிதளவு நன்மை ஏற்படும்படி நடந்தாலும் அதைப் பெரிதாய்க் கொண்டு, அவர்கள் மனம் திருந்தும்படியாக நடந்துகொள்ள வேண்டுமென்றே விரும்புகிறேன்.

கோர்ட்டில் வாதாடும்போது வழக்கின் தன்மை ஒரு மாதிரியாகத்தான் இருக்கும். பஞ்சாயத்தாரைக் கொண்டு ராஜி பேசுகிறபோது வழக்கின் தன்மை ஒரு மாதிரியாகத்தான் இருக்கும். இதை மக்கள் தெரிந்துகொள்ள வேண்டுகிறேன்.

['விடுதலை'—தலையங்கம்—11-3-1967]

நாம் இன்று ஜனநாயகம் என்று சொல்லுவதெல்லாம்—முட்டாள் மக்கள் 'எல்லாம் கடவுள் செயல்' என்று சொல்லுவதுபோல்தானே அல்லாமல், அதில் வேறுபொருள் என்ன இருக்கமுடியும்?

'அரிசிப் பிரச்சினை காரணமாக மக்கள் காங்கிரசைத் தோற்கடித்துவிட்டார்கள்' என்றால் இது உண்மையாய் இருந்தாலும் இது ஜனநாயகமாகிவிடுமா?

சமதர்மப் பிரச்சினை என்ன ஆவது? நூற்றுக்கு 9 பேராகவே இருந்த படித்த மக்களை அம்பது பேராக ஆக்கியதன்மை என்ன ஆவது? சராசரி 32 வயதில் செத்துக் கொண்டிருந்த மக்களை 50 வயதுவரை வாழும்படி செய்த 'பிரம்ம' பிரயத்தனம் என்ன ஆவது? வருடம்தோறும் 70 ஆயிரம் மக்களையே எஸ். எஸ். எல். சி. பரீட்சைக்கு அனுப்பி அதில் 100-க்கு 30 பேரையே பாசாக்கிக்கொண்டு 70 பேரை ஃபெயில் ஆக்கிவந்து இருந்த நிலைமாறி, வருடம் ஒன்றுக்கு இலட்சத்து அம்பதாயிரம், இலட்சத்து அறுபதாயிரம் என மக்களை பரீட்சைக்கு அனுப்பி அதில் 100-க்கு 50 பேருக்கு மேல் எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்த மக்களாக அதிகப்படுத்திய நிலை என்ன ஆவது? மாணவர்களிடம் சம்பளம் வசூலித்துக் கொண்டும், 15 இலட்சம் மக்களையே படிப்பித்துக்கொண்டும் இருந்த நிலைமை மாறி, 65 இலட்சம் மக்களை இன்று சம்பளம் இல்லாமலும், இதில் 20 இலட்சம் மக்களுக்குச் சோறும் போட்டு படிப்பளித்திருக்கும் நிலை என்ன ஆவது? மொத்தம் 30 கல்லூரிகளே இருந்து, பெரிதும் பார்ப்பனர் அல்லாத மக்களுக்கு காலேஜில் சேர இடம் இல்லாமல் இருந்தது போய், இன்று 110 காலேஜ்கள் ஏற்பட்டு, ஏறக்குறைய படிக்க இஷ்டம் உள்ள எல்லாப் பிள்ளைகளுக்கும் கல்லூரி வாய்ப்புசெய்து இருக்கும் நிலை என்ன ஆவது?

இப்படி இன்னும் பல துறைகளில் பல விஷயங்கள் மேலும் பல பக்கம் வரும்படி எழுதலாம்.

'இது இயற்கையாக யாரும் செய்யமுடியும்' என்றால் ஆச்சாரியார் (பார்ப்பனர்) ஆட்சிக் காலத்தில் இத் துறைகளில் இக் காரியங்களில் எந்த விகிதத்தில் இக் காரியங்கள் வளர்ந்தன? அன்று இயற்கை எங்கு போயிற்று? அன்று காமராசர் வரும் முன்பு ஒரு நாளைக்கு 9 மணிநேரம் வேலை செய்ததற்கு ரூபாய் ஒன்று வரும்படி (கூலி) சம்பாதித்தவன், இன்று 6 மணி, 7 மணி நேரமே வேலை செய்வதற்கு ரூ. 3, ரூ. 5, ரூ. 7 வரை சம்பாதிக்கும்படியான வேலைவாய்ப்பு, வரும்படிவாய்ப்பு இருக்கிறதே! இது பொருளாதார வளர்ச்சி அல்லவா? பல்லாயிரக்கணக்கான கிராமங்களுக்கு மின்விளக்கு, இலட்சக்கணக்கான நிலங்களுக்கு பம்புசெட்டு இவ்வளவும் ஏற்பட்டபிறகு, இவற்றிற்கு எதிரியாய் இருந்த ஆச்சாரியார் (பார்ப்பனர்) முயற்சியால் காங்கிரஸ் தோல்வி அடைந்தது என்றால், இதற்குப் பெயர்தான் ஜனநாயகமா? வெளிநாட்டுக்காரன், பகுத்தறிவுவாதி ஒருவன் இந்த விஷயத்தைத் தெரிந்தால் வாயால் சிரிப்பானா? அல்லது, இந்த மக்களை ஜனநாயகத்திற்குத் தகுதியான மக்கள் என்று சொல்லுவானா?

மக்களை மதிக்காத, தலைக் கனம் பிடித்த 100-க்கு 100-ம் சுயநலமே உருவாய் அமைந்த கோரரூபங்கள் பெரிதும் ஆட்சிக்காரர்களாய்—மந்திரிகளாய் அமைய நேரிட்டதால் ஆட்சி கவிழவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. அவ்வளவுதானே ஒழிய, இதை எந்த நிலையிலும் ஜனநாயகம் என்று நான் சொல்லவேமாட்டேன்.

ஆனால், காங்கிரஸ் தோல்வி அடைந்து விட்டதாலேயே அதை இனி நாட்டிற்குத் தேவை இல்லை என்று ஒதுக்கிவிட முடியுமா? அதற்குப் புத்திபெற ஒரு வாய்ப்புக் கொடுத்ததாகக் கருதி, நமது கவனத்தை வேறு பக்கம் திருப்பி, காங்கிரசினால் நாம் பெற்ற நன்மைகள், வசதிகள், வாய்ப்புகள் ஆகியவற்றிற்கு இம்மியும் குறைவு வராதபடி, வெற்றி பெற்றவர்களைக்கொண்டு பலன் பெறுவதுதான் புத்திசாலித்தனமாகும்.

நாமும் இந்த நிலை ஏற்படுமென்று கருதவில்லை. வெற்றி பெற்றவர்களும் இப்படிப் பட்ட வெற்றி கிடைக்கும் என்று கருதவில்லை.

எப்படியோ ஏற்பட்டுவிட்டது. ஏற்பட்டதை இருவரும் அதை இருவருக்கும் நன்மை ஏற்படும்படி நடந்துகொள்வதுதான் புத்திசாலித்தனமா? அல்லது, இருவரும் இருவருக்கும் தொல்லை ஏற்படும்படி நடந்துகொள்வது புத்திசாலித்தனமா? இருவர் நலனையும் பொறுத்தவரை நான் எந்த அளவுக்கும் ஒத்துப்போகத் தயாராய் இருக்கிறேன்; தயாராகி விட்டேன். யார் என்னைப்பற்றி எவ்வளவு தாழ்மையாகக் கருதினாலும் இலட்சியம் செய்யாமல் ஒத்துப்போய் இம் மந்திரிகளிடம் நற்பணி பெறத்தயாராய் இருக்கிறேன்.

என் சொந்த (ஈ. வெ. ரா.) வாழ்வின் நலம் கருதியல்ல: நான் துறவி—எனக்கு (குடி செய்வார் மானம் பார்த்தால் இலட்சியம் கெடும்—என்பதுபோல) இதில் 'அவமானம்' வருமே என்கின்ற கவலையோ சிந்தனையோ கிடையாது.

எனக்கு நாடு முன்னேறவேண்டும்; மக்கள் மேம்பாடு அடையவேண்டும்; மந்திரி களும் பழிக்கு ஆளாகாமல் வாழவேண்டும்; என் மானத்தைக் கவனித்து மக்களுக்குத் தொல்லை கொடுக்கமாட்டேன்; மந்திரிகளுக்கும் தொல்லை கொடுக்கமாட்டேன்; கூடுமான வரை பொறுப்பேன்.

ஏன்? மக்கள் அவ்வளவு மோசமானவர்கள்; மக்களைவிட மந்திரிகள் கொஞ்சம் தேவலாம். நாம் இன்று பகுத்தறிவுவாதிகள் என்று ஒப்புக்கொள்ளாவிட்டாலும், மூட நம்பிக்கைக்காரர்கள் அல்ல. பகுத்தறிவு இன்னது என்று தெரிந்தவர்கள். அதில் சந்தேகம் வேண்டாம். இவர்கள், காங்கிரஸ் மந்திரிகள் நடந்துகொண்டதைவிட மேலாகவே நடந்து கொள்வார்கள். ஒவ்வொருவரும் நடந்துகொள்வார்கள்.

'ஒரு ரூபாய்க்கு மூன்றுபடி அரிசி அளப்பார் என்று நான் ஓட்டுச்செய்தேன்' என்று ஒருவன் சொன்னால், எதிர்பார்த்தால் அப்படிச்சொன்னவன் எப்படியோ இருந்தாலும் நம்பினவன் பத்தரைமாற்று முட்டாளா, இல்லையா? இவர்கள் ஓட்டுகளை ஜனநாயக ஓட்டு என்றால், அப்படிக் கருதுகிறவன், ஓட்டர்களைவிட முட்டாள் என்றுதானே கருத வேண்டும்? மந்திரி மூன்றுபடி அளக்கவில்லையே? என்று அந்தச் சாக்கை வைத்து நாம் மந்திரிகளுக்குத் தொல்லை கொடுத்தால் நம்மையும் அந்த வரிசையில்தானே சேர்க்க வேண்டும்?

இந்த மந்திரிசபை கவிழ்ந்தால் மறுபடியும் நமக்கு இந்தத் தொல்லைதானே ஏற் படும்? ஆகவே, நமக்கு இதே வேலைதானா?

ஸ்தாபனத்தை விட்டுவிட்டு ஸ்தாபன மந்திரிகளை எடுத்துக்கொண்டால், காங்கிரஸ் மந்திரிகளைவிட இன்றைய மந்திரிகள் மக்களிடம் பயம் உள்ளவர்கள். மக்களை எப்படி யாவது வசப்படுத்திப் பயன்பெற மக்களை மதிப்பவர்கள். 'மக்களுக்கு ஏதாவது செய்து அவர்களை வசப்படுத்தவேண்டுமே' என்கின்ற கவலை உள்ளவர்கள். இவர்களைக் கண்டு மக்கள் பயப்படவேண்டியதில்லை.

காங்கிரஸ் மந்திரிகளோ அப்படி இல்லை. மந்திரிகளுக்கும் மக்களுக்கும் மத்தியில் மலைபோல ஒரு அகம்பாவம் படுத்திருந்தது. அது அவர்களுக்கு இயற்கைதான்.

ஆகவே தோழர்களே! இந்த ஜனநாயக ஓட்டர்களை நம்பி மோசம்போய் விடாதீர்கள். இந்த மந்திரிகளை ஓடும்படியாகவும் செய்துவிடாதீர்கள். அவர்களாக ஓடினால் ஓடட்டும்; வேறு யாராவது ஓட்டினால் ஓடட்டும்; அந்தப்பழி உங்களுக்கு வேண்டாம்.

பணநாயகமும், சூழ்ச்சி நாயகமும்தான் இந்த 15 வருடகாலத்தில் ஜனநாயகத்தில் வளர்ந்திருக்கிறது.

காங்கிரஸ் ஆட்சி எவ்வளவோ நன்மை அளித்திருந்தும், உண்மை ஜனநாயகத்தை வளர்க்கவில்லை. மத்திய அரசாங்கத்திலும் அது இல்லை.

ஆகவே, நம் கொள்கை இலட்சியம் நிறைவேற காங்கிரசைவிட இது நல்ல வாய்ப்பு என்று கருதுகிறேன்.

மந்திரிகளைப்பற்றி நீங்கள் ஒன்றும் இலட்சியம் செய்யாதீர்கள். அவர்கள் நம்மைப் போன்ற மனிதரேயாவர். மனிதனுக்குக் கொடுக்கவேண்டிய மார்ஜினை, இடைவெளியைக் கொடுத்து, கொஞ்ச நாளைக்குக் கவனித்து வாருங்கள். நம் தலைக்குமேல் பார்ப்பான் என்கின்ற—ஒருபெரிய எதிரி இருப்பதை மறந்து 'ஜனநாயகத்தை' நம்பி ஏமாந்து போகாதீர்கள்.

['விடுதலை'—தலையங்கம்—20-3-1967]

## 35. நாத்திகர் ஆட்சி

இந்தியாவில் இன்று 100-க்கு 100 நாத்திகர்களே மந்திரிகளாய் இருந்து நடத்தப்படும் நாடு தமிழ் நாடே ஆகும்.

இந்த மந்திரிகள் முழு நாத்திகர்கள் என்பதும், அவர்கள், தலைவர்கள் 1940ஆம் ஆண்டிலிருந்தும் மற்ற பலர் 1957ஆம் ஆண்டிலிருந்தும் சிலர் 1960ஆம் ஆண்டிலிருந்தும் நாத்திகர்களாகவும், இராமாயணத்தை நெருப்பில் போட்டவர்களாகவும் இராமனைக் கொளுத்தியவர்களாகவும், பிள்ளையார் 'சிலை' உடைத்தவர்களாகவும் இருந்துவந்த நிலை 1967 பிப்ரவரி 15-ந் தேதி வரையிலும் தமிழ்நாட்டு மக்கள் யாவருக்கும், குறிப்பாக காங்கிரஸ்காரர்களுக்கும், அதை விடக் குறிப்பாகப் பார்ப்பனர்களுக்கும் தெரிந்த காரியம்.

அதைவிட முக்கியமான சங்கதி என்னவென்றால், ஓட்டர் மகாஜனங்களும், இவர்கள் பக்கா நாத்திகர்கள் என்று தெரிந்தே, ஆத்திக அபேட்சகர்களுக்கு 'நாமத்தைச் சாத்தி' படுபாதாள தோல்வியைக் கொடுத்து, 10 ஆயிரம், 20 ஆயிரம், 30 ஆயிரம் கணக்கு வித்தியாசத்தில் இவர்களுக்கு அதிக ஓட்டுக்கொடுத்து, ஆத்திகர்களை ஆட்சிக்கு லாயக்கில்லை என்று இமாலயத் தோல்வி அடையச் செய்த காரியமாகும்.

இந்த நிலையில் இருக்கும் மக்களில் ஒரு கூட்டத்தார், அதுவும் தோல்வி அடைந்த கூட்டத்தினர், இன்று வெற்றிபெற்ற கூட்டத்தினரைக் குறைசொல்ல வேறு ஒரு சாக்குகூட கிடைக்காமல், ஆட்சியாளரை நாத்திகர்கள் என்று மேலும் மக்களுக்கு விளம்பரப்படுத்துவதற்காக, கொஞ்சம்கூட யோசனை இல்லாமல்—தாங்கள் செய்யப்போகும் காரியத்தின் பின் விளைவு என்ன ஆகும் என்றுகூட சிந்தியாமல், பொய்யான ஒரு செய்தியைக் கற்பனை செய்துகொண்டு 'கடவுள் பிரசாத'மாகிய விபூதியை (சாம்பலை) மந்திரி கையில் வாங்கிக் கீழே எறிந்துவிட்டதாகவும், அதனால் பக்தர்கள், மத உணர்ச்சி உள்ளவர்கள் மனம் புண்பட்டதாகவும், குற்றம் சாட்டிக் கேள்வி கேட்டிருக்கிறார் ஓர் ஆத்திகக் காங்கிரஸ்காரர். அதிலும் 'விபூதி பூசிக்கொள்வதை அவமானம் என்று கருதுகிறவர்கள் ஏன் கோவிலுக்குப் போகவேண்டும்?' என்றும் கேட்டிருக்கிறார். இதில் எவ்வளவு புத்திசாலித்தனம் இருக்கிறது என்பதை வாசகர்கள் சிந்திக்கவேண்டும்.

இதற்கு மந்திரி பதில் சொல்லுகிறார்: 'நான் கோவிலுக்குப் போகவில்லை. கோவில் குடியார்களாகிய தீட்சதர்கள் தாம் என்னைக் கூப்பிட்டார்கள். கோவிலில் எனக்கு யாரும் விபூதி கொடுக்கவில்லை. நான் வாங்கிக் கீழே எறியவில்லை. அவர்கள் கொடுத்திருந்தால் நான் வாங்கி உடனே வேறு ஒருவர் கையில் கொடுத்திருப்பேன்' என்று மரியாதையாகப் பதில் சொல்லி இருக்கிறார்.

இதனால், மந்திரி நாத்திகர் என்பதும், ஆத்திகர்கள் அவரை 'நீங்கள் நாத்திகரானாலும் உங்கள் பாதம் கோவிலுக்குள் வந்து கோவிலை மிதித்துவிட்டுப் போனால் போதும்' என்று அழைத்தார்கள் என்றும்தானே விளங்குகிறது?

சாத்திரத்தின்படி, நாத்திகர் முகத்தில் ஆத்திகர் விழித்தாலே, ஆத்திகர்கள் உடுத்தின வேட்டியுடன் ஸ்நானம் செய்தாக வேண்டும். அப்படி இருக்க, வலுவில் வந்து நாத்திகரை அழைத்துக்கொண்டு போனார்கள் என்றால், ஆத்திகத்தின் பரிதாபத் தன்மைக்கு வேறு சாட்சி என்ன வேண்டும்?

மனம் புண்பட்ட ஆத்திகரை ஒன்று கேட்கிறோம்; திருச்செந்தூர்க் கோவிலுக்கு ஓர் ஆத்திக மந்திரி போனபோது, அங்குள்ள கோயில்குடியான ஒருவன், கடவுள் பிரசாதமான' விபூதியை நிலத்தில் வீசி எறிந்து எடுத்துக்கொள்ளச் சொன்னானே அதைக் கேட்டவுடன் இந்துமத பக்தர் மனம் ஏன் புண்படவில்லை? என்று கேட்கிறோம்.

மத பக்தர்கள் இக் காலத்தில் வாயை மூடிக்கொண்டிருந்தால்தான் மதத்தின் யோக்கியதை பறிபோகாமல் இருக்கும். வாயைத் திறந்தால் துர்வாடைதான் வீசும்.

ஆத்திகர் என்றால், அவர்களுக்கு மானம், வெட்கம், அறிவு இருக்கக்கூடாத, இல்லாத கொழுக்கட்டையாய்த்தான் இருக்கவேண்டுமா?

இந்தக் கேள்வி கேட்ட ஆத்திகர் அந்தக் கோவிலுக்குள் போனால் அவரைக் கோவில் குடியான் 'கடவுள்' இருக்கும் அறைக்குள் நுழையக்கூடாது என்கிறானே, ஏன் சொல்லுகிறான்? 'நீ கீழ்சாதி, சூத்திரன், தீண்டத்தகாதவன்; ஆதலால் வெளியில் நில்' என்கின்றானே, இதில் பக்தர் மனம் புண்படுவதில்லை என்றால் அந்த மனம் எவ்வளவு மானம், வெட்கம்கெட்ட கல் மனம்? என்று கேட்கிறேன். ஆத்திகனுக்கு அறிவில்லாமல் போனாலும் மானம் கூடவா இருக்கக்கூடாது?

நண்பர் தியாகராஜன் இதெல்லாம் தெரியாதவரல்ல; அவர் சுயமரியாதை இயக்கத் துவக்க காலத்தில் இயக்கத்தில் கலந்திருந்தவர்தான். ஆனால், இன்று காங்கிரஸ்காரராய் இருப்பதால், ஆத்திக வேடம் போடவேண்டி இருப்பதால் இதைப் பயன்படுத்திக்கொண்டார்!

இவருக்கு மாத்திரமல்ல; எல்லாக் காங்கிரஸ்காரருக்குமே வேண்டுகோள் விடுகிறேன்.

இப்படிப்பட்ட கற்பனைப் போலிக் காரியங்களால் மந்திரிசபையை அசைக்கலாம் என்று கருதி கேலிக்காளாகாமல் நல்ல பிரச்சினைகளைக் கொண்டு மந்திரிசபையை அசைக்க, ஆட்ட முயற்சிக்கவேண்டும்.

நாத்திகம் என்பதற்காக அவர்களை அசைக்க நினைத்தால் இன்னும் பலர் நாத்திகராய்விடுவார்கள். பிறகு காங்கிரஸ் ஆத்திகர் ஸ்தாபனம் என்பதற்காகவே தலை எடுக்க முடியாமல் போய்விடும்!

காங்கிரசார் சமதர்மம் பேசிக்கொண்டு 'பிரசாதத்தை (சாம்பலை) ஏன் கீழே எறிந்தாய்?' என்று கேட்பதானால் இவர்கள் சமதர்மவாதிகளாவார்களா? இவர்களை சமதர்மவாதிகள் என்று மக்கள் நம்புவார்களா?

சமதர்மத்திற்கு A, B, C தான் கோவில்களை ஒழிப்பதாகும். இதை உணராதவர்கள் காங்கிரசில் அதிகம் பேர் இருப்பதால்தான் சமதர்மத்திற்கு இன்று வெற்றி கிடைக்காமல் போனதற்கு ஒரு காரணமுமாகும். நான் மறுபடியும் காங்கிரஸ் ஆட்சிக்கு வர வேண்டும் என்று கருதுகிறவன்.

['விடுதலை'-தலையங்கம்—27-3-1967]

# 36. என் நிலை

நான் அரசியலில் கலந்து கொள்ளாவிடினும், அதாவது அரசியல் சம்பந்தமான பதவிகள் எதிலும் நான் ஈடுபடாமல், வலியவந்த பதவிகளை எல்லாம் நான் வெறுத்து ஏற்காமல் இருந்து வந்தாலும், பதவிபெற்று ஆட்சி நடத்துகிற அரசாங்கம் ஒவ்வொன்றிலும் நான் சில கடமைகள் ஏற்று, ஆதரித்தும், எதிர்த்தும் வந்திருக்கிறேன். இதற்குக் காரணம் நல்ல ஆட்சி, கெட்ட ஆட்சி என்பதைக்கூட அதிகம் சிந்திக்காமல் பார்ப்பனர் ஆட்சி; பார்ப்பனர் அல்லாதார் (தமிழர்) ஆட்சி என்கின்ற தத்துவத்தை அடிப்படையாய் வைத்துத் தீவிரமாகக் கலந்து கொண்டு வந்திருக்கின்றேன்.

1920-ல் நான் காங்கிரஸ்காரனாக இருந்து அன்று இராஜாஜியின் சிஷ்யன் போலவே நான் நடந்து கொண்டிருந்ததால், அவரது கருத்துக்கு இணங்கி ஜஸ்டிஸ்கட்சி ஆட்சியை நான் நேரிடையாய் எதிர்க்காவிடினும் அக்கட்சி தேர்தலில் தோல்வி அடையத்தக்க காரியத்திற்கு உதவிசெய்து வந்தேன்.

அந்தக் காலத்தில் இராஜாஜியிடம் மாத்திரம் அல்லாமல் எல்லாப் பார்ப்பனரிடமும் நெருக்கமாகப் பழக ஏற்பட்டதாலும் காங்கிரசின் அந்தரங்கக் கருத்து, ஆட்சியைப் பார்ப்பனர் ஆட்சியாக மாற்றவேண்டும், ஆக்கவேண்டும் என்பதே என்றும் நான் உண்மையாய் உணர்ந்ததால் காங்கிரசை எதிர்த்தும் ஜஸ்டிஸ் கட்சி ஆட்சியை ஆதரித்தும் தொண்டாற்றினேன். ஜஸ்டிஸ் கட்சி இழந்த ஆட்சியை மறுபடியும் கைப்பற்றவும் பாடுபட்டுச் செய்தேன்.

அந்தக் காலத்தில், 1927 முதல் 1937 வரை ஜஸ்டிஸ் கட்சி ஆட்சி பார்ப்பனரல்லாத மக்கள் நலனுக்கு நல்ல அளவு நன்மை செய்துகொண்டே வந்தது.

அந்தக் காலத்தில், காந்தியின் பெயரை வைத்துக்கொண்டு சி. பி. சுப்பையா, அண்ணாமலைப் பிள்ளை, உபயதுல்லா, கோடைஇடி குப்புசாமி, தேவநாகய்யா—போன்ற தகரப் போகணிகளைப் படையாக வைத்துக்கொண்டு காங்கிரஸ் (பார்ப்பனர்) ஆடிய ஆட்டத்தின் பயனாய், இன்று 1967-ல் எப்படிக் காங்கிரஸ் இங்கு கவிழ்ந்ததோ அதேபோல் அன்று 1937-ல் ஜஸ்டிஸ் கட்சி ஆட்சி கவிழ்ந்துவிட்டது.

இரண்டிற்கும் முக்கிய காரணம், பார்ப்பனர் மிகமிகக் கட்டுப்பாடான சாதி, சூழ்ச்சியில் தேறிய சாதி; இவை இரண்டிலும் பரம்பரையாக ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் அனுபவம் பெற்ற சாதி ஆனதனாலாகும்.

பார்ப்பனரல்லாதவர் (தமிழர்) இதற்கு நேர் விரோதம் என்பதோடு, புத்தி மூட நம்பிக்கையால் விளைந்ததனால் கட்டுப்பாடு அறவே கிடையாததும், இன உணர்ச்சியும் கிடையாததுடன் சூழ்ச்சி அறிவு என்பது, தங்களுக்குள் சூழ்ச்சி செய்து, தம் இனத்தைத் துணிவாய்க் காட்டிக்கொடுத்து, ஒருவனை ஒருவன் ஒழித்துக்கட்டத்தான் கற்றிருப்பார்களே தவிர, பார்ப்பான் நமது சமுதாயத்திற்கு பிறவி எதிரி என்பதை 10,000-ல் ஒரு தமிழனுக்குக் கூடப் புரிந்திருக்காது. புரிந்திருந்தாலும் தன் இனத்தைக் காட்டிக்கொடுத்து, பார்ப்பான் காலில் விழுந்து ஆசீர்வாதம் (பதவி) பெறுவதில்தான் கெட்டிக்காரர்களாக இருப்பார்களே தவிர, தன் இன உணர்ச்சி உள்ளவர்களைக் காண்பதோ கருத்தில் கொள்ளுவதோ அரிது; அரிதரிது!

இந்தக் காரணங்களால் பார்ப்பனர் ஆதிக்கம் 'வெட்டவெட்டத் தழையும்' மரம்போல் வளர்ந்துகொண்டே வருகிறது. நம் ஆதிக்கம் எவ்வளவு உயர்ந்தாலும் அடிக்கடி சறுக்கி நழுவிக் கீழ்நிலைக்கே வந்துவிடுகிறது.

என்றாலும், என்னைப் பொறுத்தவரை சரிந்தபோதெல்லாம் அரசியல் கொள்கை என்பவற்றைப்பற்றிச் சிறிதும் கவலை செலுத்தாமல், இன உணர்ச்சியை முக்கியமாக

வைத்துப் பார்ப்பனரல்லாதார் ஆட்சி என்றால், அதைப் பார்ப்பனருக்கு அடிமைப்பட விடாமல் வலியப்போய் ஆதரித்தே வந்திருக்கிறேன்.

உதாரணத்திற்கு அதிகதூரம் போகவேண்டியதில்லை. இன்றைய தி. மு. க. ஆட்சிக்கு முன்பு இருந்த காங்கிரஸ் ஆட்சியை 1937 முதல் 1954 வரை நான் எதிர்த்து வந்தவன்! முழு மூச்சாய் 'பலாத்காரத்தில் இறங்குவேன்' என்று மிரட்டியும் மந்திரிகள் தாராளமாய் நடமாடமுடியாத அளவுக்கும் எதிர்த்து வந்திருக்கிறேன். அந்தச் சமயங்களில் காமராசர் அவர்களைப்பற்றி எனக்கு அதிக அறிமுகம் கூட இல்லை. அவரோடு நான் கலந்து ஒரு இரண்டு நிமிடம் பேசிய வாய்ப்புக்கூட எனக்கு ஞாபகம் இல்லை. ஆச்சாரியார் (பார்ப்பனர்) ஆட்சி ஒழிந்து, தமிழர் கைக்கு ஆட்சி வந்தது என்கின்ற ஒரே எண்ணத்தில் வலிய ஆதரித்தேன்; தொடர்ந்து 13 ஆண்டு ஆதரித்தேன்.

இதற்குக் காங்கிரஸ்காரர்களால் (காமராசரைத் தவிர) ஒரு தொண்டரிடம் இருந்தும் கூட ஒரு பாராட்டுதலையோ ஒரு சொஸ்தி (முகஸ்துதி) வார்த்தையோகூட நான் நாளது வரை அடைந்ததில்லை; பெற்றதில்லை. மாறாக பல அலட்சியக் குறிப்பை—வெறுப்புக் குறிப்பைத் தாராளமாய்ப் பெற்று இருக்கிறேன்.

இன்றைக்கும் காங்கிரஸ்காரர் என்கின்ற முறையில் ஒரு தலைவரோ, மந்திரியோ, தொண்டரோ, எம்.பி.யோ, எம்.எல்.ஏ.யோ எனக்கு நட்போ கலந்து மனம்விட்டுப் பேசும் படியான சலுகையோகூடக் கிடையாது. பல அலட்சியங்களையும் அடைந்து வந்திருக் கிறேன். ஆனாலும், காங்கிரஸ் ஸ்தாபனத்தை, காங்கிரஸ் ஆட்சியைப் பாதுகாக்க வேண்டியது நமது கடமை என்கின்ற தன்மையில் சிறிதுகூடத் தவறாமல் நான் தொண் டாற்றி ஆதரவு காட்டி வந்திருக்கிறேன்.

காரணம், காங்கிரஸ் ஆட்சி இந்த 14 ஆண்டு காலத்தில் மக்களுக்கு அபார நன்மை செய்திருக்கிறது. நாடு அபார வளர்ச்சி அடைந்து வந்திருக்கிறது. இதற்குக் காரணம் தலைவர்களும் மந்திரிகளும் தொண்டர்களும் காரணம் அல்ல என்பது எனக்கு நன்றாய்த் தெரிந்திருந்தாலும்—அதாவது, காமராசர்தான்—காமராசர் ஒருவருடைய முயற்சியேதான் என்று தெரிந்திருந்தாலும் காங்கிரசுக்கு முழு மரியாதை கொடுத்து ஆதரித்து வந்திருக் கிறேன்.

காங்கிரஸ் ஆட்சியில் பார்ப்பனரல்லாதார் சமுதாயத்திற்குக் கேடாகவும், எதிர்ப் பாகவும் காரியங்கள் செய்யப்பட்ட, வேதனை தரப்பட்ட காலங்களில்கூட தனிப்பட்ட நபரையும், தனிப்பட்ட அதிகாரியையும் மாத்திரந்தான் குறைகூறி இருப்பேனே தவிர, கிளர்ச்சி செய்து காட்டி இருப்பேனே தவிர, எந்தச் சந்தர்ப்பத்திலும் காங்கிரசுக்கு ஒரு சிறு அசவுகரியம் ஏற்படும்படிகூட நடந்திருக்கமாட்டேன்.

இதை ஏன் சொல்லுகிறேன் என்றால், என் எண்ணத்தை, நடத்தையைக் காட்டிக் கொள்ளவே அல்லாமல் இதற்கு ஆக நன்றி பெறுவதற்கு அல்ல!

எப்போதும் நான் நன்றி பெறுவதில் கவலைப்படுவதே இல்லை. அது மனித சமுதாயத்திற்கு அவ்வளவு எளிதான காரியமல்ல; துஷ்டமிருகங்களால் மக்களுக்கோ அல்லது எந்த ஜீவனுக்கோ நன்றிகாட்டமுடியுமா?

அதுபோல்தான், மனிதஜீவனிடம் நன்றி எதிர்பார்ப்பது அறிவில்லாத தன்மையே யாகும். ஏன் எனில், மனிதஜீவன் துஷ்டஜந்துக்கள் இனத்தில் சேர்ந்த ஜீவனாகும்.

மனிதன் என்பவன் தன்னலத்திற்கு என்பதாக வாழவேண்டியவனே ஆவான்.

உலகில் எனக்குத் தோன்றிய அளவில் நாய் ஒன்றுதான் நன்றி காட்டும், விசுவாசம் காட்டும் ஜீவன். இதைப்பற்றி இங்கு அதிகமாக விவரிக்க நான் விரும்பவில்லை.

எப்படி இருந்தாலும், காமராசர் உயிர் உள்ளவரை நான் காங்கிரஸ் பதவிக்கு வரவேண்டுமென்றுதான் மனதார ஆசைப்படுகிறேன்.

இன்றைய நிலையில் காங்கிரஸ் ஒன்றினால்தான் நாட்டில் அமைதியான ஆட்சி நடத்தமுடியும். மற்ற கட்சிகள் எதுவானாலும் கிளர்ச்சி, கேடு, நாசவேலை, துரோகம் முதலியவைகள்தாம் செய்யமுடியும். ஏனெனில், காங்கிரஸ் ஒன்றுதான் இன்று எல்லா இந்திய ஸ்தாபனமாக இருக்கிறது. மற்றவை அந்தந்த நாட்டுக்குள்தான் ஆளமுடியும்!

வேறு ஆட்சி வந்தால் தமிழனுக்கு நல்லாட்சியாய் இருந்தால் ஆளட்டும். வேண்டாம் என்று சொல்லவில்லை.

எப்படியோ இன்று தமிழ்நாட்டில் காங்கிரஸ் தோல்வி அடைந்து மாற்றான்—எதிரி ஆட்சியாகவே ஏற்பட்டுவிட்டது. அந்தப்படியே எதிரிகளும் நினைத்து மகிழ்ச்சி அடைந்தார்கள்; நானும் நினைத்துக் கவலைப்பட்டேன்; துக்கப்பட்டேன். என்னமோ நமது நல்ல வாய்ப்பின் காரணமாய், எதிரியின் புத்தி இல்லாத தன்மையின் காரணமாய் பெரிதும் தங்களால், தங்கள் முயற்சியால் ஏற்பட்ட ஆட்சியை அனுபவிக்க வாய்ப்புப் பெறாமல் ஒரே முழுக்கில் மண்ணெடுக்க ஆசைப்பட்டு, ஆட்சியாளர்களைச் சங்கடமான நிலைக்கு கொண்டுவர ஆசைப்பட்டதால், ஆட்சியாளர் நேர்மையைக் கடைப்பிடிக்க ஆரம்பித்ததும் ஆட்சியாளர்களை ஒழிக்கத் திட்டம் போட்டுவிட்டார்கள்.

இது நமக்கு ஒரு நல்வாய்ப்பாய் வாய்த்தது என்று கருதி, இந்த ஆட்சியைக் கவிழாமல் செய்து, அது உள்ளவரையிலாவது மக்களுக்கு ஏதாவது நன்மை ஏற்படும்படி செய்ய முடியுமா என்று சிந்திக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

பெரிதும் பார்ப்பனர் முயற்சியால் ஆட்சி தி.மு.க.வுக்கு கிடைக்கும் வாய்ப்பு வந்தது என்றாலும் தி.மு.க. பார்ப்பனர் அல்லாதார் என்பதையும், அதிலும் அவர்கள் பகுத்தறிவு வாதிகள் என்பதையும் இவர்கள் பதவிக்காகப் பார்ப்பனர் ஆதரவைத் தேடினார்களே ஒழிய, பார்ப்பனர்களுக்கு அடிமையாக இருக்க அல்ல என்பதையும், பார்ப்பனர் மறந்து தடபுடலாக அடிமைகொள்ள ஆரம்பித்துவிட்டார்கள்.

தி.மு.க. பார்ப்பனர்களை வாழவைக்க என்று பதவியை விரும்பினவர்கள் அல்லவே! அவர்களுக்குப் பதவிவேண்டும்; அதுவும் நிலைக்கவேண்டும்; தொல்லை இல்லாமலும் நடைபெறவேண்டும் என்கின்ற எண்ணமுடையவர்கள்.

அதோடு தி. மு. க.வுக்கு நாட்டில் பார்ப்பன செல்வாக்கு எவ்வளவு, பார்ப்பனரல்லாதார் செல்வாக்கு சக்தி—எவ்வளவு என்பதும் தெரியும். பார்ப்பனருக்குப் பத்திரிகைகள் அனுகூலம்; கோர்ட்டுகள் அனுகூலம்; அயோக்கியத்தன்மை பொருந்திய வக்கீல் கூட்டம் அனுகூலம் உண்டு.

ஆனால், பார்ப்பனரல்லாதவர்களுக்கு இவற்றைப்பற்றிக் கவலைப்படாத மக்கள் ஏராளமானபேர் இருக்கிறார்கள்; காங்கிரஸ்காரர்கள் இருக்கிறார்கள்; கிளர்ச்சிக்காரர்கள் இருக்கிறார்கள்.

பார்ப்பனர்களுக்குக் கிளர்ச்சிக்கு ஆட்கள் வேண்டுமானால் பார்ப்பனரல்லாத ஆட்களைக் கொண்டுதானே கிளர்ச்சி செய்யவேண்டும். இந்த நிலையில் மோதல் ஏற்பட்டால் யார் வெற்றி அடையமுடியும்? இதை ஆட்சியாளர்கள் சிந்திக்கமாட்டார்களா?

1927-ல் சுயேச்சை (காங்கிரஸ்) மந்திரி சபை கவிழ்ந்து சுயமரியாதை மந்திரி சபை ஆயிற்று.

1937-ல் புயல்போல் வெற்றிபெற்ற காங்கிரஸ் மந்திரி சபை கவிழ்ந்து, ஏன் பெரியார் சொல்லுகிறபடி நடக்கிற (ஜஸ்டிஸ் கட்சி) அட்வைசர் மந்திரி சபை ஆயிற்று.

1947-ல் காங்கிரஸ் (பிரகாசம்) மந்திரி சபை மாறி, இராமசாமி ரெட்டியார் மந்திரி சபை ஆயிற்று.

பிறகு 1954-ல் இராஜாஜி மந்திரி சபை மாறி, காமராசர் மந்திரி சபை ஆயிற்று.

அப்படிப் போல்தானே 1967-லும் பார்ப்பனர் வெற்றிபெற்ற மந்திரிசபை, லேபிள் மாற்றியதுபோல், பார்ப்பனரல்லாதார் மந்திரிசபை ஆயிற்று.

இவ்வளவுக்கும் நான் பங்காளியாகச் சம்பந்தப்பட்டவனுக்கு—பாடுபட்டவனுக்கு இருந்துவந்திருக்கிறேன். என்னாலாயிற்றா, இயற்கையாக ஆயிற்றா? என்பது வேறு விஷயம். ஆனால், இவற்றிற்கு என் பங்கு உண்டு என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த நிலையில் நான் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? என்னை தி. மு. க. மதித்தாலும் சரி, மதிக்காவிட்டாலும் சரி.

காங்கிரஸ்காரர்கள், காங்கிரஸ் மந்திரி சபை என்னை மதித்ததா? அழைத்ததா? புன்முறுவலாவது காட்டிற்றா?

'பட்டுச் சேலையை இரவல் கொடுத்துவிட்டு, ஜமுக்காளம் எடுத்துக்கொண்டே, இரவல் வாங்கியவள் பின்னால் திரிந்து தொடர்ந்தது' போல்.

அதாவது, பட்டுச்சேலை, அதை இரவல் கேட்டார்கள்; கொடுத்துவிட்டோம்; அதை வாங்கிக் கட்டிக்கொண்டவள் நினைத்த பக்கத்தில் போய் உட்கார்ந்தாளேயானால், சேலை அழுக்குப்பட்டுப் போகும்; கறைபட்டுப் போகும்; எண்ணெய் பட்டுப்போகும்; கட்டிக் கொண்டவளுக்குக் கவலை இல்லை; ஊரார் வீட்டுச் சேலைதானே என்று அலட்சியமாய் உட்காருவாள். கவலை சேலைக்காரிக்குத்தானே இருக்கும்? ஆதலால், வாங்கிக் கட்டிக் கொண்டவள் பின்னாலேயே சொந்தக்காரி ஒரு ஜமுக்காளம் எடுத்துக்கொண்டு, அவள் பின்னாலேயே போய், அவள் உட்கார ஆரம்பித்தால் உடமைக்காரி உடனே ஜமுக் காளத்தை விரிப்பாள்.

அதுபோலவே, நமது கதி; மந்திரி பதவி தி. மு. க.-வுக்கு. கவுரவம், அதன் பயன் நமக்கு! நம்முடையது.

அது கறைபடாமல், அழுக்குப் படாமல் பாதுகாக்க வேண்டிய காரியம் நமக்கு இருக் கிறது; அது எல்லோருக்கும் இருக்காது. உடமைக்காரியாகிய நமக்கு—தி. க. காரர்களுக் குத்தான் இருக்க முடியும்.

மற்றவர்களோ அது நமக்கு வராதோ என்கிற கவலைக்காரர்கள் ஆகத்தானே இருக் கிறார்கள்? பார்ப்பனர் (கம்யூனிஸ்ட்), பார்ப்பனர் (சுதந்திரா) மற்றும் பல பார்ப்பனர் பல கட்சி பேரால் இருக்கிறார்கள்.

கடைசியாக யாராவது கவிழ்ந்து மறுபடியும் நம்ம கைக்கு வராதா என்கிற கருத்தில் காங்கிரஸ் உள்ளது.

நாம் அப்படிப்பட்டவர்கள் அல்லவே! தி. மு. க. கவிழ்வதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. அதுவரையில், மற்றும் அப்புறம் என்ன ஆகும்? இது இரண்டையும் பற்றி 'பட்டுச் சேலைக்காரியான' நாம்தானே பாடுபட வேண்டும்? ஆட்சி நமக்குத்தானே சொந்தம்? மற்றவன், சுரண்டினவரை லாபம் என்பவன்தானே? காங்கிரசும் அப்படித் தானே? அது பார்ப்பனரல்லாதார் ஸ்தாபனம் அல்லவே? காமராசர்தானே நம்முடையவர்; நம்மவர்.

இதே தமிழ்நாடு காங்கிரஸ் தலைமைக்கு பக்தவத்சலனார் வரலாம்; அவர்தாமே வரலாம். காங்கிரசில் டிக்கெட் இல்லையென்றவுடன் சுதந்திரா டிக்கெட் கேட்பவனே

வரலாம்; இப்படியானவர்கள் யாருக்காவது பார்ப்பனரல்லாதார் என்கின்ற கவலையோ, உணர்ச்சியோ உண்டா?

நமது இலட்சியத்திற்கு எதிர்ப்பு ஏற்பட்டால் நாம் யாராவோம் என்பது எனது நண்பர்களுக்கும் பொது மக்களுக்கும் கண்டிப்பாய்ச் சொல்லுகிறேன். வழமைபோல் எப்படிப்பட்ட ஆட்சியானாலும் எதிர்த்தே தீருவோம்! எதிர்த்தே தீருவோம்!

['விடுதலை'-தலையங்கம்—29-3-1967]

## 37. தமிழர்களின் முக்கிய கவனத்திற்கு

பார்ப்பான் உயிர் கடவுள் பொம்மையிலும், கல்லிலும்தான் இருக்கிறது. அவை ஒழிந்தால் பார்ப்பானைப் பிராமணன் என்றோ, சாமி என்றோ, மேல் சாதியான் என்றோ எவனும் மதிக்கமாட்டான்.

இப்போதே பார்ப்பனர் தங்களுக்குக் கூண்டோடு அழிவுகாலம் வந்துவிட்டது என்று கருதி, எந்தப் பாதகத்தைச் செய்தாவது, அதாவது யாரைக் கொன்றாவது மக்களையெல்லாம் காலிப் பயல்களாகச் செய்தாவது, தங்களைக் காப்பாற்றிக்கொள்ளத் தீர்மானித்து இக் காரியத்தில் ஒவ்வொரு பார்ப்பானும் தங்களாலான கைங்கரியத்தைச் செய்து பார்த்து விடத் துணிந்து விட்டார்கள். இதற்கு ஆதாரம் இந்த நாட்டில் எங்கு பார்த்தாலும் நடந்து வரும் அயோக்யத்தனங்களும், காலித்தனங்களுமே போதுமானதாகும். இந்த நிலைக்குப் பூணூல் இல்லாத பார்ப்பனர்களாகிய காங்கிரஸ்காரர்களும் பெரும் காரணஸ்தர்களாகவும், பொறுப்பாளர்களாகவும் இருக்கிறார்கள்.

பார்ப்பனர்களுக்கு அவர்களது பார்ப்பனத்தன்மை இறங்கிக்கொண்டு வருகின்றது; காங்கிரஸ்காரர்களுக்கு இந்த நாட்டில் அவர்கள் ஆதிக்க வாழ்வு இறங்கியே விட்டது.

ஆகையால், இரு சாராரும் சேர்ந்து தங்களால் செய்யக்கூடிய எல்லாப் பாதகச் செயல்களையும் செய்து பார்த்து விடுவது என்று துணிந்துவிட்டிருக்கிறார்கள். இப்போது வேலை நிறுத்தம், தொழிலாளர் என்று கூச்சல் போடுவதெல்லாம் பார்ப்பனக் கூட்டு முயற்சிதான். இன்னும் பல பெரிய கேடுகள் ஏற்படலாம். இன்றைய திராவிட முன்னேற்ற (பகுத்தறிவு)க் கழகத்தைக் கவிழ்க்கும் வரை (அதை அவ்வளவு எளிதில் செய்ய முடியாது) ஓயாமல் பல கேடுகளைச் செய்துதான் வருவார்கள். மக்கள் சகித்துக்கொண்டுதான் தீர வேண்டும். ஏன் என்றால் பார்ப்பான் ஒழிவதும், காங்கிரஸ் ஒழிவதும் இலேசான காரியம் அல்ல.

எளிதில் பிரிக்கமுடியாதபடி அவை ஒன்றுக்கொன்று ஆதரவில் பெரிய முடிச்சுப் போட்டுக் கொண்டிருக்கின்றன. இரண்டு பேரும் தங்கள் ஆதிக்கக் கட்டடத்தை கடவுள், மதம், கோவில், உருவம் இவை சம்பந்தமான கட்டுக் கதைகள் ஆகிய அஸ்திவாரத்தின் மீதே கட்டிக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இவர்கள் ஒழிக்கப்பட வேண்டுமென்றால் மக்களுக்குப் பகுத்தறிவு ஏற்பட்டு, பகுத்தறிவுக்கு மாறான எதையும் ஒழித்துக்கட்டுவது என்ற துணிவு தமிழர்களுக்கு ஏற்பட்டால்தான் முடியும்.

இதை மனதில் வைத்துத்தான் காந்தியாரும் "காங்கிரஸ் ஒழிக்கப்படவேண்டும்" என்றும், ஆட்சி—செக்குலர், மதச்சார்பற்ற—பகுத்தறிவு ஆட்சியாக இருக்க வேண்டும் என்றும் சொன்னார். இதனாலேயே அவர் கொல்லப்பட்டு விட்டபடியால் காங்கிரஸ் கலைக்கப் படாமல் போய் விட்டதோடு 'செக்குலர் ஆட்சி' என்று சட்டம் செய்தும், அது அமுலுக்குக் கொண்டுவர முடியாமலே போய்விட்டது. இப்போது அதை மதச் சார்பற்ற ஆட்சியாகச் செய்யக்கூடிய தி.மு.க. ஆட்சி நல்வாய்ப்பாக ஏற்பட்டிருந்தும் அதைக் காங்கிரசாரும் பார்ப்பனரும் ஒழிக்கப் பார்க்கின்றார்கள்.

செக்குலர்—மதச் சார்பற்ற சொல்லுக்கு இவ்விரு சாராரும் என்ன வியாக்கியானம் கூறுகிறார்கள் என்றால், 'ஒரு பெண் கன்னியாய் இருக்கவேண்டுமென்றால் அதற்கு ஆண் சம்பந்தமே இருக்கக்கூடாது என்பது பொருள் அல்ல; எல்லா ஆண்களையும் சமமாகக் கருதி, கூப்பிட்டவனிடமெல்லாம் கலவி செய்யவேண்டும் என்பதுதான் கன்னி என்பதற்குப் பொருள்' என்பதுபோல் பொருள் சொல்லுகிறார்கள். எல்லா மதங்களையும் சமமாகப் பார்க்கவேண்டும் என்கின்ற கொள்கை மதவிஷயத்தில் 'காலம் காணாததற்கு' முன்பு இருந்தே இருந்து வருகிறபோது அதைப் புதிதாக வலியுறுத்த வேண்டிய அவசியம் ஏன் வரும் ?

'செக்குலர்' என்ற சொல்லை ஆங்கிலச் சொல்லாகத்தான் சட்டத்தில் புகுத்தினார்களே ஒழிய, வேறமொழிச் சொல்லாகப் புகுத்தவில்லை. ஆங்கிலச் சொல்லுக்கு வியாக்கியானம் அந்தச் சொல்லை உற்பத்தி செய்தவர்கள் சொல்லுவதைப் பொறுத்ததேயொழிய, அதன் கருத்துக்கு விரோதிகளான பார்ப்பனர்களும் காங்கிரஸ்காரர்களும் சொல்லுவது பொருத்தமாக முடியுமா ?

அந்தச் சொல்லும்கூட அரசாங்க காரியத்திற்குத்தான் பொருந்தும் என்று இன்றைய ஆட்சியாளர்கள் சொல்லுகிறார்களே ஒழிய, அது எல்லா மக்களுக்கும் வலியுறுத்தும் பொருள் என்று சொல்லவில்லையே ! அப்படி இருக்க, இதில் பார்ப்பனருக்கும் காங்கிரசாருக்கும் ஏன் ஆத்திரம் வரவேண்டும்.

ஏன் என்றால், தங்கள் வாழ்வு அதில்தான் இருக்கிறது. அதில்தான் மக்களுடைய முட்டாள்தனத்தில் கிளைத்து எழுந்த கடவுள், மதம், கோவில், அதிலுள்ள கற்சிலைகள், அவற்றின் பொம்மைகள், சித்திரங்கள், படங்கள் தட்டிகள் முதலியவைகள் இருக்கின்றன. அதனால்தான் அவர்களுக்கு ஆத்திரம் வருகின்றது.

எதை எதையோ சொல்லி, எதை எதையோ செய்து எப்படியோ போகட்டும் ; நமக்கு அதைப் பற்றிக் கவலை இல்லை; அதற்குப் பெரும் கூட்டம் தயாராய் இருக்கிறது. ஆனால், பார்ப்பனரும், காங்கிரஸ்காரர்களும் (காங்கிரசிலும் தனித்தன்மையுள்ள ஒரு கூட்டம் இருக்கிறது. ஆனால் அவர்கள் வெளிப்படையாய் வரப் பயப்படுகிறார்கள்) அல்லாத பொதுமக்கள் (தமிழர்கள்) கடமை என்ன ?

நம் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஊரில் பொதுக்கூட்டம் போட்டு அரசாங்கக் காரியங்களை ஆதரித்துப் பாராட்டி தீர்மானங்கள் போட்டு, அத் தீர்மானங்களை முதலமைச்சருக்கும், மத இலாகா அமைச்சருக்கும் அனுப்பிய வண்ணம் இருக்க வேண்டியது அவசியம்.

பார்ப்பனர்கள் தினந்தோறும் தங்கள் பத்திரிகைகளில் யார் யாரோ அநாமதேயங்கள் பேரால் பல கடிதங்கள் வெளியிட்டு வருகிறார்கள். நாம் அப்படிச் செய்யாவிட்டாலும் பொதுக்கூட்டங்கள் போட்டுப் பேசித் தீர்மானங்கள் செய்து அனுப்ப வேண்டாமா ?

இப்படிச் செய்வது ஒருவகையில் பார்ப்பனர் யோக்கியதையையும், காங்கிரசார் யோக்கியதையையும் பொதுமக்கள் தெரிந்துகொள்வதற்கு வசதியாகும்.

பொதுவாக, நம் தமிழ் மக்கள் தாங்கள் என்றென்றும் சூத்திரர்களாக, கீழ் சாதி மக்களாக இருக்க ஆசைப்படுகிறார்களா ? இல்லாவிட்டால், அதை மாற்றத் தமிழர்கள் செய்யும், செய்யப்போகும் காரியம் என்ன என்று கேட்கிறேன். தாங்களாகச் செய்யாவிட்டாலும், ஆட்சியையாவது ஆதரிக்க வேண்டாமா ?

ஒவ்வொரு தமிழனும் தன் வீட்டில் உள்ள கடவுள்—மதசம்பந்தமான படங்களை எடுத்து எறியவேண்டும்; எடுத்து எறிந்துவிட்டுத் தகவல் கொடுக்க வேண்டும்; பொதுக்



தஞ்சையில், 17–9–1971–ல் பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் சிலையைத் திறந்து வைத்த முதலமைச்சர் மு. கருணாநிதி அவர்களுடன் மேடையில் பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள்

கூட்டத்தில் காட்டிக் கிழித்து எறியவேண்டும். இவற்றாலும், இப்படிப்பட்ட காரியங்களாலும்தான் தமிழர் இழிவு நீங்கும்.

['விடுதலை'—தலையங்கம்—3-12-1971]

## 38. கொள்கை ஆதரவு மாற்றம்

நான் 1920-ல் காங்கிரசில் சேர்ந்தேன். அதற்கு முன்பு 1900 முதல் பார்ப்பனரல்லாதவர் நல உணர்ச்சி கொண்டவனாக இருந்துவந்தேன்.

நான் 1900-க்கு முன்பே கடவுள், மத, சாதி விஷயங்களில் நம்பிக்கை இல்லாதவனாகவே இருந்துவந்தேன்.

நான் அக் காலத்தில் சிறிது செல்வாக்குள்ள குடும்பத்தவனாகவும், வியாபார விஷயத்தில் ஈடுபடுபவனாகவும் இருந்துவந்ததால் யாரிடமும் தர்க்கமும், விவகாரமும் பேசுவதில் பிரியமும் உற்சாகமும் உடையவனாக இருந்துவந்தேன்.

மாடு, எருமை கன்றுபோட்ட நேரங்களைக் குறித்துவைத்துக்கொண்டு ஜோசியர்களிடம் கொடுத்து ஜோசியம் கேட்பேன்.

1900-ல் இருந்தே எனக்கு ஜோசியம், முகூர்த்தம், சகுனம் முதலியவைகளில் நம்பிக்கை இருந்ததில்லை. அப்போது என்னிடத்தில், 'வாய்கொடுத்து மீளமுடியாது' என்று எல்லோரும் பேசிக்கொள்வார்கள்.

நான் எனது 5, 6, 7 வயது முதற்கொண்டே 'தறுதலைப் பிள்ளையாகத் திரிந்தாலும், அந்த வயது முதற்கொண்டே நான் எந்தக் காரியத்தில் ஈடுபட்டாலும், எந்தக் கூட்டத்தில் சேர்ந்தாலும் (நான்) தலைவனாகவே, மற்றவர்கள் என் சொல் கேட்பவர்களாகவே இருக்கும்வண்ணம் இருந்து வந்திருக்கிறேன்.

இன்றுவரையிலும்கூட எந்தக் குழுவிலும், எந்தக் கட்சியிலும் நான் தலைவனாகவே இருந்துவந்திருக்கிறேனே ஒழிய, ஒரு சாதாரண அங்கத்தினனாக எதிலும் இருந்ததில்லை.

அதுபோலவே, எந்தச் சந்தர்ப்பத்திலும், எந்தக் குழுவிலும், கட்சியிலும் எதாலும் நான் பிறத்தியாருக்கு ஆதரவு கொடுப்பவனாகவே இருந்து வந்திருக்கிறேனே ஒழிய, நான் யாரிடமும் எதற்கும் ஆதரவு உதவி கேட்டதே இல்லை. அதுபோலவே, நான்தான் எனது ஆயுளில் யாருக்கும் பணஉதவி செய்திருக்கிறேனே ஒழிய, யாரிடமும் எந்தக் காரியத்திற்கும் பண வசூலுக்குப் போனதே கிடையாது; யாரிடமும் எந்தக் காரியத்திற்கும் பண வசூல் செய்ததும் கிடையாது.

சுயமரியாதை இயக்கம், திராவிடர்கழகம் முதலியவற்றிற்குக்கூட பணம் வேண்டுமென்று பத்திரிக்கையில் போடுவேன்; கழகத் தோழர்கள் வசூல் செய்வார்கள்; அல்லது பொதுமக்கள் அனுப்பிக்கொடுப்பார்கள்; அவ்வளவுதான். நான் நேரில் யாரையும் கேட்டது கிடையாது; கேட்டு வாங்கியதும் கிடையாது.

எனக்குப் பணத்தாசை ரொம்பவும் உண்டு; செலவு செய்யவும் மனம் வராது; யாரையும் கேட்கவும் மாட்டேன்.

ஆனால், பணம் வந்துகொண்டே இருக்கும்; சேர்த்துக் கணக்குப்பார்த்து மகிழ்ச்சி அடைந்துகொண்டே இருப்பேன். சரியாகக் கணக்கு வைக்கமாட்டேன். அடிக்கடி இருப்பைக் கணக்குக் கூட்டிப் பார்த்துக்கொள்வேன்.

எனக்கு ஆசை எல்லாம்—மக்கள் பகுத்தறிவாளர்கள் ஆகவேண்டும்; சாதி ஒழியவேண்டும்; உலகில் 'பார்ப்பனர்' இருக்கக்கூடாது. இதுதான் எனது கொள்கை. இதற்காகத்தான், காங்கிரஸில், கூப்பிட்டவுடன் சேர்ந்தேன்.

நான் காங்கிரசை விட்டதற்கும் இதுதான் காரணம்.

ஜஸ்டிஸ் கட்சி என்னும் பார்ப்பனரல்லாத கட்சியில் சேராமலே அதற்கு நான் ஆதரவளித்ததும் இதற்காகத்தான்.

ஜஸ்டிஸ் கட்சித் தலைமை ஏற்கவேண்டிய அவசியம் ஏற்பட்டதும் இதற்காகத்தான். அக் கட்சித் தலைமை ஏற்றவுடன் அக் கட்சிக் கொள்கையாக இம் மூன்றையுமே ஏற்படுத்தி விட்டு, அரசியலில் (எலக்‌ஷனில் நிற்பதில்லை; பதவி ஏற்பதில்லை) பிரவேசிப்பதில்லை என்ற திட்டத்தை ஏற்படுத்திக்கொண்டதும் இதற்காகத்தான். காங்கிரஸ் கட்சி பதவியிலிருந்து விலக்கப்பட்டபோதும், பதவியை வேண்டாம் என்று உதறித் தள்ளினதும் இதற்காகத்தான்.

வெள்ளையன் போனபின்பு 1952-ல் நடந்த தேர்தலின்போதுகூட, நான் காங்கிரசை எதிர்த்து வேலை செய்தபோதுகூட என் கழகத்தில் இருந்து ஒரு நபரைக்கூட நிறுத்தாமல், கம்யூனிஸ்டுகளுக்கும், காங்கிரஸ் எதிரிகளுக்கும் ஆதரவளித்து, காங்கிரசைத் தோற்கடித்ததும் இதற்காகத்தான்.

1952-ல் காங்கிரஸ் தோற்றம், மேற்கண்ட எனது கொள்கைப்படி வேறுகட்சி பதவிக்கு வரமுடியாமல் போனதால், காங்கிரஸ் பதவிக்கு வந்து எனக்கு ஆதரவு அளிப்பதாகக் கூறியும் நான் மறுத்துவிட்டு, காங்கிரசை எதிர்த்து இராஜாஜியை காங்கிரசைவிட்டுப் போகும்படி செய்ததும் இதற்காகத்தான். அந்தச் சந்தர்ப்பத்தில் காமராசரை ஆதரிக்கும் முறையில் காங்கிரசை ஆதரித்ததும் இதற்காகத்தான். அதாவது, காமராசர் பதவிக்கு வந்தவுடன் பார்ப்பனர்களும், அவர்களது சில கூலிகளும் காங்கிரசை (காமராசரை) எதிர்த்தபோது, நானாகவே மேல்விழுந்து காங்கிரசை (காமராசரை) ஆதரித்ததும் இதற்காகத்தான்.

இந்தச் சந்தர்ப்பத்தில் காங்கிரஸ்காரர்கள் என்னை விரும்பவில்லை என்று தெரிந்தும், நானாகவே காங்கிரசை ஆதரித்துக்கொண்டிருந்ததும் இந்தக் கொள்கைக்காகத்தான்.

இந்தச் சந்தர்ப்பங்களில் தி. மு. க. வை எதிர்த்துக்கொண்டு இருந்ததும் இதற்காகத்தான். அதாவது, இந்தச் சந்தர்ப்பத்தில் தி. மு. க. வுக்கு பார்ப்பனர்கள்—அவர்களது பத்திரிக்கைகள் ஆதரவாக இருந்ததாலும் தி. மு. க. வும், 'நாங்கள் பார்ப்பனர் கைப் பொம்மைகள்தான்' என்று பகிரங்கமாகச் சொல்லிக்கொண்டு இருந்ததாலும் தி.மு.க.வை எதிர்க்கவேண்டி வந்தது. 1967 தேர்தலில் காங்கிரஸ் தோற்று, தி.மு.க. பதவிக்கு வந்தது. பார்ப்பனர் தி. மு. க. வை ஒழிக்கப் பாடுபடுவதாலும், காங்கிரஸ் பார்ப்பனருடன் சேர்ந்து கொண்டு தி. மு. க. வை ஒழிக்கப் பாடுபடுவதாலும் நான் தி. மு. க. வுக்கு ஆதரவாளனாக இருக்கவேண்டியதாகியதும் இதற்காகத்தான்.

ஆகவே, எனது பொதுவாழ்வு துவங்கியதுமுதல் இன்றுவரை மேற்கண்டபடிதான்— பல கட்சிகளை எதிர்த்தும், பலகட்சிகளை ஆதரித்தும் தொண்டாற்றிக்கொண்டு வந்திருக்கிறேன்; வருகிறேன். எல்லாம் ஒரே காரியத்திற்கு (கொள்கைக்கு) ஆகத்தானேயொழிய, கொள்கை மாற்றத்திற்காக அல்ல என்பதை மக்கள் உணரவேண்டும்.

இவ்வளவு மாத்திரம் அல்ல; இனியும் எந்தக் கட்சியை எதிர்ப்பேனோ, எதை எதை ஆதரிப்பேனோ எனக்கே தெரியாது!

பொதுவாக, நான் சாகும்வரை இந்த மேற்கண்ட கொள்கைகளை மாற்றிக்கொள்ள மாட்டேன் என்று நான் உறுதியாய் இருக்கிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—26-8-1972]

# 39. சுதந்திரமும் சமுதாயமும்

நம் தேசம், நாடு, சுதந்திரம் பெற்று இன்றைக்கு (25) இருபத்தைந்தாண்டு ஆகிறது என்றாலும், இந்தக் கால் நூற்றாண்டில் அரசியலில்தான் மாறுதல் பெற்று வருகிறோமே ஒழிய சமுதாய அமைப்பில், கல்வியில் கீழ் நிலையில்—மிகமிகக் கீழ் நிலையில் இருந்து வருகிறோம்.

அரசியலில் நாம் பெற்ற மாறுதல் என்பது 'கெட்டதிலிருந்து கழிசடைக்கு'ச் (From bad of worse) சென்று கொண்டிருக்கிறோம். ஒரு எடுத்துக்காட்டு வாக்கியம் சொல்ல வேண்டுமானால், 'அவன் போனால் கலகமாகிவிடும்; நான் போய் செருப்பாலடித்துவிட்டு வந்துவிடுகிறேன்' என்று ஒரு சமாதானம் செய்ய வருகிறவன் சொன்னானாம்; அது போல இருக்கிறது நமது அரசியல் வளர்ச்சி.

நம் நாட்டு அரசியலில் வளர்ந்துவரும்—இருந்துவரும் மானங்கெட்ட, அயோக்கிய காலித்தனங்களும், கூலித் தன்மைகளும், யோக்கியப் பொறுப்பற்ற தன்மைகளும் வேறு எங்கும், எந்த நாட்டிலும் இல்லை என்கின்ற தன்மையில்தான் இருந்தும் வளர்ந்தும் வருகிறது. நமது சுதந்திரமானது ஒரு யோக்கியன் ஒரு பெரிய மனிதன் என்று சொல்லுவதற்கு ஒரு ஆள்கூட நமது தேசத்தில், நாட்டில் இல்லாமல் செய்து விட்டது. அது மாத்திரமா?

நம் நாட்டில் காலித்தனம், அயோக்கியத்தனம், கயவாளித்தனம், புரட்டு, பித்தலாட்டம், மோசடி, துரோகம், வஞ்சனை முதலிய குணங்கள், தன்மைகள் இல்லாத மக்களையோ, அரசியல் கட்சிகளையோ, தலைவர்களையோ, அரசியல் வாதிகளையோ காண முடியவே முடியாதபடி செய்துவிட்டது. பெரிய பித்தலாட்டம் துரோகம், வஞ்சனை இவைகளில் தேர்ச்சி பெற்றவர்கள்தாம் தலைவர்களாகிறார்கள்; தேசியவாதிகளாகிறார்கள்; தேச பக்தர்களாகிறார்கள்.

இவை வர வர நம் நாட்டுப் பெண்களையும் தழுவிக்கொள்ளும் நிலை வளர்கிறது. அவ்வளவு மாத்திரமா? மாணவர்களையும் இழுத்துக் கொள்ளும் என்பதோடு அதிகாரிகளையும், அரசியல், சிப்பந்திகளையும் சூழ்ந்துகொள்ளும் என்று உறுதி கொள்ளவேண்டிய அளவுக்கு வளர்ந்து வருகிறது.

பொதுவாகச் சொல்ல வேண்டுமானால், மக்களுக்கு இருக்கவேண்டிய மானம்—அவமானமற்ற தன்மை, கண்ணியம், நேர்மை முதலிய சாதாரண குணங்களை நமது சுதந்திரம் எரித்துச் சாம்பலாக்கி வருகிறது. சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால், இந்த சுதந்திரம் உள்ளவரை மக்களில் நேர்மையுள்ள யோக்கியன் இருக்கமாட்டான் என்பதோடு, தோன்றவே மாட்டான் என்றுதான் சொல்லவேண்டும். ஏனென்றால், இந்தச் சுதந்திரம் ஏற்பட்டதே பித்தலாட்டக்காரர்கள், நாணயமற்றவர்கள், மக்களை ஏமாற்றி வஞ்சித்துப் பழக்கப்பட்டுத் தேறினவர்கள், பொறுப்பற்ற காலிகள் முதலியவர்களது முயற்சியினால், தந்திரத்தினால் என்றால்—இதில் யோக்கியம், நேர்மை, உண்மை எப்படி இருக்கமுடியும்?

ஒரு சிறு உதாரணம் சொல்லுகிறேன்; ஒரு கல்லுருவத்திற்கு அயோக்கியத்தனங்களைப் பரப்பும் ஸ்தாபனமான ஒரு கோவிலுக்கும், ஒரு மடத்திற்கும், ஒரு சபையாருக்கும் ஒரு சாமியாருக்கும், சங்கராச்சாரிக்கும் ஒரு கோடி ரூபாய் வருமானம் இருந்தாலும், சொத்து இருந்தாலும் வரவு-செலவு இருந்தாலும் அனுமதிக்க வேண்டியது; கணக்கு, வரி கேட்கக்கூடாது.

ஆனால், உழைத்துப் பாடுபட்டு, திருடாமல், ஏமாற்றாமல் தேடிய சொத்துக்களுக்கு அதாவது, ஒருவனுக்கு இவ்வளவுதான் உரிமை என்பது ஆட்சிக் கொள்கைத் திட்டம் என்றால் இந்த ஆட்சியின் தன்மை எப்படிப்பட்டது? முன்னவன் செல்வம் எப்படி நாசமாகிறது? யாருக்குப் பயன்படுகிறது? பின்னவன் செல்வம் யாருக்குப் பயன்படுகிறது?

கார்த்திகை என்கிறான்—குடம் குடமாய், பீப்பாய் பீப்பாயாக நெய், வெண்ணெய், எண்ணெய் பாழாகின்றன. இலட்சத் தீபம் என்கிறான், டின் டின்னாக எண்ணெய் பாழாகிறது. அபிஷேகம் என்கிறான்—நெய், எண்ணெய், பால், தயிர், வெண்ணெய் படிப்படியாக ஜலதாரைக்குப் போகின்றன. மற்றும் இவை போன்றவைகளுக்கெல்லாம் கேள்வி கேட்பாரே கிடையாது.

இந்தப் பார்ப்பனர் வாழும் நாட்டைவிட வேறு எந்த நாட்டிலும் இப்படிப்பட்ட பழக்கமோ, வழக்கமோ, சர்க்கார் அனுமதியோ கிடையாதே! இங்கு சுதந்தரத்தில் கேள்வி கேட்பாரும் கிடையாது. ஆனால், மனித சமுதாயத்தில் உலகத்திற்கே மாறுதலாக நம் நாடு, தேசம் தவிர வேறு எந்த நாட்டிலும், தேசத்திலுமில்லாத மாதிரி, மனிதனில்—முதல்வன் (பார்ப்பான்), நாலாமவன் (சூத்திரன்), அய்ந்தாமவன் (பஞ்சமன்) என்கின்ற பிரிவு கடவுளில், மதத்தில் உள்ள ஆதாரங்களின் பெயரால் அதாவது, சமுதாயத்தில் 100-க்கு 97 பேர் 4ஆம், 5ஆம் சாதி; 100-க்கு 3 பேர் ஒன்றாம் சாதி என்று பிரிக்கப்பட்டு, அதைக் காப்பாற்றுவதே சுதந்திரத்தின் சட்டம் என்றும் ஏற்பாடு செய்து, சுதந்திர ஆட்சியும் சட்டமும் அமுல் செய்து ஆதரித்து வருகிறது. இதற்குப் பெயர் சுதந்திர ஆட்சியா? கொடுங்கோன்மை ஆட்சியா என்று கேட்கிறேன்.

அதுமாத்திரமா? கீழ்மக்கள் என்று சொல்லப்படுகிற சமுதாயத்தில் 100-க்கு 97 பேர் இருக்கும் நாட்டில், மேன்மக்கள் என்று சொல்லப்படுகிற 100-க்கு 3 பேரையே கொண்ட 'முதலாவது' சமுதாயமாகிய ஒரு பார்ப்பனப் பெண்ணின் ஆட்சியில், சமுதாய அமைப்பைக் காப்பாற்றுகிற சட்டத்தை வைத்து ஆளுகிற ஆட்சியில் குடிகளாயிருப்பது என்பது சுதந்திர ஆட்சியா? கொடுங்கோன்மை ஆட்சியில் மானங்கெட்டு, ஈனத்தனமாகக் குடிகளாக இருக்கிறோம்; இருக்கவேண்டும் என்பதும் ஈன அடிமைத் தன்மை ஆட்சியா என்று கேட்கிறேன்.

சுதந்திரம் கிடைத்தவுடனே பார்ப்பான் சட்டம் செய்தான்; அந்தச் சட்டப்படியே தேர்தல் வைத்தான்; யார் வெற்றிபெற்றாலும் அந்தச் சட்டப்படியே ஆளவேண்டும் என்று அமுல்படுத்திவிட்டான். பரம்பரையாய்ப் பார்ப்பானே ஆட்சித் தலைவராய் வரும்படி ஆட்சி அமைப்பைச் செய்துகொண்டான்.

தேசத்தில் உள்ள மற்ற மக்கள் ஒன்றுசேர முடியாத நிபந்தனைகளைக் கட்டாயமாகச் சட்டமாக ஆக்கிக்கொண்டான். 50 கோடி மக்கள் உள்ள தேசம் ஒன்று சேராதபடி 16 பிரிவுகளாகப் பிரிந்து, இது உலகம் உள்ளவரை நிரந்தரமாகப் பிரிந்திருக்கவேண்டும் என்று நிர்ப்பந்தமும், பிரிந்துகொள்ள விரும்புகிறவனுக்குப் பிரதிநிதித்துவ உரிமை இல்லை என்றும், கிரிமினல் தண்டனை என்றும் ஆக்கிக்கொண்டு, மேல் சாதியானுடைய சர்வாதிகார ஆட்சியை ஏற்படுத்திக்கொண்டு, பரம்பரை உரிமைபோல் நடத்தப்பட்டு வரும் ஆட்சியில் இருக்கிறோம். இதை அடிமை ஆட்சி என்றோ அன்னிய ஆட்சி என்றோ சொல்லக்கூடாத நிலையில் இருக்கிறோம்.

மற்றும் இதில் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால், சுதந்திரம் கிடைத்து 25 ஆண்டு ஆன பின்பும் நம் நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்த மக்கள், வெறும் கையெழுத்து மாத்திரம் போடத்தக்க மக்களையும் சேர்த்து எண்ணிப்பார்த்தால்—100-க்கு 39 மக்களே இருக்கிறார்கள். அதாவது, இன்னும் 100-க்கு 61 மக்களுக்கு எழுத்து வாசனையே இல்லை. அதாவது, இந்த 39 பேர் பெரிதும் நகரவாசிகளேதாம்; அதிலும் பெண்கள் சமுதாயத்தில் 100-க்கு 27 பெண்கள்தாம் படிக்கத் தெரிந்தவர்கள். அப்படியானால், இனியும் நமது நாட்டில் பெண்கள் 100-க்கு 73 பேர் படிக்கத்தெரிய வேண்டியவர்கள் ஆவார்கள். இவர்களும் கிராமங்களில் 100-க்கு 90-க்கு மேற்பட்ட பெண்கள் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் என்றே சொல்லலாம்.



தஞ்சையில், 17–9–1971-ல் நிகழ்ந்த பெரியார் ஈ. வெ. ரா. சிலை திறப்பு விழாப் பொதுக் கூட்டத்தில், வேலூர் C. M. C. மருத்துவமனை வளர்ச்சிக்கு பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் துணைவியார் ஈ. வெ. ரா. மணியம்மையார் நிதி வழங்கினார்

இந்த இலட்சணத்தில் இந்த நாட்டு மக்களாகிய நாம் நமக்கு வேண்டிய ஒரு நீதிபதியை நியமித்துக்கொள்ள உரிமையில்லை; பார்ப்பானாகவும், பார்ப்பானுக்கு வேண்டியவனாகவும், மூடநம்பிக்கையில் ஈடுபட்டுப் பார்ப்பானுக்கு அடிமையாய் இருப்பவனாகவுந்தான் நியமிக்கப்பட முடியும்.

உதாரணம் வேண்டுமானால், இந்தநாட்டு நீதிபதிகளிடம் பார்ப்பனருக்கு நம்பிக்கை இல்லாமலே போய்விட்டது. தொட்டதற்கெல்லாம் சுப்ரீம் கோர்ட்டுக்கே போய் பிராது கொடுக்கிறார்கள்; வேறு மாகாணத்துக்கு மாற்றுதல் கேட்கிறார்கள்; யார் என்றால், சாதி மதம் முதலிய மூடநம்பிக்கை சலுகையால் வாழ்பவர்கள்.

எனவே, நம் நாட்டின் சுதந்திரத்தின் யோக்கியதை இந்த நிலையில் இருக்கிறது என்பதுடன் நமக்கு உண்மையான சுதந்திரம் வேண்டுமானால் பார்ப்பனர் கருதுவது போலவே, தமிழ்நாடு தனித்த ஏகபோக ஆட்சியாய் இருக்கவேண்டும். அப்படிக்கு இல்லையானால், அது முடியாது என்பதானால் அன்னிய தேசத்தான் ஆட்சிதான் வேண்டும் என்று நினைக்கக் கட்டாயப்படுத்தப்படுகிறோம். இதுதான் நமது இன்றைய சுதந்திரம்.

['விடுதலை'-தலையங்கம்—23-9-1972]

## 40. இன்றைய இழிநிலை

தமிழ் நாட்டின் இன்றைய நிலை மிகவும் பரிகசிக்கத்தகுந்த, பரிதாபப்படத் தகுந்த நிலையில் இருக்கிறது.

சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால், எங்கு பார்த்தாலும் கலகம், காலித்தனம், நாசவேலை முதலிய கேடான காரியங்கள் நடந்தவண்ணம் இருக்கின்றன.

இந்த நாட்டில் என்றைய தினம் பார்ப்பனரல்லாதாருக்குள் பெரிதும் மான உணர்ச்சி ஏற்பட்டு அவர்கள் செயலில் இறங்கினார்களோ, அன்று முதலேதான் நாட்டில் இந்தப் படியான காலித்தனம் முதலிய இழிநிலைகள் ஏற்படுத்தப்பட்டன. இதற்குக் கர்த்தாக்களாகப் பார்ப்பனர்களே இருந்துவருகிறார்கள். இன்றைய நிலையில் எப்படியிருந்தாலும்—இந்தநாட்டில் சமுதாயத்துறையிலாகட்டும், அரசியல் துறையிலாகட்டும், கடவுள்–மதத் துறையிலாகட்டும் பார்ப்பனர்கள் ஒதுக்கப்பட்டு வெளியேற்றப்பட்டவர்களாகிவிட்டார்கள். அவர்கள் மறுபடியும் வந்து இத்துறைகளில் புகுந்துகொள்ள முடியாவிட்டாலும் மனிதர்களாக வாழுவதற்காவது ஏதாவது செய்து தீரவேண்டியவர்களாகி விட்டார்கள்.

கல்வித் துறையில் நம்மவர்கள் பார்ப்பனரை மிஞ்சி விட்டார்கள்; உத்தியோகத் துறையில் அவர்களைவிட எண்ணிக்கையில் எத்தனையோ மடங்கு கீழ்நிலையிலிருந்தவர்கள் இன்று பலமடங்கு அதிக எண்ணிக்கை கொண்டவர்களாக ஆகிவிட்டார்கள்.

சமுதாயத் துறையில் அவர்களுக்கிருந்த மதிப்பு அடியோடு போய்விட்டது. மதத் துறையில் அவர்களுக்கிருந்த மதிப்பும், செல்வாக்கும் நாளுக்குநாள் குறைந்து கொண்டே வருகிறது. மத்திய ஆட்சியின் தயவில்தான் பேர்சொல்லிக் கொள்ள முடிகிறது.

இந்த நிலையில் அவர்கள் உயிர்வாழவேண்டுமானால் நமது மக்களில் போதிய அறிவும், இன உணர்ச்சியுமற்ற மக்களைப் பிடித்து ஏதாவது காலித்தனம், கலகம் முதலியவைகளை நடத்தச்செய்து, பார்ப்பனர்மீது இருக்கும் வெறுப்பை—வேறு பக்கம், அதாவது தங்களுக்குள்ளாகவே செலுத்திக் கொள்ளும்படி செய்யவேண்டியதாகி விட்டது.

அதற்கேற்றாற்போல், இன்று பார்ப்பனருக்கு ஆயுதமாக ஏராளமாகப் பத்திரிக்கைகள் அவர்கள் கைவசமும்—நமது இன—மானங்கெட்ட, எது செய்தாவது வயிறு வளர்த்தால்

போதும் என்கின்ற ஈனமக்களிடமும் சிக்கிக்கொண்டதாலும்; நம்மிலும் அப் பத்திரிக்கைகளைப் பார்க்கவும், அவைகளை நம்பவுமான கீழ்த்தர மக்கள் ஏராளமாக இருப்பதாலும் கலகம், காலித்தனம் ஏற்பட வசதி ஏற்பட்டுவிட்டது.

1916 ஆம் ஆண்டில் நம் நாட்டில் ஏற்பட்ட பார்ப்பனரல்லாதார் (திராவிடர்) கழகம், பார்ப்பனரல்லாத சமுதாயத்தை விழிக்கச்செய்து, 1920-ல் அரசியலைக் கைப்பற்றச்செய்து நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்தது; இன்று மகா பலத்துடன் அரசோச்சி வருகிறது. இதன் மத்தியில், இந்த 50 வருடத்திற்கும் மேற்பட்ட காலமாகப் பார்ப்பனர் செய்த, செய்யச்செய்த காலித்தனம், கலகம், நாசவேலை, கொலை, கொள்ளை முதலிய கொடுஞ் செயல்கள் எவ்வளவு? கொஞ்சமா? சிந்தித்துப்பாருங்கள்!

சட்டம் மீறுதல், சத்தியாக்கிரகம், மறியல், தண்டவாளம் பெயர்த்து இரயிலைக் கவிழ்த்தல், வெடிகுண்டு எறிதல், கட்டடங்களைக் கொளுத்துதல்–இடித்தல், அதிகாரிகளைக் கொல்லுதல்–சுடுதல், கார்களை–பஸ்களைக் கொளுத்துதல், நாசமாக்குதல், தபாலாபீசு, இரயில்வே ஸ்டேஷன், போலீஸ் ஸ்டேஷன், நீதி ஸ்தலங்கள் கொளுத்தப்படுதல் முதலிய காரியங்களைச் செய்தல்; இத் தொழிலில் ஈடுபட்டவர்களை வீரர், சூரர், தியாகி என்று விளம்பரப்படுத்துதல்—முதலிய காரியங்களைச் செய்ய மக்களைத் தூண்டி விட்டுத் தங்கள் நிலையைக் (பார்ப்பனர்) காப்பாற்றிக்கொண்டே வந்திருக்கிறார்கள். அந்தச் சம்பவங்கள்தாம் இன்றும் வேறு பல உருவங்களில் பார்ப்பனரால் நடத்தப்பட்டு வருகின்றன.

இவை, இந்த நாட்டில் பார்ப்பனப் பூண்டு இருக்கும் வரையிலும்–நம் மக்களுக்குமான உணர்ச்சி ஏற்படும் வரையிலும் நடந்துகொண்டுதான் இருக்கும். இதற்குக் காரண காரியம் தேடுவது பயனற்ற காரியம்.

['விடுதலை'–அறிக்கை—23-10-1972]

## 41. நம் இன உணர்ச்சி

பொது மக்கள் சிந்திக்க வேண்டும்; சிறப்பாகத் தமிழ் மக்களில் பார்ப்பனரல்லாத—திராவிடத் தமிழ் மக்கள் சிந்திக்க வேண்டும். நம் நாட்டு ஆட்சியைப் பார்ப்பன ஆதிக்கத்திலிருந்தும் பார்ப்பனர் கையிலிருந்தும் திருப்பி, நமது (தனித் தமிழர்) கைகளுக்கு வரும்படி செய்து, தமிழர் நலத்துக்கு—தமிழர் ஆட்சியாகவே ஆக்குவதற்கு எவ்வளவு பாடுபட்டோம் என்பதும், இதில் எவ்வளவு கஷ்டநஷ்டங்களிருந்தன என்பதும் இன்றைய இளைஞர்களுக்கு விளங்காது.

பார்ப்பனர் கையில்தான் வெள்ளையராட்சி இருந்தது; அவர்கள் இஷ்டப்படிதான் ஆட்சி நடந்துவந்தது. அந்த ஆட்சியின்போது நம்மவர்கள் (தமிழர்கள்) கல்வி கற்றிருந்தது 100-க்கு 5 விகிதத்தினர் ஆவார்கள்; நம்மவர்கள் பதவியிலிருந்தது மாதம் ரூபாய் 8-க்குட்பட்ட சம்பளமுள்ள பதவிகளில்தான் 100-க்கு 100 வீதம் இருந்து வந்தார்கள். இந்த நிலை எப்படி மாறிற்று? அரசியலாலும் மாறவில்லை; சமூக இயலாலும் மாறவில்லை; பார்ப்பனரல்லாதார் இனம் என்கின்ற இன உணர்ச்சியால்தாம் மாற்றமடைந்தது.

இந்த மாதிரியான இன உணர்ச்சிக்குப் பார்ப்பனர்—வகுப்புத் துவேஷம், தேசத் துரோகம், நாட்டைக் காட்டிக்கொடுத்த கூட்டம், கடவுள்–மதம்–சாஸ்திரங்களை எதிர்க்கும் நாத்திகக் கும்பல் என்றெல்லாம் கட்டுப்பாடாக எல்லாப் பத்திரிகைகளும், சர்க்கார் அதிகாரிகள், பார்ப்பனர்களெல்லோரும்; மற்றும் பார்ப்பனரல்லாதாரில் வயிற்றுப் பிழைப்பு–பதவியாசை உள்ள பலரும் கூடி விஷமப் பிரச்சாரம் செய்தும்; பொதுக் கூட்டங்களில் சொல்லடி, கல்லடி, செருப்படி, கலவரம், காலித்தனம் முதலியவை எல்லாவற்றிற்கும் ஆளாகியும் மனங்கலங்காது, மானாவமானத்தைப் பற்றிச் சிந்திக்காது

பாடுபட்டதன் பயனாலேயே, நாம் இன்று நமது இன ஆட்சியை ஏற்படுத்தி, அதன் மூலம் பயன்பெற்று இன்றைய நிலையிலிருக்கிறோம்.

இன்றைய நம் நிலை, சர்வ சக்தியுள்ள இந்திய இயக்கமாகிய காங்கிரசை மூலையில் உட்காரவைத்துவிட்டோம்; சர்வ சக்தியுள்ள பார்ப்பனர்களை அரசியலில் இருந்தே வெளியாக்கி சமுதாயத்துறையில் வெளியில் தலைகாட்டுவதற்கு—அதாவது 'புர்க்கா' (முக்காடு) இல்லாமல் வெளிவருவதற்கு யோக்கியதையில்லாமல் செய்துவிட்டோம். உலகப் பிரசித்தி பெற்ற கம்யூனிஸ்ட் கட்சி என்னும் கூட்டத்தைத் தங்கள் பெயரைச் சொல்லிக்கொள்ள யோக்கியதையில்லாமல், நாதசுரக் கச்சேரியில் ஒத்து ஊதுகிற—கூலிக்கு அலையும் கீழ்த்தர நாதசுரக்காரனையும் தவுல், மத்தளங்களையும் சுமந்து கிடக்கும் கீழ்த்தரக் கூலிபோல் ஆக்கிவிட்டார்கள்.

எதிர்க் கட்சிகளில் மந்திரிகளாய், முதலீவர்களாய் இருந்தவர்கள் எல்லாம் இன்று விலாசம் சொல்லமுடியாமல் பெயர்களை மட்டும் விளம்பரம் செய்யச்செய்துவிட்டுப் படுக்கையிலிருக்கிறார்கள். பார்ப்பனர்—சுதந்திரா என்றும் ஜனசங்கமென்றும் கவர்ச்சி ஏற்ற பெயரை வைத்துக் கட்சிகள் ஏற்படுத்திக் கொண்டு, யாராவது ஏற்பாடு செய்யும் கூட்டங்களில் தலையைக் காட்டி மறைந்து கொண்டு திரிகிறார்கள்.

['விடுதலை'-தலையங்கம்—25-10-1972]

## 42. மகா அயோக்கியர்

அரசியலில் கட்சி மாறுகிறவர்கள் அயோக்கியர்கள், அயோக்கியர்கள், மகா அயோக்கியர்கள்!

அரசியலில் ஒரு கட்சித் தலைவர்களிடம் பல்லைக்காட்டிக் கெஞ்சி, சிபாரிசு பிடித்து, தனக்கு ஒரு இடம் கிடைக்கும்படி கெஞ்சித் தன்னை ஏற்றுக்கொள்ளச் செய்து, தேர்தலில் தனக்காக ஆயிரம், பத்தாயிரம், இருபதினாயிரம் போன்ற கணக்கில், கட்சிப் பணச் செலவில் பதவிக்கு வந்து, கை தூக்குவதைத் தவிர வேறு ஒரு தொண்டும் கட்சிக்குச் செய்யாமல், பொதுமக்களிடம் பணம் வாங்கிக்கொண்டு, சர்க்காருக்குப் பல சிபாரிசுகள் செய்து பணம் சேர்த்துக்கொண்டு—கட்சிப் பெயரால், பதவிப் பெயரால் பல சலுகைகள் பெற்று அவற்றாலும் பணம், சொத்து, தகுதிக்கு மேற்பட்ட அந்தஸ்தும் வருவாய்க்கு வழியும் சம்பாதித்துக் கொண்டதைத் தவிர, வேறு காரியத்திற்குப் பயன்படாத அனாமதேயங்கள், சுயநலத் துச்சு என்றே கட்சியைக் காட்டிக்கொடுக்க, விலை பேசி வாங்கி—வேறு கட்சி என்னும் பேரால், தானிருந்த கட்சிக்கு மனதறிந்து கேடு செய்யும் கட்சிக்குப் போய்த் தன்பெயரைக் கொடுப்பதும், தான் ஆளான கட்சியைக் குறைகூறுவதும், அக்கட்சியை ஒழிக்கப் பாடுபடுவதும், அதற்குத் தன் பெயரைக் கொடுப்பதுமான காரியத்தில் ஈடுபடுவதைத்தான்—நான், அயோக்கியம்—அயோக்கியத்தன்மை என்றும், அயோக்கியர் என்றும்; மேலும் அப்படிப்பட்டவர் மகா அயோக்கியர் என்றும் பொது நன்மையை உத்தேசித்துக் கூறுகிறேன்.

ஏன் என்றால், இம் மாதிரிக் கண்டிக்காவிட்டால்—இப்படிப்பட்டவர்களை மக்கள் வெறுக்கும்படி செய்யாவிட்டால், நாளாவட்டத்தில் யோக்கியமான பலருக்கும் நாக்கில் தண்ணீர் வடிய ஆரம்பித்துவிடுமே என்ற காரணத்தாலும், வேறுவகை இல்லாமையாலுமே யாகும்.

நாம் இப்படி அயோக்கியர், மகா அயோக்கியர் என்று கூறுவது முக்கியமாய் யாரை என்றால்—கட்சி மாறுகிறவர்கள், தமது தேர்தலுக்குக் கட்சி செய்த செலவுத் தொகைகளைக் கொடுத்துவிட்டு, கட்சியால் தாம் பெற்ற பதவியையும் இராஜிநாமா செய்துவிட்டு வெளியேறாதவரைத்தான். அப்போதுங்கூடச் சொல்வேன்—தானிருந்த கட்சிக்

கொள்கைகளில் ஏற்பட்ட மாற்றம் என்னவென்பதையும், அக் கட்சியால் மக்களுக்கு ஏற்பட்ட கெடுதி என்ன என்பதையும், இவற்றிற்காகத்தாம் இருந்த கட்சியில் இருக்கும்போது செய்த முயற்சிகள் என்ன—தெரிவித்த யோசனைகள் என்ன என்பனவற்றையும் விளக்கிக் காட்டிவிட்டு, தான் புதிதாகச் சேரப்போகிற கட்சியின் யோக்கியதை என்ன, நாணயம் என்ன, அதனால் மக்களுக்கு—நாட்டுக்கு விளையப்போகும் நன்மை என்ன என்பதையும் விளக்கி, கட்சிக்கும் தனக்கு ஓட்டளித்த ஓட்டர்களுக்கும் தெரிவித்துவிட்டு விலக வேண்டும்.

'ஓட்டர்களுக்குத் தெரிவிக்க வேண்டியதில்லை; அவர்களுக்குப் பணம் கொடுத்துத் தான் ஓட்டு வாங்கியது; ஆதலால் அவர்களைப்பற்றிக் கவலைப்படவில்லை' என்று சொல்லுவதானால் கட்சிக்குத் தெரிவித்துவிட்டு, எச்சரிக்கை செய்து பார்த்துவிட்டு விலக வேண்டும்—வேறு கட்சிக்குப் போகவேண்டும். அப்படிச் சொல்லாமல், செய்யாமல் கட்சி மாறுகிறவர்களைத்தான், நான்—அயோக்கியர், மகா அயோக்கியர் என்றும்; சிலரை மகா மகா அயோக்கியர் என்றும் இன்றியமையாத காரணத்தால் கூறுகிறேன். இந்தப்படி, துண்டுப் பிரசுரம் அடித்து, சுவரொட்டி ஒட்டி, கல்லில் அடித்து நாலுபாதையில் புதைக்கலாம் என்றும் கருதுகிறேன்.

ஏன் என்றால், இந்த அயோக்கியர்கள் தாங்கள் செய்யும் இப்படிப்பட்ட காரியத்தைப் பொது நலனுக்கு ஏற்றதா என்று கருதாமல், 'தங்கள் அப்பன் வீட்டுப் பரம்பரைச் சொந்தக் காரியம்' என்று கருதுகிறார்கள்.

இப்படிப்பட்ட அயோக்கியர்களால், தாங்கள் விலகும் கட்சிக்கு ஓர் ஆபத்து வருமானால், அதைச் சமாளிக்க இப்படிப்பட்ட அயோக்கியர்களை நம்பினால் நம் முயற்சிக்கு, ஆட்சியாளர்களுக்கு எவ்வளவு பெரியகேடு, ஏமாற்றம்; பொதுமக்களுக்கும் எவ்வளவு கேடு ஏமாற்றம் ஏற்படலாம்?

'அரசியல் வாழ்வு அயோக்கியத்தனம்' என்று பல ஆண்டுகளுக்கு முன்பே பல அறிஞர்கள் சொல்லியிருந்தாலும், 'ஜனநாயகம் என்பது நம் நாட்டுக்குக் கடைந்தெடுத்த அயோக்கியத்தனத்துக்கும், காலித்தனத்துக்கும் பிறப்பிடமாகும்' என்று, நம் நாட்டைப் பற்றி—இது பிரஸ்தாபிக்கப்பட்ட காலத்திலேயே, நானும் பல அறிஞர்களும் சொல்லியிருந்தாலும்—அவை நேரிடும்போது சொல்லிக் காட்டிப் பரிகாரம் தேடாமல் இருக்கமுடியுமா?

உதாரணமாக, 'அமாவாசையில் பிறந்த பிள்ளை திருடும்' என்று, ஜோசியத்தில் நம்பிக்கையுள்ளவன் கருதினாலும்—அவன் வீட்டில், 'ஒரு அமாவாசையில் பிறந்த ஒருவன் திருடியிருந்தால் அவன் வெளியில் சொல்லாமல், போலீசில் பிராது செய்யாமல் இருப்பானா? அதுபோல்தான், நான்—'இன்று, இது சுபாவம்' என்றாலும், மக்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டியவனாக இருக்கிறேன்.

இந்த மாதிரி நம்பிக்கைத் துரோகம் செய்யும் அயோக்கியர்களுக்கு இடம் கொடுத்துக் கொண்டே வந்தால் பொதுநலம், பொது வாழ்க்கை என்ன கதி ஆவது?

நாட்டில் இப்படிப்பட்ட அயோக்கியர்களைக் காப்பாற்ற, மூடிமறைக்கப் பல பத்திரிகைக்காரர்களில் மகா மகா மகா அயோக்கியர்கள் பலர்—பிறவி அயோக்கியர் பலர் இருக்கிறார்கள்.

நம் நாட்டில்தான் இந்தப்படி பத்திரிகைத் தொழிலில் மகா மகா மகா இமயமலை அயோக்கியர்கள் பலர் இருக்கிறார்கள். இவர்களுக்கு மானாவமானம் இல்லை என்றாலும், வேறு பத்திரிகைகள் ஏதாவது இருக்கும்போது இப்படிப்பட்ட பத்திரிகைகளைப் படிக்கும் மானங்கெட்ட மக்களும் ஏராளமாக இருக்கிறார்கள். பொது வாழ்வில், பொதுத் தொண்டில் ஈடுபட்ட சிலர், தொண்டின் நலனுக்காக அவற்றைப் படிக்க நேர்ந்தாலும்

பொதுமக்கள் தங்கள் இனத்தின் கேட்டுக்காக நடத்தப்படுகிற பத்திரிகைகளைப் படிப்பது எவ்வளவு மானங்கெட்ட ஈனத்தனம் என்பதை நான் வலியுறுத்திக் காட்டவேண்டியவனாக இருக்கிறேன்.

'யோக்கியமான காரணம் மேற்கண்டபடி காட்டாமல்—பதவியை இராஜிநாமா செய்யாமல் கட்சி மாறுகிறவர்கள் அயோக்கியர்கள்'—என்று சுவரில் எழுதுங்கள்; துண்டுப் பிரசுரம் போடுங்கள்; கல்லில் இவற்றை அடித்து (செதுக்கி) முச்சந்தியில் நடுங்கள் என்று கேட்டுக்கொண்டு இப்போதைக்கு முடிக்கிறேன்.

மனவேதனைப்பட்ட வேதனையாளன்.

['விடுதலை'–அறிக்கை—1-11-1972]

# 2. ஜனநாயகம்

## 1. இன்று உண்மையான சுதந்திரமா?

இன்று இந்தியாவில் எங்காவது உண்மையான சுதந்திரமும், ஜனநாயகமும் இருக்கின்றன என்று யாராவது அறிவு பூர்வமாக, ஆதார பூர்வமாகச் சொல்லமுடியுமா? இன்றைய சுதந்திரத்தில் 100-க்கு 90 மக்கள் அடிமை வாழ்வில்தான் வாழ்கிறார்கள். தெளிவாகச் சொல்லவேண்டுமானால், 100-க்கு 90 பேர்கள் 'சேவகாவிர்த்தி'—அதாவது சம்பள ஆளாகவும் கூலி ஆளாகவும் இருந்து (எஜமானனுக்கு அடங்கி) தொண்டு செய்துதான் வாழ்கிறார்கள்.

'அடிமை' என்பதற்கு என்ன அர்த்தம்? சொன்னவேலையைச் செய்து, கொடுத்த கூலியை வாங்கிப் பிழைப்பதுதானே? இந்த மாதிரி அடிமையாக இல்லாதவர்கள் இந்தியாவில் 100-க்கு 10 பேர் ஆவது இருப்பார்களா?

எஜமானன்–சம்பளக்காரன், முதலாளி–தொழிலாளி, பண்ணையார்–கூலிக்காரன் என்கின்ற முறை அமுலில் இருக்கும் நாட்டில் சுதந்திரம், சமத்துவம் என்று பேசுவதெல்லாம் புரட்டும் மோசடியும் அல்லாமல், அதில் உண்மை இருக்கமுடியுமா? அதுபோல் தானே ஜனநாயகமும் நடந்து வருகிறது.

இன்றைய இந்தியாவின் ஜனநாயகம் எப்படி இருக்கிறதென்றால், 100-க்கு 97 பேர் கீழ்சாதி, ஈனசாதி, 4-வது சாதி, 5-வது சாதி, சண்டாள சாதி என்பதாகத்தானே—மதத்தில் சாஸ்திரத்தில், சட்டத்தில் இருந்து வருகிறது. இது மாத்திரமா? 100-க்கு 3பேராய் இருக்கும் மக்கள் மேல்சாதி—கடவுளுக்குச் சமமான சாதி—பிராமணர் என்பதாகத்தானே இருந்து வருகிறது? இதுதானே இன்று மதக்கட்டளை—கடவுள் கட்டளை என்று சொல்லிச் சட்டமும் இருந்து வருகிறது?

இதை ஜனநாயகம் ஏன்றால், இதுவும் மோசடியும், புரட்டும் அல்லாமல் வேறு என்ன என்று சொல்லக்கூடியதாகும்? சுதந்திரம் பாதுகாப்பு என்பவை இந்த இரண்டு நிலைகளையும் அதாவது எஜமானன்–அடிமை நிலையையும் பாதுகாப்பது என்பதுதானே? இது சுதந்திரம்–ஜனநாயகம் என்பது மாத்திரமல்லவே; இன்றைய மத அரசியல் சட்ட தர்மமும் இதுதானே!

ஒவ்வொரு மனிதனும் கூடிய அளவு வேலை செய்யவேண்டியது; வேலையின் பயனைக் கிடைத்த அளவு அனுபவிக்க வேண்டியது என்பதுடன் தனி உடைமை உரிமை இவ்வளவுதானே?

இன்றைய நாட்டு அமைப்பில்—மக்கள் சமுதாய அமைப்பில் இந்தியாவில் சோசலிசம் ஏற்பட்டால் சமுதாயத் துறையில் 100-க்கு 3 பேராயிருக்கும் பார்ப்பனருக்கும், அதுபோலவே 100-க்கு 3 பேரிலும் குறைவாயிருக்கும் சில செல்வவான்களுக்குமல்லாமல் வேறு யாருக்கு என்ன கஷ்டம், நஷ்டம் ஏற்பட்டு விடும்? மனித சமுதாயத்திலுள்ள 100-க்கு 99 மக்களிடம் உள்ள உயர்வு தாழ்வு உணர்ச்சி, திருட்டு, புரட்டு, மோசடி, கவலை, கள்ளம், ஆத்திரம், பொறாமை, பலாத்காரம், சண்டித்தனம், காலித்தனம் முதலியவை பெரும் அளவிற்குக் குறைந்து விடுமே! தனிநலம் குறைந்து பொதுநலம் வளர்ச்சியடையுமே! இந்திய ஜனத்தொகையில் பார்ப்பன சாதி 100க்கு 3 பேர்தானே! சைவன் 100-க்கு ½ கூட இருக்கமாட்டானே! பஞ்சமன் 100-க்கு 16 பேர்; பிற்படுத்தப்பட்டவன் 100-க்கு 75 பேர்; மற்ற வேஷக்கார சாதி 100-க்குச் சுமார் 7 பேர் இருக்கலாம். இவ்வளவு பேரையும் அந்த மூன்று சதவிகித பார்ப்பன ஆதிக்கம் ஆட்டிப் படைப்பதுதானே இன்றைய சுதந்திரம்!

['விடுதலை'-தலையங்கம்—15-3-1872; 30-4-1973]

## 2. ஜனநாயகம்

**கேள்வி:** உலகத்தில், மகா பித்தலாட்டமான சொல் எது?

**பதில்:** அதுவா, அதுதான் ஜனநாயகம் என்கின்ற சொல்.

**கேள்வி:** அது என்ன, கடவுள் என்பதைவிட மகா பித்தலாட்டமான சொல்லா?

**பதில்:** அய்யய்யோ, கடவுள் என்பது ஒரு பொதுப் பித்தலாட்டமான சொல்; இந்தப் பித்தலாட்டத்தில் எல்லோருக்கும் பங்கு வரும். ஜனநாயகம் என்கின்ற பித்தலாட்டச் சொல் அப்படி அல்ல; தந்திரக்காரனுக்கு-அயோக்கியனுக்கு-இவர்களைசேர்ந்த கோஷ்டிக்குத்தான் பங்கும், பயனும் உண்டு. போக்கற்ற ஆளுக்கெல்லாம், பித்தலாட்ட வாழ்வு கோஷ்டிக்கெல்லாம் பிழைக்கும்வழி—ஜனநாயகம்தான்.

**கேள்வி:** இதுவே இப்படியானால்—ஜனநாயக முன்னணி, ஜனநாயக அய்க்கிய முன்னணி, ஜனநாயக முற்போக்கு முன்னணி, ஜனநாயக தீவிர முன்னணி, ஜனநாயக அதிதீவிர முன்னணி, ஜனநாயக சுயேச்சை முன்னணி, சுயேச்சை ஜனநாயக முன்னணி, ஜனநாயகக் கூட்டணி—என்பது போன்ற சொற்களின் தன்மை என்ன ஆவது?

**பதில்:** அவைகளா? துப்பாக்கியின் வயிற்றில் பீரங்கி பிறந்ததுபோல்—அது மகா பித்தலாட்டமானால், இவை மகாமகா பித்தலாட்டமாகும்; ஏன்—பித்தலாட்டத்தின் எல்லை யென்றே சொல்லலாம். சந்தேகமிருந்தால் இவைகளில் இருக்கின்ற—இவைகளில் சேர்ந்த தனித்தனி ஆட்களை எடுத்துக்கொண்டு, அவர்களது சென்றகால, நிகழ்கால, எதிர்கால பல்லனைக்கொண்டே 'சாதக'த்தையும், அவர்களது கொடிவழிப்பட்டியையும் பார்.

எங்கேயோ போகிற பனாதி; பிழைப்புக்கு எத்தனையோ வழியில் வகைபார்த்து உதைபட்டு வந்த உதவாக்கரை; மற்றும் சகலவிதமான அயோக்கியத்தனங்களுக்கும் புகலிடமாக இருக்கிற பரம அயோக்கியர்கள்; தினம் ஒரு கட்சி புகுகிறவர்கள்; சமயத்திற் கேற்ற கொள்கைகளைப் பேசுகிறவர்கள்; எதைச் சொன்னால் மக்கள் ஏமாறுவார்களோ அதைக் கண்டுபிடித்துச் சொல்லுகிறவர்கள்; கலவரம் உண்டாக்குவதாலேயே பிழைக்கக் கூடியவர்கள்—இவர்களும், இவர்களைப் போன்றவர்களையும் பெரிதும் கொண்ட ஸ்தாபனங்கள்தானே! எந்தப் பெயர் இருந்தாலும்—அதற்குச் சொந்தப் பெயர், 'பித்தலாட்ட மோசடி ஸ்தாபனம்' என்பதுதானே சொல்லவேண்டும்?

**கேள்வி:** சிலர்—இரண்டொரு, அப்படிப்பட்டவர்கள் அல்லாதவர்களும் இருக்கிறார்களே?

பதில்: இருக்கலாம் என்றே வைத்துக்கொள்ளுவோமே! இருந்தால் அவர்களை மோசடிப் பித்தலாட்ட அயோக்கியர் என்று சொல்லவேண்டாம்; முட்டாள்கள் என்று சொல்லு!

கேள்வி: இப்படிச் சொன்னால் யாரும் கோபித்துக்கொள்ள மாட்டார்களா?

பதில்: யாரும் கோபித்துக்கொள்ளமாட்டார்கள். தேவடியாளை, 'விலை மாதர்' என்றால் கோபிப்பார்களா? நியாயவாதியைப் பொய் விற்பனையாளர்கள் என்றால் கோபிப்பார்களா? வாணிபர்களை ஏமாற்றுக்காரர்கள் என்றால் கோபிப்பார்களா? அதுபோல் தானே இதுவும். ஆதலால், கோபித்துக்கொள்ளுபவர்கள் யாராய் இருந்தாலும்—அவர்கள் தலைக்கு இந்தக் குல்லாய் சரியாய் இருக்கிறது என்று அவர்களே ஒப்புக்கொள்ளுவதாகத் தான் அர்த்தமாகும்.

கேள்வி: சரி.

பதில்: சரி!

கேள்வி: வணக்கம்.

பதில்: வணக்கம்; வணக்கம்!

[சித்திரபுத்திரன் என்ற பெயரில் எழுதியது—'விடுதலை' 4-10-1952]

## 3. இந்திய ஜனநாயகம்

இது ஜனநாயக ஆட்சி என்றாலும், ஆட்சியில் ஆட்சியாளராக இருப்பவர்கள் மூட நம்பிக்கைக்காரர்களாக இல்லாமல் பகுத்தறிவு வாதிகளாகவும்; குறைந்தது கடவுள்கள், கடவுள் கதைகள், கடவுள்களின் கொலை, புரட்டு, பித்தலாட்டம், பெண்டாட்டி, வைப்பாட்டி, கலியாணம் முதலிய செய்கைகள் கொண்ட தன்மைகளில் நம்பிக்கை இல்லாதவர்களாகவும்; எந்த நிலையிலும் மக்கள் யாவரும் பிறவியில் சமமானவர்கள் என்றும், எல்லா மக்களும் ஒரு தர தகுதி பெற, தகுதி உடையவர்கள் என்றும், அந்தப்படி ஆக்கப்பட வேண்டியவர்களே என்றும் கருதும்படியானவர்களும்; ஆட்சியின் சமுதாய சீர்திருத்தப் பணியென்பது தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களின் 'தகுதியின்மை' என்று சொல்லும்படியான எந்தத் தன்மையையும் ஒழித்து உச்சத் தகுதிக்கு அருகர்களாக ஆக்குவதையே முதல் பணியாகக் கொள்வதுதான் என்று கருதுபவர்களாகவும்; எந்தத் தன்மையிலும் சமுதாய பேதம் ஒழிக்கப்பட்டே ஆகவேண்டும் என்று எண்ணத் தகுதி உடையவர்களாகவும் இருக்க வேண்டும்; இருந்தாக வேண்டும்.

பிறவி காரணமாகப் பல மதம், பல சாதி, பல பிரிவு உள்ள தன்மைகள் கொண்ட—இருக்க உரிமையளிக்கப்பட்ட நாட்டை, சமுதாயத்தை ஜனநாயகமாக்குவது என்றால், கண்டிப்பாய் மேற்கண்ட விஷயங்களை மனதிற்கொண்ட ஆட்சி அமைந்தால்தான் நாடும், மனித சமுதாயமும் முன்னேற முடியும்.

உலகில் (இந்தியா தவிர்த்த) மற்ற ஜனநாயக நாடுகளிலெல்லாம் மேலே குறிப்பிட்ட இலட்சியங்களை அடிப்படையாகக் கொண்டுதான் ஆட்சி நடத்தப்படுகின்றது.

நம் நாட்டில் செயற்கையின் பயனாக 'முயற்சியால்' ஏற்பட்ட பொருளாதாரத் துறையைத்தான் சமத்துவமாக்க, சம நிலைக்குக் கொண்டுவர ஆட்சி—ஜனநாயக ஆட்சி என்பது முயற்சிக்கிறதே ஒழிய, 'இயற்கையினால்' என்றும், 'பிறவியினால்' என்றும் அக்கிரம முறையில் உலகில் எங்கும் இல்லாத மாதிரியில், எந்தக் காரணமும் எந்த அவசியமும் எந்தத் தகுதியும் எந்த முயற்சியும் இல்லாமல் பித்தலாட்ட முறையில், ஒரு

சிலர் அதுவும்—மிகமிகக் குறைந்த (மைனாரிட்டி) எண்ணிக்கையுள்ள 100-ல் 3 விகிதத்தினர் (100 நயா பைசாவில் 3 விகிதத்தினர்) ஏற்பாடு செய்துகொண்ட முறையைத் தகர்த்தெறியத் துணிவில்லாத முறையில் ஜனநாயகம் இருக்கிறதென்றால், இது எப்படி ஜனநாயகமாகும்?

நம் நாட்டில் நடைபெறும் இன்றைய ஜனநாயக முறையில் திருத்தப்பாடு ஏற்பட முடியவில்லையானால், நாடு எதிர்காலத்தில் கொலைக்களமாகிவிடும் என்பதில் அய்யம் இல்லை.

இன்றைய ஜனநாயக முறையென்று எதைச் சொல்லுகிறேனென்றால்,

1. பொருளாதாரத்தில் நம்நாடு (தமிழ்நாடு) அல்லாத மற்ற நாடுகளுக்கு நம் செல்வம் கொள்ளை போகிறது.

2. வெளி நாட்டான் (தமிழ் நாட்டான் அல்லாதவன்) இங்கு வந்து பதவிகளில், வேலைகளில், கூலித்தன்மையில், வியாபாரத்தில், அடகு பிடிப்பதில், தொழிற்சாலை வைத்துத் தொழில் நடத்துவதில், பத்திரிகைத் தொழிலில் ஏராளமாகப் புகுந்து கொள்ளையடித்துக்கொண்டு போகிறார்கள்.

3. ஆட்சித் தலைமையில், எந்தக் காலத்திற்கும் ஒரு தமிழன் இராஷ்டிரபதியாகவோ, பிரதமராகவோ வர வாய்ப்பில்லாத தன்மையில்தான் ஜனநாயகம் இருந்து வருகிறது.

4. ஆட்சி முறைச் சட்டம் என்பது இரண்டாந்தர, மூன்றாந்தரப் பார்ப்பான் செய்வதும், அவன் செய்த சட்டத்திற்கு அந்தப் பார்ப்பனர்களே வியாக்கியானம் செய்வதும் தான் சட்டமாக இருந்துவருகிறது.

5. ஆட்சியின் மூலாதாரக் கொள்கை என்பது சாதியையும், சாதி அந்தஸ்தையும் காப்பாற்றுவது என்பதையே அடிப்படையாய்க் கொண்டிருக்கிறது.

6. இராஜாஜி போன்ற, பஞ்சமா பாதகத்திற்குத் துணிந்த ஒரு பார்ப்பான் தன் னிஷ்டப்படி தனக்கு வேண்டிய சட்டத்தை நிறைவேற்றிக்கொள்ள பார்லிமெண்டில்—பாராளுமன்றத்தில் இடமும் வசதியுமிருக்கிறது. ஒரு தமிழனுக்கு, தமிழ்ச் சமுதாயத்திற்கே 100-க்கு 100 பேரும் விரும்புகிற ஒரு காரியத்தைச் செய்துகொள்ள, நினைக்கக்கூட அதில் இடமில்லை.

உதாரணமாக, தமிழன் ஆட்சியைக் கைப்பற்ற பார்ப்பான் சூழ்ச்சி செய்து 'தீண்டாமை ஒழிக்கப்பட்டது; எந்த உருவத்திலும், எந்த நடத்தையிலும், தீண்டாமை அனுஷ்டிக்கப்படக்கூடாது; அது எதில் அமுலிலிருந்தாலும் தண்டிக்கப்படத் தக்கது' என்று சட்டம் செய்யப்பட்டிருக்கிறது.

இது, மக்களை ஏய்க்கச்செய்த சட்டம். எப்படியென்றால், சாமி (சிலை) இருக்கும் இடத்திற்குச் செல்லப் பார்ப்பானுக்குத்தான் உரிமை, சூத்திரன் செல்லக்கூடாது என்று அந்தச் சட்டத்திற்கு கோர்ட்டில் வியாக்கியானம் செய்யப்பட்டுவிட்டது.

7. அதுமாத்திரமா? தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஜனத்தொகை விகிதாச்சாரப்படி படிப்பு, உத்தியோகம் பெற உரிமை உண்டு என்றும், பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு மாநில அரசாங்கம் தங்களுக்கு யுக்தமாகத் தோன்றுகிற அளவு ஒதுக்கி வைக்கலாம் என்றும் சட்டம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், அதற்கு வியாக்கியானம் என்கின்ற முறையில் கோர்ட்டில், 'எல்லா ஒதுக்கிடமும் 100-க்கு 50-க்குள்தான் ஒதுக்கவேண்டும்' என்று வியாக்கியானம் செய்யப்பட்டுவிட்டது. இதுபோன்ற பல பித்தலாட்டங்கள் செய்து, தமிழன் எந்த விதத்திலும் சமத்துவம், சம உரிமை அடையக்கூடாது என்கின்ற தன்மையில் ஆட்சிமுறையும் சட்டமும் செய்யப்பட்டு வருகின்றன.

8. இந்தி மொழி விஷயத்தில் இந்தி பேசாத மக்களை அவமதித்து இழிவுபடுத்திய தாகும் என்பதோடு, இந்தியக் கூட்டாட்சி என்கின்ற மத்திய அரசாங்கமானது சிறிதுகூட ஈவு, இரக்கம், மானம், மரியாதை இல்லாமல் பார்ப்பன பாஷை (மொழி) என்பதற்காக— இந்தி மொழியை 6, 7, 8 மாநிலத்தாருக்கு மேலாக உள்ள மக்களுக்கு. அது அன்னிய மொழியாக இருந்தும், ஆரிய உணர்ச்சியை—சாதி முறையைப் பாதுகாக்க, மூடநம்பிக்கை களைப் புகுத்தும் சூழ்ச்சி எண்ணத்துடனேயே இந்தியைப் பொது மொழியாக, கட்டாய மொழியாக, தேசிய—கட்டாய மொழியாக ஆக்கச் சட்டம் செய்து புகுத்திவிட்டார்கள்.

இந்த இந்தியை இராஜாஜி (ஆச்சாரியார்) சென்னை இராஜ்யமாகிய தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நாலு மாகாணங்களும் ஒன்றாக இருந்த காலத்தில் முதலமைச்சராயிருந்தபோது, கட்டாய பாடமாக, மொழியாகப் புகுத்தியபோது, நான்கு மாகாண மக்களால் பெரிய கிளர்ச்சி நடந்து 2000 பேர் சிறைப்படுத்தப்பட்டு, பல ஆண்டுகள் வரை சிறைத் தண்டனை விதிக்கப்பட்டு, பலரை சிறையிலே மடியும்படி செய்து, அதன் பயனாய்க் காங்கிரஸ்—இராஜாஜி ஆட்சி பதவியை விட்டு வெளியேற வேண்டிய நிலை ஏற்பட்டு, வெளியேறிய பின் ஒழிக்கப்பட்ட இந்தியை, இன்று கட்டாய மொழியாகப் பெரிய எதிர்ப்புக்கிடையில் ஒரே ஒரு ஓட்டின் பலத்தால் புகுத்தப்பட்டிருக்கிறது.

9. அடுத்து, திரு. ரெங்கராஜன் (உயர் நீதிபதி) நியமனம். இது நீதியைக் கொலை செய்த பாதகமேயாகும். திரு. ரெங்கராஜன் என்கின்ற ஒரு பார்ப்பனரை, சாதி உணர்ச்சி யால் அய்யங்கார் சாதி என்கின்ற தன்மையில், திரு. இராஜாஜி அய்யங்கார் அவர்கள் திரு. ரெங்கராஜ அய்யங்கார் என்கின்ற ஸ்ரீரங்கத்துப் பார்ப்பனரைத் திடீரென்று ஜில்லா ஜட்ஜாக நியமித்தார்.

அவர் 'சட்டம் தெரியாதவர்', 'திறமை அற்றவர்', 'பதவியில் சட்ட விரோதமான பல காரியங்களைச் செய்தவர்' என்று குற்றம் சாட்டப்பட்டு, அவர் நீதிபதி பதவிக்கு அருகதையற்றவர் என்று மேல் கோர்ட்டுகளால் முடிவு செய்யப்பட்டு, அவருக்கு மேலால் நீதிபதி—அதாவது ஜில்லா நீதிபதி பதவிகூடக் கொடுக்கக்கூடாது என்று முடிவு செய்து, நீதிபதி பதவியில் இருந்து கிளப்பி, சட்டக்கல்லூரி மாணவர்கள் பள்ளி நிர்வாகியாக சென்னை அரசாங்கமும் சென்னை உயர்நீதி மன்றமும் முடிவு செய்து, ஜில்லா நீதிபதி பதவியிலிருந்து கிளப்பிவிடப்பட்டவர்.

அப்படிப்பட்ட அவர், ஒரு உயர்நீதி மன்ற பார்ப்பன சீப் ஜட்ஜாலும், மற்றும் ஒரு பார்ப்பன அடிமை, பார்ப்பனர் தயவில் மந்திரி பதவி பெற்ற அடிமை மந்திரியாரின் சூழ்ச்சியாலும் அய்க்கோர்ட் ஜட்ஜாக நியமிக்கக் கருதி பல முயற்சிகள் செய்தும், அவை பலியாமல் போனதோடும், கண்டிப்பாய் அவர் அய்க்கோர்ட் ஜட்ஜ் பதவிக்குத் தகுதி அற்றவர் என்றும் அதற்குப் பல அத்தாட்சிகளும் ஒரு அய்க்கோர்ட் சீப் ஜட்ஜின் பலமான அபிப்பிராயமும் இருக்கிறது என்ற அத்தாட்சியையும் மேலிடத்திற்கு, அதாவது டில்லி ஆட்சிக்கும் சுப்ரீம் கோர்ட்டுக்கும் இன்றைய சென்னை அரசாங்கம் பலதடவை எடுத்துக் காட்டி நேரில் விளக்கிக் கூறியும், ஒன்றையும் இலட்சியம் செய்யாமல், அவர் ஒரு பார்ப்பனர்—இராஜாஜிக்கு வேண்டியவர் என்கின்ற காரணத்திற்காகச் சிறிதும் மானம், வெட்கம், நேர்மை இல்லாமல் டில்லி மாகாணத்தின் அய்க்கோர்ட்டுக்கு ஜட்ஜாக நியமித்த, பொது மக்களை அலட்சியப்படுத்தி ஏமாற்றி இருக்கிறது டில்லி ஆட்சி. இப்படியான நிலைமை ஜனநாயகமானால், எடுத்ததற்கெல்லாம் ஜனநாயகம், ஜனநாயகம் என்றும், 'இப்படிச் செய்தால் ஜனநாயகத்திற்குக் கேடு' 'அப்படிச் செய்தால் ஜனநாயகத்திற்குக் கேடு' என்றும் சொல்லி, பாமர மக்களை மிரட்டிக் காரியம் சாதித்துக் கொண்டு, தமிழனின் இழி நிலையைப் பாதுகாப்பதுதான் ஜனநாயகம் என்கின்ற தன்மையில் ஜனநாயகம் நடந்தால், தமிழன் இன்னும் எத்தனை நாளைக்குப் பொறுத்துக் கொண்டு இருக்கமுடியும்?

சட்டங்கள் செய்வதே வஞ்சகக் கருத்துடன்; அதற்கு வியாக்கியானம் செய்வது 'கொலை பாதக' உணர்ச்சியுடன் என்றால்—'ஜனநாயகம்' எப்படி நடக்கும், எப்படி வாழும் என்று சிந்திக்க வேண்டுகிறேன்.

நான் எப்போதும் சட்டம், அமைதியைக் கெடுக்க விரும்புகிறவன் அல்லன். ஆனால், கிளர்ச்சியில்தான் இன்று எந்த நியாயத்தையும் பெற முடியும் என்று கருத வேண்டியவனாக இருக்கிறேன்.

எனவே, அமைதிக்குப் பங்கமில்லாமல், வன்முறைக்குச் சிறிதும் இடமில்லாமல், வைக்கம் தெரு தீண்டாமைக்கு 1924-ல் நான் கிளர்ச்சி செய்ததுபோல்—தமிழ் நாடு கோயில் தீண்டாமை ஒழிப்புக்காகக் கிளர்ச்சி செய்வது என்று கருதியிருக்கிறேன். இது 'இந்துக்கள்' என்பவர்களில் 100-க்கு 97 பேர்களின் மான உணர்ச்சிக்காக, மனித உரிமைக்காக, ஜனநாயகத்திற்காகச் செய்யப்பட வேண்டியதாக, செய்யாமல் இருக்க முடியாததாகக் கருதி, இந்தச் 'சுயமரியாதைப் பாதுகாப்புக் கிளர்ச்சி'யில் ஈடுபடப் போகிறேன் என்பதை மக்களுக்கும் ஆட்சிக்கும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

['விடுதலை'-தலையங்கம்—24-1-1969]

எந்த நாட்டிலும் எந்த ஒரு அரசும் நிலையாக வாழவேண்டும் என்பதாலேயோ, வாழ்ந்துவிடுவதாலேயோ மக்களுக்குப் பயன் ஏற்பட்டுவிடாது.

மேலும், மேலும் மக்கள் அறிவில், மானத்தில், வாழ்வில் வளர்ச்சி ஏற்படுவதற்கு ஏற்ற அரசு ஆண்டுக்கு ஒன்றாக மாற்றமடைந்தாலும் அது மேலான ஆட்சியேயாகும்.

உதாரணமாக, 'காந்திவழி' என்று சொல்லிக்கொண்டு பார்ப்பன ஆதிக்கத்திற்கு ஏற்ற இன்றையக் காங்கிரஸ் ஆட்சி இனியும் ஒரு (100) நூறு ஆண்டுகளுக்கு யாராலும் அசைக்கமுடியாத நிலையில் நடந்து வந்தாலும் இதனால் மக்களுக்கு அறிவோ, மானமோ, வாழ்வில் மேன்மையோ ஏற்படக்கூடும் என்று யாராவது சொல்லமுடியுமா?

அல்லது 1950 முதல் இன்று 1969 வரை காங்கிரஸ் ஏகபோக ஆட்சி நடத்திவருகிறதே, இதனால் மக்களுக்கு, நம் சமுதாயத்திற்கு அறிவோ, மானமோ, வளர்ச்சியோ ஏற்பட்டதாக யாராலாவது சொல்லமுடியுமா?

இந்தியாவுக்கு 'சர்வ சுதந்திர ஆட்சி' என்னும் பெயரால், மக்களாட்சி என்பதாக அசைக்கமுடியாத காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டு இன்றைக்கு 20 ஆண்டுகள் ஆகின்றன.

இந்த இருபது ஆண்டுகளில் இந்திய மக்களுக்கு, தமிழ்நாட்டு மக்களுக்கு ஏற்பட்ட நன்மை என்ன? காமராசரால் கல்வி விரிவடைந்தது என்றாலும், மக்கள் அறிவில் வளர்ந்தார்களா? மானத்தில் வளர்ந்தார்களா? கவலையற்ற வாழ்வில் வளர்ந்தார்களா? இன்பவாழ்வில் வளர்ந்தார்களா? உரிமையில் வளர்ந்தார்களா? எதில் வளர்ந்தார்கள்?

ஒழுக்கத்தில் வளர்ந்தார்களா? நாணயத்தில் வளர்ந்தார்களா? நேர்மையில் வளர்ந்தார்களா? எதில் வளர்ந்தார்கள்? இதே சுதந்திரத்துடன் இந்தியாவில் இன்று ஒரு இஸ்லாம் ஆட்சியோ, ஜப்பான் ஆட்சியோ, இங்கிலாந்து—அமெரிக்க—ரஷ்ய ஆட்சியோ ஏற்பட்டிருக்குமானால் இந்த இருபது ஆண்டில் இந்திய மக்கள் நிலை—குறைந்த அளவுக்குத் தமிழ்நாட்டு மக்கள் நிலை—எந்த அளவுக்குப் பெருகி இருக்கமுடியும் என்பதை, யோக்கியமான முறையில் ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

இன்றைய நம் மானங்கெட்ட 'ஜனநாயக ஆட்சி' என்பது மதத்தையும், சாதியையும், அவரவர்களுக்கு உள்ள அந்தஸ்தையும் காத்துக்கொள்வதில் சர்வ உரிமையை மூலாதாரக் கொள்கையாகக் கொண்ட ஆட்சி என்பதோடு, பொருளாதார உரிமையையும் மூலாதார உரிமையாகக்கொண்ட ஆட்சியேயாகும்.

இந்த ஆட்சியில் மக்களுக்கு அறிவு வளருமா? மானம் வளருமா? சமவாழ்வு வளருமா? ஏழ்மை, தரித்திரம், 'கோட்டீஸ்வரத் தன்மை', 'பகற்கொள்ளை' அடிக்கும் தன்மை மாறும் நிலை ஏற்படுமா? அல்லது, 'முதல் சாதி', 'நாலாம் சாதி', 'அய்ந்தாம் சாதி' என்கின்ற தன்மை மாறுமா என்று கேட்கிறேன்.

இன்றைய ஆட்சி ஒழியுமானால் இந்த நாட்டில் 100-க்கு 90 பேர்களுக்கு என்ன நட்டம் ஏற்படக்கூடும்? ஒழியாவிட்டால் 100 க்கு 90 பேருக்கு என்ன லாபம் ஏற்படக்கூடும்? நடுநிலைமையிலிருந்து ஒவ்வொருவரும் சிந்திக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

வெள்ளையன் போனவுடன் காங்கிரஸ் (பார்ப்பனன்) ஆட்சி வராமல்—இந்தியாவில் அல்லது தமிழ்நாட்டுக்கு ஜப்பான் ஆட்சியோ, ரஷ்ய ஆட்சியோ ஏற்பட்டிருக்குமானால், இன்று இந்தியா அல்லது தமிழ்நாடு, இதைச்சேர்ந்த 100-க்கு 90 மக்களின் நிலை என்னவாக இருந்திருக்கும்? சிந்தித்துப் பாருங்கள்.

சுதந்திரம் கிடைத்த இருபது ஆண்டுகளுக்குப் பிறகும் ஜனநாயக நாட்டில் 100-க்கு 90 மக்களுக்குப் பதவி வேண்டுமானால், சாதி சொல்லிக் கேட்கவேண்டியிருக்கிறது; உத்தியோகம் வேண்டுமானால் சாதி சொல்லிக் கேட்கவேண்டியிருக்கிறது; ஆட்சி வேண்டுமானால் சாதி சொல்லிக் கேட்க, முயற்சிக்க வேண்டியிருக்கிறது. ஆனால், இந்த 100-க்கு 90 மக்களை இழிசாதி, சண்டாள சாதி என்று கூறி, தங்களுடைய வைப்பாட்டி மக்கள் என்று அழைத்துக்கொண்டிருக்கும் 100-க்கு மூன்று பேராக உள்ள ஒரு கூட்டத்தினருக்கு தங்கள் 'திறமை'யைச் சொல்லி பதவி—உத்தியோகம்—ஆட்சி கேட்க, அதுவும் கேட்காமலே அடையவேண்டி இருக்கிறது.

இப்படிப்பட்ட இந்த நிலையை உண்டாக்கி இருக்கும் ஆட்சித்தன்மையை ஜனநாயகம் என்று நம்மைத் தவிர உலகில் வேறு எந்த மடையனாவது சொல்வானா? சொல்ல முடியுமா?

இதுமாத்திரமல்லவே! இன்றைய ஜனநாயகம் நமக்குக் கற்பிப்பது என்னவென்றால்:

இந்திய நாட்டுக்கு (தமிழ்நாட்டுக்கு) இந்தியனல்லாதவன் ஆட்சி—அன்னிய நாட்டான் ஆட்சி ஏற்பட்டாலொழிய இந்தியனின், தமிழனின் இன்றைய இந்த (இழிநிலை) நிலை மாறாது என்றல்லவா கல்லில் பொறித்து வைக்கப்பட்டிருக்கிறது.

இந்த நிலையில் இந்த ஆட்சி நிலையாக இருக்கவேண்டுமானால், இருக்க நேரிட்டால் இந்த நாட்டு 100-க்கு 90 பேராக உள்ள மக்களின் நிலை என்ன ஆவது என்று கேட்கிறேன்.

சில மேதாவிகள் 'பிரகஸ்பதிகள்', 'மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும்' என்று கேட்கிறார்கள்.

இதன் கருத்தென்ன?

'வெறும் செருப்பாலடிக்காதே. அந்தச் செருப்புக்குப் பட்டு ஜரிகை கொண்டு குஞ்சங்கள் கட்டி அதனால் அடி' என்று கேட்பது போல்தானே இருக்கிறது?

இன்றைய அரசியல் சட்டப்படி இப்போது கேட்பவர்களுக்கு மாத்திரமல்லாமல் என்னிடமே அதிக அதிகாரங்களை ஒப்புவித்தாலும் அதைக்கொண்டு நான் இந்த நாட்டு மக்களில் 100-க்கு 90 பேர்களாக உள்ளவர்களுக்கு அவர்களது இழிவை, மடமையை, மானமற்ற தன்மையை, குறையை, கவலையைத் தீர்க்க 'அந்த அதிக அதிகாரத்தை'க் கொண்டு என்னால் என்ன செய்யமுடியும்?

அரசியல் சட்டத்தில் 'எந்தத் தன்மையிலும் தீண்டாமை ஒழிக்கப்பட்டுவிட்டது. தீண்டாமை பாராட்டுவது சட்ட விரோதம்; தண்டிக்கத் தக்கதாகும்' என்று இருக்கிறது. அப்படி இருந்தும் அதற்கு நிபந்தனை கூறுவதில், 'தீண்டாமை விலக்கு என்பது மதத்தைப் பாதிக்காத அளவுக்குத்தான் அமுல் படுத்தத் தக்கதே ஒழிய எல்லாவற்றிலும் அல்ல' என்று விலக்களிக்கப்பட்டிருக்கிறது.

அதாவது, தீண்டாமை என்பதே பார்ப்பானைத் தவிர்த்த மற்ற மனித சமுதாயத்திற்கு இழிவு கற்பிப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்டதாகும். இதுதான் தீண்டாமைக்கு மூலாதாரம் என்பதோடு தத்துவமுமாகும்.

ஆனதால், இந்த மூலாதாரத்திற்கு விரோதமில்லாமல் மனிதன் இழிவை நீக்கிக்கொள்ளப் பயன்படுத்தாமல், மற்றதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதுதான் அந்தச் சட்டத்தின்—தீண்டாமை விலக்கின் தத்துவமாகும்.

இது காங்கிரஸ் ஆட்சி ஒழிந்தால் மாத்திரம் போதாததோடு, வேறு அன்னியன் ஆட்சி வந்தால்தானே முடியும்?

'கடவுளைத் தொட்டால் தீட்டு; கடவுள் இருக்கிற 'உள் அறை'க்குள் வந்தால் தீட்டு' என்ற நிபந்தனை உள்ள இந்தத் தீண்டாமை ஒழிக்கப்பட மாட்டாது என்றால், கோயிலும் கடவுளும் ஒழிந்தால் அல்லாது தீண்டாமை 100-க்கு 97 பேருக்கு மனித இழிவு எப்படி ஒழியும்? முஸ்லிம் முதலிய மற்ற சமுதாய ஆட்சி வந்தால் இந்த நிபந்தனை இருக்க முடியுமா? இந்த நிலையில் இன்றைய இதே ஆட்சி நிரந்தரமாய் இருக்கவேண்டும் என்பது மடமையும், மானமற்ற தன்மையும், முட்டாள்தனமும், மூட நம்பிக்கையுமல்லாமல் வேறு என்னவென்று சொல்லத்தக்கதாகும்?

ஆகவே, இன்றைய ஆட்சி ஒழியவேண்டும்; ஒழிக்கப்பட வேண்டும் என்பது, 'வெள்ளையன் ஆட்சி ஒழிக' என்பதைவிடப் பல மடங்கு உரத்துக் கூறவேண்டியது முக்கியமாகும் என்பதோடு, இன்றைய ஆட்சிக்கு, ஆட்சியின் அரசியல் திட்டத்திற்கு உட்பட்ட எந்த ஆட்சியின் கீழும் சுதந்திரமோ, சுய ஆட்சியோ, அதிக சுதந்திரமோ கிடைத்து விடுவதால் 'மனித சுதந்திரம்' ஏற்பட்டுவிடாது என்பது எனது கருத்து.

['விடுதலை'-தலையங்கம்—27-3-1969]

## 4. அரசியல் வாழ்வு

அரசியல் வாழ்வு நாளுக்குநாள் மனிதப் பண்பைக் கெடுத்துவருகிறது. அரசியல் போட்டி என்பது மிகமிகக் கீழ்த்தரத்திற்கே போய்க்கொண்டிருக்கிறது. இது நமது பின்சந்ததிகளைப் பாழாக்கிவிடும்போலத் தெரிகிறது.

இன்றையச் சமுதாயத்திற்குக் கிளர்ச்சி—அதாவது சட்டம், அமைதி, ஒழுங்குத் தன்மைகளை அலட்சியமாய்க் கருதிப் போராட்டம் நடத்துவதைத்தான் உற்சாகமாய்க் கருதும்படியான நிலை ஏற்பட்டிருக்கிறதேயொழிய, மனிதப் பண்பு பற்றிய கவலையே சிறிதும் இல்லாமல் போய்விட்டது. இதற்கு அரசியல் போட்டியாளர்களே காரணமாவார்கள்.

ஜனநாயகம் என்பதுதான் இதற்குக் காரணம் என்றும் சொல்லவேண்டியிருக்கிறது.

சட்டம்-ஒழுங்கு மீறுதல், பலாத்காரச் செயலில் ஈடுபடுதல் முதலிய காரியங்கள் நம்நாட்டில் முதல் முதல் அரசியலின் பேரால்தான் துவக்கமானதாகத் தெரிகிறது. இதற்குக் காரணஸ்தர்கள் பார்ப்பனர் என்றுதான் சொல்லவேண்டும். பார்ப்பனர்களுக்குத் தூண்டுகோல் மனுதர்ம சாஸ்திரம்தான்.

பார்ப்பன சாதி என்பதாக ஒரு வகுப்பு நாட்டில் இருக்கும்வரை—சட்டம், ஒழுங்கு, அமைதி, பலாத்காரமற்றதன்மை முதலியவை இருப்பது என்பது முடியாத காரியமாய்த் தான் இருந்துவரும். பொதுவாகச் சொல்லப்படுமானால், அரசியலில் காலித்தனம் பொது மக்கள் செயலாக ஆக்கப்பட்டது—காந்தியால்தான் என்று சொல்லலாம்.

சட்டசபைகளில் காலித்தனம் என்பது சத்தியமூர்த்தி அய்யர், மோதிலால் நேரு முதலிய பார்ப்பனர்களாலேயேயாகும். சட்டசபையின் கவுரவமும் ஒழிக்கப்பட்டதற்குக் காரணம் காங்கிரஸ் பக்தர்கள் (காலிகள்) என்றுதான் சொல்லவேண்டும். இந்த நிலைமை வளர்ச்சிக்கு உற்சாகம் கொடுத்தவர்கள் பார்ப்பனப் பத்திரிகைக்காரர்களே யாவார்கள்.

பொதுவாழ்வில் பார்ப்பனர்களுக்குள்ள ஆதிக்கம் குறைந்ததுடன் அவர்கள் காலித் தனத்தை வளர்த்து, நாட்டில் அமைதியையும் பொது ஒழுக்கத்தையும் பாழாக்கிவிட்டார்கள். பார்ப்பனர்கள் தங்களுக்குப் பார்ப்பனரல்லாதார்களில் மானம், ஒழுக்கம், நேர்மை ஆகிய வற்றில் பற்றும் அருகதையும் உள்ள பெரிய மனிதர்கள் என்பவர்களின் ஆதரவு இல்லை என்று தெரிந்தவுடன் அயோக்கியர்கள், காலிகள், பொறுப்பற்ற கீழ்மக்கள் ஆகியவர் களையே பெரிதும் வேட்டையாடி விளம்பரங் கொடுத்து, உண்மையில் பெருமையும் கவுரவமுள்ள பெரியவர்கள் என்பவர்களை எல்லாம் மூலையில் ஒடுங்கும்படி செய்து விட்டார்கள். நல்ல பாரம்பரியத்தின் மதிப்பையெல்லாம் கெடுத்துவிட்டார்கள்.

நபர்களின் தன்மையைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்றாலும், பண்பைப் பற்றிக் கவலைப்படவில்லையானால் மனித சமுதாயத்திற்குப் பாதுகாப்பு எப்படி இருக்கமுடியும்?

சமதர்மம் பேசுகிறோம். எப்படிப்பட்ட சமதர்மம் ஏற்பட்டாலும்—நம் சமுதாயமும் நாடும் பொது உடைமைச் சமுதாயமாகவும், பொது உடைமை நாடாகவும் ஆகும் வரையில் ஏழை-பணக்காரர் இருந்துதான் தீருவார்கள்; மற்றும் முதலாளி-தொழிலாளி இருந்து தான் தீருவார்கள்; எஜமான்-வேலைக்காரர்கள் இருந்துதான் தீருவார்கள். இந்த நிலை இருக்குமானால், இருக்கும் வரை—ஒரு கட்டுத் திட்டம், ஒழுங்கு முறை இருந்தால்தானே மனித வாழ்வும் காரிய நடப்பும் சரிவர நடந்தேற முடியும்? மனிதனுக்கு இன்று சொத்துரிமை இருக்கிறது; இதில் மற்றவன் தனது பலாத்காரத்தைப் பயன்படுத்தி உரிமை பெறுவதென்றால்,—கையில் வலுத்தவன் பயனடைவது என்றால் மனித சமுதாயத்தில் அமைதியும் சமாதானமும் ஆன வாழ்வு எப்படி இருக்கமுடியும்?

கட்டுப்பாடும் சமாதானமும் அற்ற தன்மையை 'சத்திய சோதனை' என்னும் பேரால் உண்டாக்கிவிட்டு, ஜனநாயகத்தையும் உண்டாக்கிவிட்டால்—எந்தக் குணம், எந்தத் தன்மை கொண்ட மக்கள் பெருவாரியாய் இருக்கிறார்களோ அந்த மக்கள் ஆட்சிதானே நிலவும்! 'தொழிலாளர் தொல்லை', 'கூலிக்காரர்கள் தொல்லை', 'இவர்களைத் தூண்டி விட்டு வாழும் காலிகள் தொல்லை' என்றால் நாட்டில் இந்த இனம்தானே மெஜாரிட்டியாக உள்ளனர்!

இந்த நிலையில் சமதர்மம், ஜனநாயகம் என்றால் நாடும் மனித சமுதாயமும் எக் கதி ஆகும் என்பதைச் சிந்திக்க வேண்டாமா? ஆகவே, நமது 'அரசியல் வாழ்வு' என்பதைப் பொது உடைமை வாழ்வாக ஆக்கிக் கொண்டால்தான் மக்கள் சமுதாயம் கவலையற்று—சாந்தியும் சமாதானமும் பெற்று வாழமுடியும். இல்லாவிட்டால், மக்கள் சித்திரவதைக்கு ஆளாகத்தான் நேரிடும்.

['விடுதலை'-தலையங்கம்—6-7-1972]

# 3. மதச் சார்பற்ற அரசு

## 1. மதச் சார்பற்ற அரசு

இந்திய தேசியக் காங்கிரசின் கொள்கைகளை விளக்குவதில் கீழ்க்கண்ட விஷயங்களைக் கவனிக்க வேண்டுகிறோம் :—

இந்தியாவில் உள்ள இந்துக்கள் என்பவர்களில் பிராமணன், சூத்திரன், ஹரிஜனன் என்பதாக மூன்று பிரிவுகள் சட்டத்திலும் அனுஷ்டானத்திலும் பல ஆதாரங்களிலும் இருந்து வருகிறது. இந்தப் பிரிவின்படி—பண்டித நேரு பிராமணராகவும், காந்திஜி சூத்திரராகவும், அம்பேத்கார் ஹரிஜனாகவும் கருதப்படுகிறார்கள்.

இந்திய அரசாங்கம் சாதிப் பிரிவு, சாதிச் சலுகை, சாதித் தொகுதி, சாதிப் பிரதிநிதித்துவம் இல்லாத அரசாங்கமாக இருக்கும் என்று அடிக்கடி பிராமண வகுப்பில் வருகிற தலைவர்களாலும், காங்கிரஸ் பிரமுகர்—பிரச்சாரகர்களாலும் சொல்லப்பட்டு வருகிறது.

இப்போதுள்ள பிரிட்டிஷ் ஆதிக்கம் நீங்கின இந்திய யூனியன் அமைப்பு முறையிலும் சாதி வகுப்பு விஷயமாய்ச் செய்யப்படப்போகும் விதிகளில் பிராமணன், சூத்திரன், ஹரிஜனன் என்கின்ற வார்த்தைகளுக்கு இடம் அளிக்கப்படுமா? சட்டங்கள், இந்துமத சமுதாய ஆதாரங்கள், இடங்கள் முதலியவைகளில் பிராமணன், சூத்திரன், ஹரிஜனன் என்கின்ற வார்த்தைகள் இருக்க இடம் அளிக்கப்படுமா? அந்தப்படி இருப்பவைகளை சர்க்கார் அங்கீகரிக்குமா? என்கின்ற விஷயம் இதுவரையில் தெளிவாக்கப்படவில்லை.

இந்த விஷயங்கள் தெளிவாக்கப்படாமல், சாதிகளின் பேரால் தொகுதியில்லை, பிரதிநிதித்துவமில்லை, சலுகையில்லை என்று சொல்லப்படுவது—பிரிவினையின் காரணமாகக் கீழ் நிலையில் இருக்கும் மக்களுக்குப் பெருத்த அநீதியாகவும், குறைபாடாகவும், அசவுகரியமாகவும், முன்னேற்றத் தடையாகவும் இனியும் இருக்க இடமாகிறது.

ஆகவே, இந்திய யூனியன் கான்ஸ்டிடியூஷனிலும், இந்திய தேசியக் காங்கிரஸ் கான்ஸ்டிடியூஷனிலும்—'இந்திய யூனியனில் உள்ள மக்களில் அல்லது இந்துக்கள் என்கின்ற சமுதாயத்தில்—அரசியலின் பேராலும், மத இயலின் பேராலும், சமுதாய இயலின் பேராலும் பிராமணர், சூத்திரர், ஹரிஜனன் என்கின்ற பிரிவு எந்த முறையிலும் அனுஷ்டிக்கப்படமாட்டாது; இந்த வார்த்தைகள் அரசியல், மத இயல், சமுதாய இயல் கொண்ட எந்த ஆதாரங்களிலும் உபயோகிக்கப்படமாட்டாது என்பதோடு, இவைகள் இருக்கவும் இடம் கொடுக்கப்படமாட்டாது; அப்படிப்பட்ட வார்த்தைகள் இருக்கும்படியான ஆதாரங்களைச் சர்க்கார், காங்கிரஸ் மரியாதை செய்யாது; ஆதரிக்காது; கல்வி, கலைத் துறையிலும் இவ் வார்த்தைகளுக்கு-பிரிவுகளுக்கு இடம் இருக்க அனுமதிக்கப்படமாட்டாது'—என்பவை தெளிவாக விளங்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டு விட்டால், இந்த யூனியனில் வகுப்பு வாதங்களோ, வகுப்பு ஸ்தாபனங்களோ, வகுப்புக் கலவரங்களோ என்பவை இருக்க இடமில்லாமல் போய்விடும்; வகுப்புக் குறைகளைச் சொல்லிச் சலுகைகளோ, பிரதிநிதித்துவங்களோ, உரிமைகளோ கொண்டாடவும் கேட்கவும் இடமில்லாமல் போய்விடும். இந்திய யூனியனும் பிறவியின் பேரால் பிரிவு, சாதிப் பிரிவு, வகுப்பற்ற ஒரே சமுதாயமாக விளங்க முடியும்.

அந்தப்படிக்கில்லாமல், பிராமணன், சூத்திரன், ஹரிஜனன் என்கின்ற பிரிவுகளை, சாதிகளை வைத்துக் கொண்டு—இதன் காரணத்தால் பிற்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அவர்கள் குறை நீங்கத் தக்கதாக சலுகைகள், பிரதிநிதித்துவங்கள் இல்லையென்று தடுப்பது கொடுமையான அநீதியாகும்.

ஆகவே, இதை அரசியல் நிர்ணய சபையும், காங்கிரஸ் விதிமுறை அமைப்புச் சபையும் கவனிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறோம்.

['குடியரசு'—அறிக்கை—24-4-1948]

நம் மக்களின் இழிவிற்கும் மானமற்ற தன்மைக்கும் அடிப்படை, அவர்களால் கொண்டாடப்படுவதும் போற்றிக் காக்கப்படுவதுமான கடவுள், மத சாஸ்திரங்களானதால் அவற்றை ஒழிக்க வேண்டுமென்கிறோம். 'நீ ஏன் சூத்திரன்?' என்றால், 'கடவுள் அமைப்புப்படி, மதப்படி, சாஸ்திரப்படி' என்கிறான். அதுபோல—'அவன் எப்படிப் பார்ப்பான்?' என்றால் இந்தக் கடவுள், மத, சாஸ்திரப்படிதான் என்று கருதிக்கொண்டு இருக்கிறான். ஆகவே அடிப்படைக் காரணமாக இருக்கிற இந்த இழிநிலை மாறாததற்குக் காரணம்—நமக்குச் சரித்திரம் தெரிந்த காலம் முதல் நேற்றுவரை நடைபெற்ற ஆட்சிகள் அத்தனையும் நம் சூத்திரத் தன்மையையும் இழிவையும் பாதுகாக்கக் கூடியதாகவும், மனுதர்மப்படி ஆட்சிசெய்யக் கூடியதாகவும் இருந்ததேயாகும்.

இன்றைக்கு ஏற்பட்டிருக்கிற இந்த ஆட்சியானது பகுத்தறிவாளர்கள் ஆட்சியான தால்—நமது இழி நிலையை ஒழிக்கவேண்டும் என்கின்ற கவலையுடைய ஆட்சி ஆனதால் இப்போது ஒரு உத்தரவு போட்டிருக்கிறது. அதுவும் இரகசியமான உத்தரவு. அதாவது, 'அரசாங்க அலுவலகங்களில் சாமி படங்களோ, மத சம்பந்தமான மூட நம்பிக்கைப் படங்களோ இருக்கக்கூடாது' என்று உத்தரவு போட்டிருக்கிறது. இந்த இரகசியமான உத்தரவை இவர்களாகப் போடவில்லை. திரு. பக்தவத்சலம் ஆட்சியிலிருந்தபோது—நம்மிடம் இருந்து பிரிந்துசென்ற திரு. குருசாமியும் மற்றவர்களும், 'சுயமரியாதை இயக்கம்' என்பதாக ஒரு ஸ்தாபனம் வைத்தார்களல்லவா? அவர்கள், 'இது மதச் சார்பற்ற ஆட்சியானதால் அரசாங்க அலுவலகங்களில் இருக்கும் மதசம்பந்தமானவர்கள்—கடவுள்கள் முதலிய படங்களை எடுத்துவிட வேண்டும்' என்று தீர்மானம் போட்டு, சர்க்காருக்கு அனுப்பி இருக்கிறார்கள். திரு. பக்தவத்சலம் அதன்மீது எந்த நடவடிக்கையும் எடுக்காமல் கட்டிவைத்துவிட்டார். இவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்றதும் அதற்குமுன் ஆட்சியிலிருந்த வர்கள் 'பைசல்' செய்யாமல் விட்டுவிட்டுப் போனவைகளை யெல்லாம் பைசல்செய்து கொண்டு வரும்போது, இதையும் பைசல்செய்தல் வேண்டியிருந்தது. அதனால், இந்த உத்தரவைப் போட்டார்கள். இதுபோன்ற ஓர் உத்தரவு 1950-ல் போட்டிருந்ததைக்கொண்டு இந்த உத்தரவைப் போட்டார்கள். இதை எப்படி நான் உறுதியாகச் சொல்கிறேன் என்றால், அதிலுள்ளபடியே இதையும் அமைத்திருக்கின்றார்கள். 'படங்களை அகற்றுவதில் எவ்வித முன்னறிவிப்போ, ஆர்ப்பாட்டமோ, விளம்பரமோ இன்றி சாதாரணமாக அகற்றப்பட வேண்டும்' என்று பழைய உத்தரவில் இருந்தது. அதையே இந்த உத்தரவிலும் குறிப்பிட்டிருக்கிறார்கள். பழைய உத்தரவில் அப்போதிருந்த 'கவர்ன்மெண்ட் செகரட்டரி' கையெழுத்துப் போட்டிருக்கிறார். இப்போது வந்த உத்தரவிலும் 'கவர்ன்மெண்ட் செகரட் டரி'தான் கையெழுத்துப் போட்டிருக்கிறார்.

சாதாரணமாக வழக்கம் என்னவென்றால், இதுபோன்ற உத்தரவுகளுக்கு கவர்னரோ, மந்திரியோதான் கையெழுத்துப் போடவேண்டும். பழைய உத்தரவில் அதுபோல் இல்லாமல் செகரட்டரியே கையெழுத்துப் போட்டிருந்ததால் அதைப் பின் பற்றியே இதிலும் செகரட்டரி கையெழுத்துப் போட்டு அனுப்பி இருக்கிறார். அந்தப் பழைய உத்தரவு எப்போது போடப்பட்டது என்றால், வெள்ளைக்காரன் இந் நாட்டை விட்டுப்போய்—பூரா பொறுப்புகளையும் ஒப்படைத்தபின், 1950-ல் போடப்பட்டிருக்கிறது. அதைப் போடவேண்டிய அவசியம் ஏன் வந்தது என்றால், அரசாங்க அலுவலகங்களில் இராஜாவின் படமும், இராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் படங்களும் இருந்துவந்தன. 'வெள்ளைக்காரர்களின் படங்களை எல்லாம் அகற்றவேண்டும்' என்கின்ற எண்ணத்தில் தான் அந்த உத்தரவைப் போட்டார்கள். அந்த உத்தரவானது 1950-வது வருஷம் மே மாதம் போடப்பட்டதாகும். அந்த உத்தரவில், 'கோர்ட்டு அறைகளின் சுவர்களில் மாட்டப்பட்டிருக்கும் அரசர், அரசி, அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களின் படங்கள் எது வானாலும் அவைகளையெல்லாம் அகற்றிவிடவேண்டும்; அவைகள் நீதி ஸ்தலங்களில் இருப்பது நீதி ஸ்தலங்களுக்கு இழுக்காகும்; வேண்டுமானால், காந்தியார் படம் இருக்

கலாம்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த உத்தரவின்மீது பெல்லாரி டிஸ்டிரிக்ட் ஜட்ஜும், தென் கனரா கலெக்டரும் 'எல்லாப் படங்களையும் எடுக்கவேண்டுமென்றால் இப்போதுள்ள கவர்னர், பிரதம மந்திரி ஆகியவர்கள் படங்களை என்ன செய்வது?' என்று கேட்டிருக்கிறார்கள். அதற்கு, 'அவைகளையும் சேர்த்து எடுத்துவிடவேண்டும்; வேறு இடங்களில் வேண்டுமானால் மாட்டிக்கொள்ளலாம்' என்று 1950-ல் நவம்பர் 2ஆம் தேதி ஒரு உத்தரவை அரசாங்கம் அனுப்பி இருக்கிறது. அந்த உத்தரவை அப்போது கவர்ன்மெண்ட் செக்ரட்டரியாக இருந்த புல்லா ரெட்டி என்பவர் கையெழுத்திட்டு அனுப்பி இருக்கிறார். ஆகவே, இந்த உத்தரவு 1950 முதல் அமுலில் இருந்துவருகிறது. இப்போது இவர்கள் புதிதாக ஒன்றும் செய்துவிடவில்லை.

அரசியல் சட்டத்தில் இது மதச் சார்பற்ற சர்க்கார் என்பது ஆகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது மதச்சார்பற்ற அரசாங்கம் என்று காந்தியே சொல்லி இருக்கிறார்; திரு. ஜவஹர்லாலும் சொல்லி இருக்கிறார். திரு. காந்தி, 'அரசாங்கப் பணத்திலிருந்து சிறிதுகூட மத சம்பந்தமான காரியத்திற்குச் செலவிடக்கூடாது. மத சம்பந்தமான எந்தக் காரியத்திலும் அரசாங்கம் சம்பந்தப்படக்கூடாது' என்று சொல்லி இருக்கிறார். இந்த காந்தி முதலில், 'இந்து மதந்தான் என் உயிர்; வருணாசிரமத்தைக் காப்பதற்காகவே நான் சுதந்திரம் கேட்கிறேன்; இந்து மதத்தில் கை வைக்க ஒருநாளும் சம்மதிக்கமாட்டேன்; என் உயிரைக் கொடுத்தாவது மதத்தைக் காப்பாற்றுவேன்' என்று சொல்லிக்கொண்டிருந்தவர்தான். அதற்காகவேதான் பார்ப்பனர்கள் அவரை 'மகாத்மா' வாக்கினார்கள். அவர் எதனால் மாறினார் என்றால், வெளிநாட்டார்கள், 'இந்தியன் என்றால் காட்டுமிராண்டி' என்று சொல்லிவந்தனர். அதற்கு ஆதாரமாக இந்து மதத்தைக் காட்டினர். சுதந்திரம் பெற்றபின், 'நாங்கள் காட்டுமிராண்டிகள் அல்லர், உங்களைப் போன்ற மனிதர்கள்தாம்' என்பதைக் காட்டிக்கொள்வதற்காக, மேல்நாடுகளின் அரசாங்கங்களைப்போல அதைப் பார்த்து 'செக்குலர் ஸ்டேட்' (Secular State) என்ற பெயரை இந்தியாவிற்கும் உபயோகித்துக்கொண்டார்.

அதோடு மட்டுமல்ல; அவர், 'காங்கிரசில் உள்ளவனெல்லாம் அயோக்கியனாகிவிட்டான்; இலஞ்சம் வாங்குகிறான்; திருடர்கள் கையில் காங்கிரஸ் சிக்கிவிட்டது. இதை நான் மட்டும் சொல்லவில்லை. முக்கியமானவர்களாக இருப்பவர்களும் என்னிடம் வந்து சொன்னார்கள். ஆகையால், இனி காங்கிரசைக் கலைத்துவிட வேண்டியதுதான்' என்று சொன்னார். அவர் உயிரோடிருந்தால் இந்நேரம் காங்கிரசைக் கலைத்திருப்பார். காங்கிரசைக் கலைத்துவிட்டால் அதனால் பெருமையும் புகழும் பெற்றிருந்த—அதன் மூலம் சுக போகமாக வாழ்ந்துகொண்டிருந்த பார்ப்பனர்கள் எல்லாம்—இனி, 'காங்கிரஸ் போனால் நமது வாழ்வே போய்விடும்; இந்த மனிதனை வைத்திருந்தால் நிச்சயம் கலைத்தாலும் கலைத்துவிடுவான்; இப்போதே மதமற்ற அரசாங்கமென்கிறான்; இனியும் இந்த மனிதனை உயிரோடு வைத்திருப்பது நம் குலத்திற்கே பெரிய ஆபத்தாக முடியும்' எனக் கருதி, பார்ப்பனர்கள் எல்லாம் ஒன்றாகக் கூடி, காந்தியையே ஒழித்துவிடுவது என்று தீர்மானம்போட்டு அவரைச் சுட்டுக் கொன்றுவிட்டார்கள்.

இவர்கள் எந்த நாட்டைப் பார்த்து எந்த மொழியில்—'செக்குலர் ஸ்டேட்' என்று குறிப்பிட்டார்களோ, அந்த நாடுகளில் அந்த மொழிக்கு—'செக்குலர்' என்பதற்கு என்ன பொருள் இருக்கிறதோ—அவர்கள் எந்தப் பொருளில் அதைப் பயன்படுத்தியிருக்கிறார்களோ, அந்தப் பொருளில்தானே நாமும் பயன்படுத்தவேண்டும்? அதை விட்டுவிட்டு சொல்லைமட்டும் வைத்துக்கொண்டு, 'செக்குலர் என்றால் மதச் சார்பற்றது என்று பொருளல்ல; எல்லா மதங்களையும் ஒன்றுபோலக் கருதவேண்டும் என்றுதான் பொருள்' என்று பார்ப்பனர்கள் கூறுகிறார்கள்.

பெண்கள் ஒரு மாநாடு நடத்துகிறார்கள். அந்த மாநாட்டில் உள்ள பெண்கள் அத்தனைபேரும், 'பெண்கள் பதிவிரதைகளாக நடந்துகொள்ள வேண்டும்' என்று தீர்மானித்துவிட்டு—'பதிவிரதை என்றால் எல்லா ஆண்களையும் தங்கள் கணவனைப் போலக் கருதி நடந்துகொள்ள வேண்டும். அதுதான் பதிவிரதத் தன்மை' என்று அர்த்தம் சொல்வது எவ்வளவு அயோக்கியத்தனமானதோ, அதைவிட, அயோக்கியத்தனமாகும்—'மதச் சார்பற்ற' என்பதற்கு எல்லா மதங்களையும் ஒன்றுபோலக் கருத வேண்டுமென்பது! எனவே, 'மதச் சார்பற்ற' என்றால், 'எந்த மதத்தையும் சாராத' என்பதுதான் பொருள். இந்த சர்க்கார் மதச் சார்பற்ற சர்க்காரானதால், அரசியலில் மதச்சார்புள்ள சாதனங்களான கடவுள் முதலிய படங்களை நீக்கவேண்டுமென்கிறது.

[புத்தகம் : 'மதச்சார்பின்மையும் நமது அரசும்'—பதிப்பு 1968]

# 4. உள்ளாட்சி

## 1. நகர அமைப்பு

நகரசபை அங்கத்தினர்களே! பெரியோர்களே!

'நகர பரிபாலன சபை அமைப்பும் வேலையும்' என்பது பற்றிப் பேச விழாப் பிரமுகர்கள் விழைவதாகத் தலைவரவர்கள் அறிவித்துள்ளார்.

இவ்விஷயம் பற்றிப் பேச எனக்கு மிக மகிழ்ச்சியே.

நகர பரிபாலன சபை என்பது நகரில் வாழும் மக்களின் நலனைக் குறித்துக் கவலை கொண்டு, அவர்கட்கு வேண்டுவன செய்யும் கடமையை ஏற்ற சபை என்பது பொருள் என்றே கருதுகிறேன். அச் சபையை நிர்வகிப்பவர்கள் அந் நகர மக்களால் தெரிந்தெடுக்கப் பட்டு, நகரமக்களின் பிரதிநிதிகள் என்று தங்களைச் சொல்லிக்கொள்ளுகின்ற மக்கள் ஆவார்கள். இதுபோலவே, ஜில்லா பரிபாலன சபை, தாலுக்கா பரிபாலன சபை, கிராம பரிபாலன சபை, மாகாண பரிபாலன சபை போன்றவைகளுமாகும். ஆனால், நாம் காணும் இப் பரிபாலன சபைகள் என்பவை எப்படி அமைக்கப்பட்டிருக்கின்றனவென்றால், நகர் முதலியவைகளில் வாழும் செல்வவான்களது பரிபாலன சபைகளாகவே அமைக்கப் பெற்றிருக்கின்றன.

எப்படியெனில், இச்சபைகளில் அமருகின்றவர்களுக்கென ஏற்படுத்தியுள்ள யோக்கிய தாம்சம் என்ன? அவர்களைத் தெரிந்தெடுப்பவர்களின் யோக்கியதாம்சம் என்ன? என்று யோசித்துப் பார்ப்போமேயானால், அப்படிப்பட்டவர்களுக்கு ஏதாவது ஒரு சொத்துடை மையைப் பொறுத்தே அத் தகுதிகள் இருந்துவருவதைக் காணலாம். சொத்துடமை இல்லாத எவருக்காவது தகுதி இருக்கக் காணுவோமேயானால் அத் தகுதியும் அந்நகர, தாலுக்கா, ஜில்லா, மாகாண மக்களில் 100-க்கு ஒருவருக்குக்கூட இருக்க முடியாததான—'படிப்பு உடைமையை'ப் பொறுத்தே ஏற்படுத்தப்பட்டுள்ள தகுதியேயாகும். அதாவது, ஒன்று, ஒரு குறிப்பிட்ட சொத்து இருக்கவேண்டும்; அல்லது, ஒரு குறிப்பிட்ட படிப்புப் பட்டம் இருக்கவேண்டும். இந்த இரண்டும் இல்லாதார், தகுதி இல்லாதாராகவே கருதப் பட்டிருக்கிறது. ஆதலால், மேற்கண்ட பரிபாலன சபைகளின் அமைப்புகளானது பொது மக்களது சபையாக அமைக்கப்படவில்லை என்பதே எனது அபிப்பிராயம்.

பிரத்தியட்ச அனுபவத்தில் காண வேண்டுமென்றாலும் நீங்கள் காணலாம். எந்தப் பரிபாலன சபைகளை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள்; அவற்றில் வீற்றிருப்போர் யாவர் என்று நோக்குங்கள்; அவற்றின் தலைவர்கள் யாவர் என்று நோக்குங்கள்; மற்றும் அவர்கள் எல்லோரையும் தெரிந்தெடுப்பவர்களும், தெரிந்தெடுக்கப்

படுபவர்களும் தங்கள் கடமைகளை, பொறுப்புகளை உணர்ந்தவர்களாய் இருக்கின்றார்களா என்று பாருங்கள். சொத்துடைமையைத் தகுதியாகக்கொண்ட மக்களின் சபைப் பிரதிநிதிகள் தங்கள் தங்கள் சொத்துடைமையைப் பெருக்குவதைக் கடமையாகக் கொள்ளுவார்களா, அல்லது சொத்தில்லாதவர்கள், படிப்பில்லாதவர்களாகிய ஏழைப் பாமரமக்களின் நலன் பெருக்கத்தைக் கடமையாகக் கொள்ளுவார்களா என்பதை இயற்கைத் தத்துவம் என்னும் கண்ணினால் பாருங்கள்!

ஆகவே, நகர பரிபாலன அமைப்பே பொதுமக்களின் நலனுக்கேற்றதாய் இருக்க முடியாமல் அமைக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் ஒழுக்கத்தையோ, நாணயத்தையோ காண்பதென்பது மிகமிக அரிதாகவே இருக்கத்தக்கதாய் இருக்கிறது. தெரிந்தெடுத்தல்கள் (எலக்ஷன்கள்) என்பவைகளைப்பற்றி யாவரும் வெளிப்படையாய் அறிந்த விஷயமே யாகும். தெரிந்தெடுப்பவர்கள் எவருக்குமே—ஏறக்குறைய 100 க்கு 99 பேருக்குமேல் தெரிந்தெடுப்பவர்களின் கடமை என்ன என்பதே தெரியாது. ஒவ்வொரு தெரிந்தெடுப்பவனும் அவனவன் சுயநலம், தாட்சண்யம் ஆகியவைகளைக் கவனித்தே வியாபார முறையில் தெரிந்தெடுக்கிறான். தெரிந்தெடுக்கப்படுபவனும் தனது சுயநலம், தற்பெருமை, தற்காப்பு ஆகியவைகளைக் கருத்தில் வைத்தே தெரிந்தெடுக்கப் பாடுபட்டு தெரிந்தெடுக்கப்பட்டவனாகின்றான். ஆகவே, தெரிந்தெடுப்புமுறை பெரிதும் சுயநலத்தையே அஸ்திவாரமாய்க் கொண்டு உலவுகின்றது.

பொதுஜனங்கள் பேரால், சில ஜனங்கள் புகழ் பெற்றுச் செல்வம் பெருக்கி மகிழ்வது என்பதே நகர பரிபாலன சபையின் அமைப்பாகவும் வேலையாகவும் இருந்து வருகின்றது.

இதேபோல்தான் ஜில்லா, தாலுக்கா பரிபாலன சபைகளுமாகும். ஜில்லா, தாலுக்கா என்பது நகரங்கள் தவிர்த்த கிராமங்களையே பொறுத்தது. கிராமங்களிலுள்ள பெரும்பான்மை மக்களான விவசாயக் கூலிகளுக்கு இந்தச் சபைகள் பிரதிநிதி சபையாகுமா? சின்னக் குடியானவர்களுக்கு இது பிரதிநிதி சபையாகுமா? பூமி இல்லாதவனுக்கும், ஒரு ஏக்கர், அரை ஏக்கர் பூமி உள்ளவனுக்கும்—1000 ஏக்கர், 10,000 ஏக்கர் பூமி உள்ளவர்கள் பிரதிநிதிகளானால், இது எதற்குப் பயன்படும்? அந்த ஒரு ஏக்கர், அரை ஏக்கர் பூமியையும் பிடுங்கி, 1000–ஏக்கர்காரன் 1500–ஏக்கர்காரனாகவும்; 10,000 ஏக்கர்காரன் 15,000 ஏக்கர்காரனாகவும், மற்றவர்களை ஏழையாகவும், பாப்பர்களாகவும் ஆக்கத்தான் பயன்படும். மற்றும், தங்கள் அதிகார ஆணவங்களைக் கொண்டு விவசாயக் கூலி மக்களை அடக்கி ஒடுக்கி, துஷ்ட மிருகங்கள் மாதிரி நடத்தத்தான் பயன்படும்.

இந்தப்படி நாடு முழுவதும் நடக்கிறதா, இல்லையா பாருங்கள். நகர பரிபாலன சபையின் செல்வங்கள் அவற்றில் உள்ள உத்தியோகஸ்தர்களும், காண்ட்ராக்டர்களும் சாப்பிடவும்; அவற்றில் பரிபாலன சபையார்களுக்கும் பங்கு இருக்கவுமே பெரிதும் பயன்படுகின்றன. ஒரு பாகம் பொதுஜனங்களுக்கும் பயன்படுகிறது என்று சொல்லப்பட்டாலும் அதுவும் செல்வவான்களுக்கும், படித்தவர்கள் என்று சொல்லப்படுகின்ற சோம்பேறிகளுக்குமே போய்ச் சேருகின்றன.

மாகாண பரிபாலன சபைகளை எடுத்துக்கொள்ளுங்கள். அவைகளில் ஜமீன் பேரால் மக்கள் இரத்தத்தை உறிஞ்சும் கொள்ளைக்காரர்கள்; லேவாதேவியின் பேரால் மக்கள் இரத்தத்தையும் எலும்பிலுள்ள ஊன்களையும் உறிஞ்சும் கொள்ளைக்காரர்கள்; மிராசுதார்கள் பெயரால் விவசாயக் கூலிகளின் இரத்தத்தையும், எலும்பு ஊன்களையும், மனிதத் தன்மையையும் கொள்ளைகொண்ட துஷ்ட மிருகங்களுக் கொப்பானவர்கள்; வன்னெஞ்ச வியாபாரிகள்; படித்தவர்கள் என்னும் ஈவு இரக்கமற்ற சோம்பேறிக் கூட்டங்கள் ஆகியவைகளே நிறையப் பெற்றிருக்கின்றன. இவர்களது எண்ணமென்ன, கடமை என்ன, செய்கை என்ன, என்பவைகளை நான் விவரிக்க வேண்டுமா? பிரத்தியட்சத்தில் நீங்கள் அறியாத எதை நான் சொல்லவேண்டும்?

ஆகவே, இச் சபைகளின் அமைப்பையும், வேலைத் திட்டத்தையும் நடவடிக்கை களையும் கண்ட ஒருவன் யோக்கியனாய் இருப்பானாயின், இவைகளைக் கலைக்கவேண்டு மென்றுதான் சொல்லுவானே ஒழிய சீர்திருத்தவேண்டுமென்று சொல்லுவதுகூட மிகக் கஷ்டமாய்த்தான் இருக்கும். ஆனால், சிறிது காலமாகவே நான் கொண்ட அபிப்பிராயப் படிதான் நகர பரிபாலனங்களின் ஆதிக்கங்கள் நாளாவட்டத்தில் குறைந்து வருவது பற்றி மகிழ்ச்சியடைகின்றேன். என்னவெனில், நகரபரிபாலன சபைக்கு இருந்துவந்த அதிகா ரங்கள் இந்த 20 வருட காலத்தில், அதாவது பாமர மக்களுக்குச் 'சுயாட்சி' உணர்ச்சி ஊட்டி, செல்வவான்களும் படித்த சோம்பேறிகளும் ஏமாற்ற ஆரம்பித்த காலம் முதல், நாளுக்குநாள் ஏற்கனவே இருந்த அதிகாரங்கள் பறிக்கப்பட்டே வருகின்றன. இனி, ஜில்லா, தாலுக்கா சபைகளின் அதிகாரங்களும் பறிக்கப்பட வேண்டுமென்ற விருப்பங் களும் செல்வாக்குப் பெற்றுவருகின்றன. இதிலிருந்தே பரிபாலன சபையின் அமைப்பும் வேலையும் ஒழுங்காக இல்லை என்பது யாவரும் அறிந்ததாகும். நம் நாட்டில் நகர பரிபாலன சபைகள் ஏற்பட்டு 50 வருஷங்களுக்கு மேலாகியும் இன்னமும் மக்களுக்கு அவற்றின் கடமையும் பொறுப்பும் தெரியவில்லை என்றால், நாம் நம் சமூகத்தின் பேரால் வெட்கப்பட வேண்டாமா என்று யோசித்துப் பாருங்கள்.

எப்படிப்பட்ட நகரத்திலும் ஒரு வீட்டுக்காரன் பொது இடத்தில் ஒரு அடி நிலமாவது சேர்த்துக் கட்டிக்கொள்ளவே பார்க்கிறான்; அதில் அவன் வெட்கப்படுவதில்லை. பொதுச் சொத்து என்றால் கொள்ளை அடிக்கத் தகுந்தது என்பதே ஒவ்வொருவனுடையவும் எண்ணமாய் இருந்து வருகிறது. அப்படிப்பட்ட எண்ணமுடையவர்கள் ஒருநாளும் பொது நிர்வாகத்துக்கு அருகதையுடையவர்களாக மாட்டார்கள். இப்படிப்பட்ட ஜனங்களின் பிரதிநிதிகளும் தன்வீட்டுக் குப்பை, கூளம், அசிங்கம் ஆகியவற்றைப் பக்கத்து வீட்டுப் புறம் கொட்டுவதிலும், தன் வீட்டுப் பிள்ளையை எதிர்வீட்டுப்புறமோ அல்லது பக்கத்து வீட்டுப்புறமோ இருத்தி மலஜலம் கழிக்கச்செய்வதையுமே கடமையாகவும் நீதியாகவும் கொண்டிருக்கின்றார்கள். இப்படிப்பட்டவர்களை 50 வருஷமாய்த் திருத்தமுடியாத பரிபாலனசபை அமைப்பும், வேலையும் இனி எப்பொழுது திருந்தப்போகின்றது?

மேல்நாடுகளில் இவ்விஷயங்கள் ஓரளவு கவனிக்கப்படுகின்றன என்றாலும் அங்கும் போதிய வேலைகள் செய்திருப்பதாய்க் காணப்படவில்லை.

உண்மையான நகரபரிபாலன சபைகள் என்பவைகள் ஒரு அரசாங்கம் என்பதின் வேலைகள் எல்லாவற்றையுமே மேற்போட்டுக்கொண்டு வேலை செய்து வரத் தக்கதாய் இருக்கவேண்டும். அவைகள் நகரில் பெரும்பான்மையான மக்களான—தொழில் செய்து வாழும் மக்களுடைய முழுப் பிரதிநிதிகளாகவே இருந்து, அவர்களுடைய நன்மையையே பெரிதும் கவனிக்கத் தக்கதாய் இருக்கவேண்டும். பொது ஜனங்களை உத்தேசித்துப் பொது ஜனங்களுக்காக நடைபெறும் எந்தக் காரியத்தையும், வியாபாரத்தையும் தனிப்பட்ட மனிதன் நடத்திப் பயன்பெற இடமே இருக்கக்கூடாது. உதாரணமாக வியாபாரங்கள், தொழிற்சாலைகள் மற்றும் மக்களுக்கு வேண்டிய ஆதார சாமான், போகபோக்கிய சாமான், போக்குவரவு வசதி, கல்வி முதலிய எல்லா நிர்வாகங்களும் நகரபரிபாலன சபையின்கீழ் நிர்வகிக்கப்பட்டு, அதன் இலாபங்கள் முழுமையும் நகரமக்களின் வாழ்க்கைக்கும் கல்விக் கும் சுகபோகத்துக்கும் சரிசமமாய்ப் பயன்படத் தக்கதாகவே இருக்கவேண்டும். உற்பத்தி செய்பவனுக்கும் அனுபவிப்பவனுக்கும் மத்தியில் 'மிடில்மேன்' கூடவேகூடாது. நகர சிவில், கிரிமினல், போலீஸ் முதலிய காரியங்களும் நகர பரிபாலனத்துக்குள்ளாகவே அடங்கி யதாய் இருக்கவேண்டும். ஜட்ஜுகள், போலீஸ் அதிகாரிகள், சிறைக்கூடத் தலைவர்கள் முதலிய எல்லா அதிகாரிகளும் நகர பரிபாலன சபையின் அதிகாரிகளாகவே இருக்க வேண்டும்.

இந்த முறையில்தான் ரஷ்ய தேசத்தில் நகரசபைகள் நடப்பதைப் பார்த்தேன். அங்கு ஓட்டர்கள் சங்கக் கூட்டத்தில் ஜட்ஜுவை நிறுத்தி, கேள்விகள் கேட்கப்பட்டதை நேரில் பார்த்தேன். ஜட்ஜு நகர ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்டவராவார். அவரும் ஒரு தொழிலாளியேயாவார். ஒவ்வொரு தெரிந்தெடுக்கப்படவேண்டிய ஸ்தானத்திற்கும் தெரிந்தெடுக்கப்பட்டவரிடமிருந்து வேலை வாங்கவும், அவர் கடமையைச் சரியாய் உணர்ந்து பொறுப்புடன் நடக்கின்றாரா என்பதைக் கவனிக்கவும் ஒரு தனிக் கமிட்டி உண்டு. அக் கமிட்டிக்கு அவர்கள் என்றும் பொறுப்பாளிகளாய் இருக்கவேண்டும் என்கின்ற முறையிலே எல்லா ஸ்தல ஸ்தாபனங்களும், வேலைமுறைகளும் அங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன. நிற்க,

நமது நாட்டு ஸ்தாபனங்களில் ஸ்தாபன சிப்பந்திகளின் நிலைமை மிகவும் பரிதாபத்துக்கும் கண்டனத்துக்கும் உரியதாகும். சிப்பந்திகளுக்குச் சர்க்கார் சிப்பந்திகள்போல பென்ஷன் இல்லை; அவர்கள் ஒரு எஜமானருக்கு திருப்தியாய் நடக்க முடியா விட்டால் வேறு இடத்திற்கு மாற்றிக் கொள்ளவோ, மாற்றப்படவோ மார்க்கமில்லை. இந்தக் காரணங்களால் மனச்சாட்சிப்படி நடக்கமுடியாமலும் சுதந்திரத்துடன் இருக்க முடியாமலும் தவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நகரபரிபாலன சபை அங்கத்தினர்களும், தலைவர்களும் எப்படிப்பட்ட யோக்கியதை உடையவர்கள் என்று முன்னாலேயே சொன்னேன். அப்படிப்பட்டவர்களிடமிருந்து காலந்தள்ள வேண்டிய அவசியத்தில் மனிதன் வாழ்வது மிகவும் கொடுமையான வாழ்வேயாகும். ஒரு எஜமானன் காலாவதியாகி, அவனது மறு தேர்தலுக்கு ஒரு சிப்பந்தி ஏதாவது அபிமானம் காட்டினால்—அடுத்து வருகிற எஜமானன் கல் நெஞ்சுடன் அவனை நசுக்கி விடுகிறான்; அபிமானம் காட்டவில்லையானால்—அதே எஜமானன் திரும்பவும் வந்தால் அப்படியே செய்துவிடுகிறான். மற்றும், சிப்பந்திகள் தங்கள் கடமையை நிர்த்தாட்சண்யமாய்—ஒரு நிலையாய் செலுத்துவதானால் எஜமானாய் இருப்பவன் பொது ஜனங்களின் 'சாடி'யைக் கேட்டுக்கொண்டு கொடுமைப் படுத்தி விடுகிறான்.

ஆதலால், சிப்பந்திகள் சமயத்துக்குத் தகுந்தபடி தங்கள் பணத்தைப் பெருக்கிக் கொள்வதிலேயே கருத்துள்ளவர்களாகி விடுகிறார்கள்.

ஸ்தல ஸ்தாபனங்கள், நகரபரிபாலன சபைகள் ஒழுங்குபட வேண்டுமானால், சிப்பந்திகள் எல்லாம் சர்க்கார் சிப்பந்திகள் ஆகவேண்டும். சிப்பந்திகள் விஷயத்தில் நகரபரிபாலன சபைத் தலைவர்களுக்குச் சிறிதும் அதிகாரம் இருக்கக் கூடாது. இதுபோல் இத்துறையிலும் பல மாறுதல்கள் ஏற்படவேண்டியிருக்கிறபடியால் பொதுவில்—இன்றைய நிலையில். ஸ்தல ஸ்தாபனங்களை எடுத்துவிட்டு, சர்க்கார் மேற்பார்வையில் பொது ஜனங்களுக்கு ஜவாப்தாரித்தனமுள்ள முறையில் நடத்தப்படுவதே கூடியவரை மேலானது என்று சொல்லலாம்.

[திருப்பூரில், 10-12-1933-ல் சொற்பொழிவு—'புரட்சி' 17-12-1933]

## 2. நகராட்சியின் தன்மை

நகரசபை அங்கத்தினர்களே! பெரியோர்களே! தோழர்களே!

இந்தச் சந்தர்ப்பத்தில் நகரசபையைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த நகரசபைகளைப்பற்றி இனிமேற்பட நாம் சற்று நல்ல கருத்துக்கள், முற்போக்கான கருத்துக்களைக் கொள்ளவேண்டியவர்களாக இருக்கிறோம்.

இந்த நகரசபைகள் என்கிறதான ஒரு ஸ்தாபனத்தை வெள்ளைக்காரர்கள் ஏற்பாடு செய்ததற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக, 'இந்தப்படியாக ஒவ்வொரு

ஊர்களுக்கும் நகரசபைகளை ஏற்பாடுசெய்து, அவைகளில் அங்கம் வகிப்பதற்காகப் பொது மக்களால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் வேண்டும் என்று ஏற்பாடு செய்தால், தெரிந்தெடுக்கப்படுதலில் போட்டா போட்டிகள், கட்சிகள் ஏற்பட்டு, ஒருவருக் கொருவர் கட்சிகளாகப் பிரிந்து விரோதம் பாராட்டிக்கொள்வார்கள். இந்தக் கோஷ்டிகளில் ஏதாவது ஒரு கோஷ்டி சர்க்காருக்கும், அதனுடைய ஆட்சிக்கும், நடப்புக்கும் அனுசரணையாக, ஆதரவாக இருக்கும்; அதனால் சர்க்கார் நடத்துவதற்கு சற்றுச் சவுகரியமாய் இருக்கும்' என்றே ஜனங்களைப் பல பிரிவுகளாகப் பிரித்து, அந்தப் பிரிவுகளினால் அவர்களுக்கு உண்டாகும் பலவீனத்தின் துணையைக்கொண்டு, அவர்களே ஆட்சி புரிவது என்பது ஒரு காரணம். இதை வெளிப்படையாகச் சொல்லாமல், வெள்ளைக்காரர்கள் வெளிப்படையாக வேறு ஒரு காரணம் சொன்னார்கள்.

அதாவது, 'இந்திய மக்களை சுய இராஜ்யத்திற்குத் தகுதியுடையவர்களாக ஆக்குவதற்காக—அதாவது, ஆட்சி புரிகிற அனுபவத்தை அவர்கள் பெறுவதற்காக அவர்களைத் தயார்செய்ய வேண்டும் என்பதால் இந்த மாதிரி நகர சபைகளை ஏற்பாடு செய்து, அதன் மூலம் இந்திய மக்கள் ஆட்சி அனுபவம் பெறும்படி செய்வதற்கு ஆகும்' என்றார்கள். இந்தப்படி இரண்டு காரணங்கள்தாம் நகரசபைகள் ஏற்பாடு செய்ததற்கும், நடந்து வருவதற்கும் சொல்லப்பட்ட காரணங்களாகும். இவை தேவையில்லாத காரணங்கள்.

இன்றையதினம் இந்த இரண்டு காரணங்களும் நகரசபை இருக்கவேண்டும் என்பதற்குத் தேவையில்லாத காரணங்களாகிவிட்டன. எப்படி என்றால், முதலாவதாக ஜனங்களைப் பல பிரிவுகளாகப் பிரித்து வைத்து அதன் மூலம்தான் ஆளவேண்டும் என்கின்ற அவசியம் நமக்கு வேண்டியதில்லை. இன்றையதினம் ஆளுகிறவர்கள் 'இந்தத் தேசத்துக்காரர்கள்'—'நம்மவர்கள்' என்று சொல்லப்படுவதோடு, 'ஆளுகிறவர்கள் நம்மால் தெரிந்தெடுக்கப்பட்டு நம்முடைய பிரதிநிதிகளாகப் போய் ஆளுகிறார்கள்' என்றும் சொல்லப்படுகிறது. இன்றையதினம் இருக்கிற இந்திய முதல் மந்திரி என்பவரும், மற்ற மந்திரிகளும் இந்த ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் என்று சொல்லப்படுகிறது. இவர்களுக்கு மேலாக இந்த நாட்டின் தலைவர் என்று இருக்கிறவரும் இந்த மக்களால் தெரிந்தெடுக்கப்படுகிறவர் என்று சொல்லப்படுகிறது. இந்தப்படி 'இந்தத் தேசத்தவரே இந்த மக்களாலே தெரிந்தெடுக்கப்பட்டு ஆளுகிறவர்கள்' என்றும் சொல்லப்படும் போது—ஆளும் போது ஜனங்களைப் பிரித்துவைத்து அதன்மூலம் ஆட்சியை நடத்தவேண்டும் என்ற அவசியம் எப்படி உள்ளவர்கள் ஆவார்கள்?

இரண்டாவதாக, இந்தத் தேசத்து மக்களைச் சுயராஜ்யத்துக்கு அருகதை உள்ளவர்களாக ஆக்குவதற்காக நகரசபைகள் ஏற்படுத்தப்படுவது என்பதும் இன்றையதினம் தேவை இல்லாததாகும். ஏனென்றால், இந்த நாடு வெள்ளைக்காரரிடமிருந்து சுதந்திரம் பெற்று, சுதந்திர ஆட்சிதான் இன்று நடைபெறுகிறது என்றும் சொல்லப்படுகிறது. எனவே சுதந்திரம், சுயராஜ்யம் பெற்ற மக்களுக்கு—சுயராஜ்ய ஆட்சியே புரிகிற மக்களுக்கு, சுயராஜ்யத்துக்குத் தகுதியுள்ளவர்களாக ஆக்குவது என்பது பொருந்துமா? எனவே, இந்த இரண்டு காரணங்களுக்காகவும், அதாவது எந்தக் காரணங்களைச் சொல்லியும்—மனத்தில் வைத்தும் இந்த நகரசபைகள் என்பவைகள் ஏற்பாடு செய்யப்பட்டனவோ, அந்தக் காரணங்கள் என்பவைகள் இன்று தேவையில்லாத, அவசியமில்லாத காரணங்களாகி விட்டன. எனவே, அவைகளின் அடிப்படையில் இன்றைய தினமும் நகரசபைகள் இருக்க வேண்டும் என்பது தேவையில்லை. பின் எப்படி என்றால், இன்னும் சற்றுப் பாதுகாப்போடும், பலமான அஸ்வாரத்தோடும், வேறு முறையோடும்தான் இன்று நகரசபைகள் இருக்கவேண்டும்.

அதாவது, நகரமக்கள் பிரதிநிதிகளுக்கு நகர ஆட்சி, சுதந்திரம் முழுவதும் இருக்க வேண்டும். இன்று நகர ஆட்சிக்குப் பொறுப்பானவர் கமிஷனர். அவருக்கும் கவுன்சிலர்

களுக்கும் ஆட்சியில் எவ்வித சம்பந்தமும் இல்லை. அதனாலேயே இது தேவை இல்லை என்று நான் எப்போதும் வலியுறுத்திக் கூறுவது—அதாவது, இந்த புதுக்கோட்டை நகர சபைக்கு, இந்த புதுக்கோட்டை நகரத்தைப் பொறுத்தவரையில் முனிசீபு, மாஜிஸ்ட்ரேட்டு, போலீஸ், ஜட்ஜு முதலிய சகல அதிகாரத் தலைமைகளும் நடப்புகளும் புதுக்கோட்டை நகரசபையைப் பொறுத்ததாய் இருக்கவேண்டும்; பொதுப் பாதுகாப்பு, மேல்பார்வை, பொது சம்பந்த நிர்வாகப் பாதுகாப்பு போன்றவைகளை வேண்டுமானால் பொதுத் தன்மைக்கு—அதாவது, இராஜ்ய சர்க்காருக்கு அதிகாரம் என்பதாக ஏற்பாடு செய்துவிட்டு, மற்றபடி இந்த ஊரைப் பொறுத்தவரையான காரியங்களுக்கு இந்த நகரசபையே அதிகாரமுடையதாக இருக்கவேண்டும் என்பது ஆகும். அப்போதுதான் 'நகர சுய ஆட்சி' என்று சொல்வதற்கு அர்த்தமேதவிர, இப்போது இருக்கிறதுபோல சும்மா—பேருக்கு அதாவது, நமது இராஜ்யத்திற்கு இருப்பதுபோல், அங்கத்தினர் நலம், கவுரவம் என்ற பெருமைக்கு, நகராட்சி என்ற பெருமைக்கு நகராட்சி என்று இருப்பது கேலிக்கூத்தாகும். சாதாரணமாக, இன்று நகராட்சி என்பவைகள் எப்படி இருக்கின்றன என்றால், சிலருடைய வசதிக்கும், பெருமைக்கும், இலாபத்துக்கும் பயன்படுவது என்கிற மாதிரியான தன்மையில் இருக்கின்றன. இது மாறவேண்டும்.

இந்த என்னுடைய கருத்தைப் பலர் ஒப்புக்கொண்டு இருக்கிறார்கள்; இந்தப்படியே செய்யவேண்டும் என்று ஒப்புதல் தந்திருக்கிறார்கள். ஆனால், அவர்கள் பதவியில் இல்லாதபோது, அதிகாரத்தில் இல்லாதபோது இந்தக் கருத்தை ஒத்துக்கொண்டார்களே தவிர, அதிகாரத்துக்குப் போனவுடன், தங்களுடைய வசதிக்காக—தம்மை நிலைப்படுத்துவதற்காகப் பழையபடியே நடந்துகொள்கிறார்கள்.

தோழர்களே! நமது நாடு எப்படி இருந்தாலும் இந்தச் சாதி வகுப்புணர்ச்சியினால் மிகவும் சீரழிகிறது. அவனவன் தன் சாதி, தன் வகுப்பு பதவிக்கு வரவேண்டும், மற்றவர்களை அடக்கி ஒடுக்கிவருவது என்று கருதுகிறான். ஒவ்வொரு ஊரிலும் இந்த மாதிரியான தகராறு இருக்கிறது; இது ஒழியவேண்டும்.

நகரசபைக்குப் போகிறவர்கள் அங்குபோய் என்ன செய்யப்போகிறார்கள்? இவர்களுக்கு அங்கு என்னவேலை இருக்கிறது? நகரசபைகளில் பணம் இருக்கிறது; அந்தப் பணத்தைச் செலவு செய்வதற்கு ஏற்கனவே சர்க்காரால் செய்யப்பட்ட சட்டங்கள் இருக்கின்றன. இவைகள் சரியானபடி நடத்திக்கொள்வதற்காக சர்க்காரால் நியமிக்கப்படும் அதிகாரிகள், சிப்பந்திகள் இருக்கிறார்கள். இவர்களை நிர்வாகம் செய்யவும், மோசடி நடவாமல் இருக்கவும் முழுப்பொறுப்புள்ள கமிஷனர் இருக்கிறார். இப்படி இருக்க, இவர்கள் அங்கு போய் என்ன செய்யப் போகிறார்கள்? இதற்குத்தானா இவ்வளவு தகராறுகள், போட்டா போட்டிகள், சண்டைகள்! சிந்தித்துப் பாருங்கள்!

'அப்படியானால், இந்த ஸ்தாபனமே தேவையில்லை என்று நீ சொல்லுகிறாயா?' என்றால், மற்ற இலாகாக்களுக்கு ஸ்தாபனங்கள் இருப்பதுபோல், 'நகர நிர்வாக ஸ்தாபனம்' என்று ஒன்று தேவைதான். ஆனால் ஒப்புக்கு, ஏதோ சிலரின் வசதிக்கும், பெருமைக்கும், பலம் பார்ப்பதற்கும் என்கிற மாதிரியில் இல்லாமல்—உண்மையிலேயே நகராட்சி சபையாக நகரத்தைப் பொறுத்தமட்டில் போலீஸ், நிதி, பொதுநிர்வாகம் போன்ற ஸ்தாபனங்கள் போல—ஒரு நிர்வாக அதிகாரம் படைத்ததாக இருக்கவேண்டும் என்பேன்.

மற்றும், இந்த நகரசபைகள், நகர நிர்வாகத்திற்கு என்பதாக ஜனங்களிடமிருந்து தனிவரிகள் வாங்கக் கூடாது; அது நகர மக்களுக்குத் தொல்லையாகும். தனிவரி இல்லாமல் நிர்வாகம் நடைபெறவேண்டும். அப்போதுதான் அதை 'நகர சுய ஆட்சி' என்று சொல்ல முடியும். அந்தந்த நகரத்தைப் பொறுத்தவரையிலும் நிர்வாக அதிகாரம் நகரசபைக்கும், ஜில்லாவைப் பொறுத்தவரை ஜில்லாபோர்டுகளுக்கும் கொடுக்கப்படவேண்டும். அப்படிப்

பூரண உரிமை, அதிகாரம் கொடுக்கப்பட்டால், நான் சொல்லுகிறேன்—ஜனங்களிடமிருந்து வரி வாங்காமலேயே ஆட்சியை நடத்திக்கொண்டு போக முடியும் என்று. எப்படி எனில், இரயில், தபால்–தந்தி, டெலிபோன், ரோட்டு விளக்கு, முதலியவைகளுக்கு வரி போடுகிறோமா? செலவுக்கு 'சார்ஜ்'—கூலி பெற்றுக்கொள்கிறோம்; அதிலும் இலாபம் பெறுகிறோம். ஆனால், வரி என்பதாக ஒன்றும் இல்லாமலே அவை நன்றாக இலாபத்தில் நடைபெறுகின்றன. அவைகளால் மக்களுக்கு வரிக் கஷ்டமே இல்லை.

அதாவது, வரி என்றால் அவரவர்களின் வருமானத்திலிருந்து வாங்கப்படுகிறது. வீட்டுவரி, தொழில்வரி, வருமானவரி, மற்றும் இதுபோன்ற வரிகள் எல்லாம் ஜனங்கள் தங்கள் தங்கள் தொழிலைச் செய்து அந்தப்படி செய்த தொழிலில் வரும் இலாபத்தில் ஒரு பங்கை வரியாக சர்க்கார் நடப்புக்கு, செலவுக்குக் கொடுக்கிறார்கள். இந்த இலாபத்தில் பெரும்பகுதி தனிப்பட்டவர்கள் அடைகிறார்கள் என்பதுதானே! இப்படி நகர பொது ஜனங்களிடம் இருந்து மற்ற தனிப்பட்டவர்களைச் சம்பாதிக்கவிட்டு, அந்தப்படி சம்பாதித்த சம்பாதனையிலிருந்து வரி வாங்குவது என்பதற்குப் பதில்—இப்படி வருவாய் உள்ள தொழில்களைப் பூராவும், அதாவது மில்கள், ஜவுளிக் கடைகள், நாடகம், சினிமாக் கொட்டகைகள், பஸ் மற்றும் இதுபோன்ற தொழில்களை சர்க்காரே ஏற்று இரயில், தந்தி, தபால், விளக்குபோல் நடத்தினால்—இவைகளின் பூரா இலாபமும் இன்று தனி மனிதனுக்குப் போய்ச் சேர்ந்து, அவனுடைய சொத்துக்கு சுகவாழ்வுக்கு, தேவைக்குப் பயன்படுகிறது என்கிறதல்லாமல், நகரத்தின் பொதுவாழ்வுக்கு, பூரா இலாபமும் சேர்க்கப்பட்டு, பொதுமக்களின் நன்மைக்கு, பொதுநிலைமைக்குப் பயன்படாதா? இந்தப்படி செய்தால் இவைகளின் மூலம் வருகிற வருமானத்தின் மூலமாகவே ஜனங்களிடமிருந்து வரி வசூல் செய்யாமல் காரியங்களை நடத்தலாம். இப்படிச் செய்தால்தான் ஏதோ பயன்படுமே தவிர, சும்மா அவர்களின் வசதிக்கு, 'மைனர் வாழ்வுக்கு' 'இலட்சாதிபதி' 'கோடீஸ்வரன்' என்கிற தன்மைக்குப் போய்க்கொண்டிருந்தால் என்ன பிரயோசனம்?

இன்றைய நிலைமையில் சாதாரணமாக ஒரு ஊரில் வசூலிக்கப்படும் பணத்தின் பெரும் பகுதி—அதாவது விற்பனை வரி, வருமான வரி, மற்றும் இதுபோன்ற வரிகள், பெருத்த பண வருவாய் வரக்கூடியவைகள் எல்லாம் சென்னை சர்க்காருக்கும், மத்திய சர்க்காருக்கும் போய்விடுகின்றன. இவர்கள் வீட்டு வரியையும், விளக்கு, சாக்கடை வரியையும் வைத்துக்கொண்டு பணம் பற்றாமல், சென்னை சர்க்காரிடம் பல்லைக் காட்டிக், கெஞ்ச வேண்டி இருக்கிறது; அவர்கள் டெல்லி சர்க்காரிடம் பிச்சை கேட்கவேண்டி இருக்கிறது. இதோடு மட்டுமல்ல; பொதுமக்களும் மேற்கண்ட மூன்று பேருக்கு வரி கொடுக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். அப்புறம் இலஞ்சம், 'மாமூல் வகையரா' இருக்கிறது. இப்படி இருப்பது என்றால், இது எப்படிச் சுதந்திரமுள்ள சுயராஜ்யம் என்று சொல்ல முடியும்? சுயராஜ்யத்தின் பேரால் சிலர் சர்வாதிகாரமாய், தங்கள் வசதிக்கு நடந்துகொள்வது; மற்றவர்கள் வேதனைப்படுவது என்கிற மாதிரி இருப்பது என்றால் என்ன நியாயம்?

மற்றபடி, நகர சபையார் இப்போதுள்ள அளவில் தங்கள் நகரத்தைப் பொறுத்தவரையில் முடிந்த அளவு சமுதாயத் தொண்டு புரியலாம். இன்று ஜனங்களிடத்தில் இருக்கிற மூடக் கொள்கைகள், அறிவுக்கு ஆராய்ச்சிக்கு நிற்காத நினைப்பு–நம்பிக்கை, உயர்வு–தாழ்வு பேதம் இவைகளைப் போக்கி மக்களை அறிவுள்ளவர்களாகவும், ஒழுக்கமுள்ளவர்களாகவும் ஆக்கும் சமுதாயத் தொண்டு புரியலாம். இதை அவர்கள் தங்கள் தங்கள் நகர மக்களுக்குச் செய்யக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள். அதுதான் இன்று நகர மக்களுக்குத் தேவையானது.

[புதுக்கோட்டையில், 27-10 52-ல் சொற்பொழிவு—'விடுதலை' 31-10-1952; 2-11-1952]

# 5. கிராமச் சீர்திருத்தம்

## 1. கிராமச் சீர்திருத்தம்

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

கிராமம், நகரம் என்ற பேதத்தை முதலில் ஒழிக்க முயற்சிக்க வேண்டும். அந்தப் பேதம் கற்பித்து, கிராம மக்களை நகரவாசிகள் மிக இழிவாக நடத்தி வருகிறார்கள். நான் கேட்கிறேன், சென்னையைவிட ஈரோடு எந்த விதத்தில் குறைந்தது? இதற்கும் அதற்கும் என்ன வித்தியாசம் இருந்து வருகிறது? இரண்டும் தன்மையில் ஒன்றாகத்தான் இருந்து வருகின்றன. தனி சவுகரியங்கள் மட்டும் தனித்தனியாக இருக்கலாம். அது ஜனத் தொகை, பொருளாதார வசதி இவைகளைப் பொறுத்திருப்பது. இதனால் எப்படி ஒன்று மேலாகவும் ஒன்று தாழ்வாகவும் இருக்க முடியும்? அப்படி இழிவாக எண்ணுவதை ஒழிக்க வேண்டும். கிராமங்களை எல்லாம் ஒழித்து நகரமாக்க வேண்டும். நகர மக்களைப்போல் கிராம மக்களையும் சுகமனுபவிக்கச் செய்யவேண்டும். நகரம் போலவே வரிகள் விதித்து, பல திட்டங்கள் வகுத்து, பல சவுகரியங்கள் அனுபவிக்க வழி செய்யவேண்டும். இவற்றைச் செய்யாமல் கிராமங்களைச் சீர்திருத்தம் செய்யவேண்டும் என்று கூறி வருவதால் ஒருவிதப் பயனும் ஏற்பட்டுவிடாது. நான் இன்னும் கூறுவேன் — 'கிராமச் சீர்திருத்தம் என்னும் வார்த்தையே சூழ்ச்சியான வார்த்தை' யென்று! கிராமச் சீர்திருத்தம் என்ற பேரால் இரண்டு மூன்று பேர்கள் கிராமங்களுக்குச் சென்று வீதி கூட்டி — இரண்டொருவருக்கு அரி, வரி என்று எழுத்துப் படிப்பு சொல்லிக்கொடுத்து விடுவதால் கிராமம் சீர்திருத்தமாகிவிடுமா? இவையெல்லாம் கிராமவாசிகளை ஏமாற்றித் தாழ்மையாக்கி இழிவு செய்வதென்றே நான் கருதுகிறேன்.

மற்றும், கிராமம்—நகரம் என்று பிரித்துக் காட்டுவதே வருணாசிரம முறைப்படியே தான். சமதர்மம் பேசுகின்றவர்களே கிராமம்—நகரம் என்ற பிரிவினை இருக்கவேண்டு மென்று பிரச்சாரம் செய்கிறார்கள்.

தோழர் காந்தியார் சில வருடங்களுக்கு முன் ஒரு சமஸ்தான கிராம வாசிகள் இடையில் பேசும்போது கீழ்க்கண்டவாறு பேசியுள்ளார்: 'கிராம மக்களாகிய உங்கள் கையில் வெள்ளிக் காசுகள் இருக்கக்கூடாது; நகரத்திலுள்ளவர்களுக்கு ஊழியம் செய்யவே உங்களைக் கடவுள் படைத்திருக்கிறார். ஆதலால், நகரத்திலுள்ள மக்கள் சவுகரியமாக வாழும்படி அவர்களுக்குப் பால், நெய், காய்கறி, செருப்பு ஆகியவைகள் தயார்செய்யும் ஊழியம் செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.' இதிலிருந்து காங்கிரஸ்காரர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதைச் சிந்தியுங்கள்.

கிராமம் நகரம் என்ற வித்தியாசம் தொழில் முறையாலும் விளையாட்டுமுறையாலும் இருக்கிறது. இம் முறையை மாற்றவேண்டும். இந்த முயற்சியை சர்க்காரே எடுக்க வேண்டும்; இதற்காகப் பணமில்லை என்று கருதவேண்டாம்.

இதற்கு வழி செய்யலாம். திருவிழாக்களால் ஒரு கிராமத்தில் எவ்வளவு செலவாகி வருகிறது! வக்கீல்களுக்கும் பார்ப்பனர்களுக்கும் கிராமத்தார் எவ்வளவு அழுகிறார்கள்! அதனால் எவ்வளவு சுகாதாரக் கேடுகள், ஒழுக்கக் கேடுகள், மக்களுக்குப் பண விரயங்கள் ஏற்படுகின்றன! அவைகளைப் போக்க சர்க்கார் வழிகளைச் செய்யவேண்டும். உதாரண மாக, கோட்டை மாரியம்மன் திருவிழாவை எடுத்துக்கொள்ளுங்கள். அதனால் மக்களுக்கு ஏதாவது நன்மை உண்டாகிறதா? இதைவிட விவசாயக் கண்காட்சிகளை ஏற்படுத்தி விவசாயம் செய்யும் விதம், எப்படி—எப்படி விவசாயம் செய்தால் பலன் முன்னேறும்— விவசாயம் பெருகுவதற்கு விவசாயிகள் செய்யவேண்டிய வேலைகள் ஆகியவைகளைப் பற்றி மக்கள் நன்கு உணருமாறு காட்டவேண்டும். அதுபோலவே, சுகாதாரக் கண்காட்சி

களை ஏற்படுத்தவேண்டும். அந்தக் கண்காட்சி மூலம் கிராம மக்கள் எவ்வாறு சுகாதார முறைப்படி இருக்கவேண்டும் என்பதைப்பற்றியும் திருவிழா முதலிய இடங்களில் சுகாதார முறைக்கு விரோதமாக நடப்பதைப்பற்றியும் விளக்கவேண்டும். அதுபோலவே, கூட்டுறவு வியாபார முறைகளால் ஏற்படும் நன்மைகளைப்பற்றியும், அந்த முறையல்லாது—வியாபாரிகள் ஒழுங்கான முறையில் வியாபாரம் செய்யாது மக்களை ஏமாற்றுவதைப்பற்றியும் மக்களுக்கு எடுத்து விளக்கவேண்டும். தொழிற் காட்சி வைத்து இயந்திரத் தொழில், கைத்தொழில் முறைகளை விளக்கவேண்டும். இவைகளை சர்க்காரே செய்யவேண்டும். இதனால் வரி உயர்ந்தாலும் மக்கள் கவலைப்படமாட்டார்கள்.

[ஈரோட்டில், 18-9-1940-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 22-9 1940]

## 2. கிராமங்கள் ஒழிய திட்டம்

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

நான் 'பழமை', 'வழமை' பெரியோர் கருத்து, சாஸ்திரம், ஆதாரம் என்பவைகளைக் கண்மூடிப் பின்பற்றாத ஒரு பகுத்தறிவுவாதி என்று சொல்லப்படுபவன். நானும் என்னைப் பொதுவாக ஒரு சீர்திருத்த உணர்ச்சி உள்ளவன் என்று உரிமை பாராட்டிக் கொண்டாலும், என்னுடைய சீர்திருத்தம் என்பதானது பழைய அமைப்பு, மத அடிப்படை என்பவைகளைக்கூட இலட்சியம் செய்யாமல், அனேக காரியங்களை அடியோடு அழித்து நிர்மாணிக்க வேண்டும் என்ற கொள்கையைக் கொண்டவன். இதனால் என்னை நாச வேலைக்காரன் என்று பலர் சொல்லும்படியானவனுமாவேன். நாடகத்தில் நகைச்சுவை என்பதின்மூலம் எப்படித் தலைகீழான, வெறுப்பான, பல மாறான கருத்துக்களைக் கண்டு உடல் துடிக்காமல் அவைகளை நகைத்துக்கொண்டு அனுபவிக்கிறோமோ, அதுபோல் நான் சொல்லுவதைச் சற்று கவனமாகக் கேட்டு, நகைச்சுவையாய் அனுபவித்து, வீட்டுக்குச் சென்று நடுநிலையில் இருந்து ஆலோசித்துப் பார்க்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன். ஆத்திரப்படாமல் ஆலோசனையில் இறங்கினால்தான் நல்ல முடிவு கிடைக்கும்.

எனது கிராமச் சீர்திருத்தத் திட்டம் என்பது என்ன என்றால், நாட்டில் கிராமங்களே எங்கும் இல்லாமல் அவற்றை ஒழித்து விடுவதேயாகும். அது மாத்திரமல்லாமல், கிராமங்கள் (Villages) என்கின்ற வார்த்தை அகராதியில் கூட இல்லாதபடி செய்து விடவேண்டும். அரசியலிலும் கூட கிராமம் என்கின்ற வார்த்தை இருக்கக்கூடாது என்றே சொல்லுவேன். கிராமம் என்கின்ற எண்ணத்தையும் பெயரையும் அதற்கு ஏற்ற பாகுபாட்டையும் பாகுபாட்டு முறையையும் வைத்துக்கொண்டு நீங்கள் என்னதான் கிராமச் சீர்திருத்தம் செய்தாலும், 'பறையன், சக்கிலி' என்பவர்கள் எப்படி 'அரிசனன்' ஆனானோ அது போலவும் 'ஆதித் திராவிட'னானானோ அதுபோலவுந்தான் மாற்றம் ஏற்படுமே ஒழிய, பறையன் மற்ற மனிதர்களைப்போல மனிதனானான் என்கின்ற மாற்றம் எப்படி ஏற்படாதோ அது போல, கிராமச் சீர்திருத்தம் செய்யப்படுவதால், 'நல்ல கிராமம் ஆயிற்று' என்றுதான் ஏற்படுமே ஒழிய மற்றபடியான நகரத்தன்மையும், நகர மக்கள் அனுபவிக்கும் உரிமையும் அனுபவிக்க முடியவே முடியாது. ஏனெனில், நகரத்தின் அமைப்பும் அவசியமும் வேறு; கிராமத்தின் அமைப்பும் அவசியமும் வேறு.

எப்படியெனில், கிராமம் என்கின்ற வார்த்தையே இன்று மனித சமுதாயத்தில் எப்படி பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன், பஞ்சமன் என்கின்ற வருணாசிரம தர்ம முறையில் பஞ்சமன் இருக்கின்றானோ, அது போல்தான் 'ஊர்' தன்மையில்—'ஊர் வரிசை'யில் பஞ்சமன் நிலையில் கிராமம் இருக்கின்றது.

வருணாசிரமத்தின் கருத்து என்ன? ஒருவன் மேல் சாதி, இன்னொருவன் கீழ் சாதி; ஒருவன் பாடுபடுவதற்காக இருக்கவேண்டியவன், மற்றொருவன் சரீரப்பாடு படாமல்

வாழ்வதற்காக இருக்கவேண்டியவன்; ஒருவன் உழைக்க வேண்டியவன், மற்றொருவன் அந்த உழைப்பை அனுபவிக்க வேண்டியவன். இதைத் தவிர, வருணத்தின் தத்துவம் என்ன? உதாரணம் என்னவென்றால், 'முதன் மூன்று வருணத்தார் வாழ்வுக்காக நான்காவது அய்ந்தாவது வருணத்தானைக் கடவுள் சிருஷ்டித்தார்.'

'ஆகையால், நான்காவது அய்ந்தாவது வருணத்தார் முதல் மூன்று வருணத்தாருக்குத் தொண்டு செய்து திருப்தி செய்வதன் மூலம் மோட்சமடைய வேண்டுமே ஒழிய நேரே மோட்சத்தை அடையக் கருதக்கூடாது.'

'நான்காவது அய்ந்தாவது வருணத்தான், பணம் காசு கையிலே வைத்திருந்தால் முதல் வருணத்தார் அவற்றைப் பலாத்காரமாய்ப் பிடுங்கிக்கொள்ளலாம். முதல் வருணத்தார்தான் படிக்கலாம்; நான்காவது, அய்ந்தாவது வருணத்தார் படிக்கக்கூடாது. படித்தால், உலகம் நடைபெறாது' என்பது போன்ற மனுதர்ம முறைப்படிதானே—அனுபவத்தில், கிராமத்திற்கும் நகரத்திற்கும் 'வருணமுறை ஊர் தர்மம்' இருந்து வருகின்றது! இது உண்மையா, இல்லையா என்று யோசித்துப் பாருங்கள்!

கிராமம் என்றால் என்ன? அதில் பள்ளிக்கூடம் இல்லை; ஆஸ்பத்திரி இல்லை; டிராமா இல்லை; பார்க்கு இல்லை; நீதிஸ்தலம் இல்லை; போலீஸ் காவல் இல்லை; நல்ல ரோடு வசதியில்லை; விளக்கு இல்லை; நல்ல தண்ணீர் இல்லை; உயர்ந்த நாகரிகம் என்பது இல்லை. பெரும்பாலும் வயிற்றுக்கு ஆகாரம் சம்பாதிப்பதைவிட, வாழ்வு ஆசைக்குப் பணம் சம்பாதிக்கும் வசதி இல்லை, ஓய்வு இல்லை; புத்தியைச் செலவழித்து முற்போக்கடைய வழி இல்லை. இப்படி இன்னும் பல வசதிகள் (நகரத்தானுக்கு இருப்பவைகள்) கிராமத்தானுக்கு இல்லை என்பதல்லாமல் கிராமம் என்றால் வேறு என்ன?

ஆனால், 'நகரங்களுக்கு ஆதாரம் கிராமங்கள்தாம்' என்று சொல்லப்படுகின்றது. சொல்லுவது மாத்திரமல்லாமல் கிராமத்தாரின் உழைப்பும், உழைப்பில் ஏற்பட்ட விளை பொருளும், உற்பத்திப் பொருள்களுமே நகரத்தார் அனுபவிக்கவும், நகரத்தார் செல்வவான்களாக ஆகவும், அரசாங்கம் நடக்க வரி கொடுக்கவும், அரசாங்கம், நகரமக்கள் ஆகியவர்கள் மாத்திரமல்லாமல்—கடவுள்கள் கோவில்கள்கூட அங்கிருப்பவர்களும் சேர்ந்து தேவஸ்தான சட்டப்படி ஒழுங்காய்ச் சகல இன்பங்களும் அனுபவிக்கவும் வசதியாக இருந்து வருகின்றன.

உதாரணமாக, லேவாதேவிக்கு வட்டி கொடுத்து வரும் கிராமங்களான—நஞ்சை, புஞ்சை நில வசதிகளுள்ள—நீர்ப்பாசனமும் பருவம் தவறாமல் மழை பெய்யும் கொழுத்த நீர்வசதியும் உள்ள நிலப்பரப்புக்கு மத்தியில் உள்ள கிராமங்களின் நிலைகள் எப்படி இருக்கின்றன என்பதையும் பொட்டல் காடு, கானல் காடு, பாலைவனங்கள் ஆகியவைகளில் குடியிருக்கும் லேவாதேவித் தொழிலாளர்களான நாட்டுக்கோட்டையார், மார்வாடிகள் ஆகியவர்கள் வீடுகள் எப்படி இருக்கின்றன? அவர்கள் வாழ்க்கை நிலைகள் எப்படி இருக்கின்றன என்பதையும் பாருங்கள்! இதற்குக் காரணம் என்ன? இது வருணாசிரம தர்ம முறையா அல்லவா? யோசித்துப் பாருங்கள்! மற்றும் பாடுபட்ட மிராசுதார், குடியானவன் ஆகியவர்களின் வீடுகள் எப்படி இருக்கின்றன? இவர்களிடம் சரக்கு வாங்கி விற்ற நகர வியாபாரிகள் வீடு, அவர்களது வாழ்வு எப்படி இருக்கின்றன பாருங்கள்.

கிராமத்தானுக்குக் கல்வி இல்லாமல் இருந்தால்தானே—பயிரிட்டு, உழைத்து, அறுத்து, மூட்டையாகத் தைத்து, வண்டியில் போட்டு நகரத்துக்கு அனுப்பிவிட்டு, சாவியாய்ப்போன தானியத்தை வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய், கஞ்சியாகக் காய்ச்சி, கலயத்தில் ஊற்றி, பிள்ளை குட்டிகளைச் சுற்றிலும் உட்கார வைத்துக்கொண்டு, 'இன்று, கடவுள் நமக்கு இவ்வளவு கொடுத்தார்' என்று வாழ்த்தப்பாடி, எருமை மாடு தவிட்டுத் தண்ணீர் குடிப்பதுபோல் வயிறுமுட்ட குடிக்க முடியும்! அதோடு அவன் திருப்தியடையவும் முடியும்!

அப்படி இல்லாமல், கிராமத்தானுக்குக் கல்வி கொடுத்து விட்டால், 'நாம் உழைக்கிறோம், நாம் விளைவித்தோம், நாம் உருப்படி பண்ணினோம்; அப்படியிருக்க நாம் கஞ்சி குடிப்பதும்—உழைக்காதவன் தறித்துப் புடைத்து ஆக்கிப் படைத்துக்கொண்டு இப்படித் தொப்பை வெடிக்க அமுக்குவானா?' என்கின்ற எண்ணம் ஏற்பட்டுவிடாதா? அதனால்தான், கிராமம் ஒரு 'பஞ்சமனுடைய' நிலையில் வைக்கப்பட்டு வருகின்றது. இந்த நிலையை நிலைக்கவைக்க, 'கிராமச் சீர்திருத்தம்' என்கின்ற பித்தலாட்டப் பெயரை வைத்துக்கொண்டு ஒரு கூட்டம்—அதுவும் வருணாசிரம தர்மத்தில் மேல்படியில் இருப்பவர்கள் சீர்திருத்தக்காரர்களைப் பார்த்து—'கிராமத்திற்குச் செல்லுங்கள்' (Go to the Village !) என்று வாயில் கத்திக்கொண்டு, ஞாயிற்றுக்கிழமை அன்றைக்கு வியாபாரத்திற்கும் வக்கீல் வேலைக்கும் (கட்சிக்காரர்களைச் சேர்க்கும் நோக்கத்தோடு) கிராமங்களுக்குச் சென்று, விளக்குமாற்றால் (துடைப்பத்தால்) ஒரு வீதியைக் கூட்டிவிட்டு, அதற்கு ஒரு பஜனைப் பாட்டைப் பாடி, ஒரு கூடையில் அக் குப்பையை வாரித் தூக்கிக் கொண்டு போய் நத்தத்தில் கொட்டிவிட்டு, ஒரு சிறு பிரசங்கம்—'இராமாயணத்தில் இராவணக் கொடுமையும், அனுமன் பெருமையும்' பற்றிப் பேசிவிட்டு வந்துவிட்டால், கிராமம் சீர்பட்டு விடுமா என்று யோசித்துப் பாருங்கள்.

கிராமம் என்ற ஒன்று—ஒரு குப்பைக்காடு—எதற்காக இருக்கவேண்டும்? ஆடு, மாடு, எருமை மேய்ப்பதும்; அவைகளைக் காப்பாற்றி பால், தயிர், நெய், மோர் உற்பத்தி செய்வதும் கிராமத்தான். அவ்வளவையும் அனுபவிப்பது நகரத்தான். இதற்கு என்ன ஆதாரம்? கிராமவாசி கிராமத்தில் இரவு 3 மணிக்கு எழுந்து, மாட்டுக்குத் தண்ணீர் வைத்து, கொட்டத்தைக் கூட்டிச் சுத்தம்செய்து, 4 மணிக்குப் பால் கறந்துவிட்டு, கஞ்சி காய்ச்சிக் குடித்துவிட்டு, 5 மணிக்குப் புறப்பட்டு—3, 4, 5 மைல் நடந்து 6 மணிக்கு வந்து, நகரத்து மக்களை, 'அய்யா, பால்காரி நான்!' என்று சொல்லிக் கதவைத் தட்டி எழுப்பி விட்டுப் பால் ஊற்றி விட்டுப் போகிறார்கள். தங்கள் பிள்ளை குட்டிகளுக்கு பால், நெய் ருசியே தெரியாமல் செய்துவிடுகிறார்கள். இதற்கு 'நகரத்தார்' பணம் கொடுக்கிறார்கள் என்பது உண்மைதான். கிராமத்தான் கையில் கிடைத்த இந்தப் பணம்தான் என்ன ஆகிறது? போலீசுக்கு ஒரு பங்கு; முனிசிபல் சிப்பந்திகளுக்கு ஒரு பங்கு; கள்ளுக் கடைக்கு ஒரு பங்கு போனது போக கனமாக ஏதாவது மீதி இருந்தால் அது வக்கீலுக்கும், அதிகாரிகளுக்கும் போகிறது.

நல்ல பெரிய விவசாயி என்பவனும் கிராமத்தில் இருந்தால் இதுபோல்தான். கிராமத்தான் பாடுபட்டுப் பயிராக்கி, தானியமாக்கி நகரத்துக்குக் கொண்டுவந்தால் நகர வியாபாரி, கிராமத்தானின் பயிர் செலவு, மூட்டுவழிச் செலவுக்குக்கூடப் பத்தும் பத்தாமல் கணக்குப் போட்டு விலை பேசி, ஒன்றுக்கு ஒன்றேகாலாக ஏமாற்றி அளந்து வாங்கிக் கொண்டு, மொத்தக் கிரயத்தை 'தரகு, மகிமை, சாமி காசு, நோட்டு வட்டம், வாசல்காரிக்கு, கலாஸ்காரனுக்கு வெற்றிலைப் பாக்குச் செலவு' என்றெல்லாம் பல செலவுக் கணக்குப் போட்டுப் பிடித்தம் செய்துகொண்டு, மீதி ஏதோ கொஞ்சம் கொடுக்கிறான். பணத்தை மொத்தமாகக் கண்டறியாத கிராம விவசாயி 'தன்மீது கருணை வைத்துக் கடவுள் இவ்வளவு ரூபாய் கைநிறையக் கொடுத்தார்' என்று கருதிக்கொண்டு வாங்கி, துணியில் முடிந்து கொண்டு, காப்பி சாப்பிட்டு சினிமா பார்த்துவிட்டு ஊருக்குப் போகிறான். வியாபாரியோ இந்தச் சரக்கை வாங்கி, இருப்பு வைத்து, அதிக விலை வரும்போது விற்று, இலாபமடைந்து இலட்சாதிபதியாகி, மாடமாளிகை கட்டிக்கொண்டு—கிராமவாசியை வண்டி ஓட்டவும், மாடுமேய்க்கவும் வீட்டு வேலை செய்யவும், உடம்பு பிடிக்கவும் வேலைக்கு அமர்த்திக் கொள்ளுகிறான்.

சர்க்காருக்கும் கிராமவாசிகள் என்றால் கசாப்புக் கடைக்குப் போகும் ஆடுகள் போலக் காணப்படுகிறார்கள்.

ஆகவே, கிராமம் என்பது தீண்டப்படாத மக்கள் நிலையில்தான் இருந்து வருகின்றது; கிராமத்தார் அல்லாத மற்றவர்களுக்கு உழைப்பதற்கு ஆகவே இருந்து வருகிறது. இந்த நிலையில் அந்த அடிப்படையை வைத்துக்கொண்டு கிராமத்தை எவ்வளவு சீர்திருத்தினாலும் கிராமம், 'சூத்திரன்—தீண்டப்படாத சாதியான்' நிலையில்தான் இருக்கும்.

எனவே, சமுதாயத்தில் மக்கள் மனிதத் தன்மை பெறவேண்டுமானால் பிராமணன் என்று ஒரு சாதியும், பறையன் என்று ஒரு சாதியும் அடியோடு இல்லாமல், மனிதன் என்கின்ற ஒரு சாதிதான் இருக்கவேண்டும் என்று எப்படிக் கருதுகிறோமோ அதுபோல், ஊர்களிலும் பட்டணம், நகரம் என்று சில ஊர்களும், கிராமம்—குப்பக்காடு என்று பல ஊர்களும் இல்லாமல் பொதுவாக ஊர்கள்தான் இருக்க வேண்டும் என்று ஆக்கப்பட வேண்டும்.

வருணாசிரம தர்மத்தைப் போல்தான் கிராமங்களும் என்பதற்கு மற்றொரு உதாரணம் பாருங்கள்! ஜனத்தொகைப்படி 100-க்கு 90 பேர்கள் நான்காவது அஞ்சாவது வருணத்தார்கள்; 10 பேர்கள்தான் மேல் வருணத்தார்களாக (முதல் மூன்று வருணத்தார்களாக) இருப்பார்கள். 'அதுபோலத்தான் மொத்த ஊர்களில் 100-க்கு 90-க்குமேற்பட்ட ஊர்கள் கிராமங்களாக இருக்கின்றன. அதாவது, இந்தியா பூராவும் 7 இலட்சம் கிராமங்கள். ஆனால், பட்டணங்கள் நகரங்கள் 75,000 கூட (100-க்கு 10 கூட) இருக்காது.

மற்றும் பார்க்கப்போனால் பட்டணத்தில் உள்ள ஒரு கைவண்டி இழுப்பவன், ஒரு கோர்ட்டு பியூன், ஒரு பிச்சை எடுக்கும் புரோகிதன், மணியாட்டும் அர்ச்சகன், ஆகிய இவர்கள் பிள்ளைகள்—S.S L C., B.A., இஞ்சினியர், டாக்டர், I.C S. கூடப் படிக்க முடிகின்றது. ஆனால், கிராமத்தில் 100 ஏக்கரா, 200 ஏக்கரா உள்ள குடியானவன் மகன்கூட எழுதப்படிக்கக் கற்றுக்கொள்ள வேண்டுமானால்—வரும்படியில் பகுதி செலவாகிறது. ஏழைக் குடியானவன் மகனுக்கு நடக்கத் தெரிந்ததும், மாடு மேய்க்கவேண்டியதாகத்தான் முடிகிறது. பட்டணங்களில் இருப்பதால் ஒரு கக்கூசு எடுப்பவர், வீதி கூட்டுபவர் குழந்தையும் கட்டாயமாகப் படித்து ஆகவேண்டும் என்று சர்க்கார் உத்தரவு போடும்; இலவசப் பள்ளியும் வைக்கும். ஆனால், கிராமத்தான் தன் மகனைப் படிப்பிக்க நகரத்துக்கு அனுப்பவேண்டும். அங்கு மேற்பார்வை இல்லாமல் சிகரெட்டு, பீடி, 'டாடி', 'பிராண்டி' குடித்து நாசமாக வேண்டும்—இதற்கு அர்த்தம் என்ன?

இவ்வளவு சங்கதிகள் ஏன்? ரேஷனை எடுத்துக்கொள்ளுங்கள். பட்டணத்திலே இருப்பவர்கள், கடவுள்களுக்கு நாட்டுக்கோட்டையார் படி அளப்பதுபோல், ஆளுக்கு இவ்வளவு என்று சர்க்காரால் அளவு அளிக்கப்பட்டிருக்கிறது. கிராமத்தாருக்கு, அதுவும் தானியங்களை உற்பத்தி செய்யும் கிராமத்தார்களுக்கு ரேஷன், 'கடவுளிடம்தான்' ஒப்படைக்கப்பட்டு விட்டது. 'கடவுள்'தான் அவர்களுக்குப் படி அளக்கவேண்டும்; அதாவது, ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி நகரத்தானிடம் திருட்டுத்தனமாய் வாங்கிக் கொண்டு போகிறார்கள். பாடுபட்டு விளைவித்ததைக் கொண்டுவந்து வியாபாரியிடம் கொடுத்துவிட்டு—அதுவும் திருட்டுத்தனமாக வாங்கிக்கொண்டு போகவேண்டியிருக்கிறது.

மேலும், நகர வாழ்க்கை—நகரத்தில் இருந்தால் 100-க்குத் 90-க்கு மேம்பட்ட மக்களுக்கு உடலுழைப்பு இல்லாத சுகவாழ்வு வாழமுடிகின்றது. கிராம வாழ்வு—கிராமத்தில் இருந்தால் 100-க்கு 90 பேர் உடலுழைப்பு வேலையே செய்தாக வேண்டும். அவர்களுக்குள் ஒரு சிறு தகராறு, சண்டை விவகாரம் ஏற்பட்டாலும், விவகாரப் பெறுமானத்தை விட அதிகமாகச் செலவு செய்து, நகரத்துக்குப் பல தடவைகள் நடந்து, நீதி பெற வேண்டும். இதன் பயனாய் போக்கிரிக்கும் செல்வவானுக்கும் அடங்கி வாழவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.



தந்தை பெரியார் அவர்களுடன், தமிழகக் கல்வி அமைச்சர் டாக்டர் வி. ஆர். நெடுஞ்செழியன். (1973)



தந்தை பெரியார் அவர்களுடன்—இந்நூல் வெளிவரத் துணைபுரிந்த அமைச்சர் திரு. என். வி. நடராசன்.
(நவம்பர்–1973)

விவசாயம் 200 வருஷ காலத்திற்கு முன் இருந்த மாதிரிதான் இன்றும் இருக்கின்றது. அதில் நீர்ப் பாய்ச்சல் வசதி, நீர் நிலை, தேக்கம் ஆகியவை ஏற்பட்டு சில நிலங்களுக்குப் புதிதாய் நீர்ப்பாசன வசதி ஏற்பட்டது என்பதல்லாமல்—விவசாயத்தில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லை. சர்க்காரின் விவசாய இலாக்காவானது சில பேருக்கு உத்தியோகத்தைத்தான் கொடுத்தது; அதுவும் விவசாயத்தைத் தொழிலாகக் கொள்ளாத பரம்பரைக்கே பெரிதும் உத்தியோகமாய் முடிந்தது என்பதல்லாமல் மற்றபடி விளைபொருளில் மாறுதல் இல்லை. விளைவு அளவில் கூடுதல் இல்லை; விவசாய முறையில் மாற்றம் இல்லை; விவசாயிகள் விளைபொருளின் சரியான விலையை அனுபவிக்க வழியில்லை; விவசாயி விவசாய ஞானம் பெற வழியில்லை. விவசாயிகள் விஷயத்தில் சர்க்கார் எடுத்துக்கொண்ட மற்ற முயற்சி என்ன என்று பார்ப்போமானால், மேல்நாட்டாரைப்போல் இந்நாட்டு விவசாயிகள் எல்லோரும் படித்த மக்கள் என்று கருதிக்கொண்டு, அவர்களுக்கு அறிவுறுத்தத் துண்டுப் பிரசுரம் மூலம் சில முறைகள் கையாண்டார்கள் என்பதைத் தவிர, அவர்கள் பெரும்பாலோர் படிப்பும் நாகரிகமும் இல்லாதவர்களாகப் பட்டணங்களுக்கு வெகு தூரத்தில் இருக்கிற—நாகரிகமும், பகுத்தறிவும் அற்ற மக்கள் என்கின்ற எண்ணமே இல்லாமல் அவர்களுக்கு நலம் செய்யும் வழிகளைக் கையாண்டிருக்கிறார்கள்.

உண்மையில் கிராமங்களைச் சீர்திருத்த வேண்டுமானால் நான் சொல்லப்போகும் முக்கியமான காரியங்களைச் செய்யவேண்டும். விவசாயம் உடலுழைப்பில் நடைபெறுவதை மாற்றி, அதை ஒரு தொழில் முறையாக, அதுவும் இயந்திரத் தொழில் முறையாக (Industrial) ஆக்கிவிட வேண்டும்.

உழுவதும், விதைப்பதும், அறுப்பதும், இயந்திரத்தால் செய்யப்பட வேண்டும். கிணறு வெட்டுவதும், தண்ணீர் இறைப்பதும் பாய்ச்சுவதும் இயந்திரத்தால் செய்யப்பட வேண்டும்.

அந்த அளவுக்குப் பூமிகளைத் திருத்தி இணைக்கவேண்டும்; அதற்குப் பயன்படாத பூமியைத் தனிப்படுத்தி அடிக்கடி பாடுபடவேண்டிய அவசியம் இல்லாத பயிர் செய்ய வேண்டும்.

விளைபொருளால் ஆக்கப்படும் பண்டங்களை ஆங்காங்கே விவசாயிகளால் கூட்டுறவு முறையில் ஆக்கப்பட்டு, அந்தப் பயன் விவசாயிகளுக்கே கிடைக்கவேண்டும்.

பல கிராமங்களை ஒன்றாக இணைத்து ஒரு சிறு நகரமாக ஆக்கி, அதில் பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி, பார்க்கு, சினிமா, டிராமா, தமாஷ் அறை, வாசகசாலை, ரேடியோ ஒலிபெருக்கி நிலையம், நல்ல ரோடு, கால அளவுப்படி போக்குவரத்துள்ள பஸ் ஸ்டாண்டு, போலீஸ் ஸ்டேஷன், நன்றாய்ப் படித்த ஒரு நீதிபதி, சகல சாமான்களும் கிடைக்கத் தக்க கடைகள் ஆகியவற்றை ஏற்படுத்தவேண்டும்.

இயங்கும்படியான (சுற்றுப்பிரயாண) கண்காட்சிச் சாலைகள் அடிக்கடி பற்பல விதங்களில் ஊர்கள்தோறும் சுற்றிச்சுற்றி வரும்படியாகவும் ஆன காரியங்கள் செய்ய வேண்டும்.

ஆங்காங்கு அப்பீல் கோர்ட்டுகள், குறை தெரியும் அதிகாரிகள் சுற்றுப்பிரயாணம் செய்து ஆங்காங்கு வாராவாரம் முகாம் போடவும் ஆன ஏற்பாடுகள் செய்யவேண்டும். அதோடுகூடவே அந்த இடங்களில் அவற்றிற்குத் தகுந்தபடி இயந்திரத்தால் செய்யப்படும் சிறுசிறு தொழிற்சாலைகளை நிறுவி, அவர்கள் வேறு ஊருக்குப் பிழைப்புக்குப் போகாதபடி பிழைப்பு ஏற்படுத்த வேண்டும்.

கிராமத்தான், பட்டிக்காட்டான், குப்பக்காட்டான் என்கின்ற பெயர் ஒரு மனிதனுக்கு ஏன் இருக்கவேண்டும்? அதுவும் பாடுபட்டு உழைக்கும் மனிதனுக்கு ஏன் இருக்க வேண்டும்? ஆதலால், அப் பெயர்கள் இல்லாமல் செய்யப்பட்டுவிட வேண்டும்.

மேல்நாடுகளில் பெரும்பான்மைக் கிராமங்கள் நான் விரும்புகின்ற முறைப்படிதான் இருக்கின்றன. அய்ரோப்பாவில் கிராமங்கள் என்ற நிலை இல்லவே இல்லை. இருந்த போதிலும், அது அந்த இடத்திற்கு ஏற்ற வாழ்வாய் இருக்கலாமே தவிர, 'பிராமணனுக்குத் தொண்டு செய்வதற்கே கடவுள் சூத்திரர்களை, பஞ்சமனைப் படைத்தார் என்பது போல, 'நகரத்தார்கள் நல்வாழ்வு வாழ்வதற்கே கிராமங்கள் ஏற்பட்டன' என்கின்ற முறையில் கிராமங்கள் அங்கு இல்லை. அங்கு ஏதாவது ஒன்று இரண்டு கிராமங்கள் இருந்தபோதிலும் இங்கு இருக்கக்கூடாது என்று சொல்லுவேன்.

அப்படியானால், விவசாயம் யார் செய்வது, யார் பூமியைப் பயிர் செய்வது என்று கேட்கப்படலாம். இது, 'கக்கூசு' எடுக்கும் சக்கிலி, பறையர், ஒட்டர் என்பவர்களுக்குப் படிப்புக் கொடுத்து மேன்மக்களாக ஆக்கிவிட்டால், கக்கூசு எடுப்பவர்கள் யார் என்று கேட்பதுபோலக் கேட்கப்படுவதாகும். அதற்கு எனது பதில், 'அந்தத் தொழில்களை நாம் எல்லோரும் (எல்லா இடத்தில் உள்ளவர்களும்) விகிதாசாரம் பங்கு போட்டுக்கொண்டு செய்யவேண்டும்' என்பதுதான்.

கீழான தொழில், ஈனமான தொழில், கஷ்டமான தொழில், சரீர உழைப்பு அதிகமாகவும் பயன் மிக்க அற்பமாகவும், குறைவாகவும், வாழ்வில் இழிவாகவும் இருக்கும்படியான தொழில் முறைகளை நாட்டில் இல்லாமல் செய்யவேண்டும். அதுதான் நாட்டு முன்னேற்றமாகும்.

சப்பல் கட்டி எவனோ ஒருவன் கோடீஸ்வரனாவது முன்னேற்றமாகாது. எங்கேயோ ஒரு இரும்புத் தொழிற்சாலை வைத்து யாரோ கோடீஸ்வரனானால் நாட்டுக்கு முன்னேற்றமாகாது.

நான் கூறுகின்ற முன்னேற்றம் செய்ய முடியவில்லையானால்—அதற்கு, அதாவது அப்படிப்பட்ட இழிவான, கீழான, பிரயாசையான வேலை செய்பவர்களுக்கு அதிக இலாபமும், சலுகையும், மேன்மையும் இருக்கும்படியான பிரதிபலன் அடையச் செய்யவேண்டும். இரசாயன முறை, விஞ்ஞான முறை, இயந்திர முறை முதலியவைகளைக் கையாண்டு—அவைகளைக் கிராமங்கள் என்பவைகளில் இருந்து தொடங்குவோமேயானால் இந்தப் பிரச்சினைகள் சுலபத்தில் தீர்ந்துவிடும். கிராமம் என்கின்ற பெயரும் நிலையும் தானாக மாறிவிடும்.

இதைப் பொதுவுடைமை என்றோ, சமதர்மம் என்றோ முட்டாள்தனமாய்க் கருதாமல், முற்போக்கு என்ற முறையில் சிந்தித்தால்தான் இதில் உள்ள நியாயமும் உண்மையும் விளங்கும்.

[ஈரோட்டில், 30-10-1944-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 11-11-1944]